ஓம்.

சற்குருவேநம:

மீனாக்ஷியருள்பெருக.

# பாலநாகம்மாள் கதை.

## காப்பு வெண்பா.

சீர்பெருகப் பாலநாகம்மாள் சரித்திரத்தை யின்றுயான்
பேர்பெருக அம்மானைப் பேசிடவே—கூர்வடி
வேலனுக்கு முன்பிறந்த வேழமுகத் தோன்பாதம்
சீலமுடன் நீ கோறுசீர்.



## கணேசர் துதி.

ஆதிக்கணபதியே ஆதரிக்கசமயமையா
சித்திக்கணபதியே சீர்பாதம்யான் துதித்தேன்
வேழமுகத்தோனே விநாயகனே முன்னடவாய்
மல்லிமுல்லையிருவாக்ஷி மலர்க்கொண்டுன் பாதத்தை

அல்லும்பகலாக அர்ச்சித்துபூஜைசெய்தேன்
பாதம்பணிந்தேனையா பார்வதிபாலகனே
உந்தனை தியானித்து உலகத்தில்னின்றுயான்
பாலநாகம்மாள்கதை பண்புடனேசொல்லலுற்றேன்
நாவுத்தவராமல் நல்லோசைத்தாருமையா
ஏடுத்தவராமல் யெழுத்துச்சீர்மாராமல்
சொல்லுத்தவராமல் சுந்திரனேகாருமையா
நீயேதுணையென்று நின்றேனேவையகத்தில்
வேருத்துணையில்லை வேதாந்தமெய்ப்பொருளே
காக்கவுங்காலமையா காக்ஷிதரவேணுமிது
வந்துவரமருள்வீர் வாக்கினில்குடியிருப்பீர்
ஏழைமுகம்பாரும் இதுசமயங்காருமையா
நம்பினவர்களை நாயகனேகாருமையா.





## சரஸ்வதி தோத்திரம்.

### வெண்பா.

அம்பா சரஸ்வதியே ஆனந்தக் கல்யாணி
நம்பினா னின்றேனம்மா நாதரியே—இம்மயிலே
உன்னைத் துதித்துயான் உலகத்தோர் தான்மதிக்க
கண்மணியேக் கதைச்சொன்னேன் கார்.

வாணிசரஸ்வதியே வரந்தரவேணுமம்மா
உன்பாதம்யான் துதித்தேன் உகந்தென்னைக்காருமம்மா
கமலத்தில்நீபிரந்தாய் காருண்யசுந்தரியே
அன்பத்தோராக்ஷரத்தில் ஆடிடும்திரிசூலி
வேதப்பொருளே வேதாந்தநாயகியே
சதுர்வேதக்காரணியே சஹஸ்த்ரவேதநாரணியே
நாவில்குடியிருக்கும் நாதாந்தபைரவியே
உன்னைத்துணைநம்பி உகந்தயிப்புவிமீது
பாலநாகம்மாள்கதை பண்புடன்சொல்லலுற்றேன்
குற்றங்களில்லாமல் குடியிருந்துக்காருமம்மா
சொல்லுக்கதிகாரி சுழிதனிலாடும்தேவி
முக்கோணவீட்டினில் மூகந்திரிக்கும்கல்யாணி
பிழையொன்றுமில்லாமல் பேதைதனைக்காருமம்மா
தாய்தந்தைநீயென்று தாரணியில்நம்பிநின்றேன்
இதுசமயங்காக்கவே ஈஸ்வரியேவாருமம்மா
நாசிமுனையிலாடும் நாயகிசௌந்தரியே
தப்பிதமில்லாமல் தாயேயெனைக்காருமம்மா
கார்க்கடனுனக்கு கருணைசெய்யவேணையிது
கண்ணாலேபார்த்துயென்னைக் காருமம்மாசரஸ்வதியே

## கதைச் சங்கம்.

(வசனம்.) ஸ்ரீ கைலாசபதியாகிய சிவசங்கரமூர்த்தி பார்வதி சமேதராய் நந்தி, பிருங்கி, முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர ரிஷிகளும், புடைசூழ கொலுவமர்ந்திருக்குஞ் சமயத்தில், நாரதபகவான் தன் இருப்பிடம்விட்டு கைலாயத்திற்குவந்து லோகரக்ஷகனுகிய சாம்பவமூர்த்தியை தியானித்து நிற்கையில் லோகபிராட்டியாகிய உமாதேவி நாரதரைப் பார்த்து ஓ! நாரதமுனியே, நீர் எந்த சமையத்திலும் திரிலோக சஞ்சாரியாய் திரிந்துக்கொண்டு வருவதால், இப்பிரபஞ்சத்தில் மானவ ஜென்மமெடுத்த மங்கைதனில் பதிவிரதை சிரோன்மணியாக இருக்கப்பட்ட பெண்பாவைகள் இருக்கின்றாரா வென்று கேட்டமாத்திரத்தில் நாரதமுனி சொல்லத்தொடங்கினர். அம்மணி யான் கண்டறிந்தமட்டும் சொல்லுகிறேன் கேளுமென்று சொல்லத் தொடங்கினர்.



## உமாதேவிக்கு நாரதபகவான் பாலநாகம்மாள் கதைச்சொல்வது.

பட்டணமாம் பட்டணமாம் பார்புகழும்பட்டணமாம்
மேற்கேவெகுதூரம் மேன்மையானபட்டணமாம்
காசிக்குமேற்குதிசை கடல்சூழ்ந்தபட்டணமாம்
பூச்சக்கரபட்டணமாம் புகழ்பெற்றவன்னடு
அஷ்டலட்சுமிகளும் ஆடியிருந்தவிடம்
நவபோஜராஜனும் நாடிராஜ்யமாண்டுவந்தார்
மந்திரிபிரதானிசூழ மகிழ்ந்துகட்டியம்கூறிவர
எக்காளம்கொட்டிவர இருபுரம்தாசியாட
வேதகோஷ்டம்பாட வித்வான்கள்கொண்டாட
செங்கோல்பிடித்துமன்னன் சிறப்புடன்கொலுவமர்ந்து
ஆரிலொருக்கடமை அன்புடன்குடிகளிடம்
பெற்றுமேவாழ்ந்திருந்தார் பெருமையுடயன்னட்டில்
வைபோகம்கொண்டு வாழ்ந்திருந்தாரவ்வேந்தன்

## பட்டத்துதேவியாகிய லட்சுமிதேவி புதல்வரில்லையென்று தோழிமருடன் துயரமடைவது.

இப்படியாகவே இசைந்துமேலட்சுமிதேவி
அந்தப்புரமதில் அன்பானதோழியுடன்
பெரியதோழிதன்னை பிரியமுடன்தானழைத்து

தோழியேநீகேளாய் தோகையின் மனக்கவலே
ஏதென்றுச்சொல்லுவேன் எந்தன் மனக்கவலே
நோர்க்காதநோம்பை நோர்த்தேனேயென்தோழி
ஆதிசிவனுக்கு அனுதினமும்யான்சென்று
எடுக்கர்தபுஷ்பமெல்லாம் யெடுத்துயானர்ச்சித்தேன்
காசிதீர்த்தந்தன்னில் கண்டுயான்ஸ்தானஞ்செய்தேன்
அன்னதானங்களே ஆவலுடன்யான்செய்தேன்
கானகபூமிதன்னில் கண்டுதண்ணீர் பந்தலிட்டேன்
கோதானம்பூதானம் கெம்பீரமாய்யான்செய்தேன்
இத்தனேகோடிதர்மம் யின்பமுடன்யான்செய்தும்
ஏதும்பயனில்லே என்தோழியேதுசெய்வேன்
இப்படியாகச்சொல்லி யிருகண்ணில்நீர்சொரிந்தாள்
இதைக்கண்டுதோழிதான் இசைந்துமேசொல்லலுற்ருள்
அம்மாவேநீர்கேளும் ஆச்சியரேயென்தேவி
அய்யகிட்டவிதிபோல ஆகுமேயென்தேவி
ஈசன்செயலன்றி யேதும்பலிக்காதம்மா
துயருருதல்நீதியல்ல துரிதமுடன்யென்தேவி
இப்படியாக இருவரும்பேசிவிட்டு
அந்தச்சமயத்தில் அந்தப்புரம்தோழிச்சென்ருள்.





லட்சுமம்மாதேவி தன்சணவன் அந்தப்புரம் வந்தபிறகு
பாலகரில்லேயென்று துயரமடைவது.

கொலுச்சாவடிவிட்டு கிருபையுடனவபோஜன்
அந்தப்புரம்வருக அதைக்கண்டுலட்சுமிதேவி
ஜலமெடுத்துயெதிரில்வைக்க தயவுடனேயவ்வேந்தன்
ஸ்தானபானஞ்செய்து சந்தனபொட்டுமிட்டு
நேமநிஷ்டைகளை நிகழுடன்தீர்த்துக்கொண்டு
தங்கத்தட்டுதன்னில் தகுந்தக்காய்கறிகளுடன்
நெய்சாதத்துடனே நீர்மோரைக்கொண்டுவந்து
எதிரில்வைக்கவே இச்சையுடன்வேந்தனும்
போஜனமும்தானரிந்து புகழுடனேயவ்வேந்தன்
மஞ்சத்தின்மீது மன்னவனும்சயனித்தான்
இந்தநல்லசமயத்தில் இசைந்துமேலட்சுமிதேவி
ஸ்தானங்கள்செய்து தலையாற்றிக்கொண்டையிட்டு
மையிட்டுபொட்டிட்டு மகிழ்பூஷணம்பூண்டு
பட்டுச்சேலைக்கட்டி பகுந்தரவிக்கையிட்டு
தகுந்ததோழியுடன் தனியறைக்குதான்வந்தாள்
ஏலக்காய்ஜாதிக்காய் இடிலவங்கம்வால்மிளகு
பாக்கினெடுதானிடித்து பக்குவமாய்பொடிசெய்து
கணவன்காமதிலே கடுகவெற்றிலைதான்கொடுத்தாள்
தாம்பூலந்தரித்துமவர் சந்தோஷமாயிருக்கையிலே
கணவனெதிராக கருணையுடன்தானமர்ந்து
கேட்பீரோநாயகரே கிருபையுடனென்வார்த்தை
பல்லக்குயேறிக்கொண்டு பார்முழுதுமாண்டபோதில்
நீதித்தவறாமல்நீ ரரசுவாண்டாலும்
ஆனைகள்கட்டி அரசாண்டிருந்தாலும்
அம்மாவென்றழைக்க அருங்குழவிநான்காணேன்
அப்பாவென்றழைக்க ஆண்குழந்தைக்காணேனையா
உம்மைப்போல்வேந்தர் உகந்துபாலரெத்தனையென்றால்
என்னைக்கண்டுமாதர் யெத்தனைப்பெற்றாயென்று
இப்படியாக இசைந்துநம்மைகேட்பாருனல்
ஏதென்றுச்சொல்லலாகும் யென்கணவாபுவிமீது
மலடியாய்ப்பிறந்து மாநிலத்தில்வாழலாமா
பழுத்தவுதிராத பாரில்விருக்ஷமுண்டோ
பாலகரில்லாத பாழ்மனையில்போஜனங்கள்

அருதேசிபரதேசிகள் அன்புடன்புசிக்கமாட்டார்
காட்டில்மர்மாக கடுகநாம்வளர்ந்திருந்தால்
தச்சன்வுளியாலே தக்கபடிசெதுக்குவானே
ஆனதாலென்வார்த்தை அன்புடனேகேளுமையா
வடக்குவெகுதூரம் வளர்ந்திருக்கும்மலைதன்னிலே
சடங்கிமுனிமலைக்கு ஜல்தியாகபோகவேண்டும்
நாகமுனியெதிரில் நானுந்தவம்புரிந்து
புத்திரபாக்கியத்தை பெற்றுவாரேன்யென்கணவா
அந்தமொழிகேட்டு ஆனந்தவேந்தனும்
எந்தன்மொழிக்கேளாய் இளமயிலேதோகையரே
ஆசைக்கொண்டுநாமும் ஆற்றில்புறண்டாலும்
ஒட்டுவதுவொட்டுமே வொட்டாததுவொட்டாது
கானகவழிதன்னிலே கண்மணியேநடப்பாயோ
வெய்யல்பட்டால்திரேகம் வேர்க்குமேயுந்தனுக்கு
வரங்கொடுக்குமசிவபெருமான் வந்துக்கொடுப்பாரிங்கு
போகாதேகண்மணியே புத்திதனைகேட்பாயின்று
இந்தமொழிக்கேட்டாள் இளம்பருவலட்சுமியும்
வெய்யலும்தோணாது வேர்வையுந்தட்டாது
பரமன்செயலிருந்தால் பாலன்வரம்பெற்றுவாரேன்
இல்லாமல்போய்விட்டால் இசைந்துமனைக்குவாரேன்
இப்படிச்சொல்லவே இசைந்துமேயவ்வேந்தன்
மந்திரியைதானழைத்து மகிழ்வாகசொல்லலுற்றார்
பட்டத்துதேவிக்குப் பயிதியங்கள்பிடித்துதப்பா
கானகபூமிச்சென்று கடுந்தவங்கள்தான்புரிந்து
புத்திரபாக்கியம் பெற்றுவாராளாம்யென்தேவி
இப்படிபுவிமீது இசைந்துயெவர்செய்தார்கள்
இந்தமொழிகேட்டு யெடுத்துரைத்தான்மந்திரியும்
அய்யனேநீர்கேளும் அன்பானயென்வார்த்தை
முந்திப்பெரியவர்கள் மூகந்துபுத்திரபாக்கியம்பெர
தேவியும்நாயகனும் தீவிரமாய்ஸ்தானஞ்செய்து
காவியாடைத்தரித்து கடுகவனமேசென்று
பரமனைக்கோரியவர் பாரிதவங்கள்செய்து
புத்திரபாக்கியத்தைப் பெற்றுவந்ததுபோலாக

கதைதன்னில்சொல்லிடவும் கண்டுமேயிருக்கின்றேன்
போகவிடைதாரும் பெருமையுள்ளயென்தாய்க்குப்
இப்படியாகவே இசைந்துமேமந்திரிச்சொல்ல
அந்தமொழிகேட்டு அருகிருந்தகாவலரை
அப்போதேதானழைத்து யரிவேந்தன்சொல்லலுற்றான்
காவலரேநீங்கள் கடுகப்புரப்பட்டுயின்று
தேவியுடனேசென்று தீவிரமாய்வருவீரையா
இப்படிச்சொல்லி இசைந்துமனுப்பிவிட்டு
கொலுச்சாவடியைத்தேடி கொழுவேந்தன்வருகலானார்
அந்தநல்லசமயத்தில் அழகானலட்சுமம்மாள்

லட்சுமிதேவிடம்மாள் தவத்திற்குப்போகுதல்.

ஏறினாள்பல்லக்கு இளங்கொடியாலட்சுமியும்
பல்லக்கெடுத்தார்கள் பண்புள்ளபோயிகளும்
தாதிகள்புடைசூழ தகுந்தமேளம்தான்முழங்க
நாலுவீதிகள்தோரும் நலமாகசுத்திவந்தார்
இராமராமாவென்று இராமஸ்மாரணைசெய்து
பூச்சக்ரப்பட்டணம்விட்டு போகுறாள்கானகமும்
ஆருநதிகள்தாண்டி அன்பானக்காடுதாண்டி
புலிகள்வாழும்காட்டை புதுமையுடன்தான்தாண்டி
சாம்பிராணிவனந்தாண்டி சந்தனத்தோப்பைவிட்டு
ஜடங்கிமகாமுனி மலைக்குதானும்வந்தாள்லட்சுமியும்
மூன்றுயோசனைதூரம் முகந்துயுச்சியிருக்குதையா
மூன்றுதாதிகளை முந்தியழைத்துக்கொண்டு
நடக்கும்பாதங்களெல்லாம் நலிந்துகொப்பளித்தது
பாவிப்பிரம்மன்யெந்தன் ஓலைதனைக்கிழிக்கானோ
இராமராமயென்று ஸ்மரித்தாளேலட்சுமிதேவி
ஜடங்கிமுனிமலைக்கு தீவிரமாய்வந்தாளே
மகாமுனியருகில் மாதுசிரோன்மணிவந்தாள்
பார்த்தாளேமுனிவரை பண்புடன்லட்சுமிதேவி
கண்மூடிவாய்புதைத்து கலக்கமிட்டுதானிருந்தார்
சிரசில்புத்துதான் சிறப்புடன்வளர்ந்திருக்க
முனிவன்ஜடாபாரம் மூக்கந்துவேராய்போகுதங்கு
இப்படிக்கொத்தவரின் யெதிராகவந்துநின்று

சரணம்சரணமையா சுவாமியேநான்சரணம்
சரணம்செய்தப்போதிலும் சுவாமிவாய்திரக்கவில்லை
இப்படிக்கொத்தவரை எப்படிபேசச்செய்வேன்
சாபங்களிட்டுயான் செத்தாலும்பெரிதல்ல
அந்தச்சமையத்தில் அரப்படியரிசிதன்னை
பானையில்தான்போட்டு பண்புடன்ஜலமிட்டு
தனதுமொழங்காலை தகுந்தயடுப்புசெய்து
தீயிட்டொலைவைத்து தீவிரமாயம்மாது
குபீல்குபீலென்றெரிய தனக்குதீபடவில்லை
அந்தச்சமயத்தில் அழகானமுனிவனும்
இந்தயதிசயத்தை இன்பமாய்பார்த்திருந்தார்
பேசாமல்போய்விட்டால் பெரும்பழிநமக்குவரும்
என்றுயிவர்நினைந்து இளங்கொடியாலெதிரில்வந்து




ஜடங்கிமகாமுனிவர் லட்சுமிதேவியின்
சவிஸ்தாரம் விசாரிப்பது.

எந்தவூரெந்ததேசம் இங்குவரக்கார்யமென்ன
மனிதர்வருதமகா முனிவர்யிருப்பிடத்தில்
நீவருககாரியமேன் நிகழுடனேசொல்லுமம்மா
இப்படிக்கேழ்க்கையிலே இசைந்தமேலட்சுமியும்
அய்யாயென்வார்த்தை அன்புடனேநீர்கேளும்
மேற்கேவெகுதூரம் பூச்சக்கிரபூமிதன்னில்
வாழ்நலபோஜராஜன் வரிசையுள்ளபத்தினியான்
கோடானதிரவியங்கள் குவலயத்திலிருக்குதையா

ஆனைக்குதிரைகள் ஆறுகோடி ருக்குதையா
பல்லக்குரதமும் பக்ஷமுடனிருக்குதையா
இத்தனைதானிருந்தும் எதுபயன்காண்கவில்லை
தோத்திரம்சொல்வதற்கு குலயத்தில்பாலனில்லை
சந்தானமில்லாமல் சுவாமியரன்வந்தேனையா
வரந்தருகாவிட்டால் வாழ்மனைக்குயான்போகேன்

வசனம்.

இப்படியெல்லாம் லட்சுமிதேவியம்மாள் சொல்லி முடிந்தவுடனே ஜடங்கிமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

அம்மணிநீகேளாய் அறிவுள்ளலட்சுமியே
பாலன்பாக்கியம்தான் பண்மையுடன்வுந்தனுக்கு
பிரம்மனெழுதவில்லை பாவியானென்செய்வேன்
இந்தமொழிகேட்டு ஏதுசெய்தாள்லட்சுமியும்
ஐயோதெய்வமேயென்று ஆயாசம்பட்டாளே
மலடியென்றென்னை மானிலத்தில்கூருவாரே
இந்தவுடல்வைத்து இனியெவ்வாசர்நானிருப்பேன்
பாதகியாவியை பக்ஷமுடன்போக்குமேன்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்மாமுனிவர்

வசனம்.

கேட்டீரா! ஜடங்கிமகாமுனிவரே அநேக தினமாயிருந்து என்கணவனை கேட்டப்படியால் சந்தானபலத்திற்கு போகும்படி இன்றைக்கு அருள்செய்தார் நீர் சந்தானபலன் கொடுக்குறீராயல்லது என்னுவியை உமது பாதத்தில் விடச்செய்ய சொல்லுகிறீராயென்று மூர்க்கமாய் கேட்டவுடனே முனிவனுக்கு இரக்கமுண்டாகி சற்றுநிதானிப்பாய் யான் சாஸ்திரத்தைப்பார்த்துச் சொல்லுகிறேனென்றுச்சொல்லி சாஸ்திரம் பார்க்கையில் இம்மாதுக்கு பெண் ள் பிறந்தால் தாயிக்கு மரணமுண்டாகும் ஆண்புதல்வன் பிறந்தால் தந்தைக்கு மரணமுண்டாகும் இந்தச்சவிஸ்தாரத்தைச் சொன்னுல் ஆயாசமடைவாள் இந்த அபகிந்தனை நமக்கேன் நாம் தப்பித்துக்கொள்வது நலமென்று மர்மமாய் சொல்லத் தொடங்கினர்

அம்மணிக்கேளாய் ஆயாசமடையாதே
பாலன்வரங்கொடுக்க பாரிலென்தரமல்ல
புத்திரபாக்கியம்பெருக புகழுபாயம்சொல்லுகிறேன்

எதென்றுக்கேட்டால் இம்மலைக்குவடபாகம்
ஈசான்யமூலையில் இருக்குதம்மாநாகபுத்து
அந்தப்புத்தின்மீது அமர்ந்திருக்குமாமரமும்
அந்தச்செடிதன்னில் அடர்ந்திருக்கும்பழங்கள்தானும்
புத்துக்குச்செடிக்கும் புகழ்வந்தனமீசெய்து
செடிமீதுதானேறி சிறப்புடன்பழமாத்தி
உனதுபட்டணம்சென்று உதயகாலமானவுடன்
சூரியஸ்தானம்செய்து சூக்ஷமபழரசம்பிழிந்து
மும்மூர்த்திகளை நினைந்து முகந்துநீயுண்ணுமம்மா
இந்தரசம்வுண்டால் அக்ஷணமேகற்பம்தாங்கும்
ஆனால்வொருவார்த்தை அம்மணிசொல்லுகின்றேன்
புத்துதனில்சேஷன் பொருந்திதானிருக்குறான்
பலத்தைக்கொடுப்பானோ பாவியென்னசெய்வானோ
இப்படிச்சொல்லவே இதுகேட்டுலட்சுமியும்
எந்தன் தலைவிதிப்போல் இப்போதுமுடியுதையா
இப்படிச்சொல்லி இசைந்துநடக்கலுற்றாள்
கைகளைவீசிக்கொண்டு கடுநடக்கலுற்றாள்
பாவிதெய்வமே பார்மீதுயேன்பிறந்தேன்
பிறக்கசெய்தப்பாவி இறக்கச்செய்யலாகாதா

வசனம்.

ஸ்ரீராம ராமாவென்று ஸ்மரணை செய்துக்கொண்டுபோகுஞ் சமயத்தில் பிரம்மா விஷ்ணு மகேஸ்வரன் மூவரும் மாறுவேடந் தரித்து இம்மாதுக்கருகில் வந்து எங்கேபோகுறாய் என்றுக் கேட்டவுடன் அம்மாது அய்யாநான் நாகமுனீந்திரன் புத்துக்குப்போகுறேனென்றுச் சொன்னவுடனே நாங்கள் வழிகாட்டுகிறோம் வாவென்று அழைத்துக்கொண்டுபோய் அதோஇருப்பது நாகபுத்து அதின்மேலிருப்பதுகான் மாஞ்செடி அதோ இருப்பது பாதாள கெங்கையென்று லக்ஷ்மிதேவிக்கு காட்டிவிட்டு மூவருமறைந்தார்

அந்தச்சமயத்தில் அழகுள்ளலட்சுமியும்
திரும்பியேதான்பார்க்க துணைவந்தோர்காணவில்லை
தவமுனிவர்களோ தனியாகவந்தவர்கள்
தேவாதிதேவரோ துணையாகவந்தவர்கள்
ஆச்சரியமடைந்து ஆயாசம்தானடைந்தாள்
புடவைவிருக்கிகட்டி புத்தைவலம்வந்து
லோகரக்ஷகனே லோபியைக்காருமென்று





லட்சுமிதேவி மாமரத்தருகில் வந்து
வந்தனஞ்செய்து பழம்பறிப்பது.

மாஞ்செடியேறினாள் மகிழ்வுடனேயம்மாது
ஆசைக்குபழங்களை ஆனவரைதான்பறித்தாள்
ஏழுபழமேதான் இருந்ததுமடிதன்னிலே
அதி யாசைப்பட்டால் அளவுக்குறைவாச்சு
தெய்வசங்கல்பத்தால் இருந்ததுயேழுபழம்
ஈசன்செயலோ இதுயென்னமாயமோ
என்றுமேதன்மனதில் யெண்ணினாளப்போது
இரண்டாந்தடவை ஏறினாளம்மரத்தில்
அறுத்தாளேகூடைக்கொள்ள அழகானபழங்களை
செடிவிட்டிறங்கி சோதித்தாள்தன்மடியை
ஏழுபழமன்றி வேறுபழம்காணவில்லை
மூன்றுந்தடவைதான் முகந்துயவ்வாறாச்சுது
அந்தச்சமயத்தில் அங்கிருந்தநாகந்தானும்
பனிரெண்டுசிரசுகளை பண்புடன்படமெடுத்து
உந்தன்பிராணத்தை உகந்துக்கொண்டுபோறேனென்று
செடியேறிவருவதை சிறப்புடனேபார்த்துவிட்டாள்

திரேகம்நடுங்கியது தீவிரமாயப்போது
செடிமீதுவந்ததோர் சேஷனைக்கண்ணோக்கி
அய்யாநாகையா அடியாள்மொழிகேளும்
பாலர்வேண்டுமென்று பாவிமனமிச்சைக்கொண்டு
புத்திரபலத்திற்கு பெருமையுடனிங்குவந்தேன்
புத்திரர்களுண்டான புகழொம்பதாம்மாதத்தில்
நிறைந்தபௌர்ணமிக்கு நீர்வாருமென்மனைக்கு
கண்டத்தைக்கடித்து கருணையுடன்நீர்போவீர்
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்நாகேந்திரன்
சொன்னமொழிதன்னை சுந்தரியேதப்புவாயோ
காலஞ்சென்றுவிட்டால் கண்மணிமறப்பாயோ
இந்தநல்லமொழிதன்னை இலட்சுமியும்கேட்டாளே
பிசகிடக்கேணையா பிரியமுள்ளநாகேந்திரா
ஒன்பதாம்மாதத்தில் உகந்துநீர்வாருமையா
எந்தனினுயிரை யுந்தனுக்குயான்தருவேன்
இதுகளைக்கேட்டான் இச்சையுடன்நாகேந்திரன்

நாகேந்திரன் லக்ஷ்மிதேவியம்மாளுக்கு
வரங்கொடுப்பது.

உந்தனுக்குமேழு உகந்துபெண்கள்தான்பிறப்பார்
கடசிபெண்ணுக்குநீ கனநாகம்மாவெனநாமமிடும்
இவ்வார்த்தைதான்கேட்டு இசைந்துமேலட்சுமியும்
அய்யோதெய்வமே அன்னீதமாகுமா
ஏழுப்பெண்களுமே இருந்தால்பேரைச்சொல்லுமா
ஆண்குழந்தையொன்றிருந்தால் அரசாளுமேயென்றாள்
இந்தமொழிக்கேட்டு ஏதுச்சொன்னான்நாகேந்திரன்
ஆண்குழந்தைதந்தால் அடர்ந்தவேந்தன்மரணமாவான்
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்லட்சுமியும்
கணவனில்லாபாக்கியம் காக்ஷியிருந்தென்னபலன்
பாலன்பாக்யம்வேண்டாம் பத்தாவுக்காயுள்தாரும்
இந்தமொழிக்கேட்டு ஏதுச்சொல்வான்நாகேந்திரன்
உந்தனிஷ்டம்போல உகந்துவரம்யான்தந்தேன்
உந்தனுக்குமரணமே உத்தமியேசித்திக்கும்
இப்படிச்சொல்லியே இசைந்துநாகம்சென்றது
புத்துக்குள்நுழைந்தது பெருமையுள்ளநாகமன்று

இதுசென்றதைகண்டு இரங்கினாள்லட்சுமியும்
மடிதனைசோதிக்க மகிழ்பழம்யேழாச்சு
அதைத்-தங்கபெட்டியில்வைத்து தக்கபடிபத்திரஞ்செய்தாள்
அந்தவிடம்விட்டு அப்போதேதானடந்தாள்
ஜடங்கிழனிமலையைவிட்டு ஜடுதியில்தான்வந்தாள்
காடுமலைகள்தாண்டி கரும்புவனத்தோப்பைவிட்டு
சாம்பிராணிமலைவிட்டு சந்தனதோப்புவிட்டு
மூன்றும்தினத்திலே பூச்சக்கிரபட்டணம்வந்தாள்
அந்தச்சமயத்தில் அருகிருந்தகாவலரை
இன்பமாய்தானழைத்து எடுத்துச்சொல்லலுற்றாளே
நீங்களிப்போசென்று நிகழுந்தன்வேந்தனுக்கு
எந்தன்வரவைச்சொல்லி இப்பவேதான் வருவீர்கள்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்காவலர்கள்
ஓட்டம்நடையாகச்சென்று ஒருமிக்கொலுவைத்தேடி
வேந்தனுக்குவந்தனங்கள் வேகமாய்செய்துநிற்க
கண்டானேவேந்தனும் காவலரையப்போது
ஆரடாகாவலரே ஆஸ்தானம்வந்தீர்கள்
என்னவிசேஷம் எந்தனுக்கெடுத்துரைப்பீர்
இந்தமொழிக்கேட்டார் இசைந்துமேகாவலர்கள்
அய்யாவேநீர்கேளும் அன்பாகசொல்லுகிறோம
உம்முடையதேவிதான் உகந்துதவஞ்செய்துவந்தார்
வரமதைபெற்றுவந்தார் வந்ததைச்சொல்லச்சொன்னார்
இந்தமொழிகேட்டு எழுந்தானேவேந்தனப்போ
மந்திரிபிரதானிகளை மகிழுடனழைத்துக்கொண்டு
பட்டத்துதேவியை பண்புடன்காணவாரார்
எதிராகவந்துமே இருவரும்சந்தித்து
நாலுவீதிகள்தோறும் நலமாகச்சுற்றச்செய்து
மேளத்தாளத்துடனே மேன்மையாய்கோலம்வந்து
அந்தப்புரமடைந்து அந்தநல்லசமயத்தில்
தேவிலட்சுமம்மாள் தீவிரமாயவ்வேளை
திங்கக்கிழமைதன்னில் திகழ்தொருப்பொழுதிருந்தாள்
கெங்கைதொரவண்டை கெம்பீரமாய்தானும்வந்தாள்
சூர்யஸ்தானமும் சுத்தமாய்தானுஞ்செய்தாள்
பட்டுப்புடவைக்கட்டி பண்புடனேயம்மாது
தங்கக்கிண்ணமதை தானெடுத்துவரச்செய்து
ஏழுப்பழங்களை இன்பமாய்சார்பிழிந்து
கர்ப்பூரதூபமிட்டு கடுவந்தனஞ்செய்து
மும்மூர்த்திதேவரை முகந்துதான்நினைந்துக்கொண்டு

நாகசர்ப்பமதை நலமாகநினைந்துக்கொண்டு
ஜடாங்கிமகாமுனியை தன்மனதில்நினைந்துக்கொண்டு
ரசம்தன்னையெடுத்துமே இன்பமுடன்தான் குடித்தாள்
அந்தவிஷமதில் யத்தேவிகெற்பமாகி
ஓங்கிவளர்ந்திட வுகந்துமேயம்மாது
தசமாதமானவுடன் தேவியுமப்போது
ஓடிவருவீர்கள் உகந்ததோர்தோழிமாரே
என்றுமில்லாகாக்ஷி இன்றுயான்கண்டேனே
பக்கம்பிளக்குதடி பாலன்வந்துகுத்துதடி
கால்கள்தடுமாருதடி கண்களும்சோருதடி
இருந்ததுபோலிருந்து இருபக்கம்நோகுதடி
அந்தச்சமயத்தில் அருகிருந்ததோழிமாரும்
மருத்துவகிழவிதன்னை மகிழுடனழைத்துவர
ஓட்டம்நடையாகச்சென்று மருத்துவகிழவிதன்னை
பாட்டிநீவாடி பண்புடனேயெங்கள்தேவி
கெர்ப்பவேதனைதான் கெம்பீரமாய்படுகின்றாள்
வாடியென்றுசொல்லி வண்மையுடனழைத்துவர
மருத்துவகிழவிதான் மகிழ்ந்துதேவிதன்னைக்கண்டு
சற்றுநேரமட்டும் சிறப்புடனேபொருத்திருப்பாய்
அப்படிச்சொல்லவே அந்தநல்லச்சமயத்தில்
பட்டத்துத்தேவிக்கு பெண்பிள்ளைஜனனமாச்சு





லட்சுமிதேவியம்மாள் புதல்வரைப் பெறுவது

இப்படியாக யேழுப்பிள்ளை தானும்பெற்றாள்
சிறுவருக்குஜலம்வார்த்து சிறப்புடனேபொட்டுமிட்டு
தங்கத்தொட்டி தன்னில் தனிமையுடன்வளர்த்துவிட்டாள்
அந்தச்சமயத்தில் அன்பானலட்சுமியும்
தோழிகளைத்தானழைத்து தோகையரேநீர்கேளும்
எங்கடியெந்தன்பாலர் யெந்தனுக்குக்காட்டுவீர்
இப்படிச்சொல்லவே இசைந்துமேதாதிகளும்
பாலகரையெடுத்துவந்து பக்கத்தில்தான்போட்டார்
தாயும்ஸ்தனம்கொடுக்க தக்கபடி பாலருண்ண
இந்தசெய்திதன்னை இசைந்துமேவேந்தன்கேட்டான்
சந்தோஷம்தானடைந்து சம்பிரமாய்ப்போது
வீதியலங்கரித்து வீதியெங்கும்தோரணமிட்டு
சர்க்கரைகற்கண்டு சிறப்புடன்தான்கொடுத்தார்

வசனம்.

இப்படியாய் வேந்தனுக்கு பாலர்பிறந்தாரென கேள்வியடைந்து சந்தோஷமடைந்து தன் நாடெங்கு மலங்காரஞ்செய்து சர்க்கரைக் கற்கண்டு பூரிக்கொடுத்திருக்குஞ் சமயத்தில் லட்சுமிதேவியம்மாள் தன் பாலருக்கு ஸ்தானம்செய்யவைத்து நெற்றியில் பொட்டுமிட்டு பட்டுபீதாம்பரங்கட்டி தன் பாலரைபார்த்துச் சந்தோஷமடைந்திருக்குஞ் சமயத்தில் வேந்தனந்தப்புரம்வருக அக்காலத்தில் லட்சுமிதேவி நாயகனைப்பார்த்து சொல்லலுற்றாள்.

கேட்பீரேநாயகரே கிருபையுடனென்வார்த்தை
பாலரைப்பெற்ற பெரும்தந்தைநீரானீர்
மக்களைப்பெற்ற மாதுமேநானுமானேன்
மூன்றுமாதமிப்போ முகுந்துநடக்குதைமா
பாலருக்கானாலும் பேரிடநாள்பாரும்
இந்தமொழியைக்கேட்டு எழில்வேந்தன்சொல்லலுற்றான்
ஆகட்டும்பெண்ணே ஆரணங்கேநீகேட்பாய்
கொலுவிற்குயான்சென்று கோரும்படிசெய்யுகின்றேன்
இப்படிச்சொன்னவுடன் இசைந்துசூரியனுதித்தான்
காலக்கடன்தீர்த்து கடுகவேகொலுநாடி
வேந்தனுஞ்சென்றுமே வீற்றிருந்தார்கொலுதன்னிலே
மந்திரியைத்தானோக்கி மகிழுடன்சொல்லலுற்றார்
கேளுங்கள்மந்திரியே கிருபையுடனென்வார்த்தை

பாலருக்குபேருமிட பண்புடனேவேதியரை
அழைத்துவரச்செய்வீர் அன்புள்ளபுரோகிதரை
அந்தமொழிக்கேட்டு அப்போதேமந்திரியும்
காவலரைதானழைத்து கடுகவேசொல்லலுற்றார்
காவலரேநீங்கள்சென்று கண்டுமேபுரோகிதரை
வேந்தனழைத்ததாக வேகமுடன்சொல்லிநீங்கள்
அழைத்துவருகுவீர்கள் அன்புடன்புரோகிதரை
சொன்னவுடனே சேகுவரும்வோடலுற்றார்
வேதியரைக்கண்டு வந்தனஞ்செய்தாரே
அய்யாபுரோகிதரே அன்புடன்வேந்தனும்மை
அழைத்துவரச்சொன்னார் ஆஸ்தானகொலுவிற்கு
சொன்னமொழிகேட்டுச் சீக்கிரமாய்புரோகிதரும்
பட்டுக்கரைதோவத்தி பண்புடன்கட்டிக்கொண்டு
பஞ்சாங்கம்கட்டுதன்னை பண்புடன்தானெடுத்து
அக்களில்தானும்வைத்து அப்போதுநடக்கலுற்றார்
வேந்தன்கொலுவில்வந்து வேதியரும்வந்தாரே
வந்ததோர்வேதியர் வந்தனங்கள்செய்தாரே





நவபோஜமகாராஜன் தர்பாரில் வேதியர்
பாலருக்கு பெயரிடுவது.

அய்யாக்குலகுருவே அமருவீர்யாசனத்தில்
இப்படிச்சொன்னவுடன் இருந்தாரேயாசனத்தில்
வேந்தனைத்தான்பார்த்து வேகமாய்சொல்லலுற்றார்

அய்யாவேநீர்கேளும் அன்புடன்யென்வார்த்தை
ஏதுக்குயெந்தனை இப்போதுதானழைத்தீர்
அழைத்ததோர்காரியத்தை அன்புடன்சொல்லுமைய்யா
இந்தமொழிக்கேட்டு யெடுத்துச்சொன்னான்வேந்தனும்
அய்யாவிப்பிரவரே அறியநான்சொல்லுகிறேன்
எந்தன்புதல்வருக்கு இன்பமுடன்பேருமிட
ஏழுப்புதல்வருக்கு இப்போதேபேருமிட
அழைத்தேனுங்களை அன்புடனிந்தவேளை
இந்தமொழிகேட்டு யெடுத்தாரேபஞ்சாங்கத்தை
பஞ்சாங்கம்பார்த்துமே பேருமிடயோசித்தார்
அய்யாவேபாலகரை அன்புடன்கொண்டுவாரும்
இப்படிச்சொல்லவே யெடுத்துவந்தார்பாலகரை
பாலகர்கைப்பார்த்து பார்ப்பனருஞ்சொல்லலுற்றார்
பேருமிடுகின்றேன் பெருமையுடன்பாலருக்கு
தலசன்புதல்விக்கி திரமுடன்சொல்லுகின்றோம்
சூர்யநாகம்மாவென்று சொல்லலாகும்பேருதான்
இரண்டாம்புதல்விக்கி யெடுத்ததுசெந்திரநாகம்மாள்
மூன்றும்புதல்வியை உத்திரகன்னியென்றழையும்
நான்காம்புதல்வியை தக்ஷனகன்னியென்றழையும்
ஐந்தாம்புதல்வியை பசடசங்கம்யென்றழையும்
ஆறாம்புதல்வியை அழைப்பீர்முனிகன்னியென்று
ஏழாம்புதல்வி இன்பபாலநாகம்மாள்தான்
இப்படிப்பேர்களை இன்பமாய்யிட்டபின்பு
அந்தச்சமயத்தில் அறிபோஜராஜனும்
பேருமிட்டவிப்பிரவர்க்கு பெருமையுடன்வெகுமதிகள்
மூன்றுவஸ்திரங்கள் முந்தியாககொடுத்துவிட்டார்
வெகுமதிதானடைந்து விப்பிரவரும்நடக்கலானார்
இப்படியாக இருக்குமந்தச்சமயத்தில்
ஆருவருடமாச்சு அழகுள்ளமூத்தப்பெண்ணுக்கு
பேசதானறிந்தாள் பெருமையுள்ளசூர்யநாகம்மாள்
தாயிடம்வந்து தான்கேட்கலுற்றாளே
அம்மாவேநீகேளும் அன்பாயென்னைப்பெற்றதாயே
பூஷணமில்லாமல் புவிதன்னிலிருக்கலாமோ
இந்தமொழிக்கேட்டு யெடுத்துச்சொன்னாலட்சுமியும்

எந்தனைக்கேட்டால் யேதுபலன்வுண்டாகும்
தந்தையைக்கேட்டால் தக்கபடிசெய்வாரம்மா
அந்தமொழிக்கேட்டு யேழ்வரும்நடக்கலுற்றார்
தந்தைக்கொலுத்தேடி இன்பமாய்வருகின்றார்
மக்கள்வருவதை மன்னவனும்பார்த்துவிட்டான்
ஓடியெதிரில்வந்து பாலரையெடுத்துக்கொண்டு
காதலிபெற்றெடுத்த கண்மணியேயெங்குவந்தீர்
எங்களைப்பெற்ற இன்பமுள்ள தந்தையரே
பூஷணமில்லாமல் புவிமீதுயிருக்கலாமா
என்னைப்போல்மாதருக்கு யேளனமல்லாவோ
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்வேந்தனும்

வசனம்.

இந்தமொழிகளைக்கேட்டு சந்தோஷமடைந்து அன்னாட்டிலிருக்கப்பட்ட கம்மாளனையழைத்து பாலருக்கு தகுந்த பூஷணஞ்செய்யும்படி வுத்திரவுசெய்தவுடன் கம்மாளன் சம்மதித்து இரண்டுதினத்தில் பூஷணங்களைக் கொண்டுவந்து கொடுத்துவிட அதை பாலருக்கிட்டு அழகுப்பார்த்து சந்தோஷமடைந்திருந்தார்.



லட்சுமம்மா தேவியம்மாள் வேதியரைப்பார்த்து
பௌர்ணமி விசாரிப்பது.

இப்படியிருக்கவே இன்பமுடன்வோர்தினத்தில்
அய்யமென்றுவிப்பிரவன் அன்புடன்வந்தானே
வந்தவிப்பிரவனை வாஞ்சையுடன்லக்ஷ்மிபார்த்து
அய்யாவிப்பிரவரே அடியாள்வார்த்தைகேளீர்
என்றைக்குபௌர்ணமி யெனக்குமேசொல்லுமையா
இந்தமொழிக்கேட்டு யெடுத்துரைத்தாவிப்பிரவனும்
அம்மாயினிமூன்று அறியநாளிருக்குதம்மா
இந்தமொழிக்கேட்டு யேதுசெய்தாள்லட்சுமியும்
அய்யோமக்களேயென்று அலறிதான்தானழுதாள்
மக்களேவுங்களை மாபாவிகாண்பதெப்போ
எந்தனுக்குமரணமே இப்போயமைச்சுதம்மா
தவமாதவமிருந்து தான்பெற்றேனுங்களையான்
பாலர்சந்தோஷத்தை பார்க்காதப்பாவியானேன்
பாலர்கள்வீதியிலே பாலரோடுயாடையிலே
தாயில்லாப்பிள்ளையென்று தலைமீதடிப்பாரோ
எந்தனுவிப்போனால் இன்பமாயுங்கள்தந்தை
மாருகலியாணம் மகிகூஷியாய்தான்செய்து
பத்தினிமொழிகேட்டுப் பாலகரைவெருப்பாரோ
சீருதான்செய்யாமல் சித்திரவதைசெய்வரோ
இப்படிச்சொல்லி இசைந்துலட்சுமியழுகனுற்றாள்
இதைகேட்டுவேந்தனும் யதிவேகமாய்வந்தாரே




லட்சுமிதேவி தன்கணவனோடு நாகம்வந்து
பிராணன் கொண்டேகுமென்று சொல்வது

கேட்டீரோநாயகா கிருபையுடனென்வார்த்தை
பாலர்கள்வரத்துக்காக நாகமுனியருகில்சென்று
தவங்களும்யான்புரிய தானறிந்துநாகமுனி
ஏழுப்பழங்களை இன்பமாய்க்கைகொடுத்தார்
பழத்தைக்கைக்கொடுத்து பார்த்தாரேநாகமுனி
உந்தன்பிராணமீது இச்சித்தேன்பெண்ணேயென்றார்
அந்தமொழிக்கேட்டு ஆகட்டுமென்றுச்சொன்னேன்
இன்றுதினத்திற்கு பூர்த்தியாச்சுயென்மரணம்
நான்சென்றபிறகு பாலகரைகாப்பீரோ
புத்தியறியாத புகழ்பெற்றப்பாலராச்சே
எப்படியாகவேதான் இப்பாலரைக்காப்பிரையா
அந்தமொழிக்கேட்டு ஆணழகுவேந்தனும்
கண்ணீர்ஜலம்விட்டு கண்ணைதுடைத்துக்கொண்டு
கொலுச்சாவடிச்சென்று கொப்பனவேதானமர்ந்து
கேட்டீராமந்திரிமாரே கிருபையுடனென்வார்த்தை
நாளைதினத்திற்கு நடுராத்திரிவேளைதன்னில்
நாகந்தான்வந்து நலமானயென்தேவியை
கடித்துவுயிர்வாங்கி கடுகவேபோய்விடுமாம்
வாக்குக்கொடுத்துவந்தாள் வண்மையுள்ளயென்தேவி
கொடுத்தவாக்குதன்னை கொப்பனவேபிசகமாட்டாள்
இந்தமொழிக்கேட்டார் இன்பமுள்ளமந்திரிமாரும்
அய்யாவேநீர்கேளும் அன்புடனெங்கள்வார்த்தை
இந்தகெண்டம்தன்னை இப்போதேகார்க்கின்றோம்
அந்தமொழிக்குவேந்தன் ஆச்சரியந்தானடைந்து
தப்பித்துத்தருவீராகில் தாரணியில்தெய்வமென்பேன்

வசனம்.

ஓ மகாராஜனே நீர் துயரப்படவேண்டாம் இதோ யாங்கள் அந்த அம்மணியுடைய பிராணத்தை காப்பாற்றித்தருகுரோமென்றுச்சொல்லி அந்தச் சாயந்திரம் தெருக்கோடியில் நாலு இரும்புத்தூணுகளை நட்டு அது மத்தியில் ஸ்காந்த பெட்டிசெய்து அந்தபேழைதன்னில் லட்சுமிதேவியைச் சயனிக்கச்செய்து கதவை மூடித்தாளிட்டு பெட்டிக்குச் சங்கிலிகள்கட்டி மேலுக்குத் தூக்கிவிட்டு அதின்கீழ் அகண்டமான காட்டுக் கட்டைக்கரியை எரியவிட்டு நாலுபுறமும் காவல்சூழ்ந்திருக்க மந்திரியும் வேந்தனும்

கண்மேல் ரெப்பையிடாமல் பார்த்துக்கொண்டிருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் நாகமானது புத்தைவிட்டு வெளியில் வந்து பார்க்க தீயின்வொளியைக்கண்டு கோபமுண்டாகி தன் திரேகமரைத்து அந்தலட்சுமி சயனித்திருக்கும் பேழைக்குள் நிஜரூபமெடுத்துச் சொல்லத்தொடங்கியது.

இப்படிச்செய்யலாமா இதுநல்லவிபாயமாமோ
அந்தநாளில்சொன்னமொழி அல்பமாய்யெண்ணலாமோ
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்லட்சுமிதேவி
என்னால்பிழைகளில்லை இப்போதுநாகேந்திரா
பாவிகளிப்படி பலவாராய்ச்செய்துவிட்டார்
என்னாலேகுற்றமில்லை அய்யனேநீர்கேளும்
உந்தனிஷ்டப்படி யுகந்துமேசெய்யுமையா
இந்தமொழிகேட்டு யேதுசொன்னான்நாகேந்திரன்
நீபெற்றபாலகரை நலமாகபார்த்தாயோ
பால்குடிக்கும்பாலருக்கு பாலைதான்கொடுத்தாயோ
எந்தன்மொழிகேளும் இன்பமுள்ளநாகேந்திரா
உந்தன்பசியார உகந்துமேபுசியுமையா
இப்படிச்சொல்லவே யெழுந்தானேநாகேந்திரன்
கண்டத்தில்கடித்து கடுகவுதிரம்குடித்தானே
குடித்தவிஷத்திற்கு கோதையும்மூர்ச்சையானாள்
மாயமாய்போய்விட்டான் மகிழுடன்புத்திற்கு
மூர்ச்சைத்தெளிந்துமாது முகந்துமேசொல்லலுற்றாள்
இன்னமேநான் இருக்குறீர்கள்காவல்தானும்
இந்தமொழிக்கேட்டார் இன்பமுள்ளமந்திரிமாரும்
வேந்தனையப்போது வேகமாய்பார்த்துமே
அய்யாவேநீர்கேளும் அன்பானவார்த்தைதான்
இனிபயமில்லைதான் என்னைப்பெற்றதாயிக்கு
அந்தச்சமயத்தில் அங்கிருந்தகாவலர்கள்
பெட்டியையிரக்கினார் பொறுமையுடன்பூமிமீது
பெட்டிக்கதவைதன்னை புகழுடன்திறந்துவிட்டார்
இரத்தவெள்ளமது பூமியில்வோடியது
இந்தயதிசயத்தை வேந்தனும்பார்த்துவிட்டான்
கண்கள்சிவந்து கடுகபிச்சுவாதானெடுத்து
குந்தியமர்ந்தானே கோவேந்தனச்சமயம்




நவபோஜமகாராஜன் மந்திரிமாருடன்
துக்கமடைவது,

அப்பாமந்திரிமாரே அன்பாயென்வார்த்தைகேளீர்
இனிவுடலைவைத்துயான் இவ்வுலகமாளமாட்டேன்
என்-பத்தினிபோனபின்பு பாருலமாள்வேனே
என்-தேவிதான்போனபின்பு தேருலகமாளலாமா
போக்குரேனுவியென்று போர்வேந்தன்யெழுந்தானே
இத்தனையும்பார்த்திருந்து யெழுந்தாரேமந்திரிமார்கள்
இப்படிசெய்வது இதுநீதியல்லவையா
பாலர்முகம்பாரும் பார்வேந்தாயிவ்வேளை
தாயுமேமாண்டுவிட்டார் தந்தையும்மாண்டுவிட்டால்
பாலரையார்காப்பார் பார்மீதுயென்கோவே
தாய்மாண்டபிற்பாடு தந்தைகாப்பாற்றவேண்டும்
இப்படிச்சொல்லியே இருகைப்பிடித்துக்கொண்டார்
அந்தச்சமயத்தில் அங்கிருந்தமந்திரிமார்கள்
மந்திரக்காரையழைத்து மந்திரிக்கச்செய்தாரே
எத்தாலேதீரவில்லை இளநாகம்கடித்தவிஷம்
அந்தச்சமயத்தில் ஆயாசமடைந்தானே
கண்விழித்துப்பார்த்தாள் கருணையுடன்நாயகனை
இரண்டுகரம்தன்னை இன்பமாய்ப்பிடித்துக்கொண்டு
கேட்டீரோநாயகா கிருபையுடனென்வார்த்தை
அறியாதபாலகரை அவனியில்விட்டேனிப்போ

சூதுவாதரியாத சுந்தரரைவிட்டேனையா
போகுதுயென்னுவி புகழுடன்கைலாசம்
மாருகலியாணம் மன்னவனேசெய்யவேண்டாம்
மாருதாயார்வந்துவிட்டாள் மன்னவனேபாலகரை
சீருட்டிபாருட்டாள் சிறப்புமொன்றுசெய்யமாட்டாள்
இந்தமொழிக்கேட்டு இன்பமாய்வேந்தனும்
மாருகலியாணம் மாதேயான்செய்யமாட்டேன்
பாஉசாதம்சத்தியம் பண்புடன்செய்துதந்தார்
அந்தமொழிக்கு அந்தலட்சுமியேதுச்சொன்னாள்
புருடரைநம்பலாமா புகழுடன்பாரின்மீது
சத்தியங்கள்செய்திடுவார் சரசங்கள்பாடிடுவார்
இதுவெல்லாம்கேட்டான் இன்பமாய்வேந்தனும்




லட்சுமிதேவிக்கி நவபோமஹாராஜன
சத்தியஞ்செய்வது.

மாதேநீகேளும் மகிழுடனென்வார்த்தை
இதுவேசத்தியம் இனிபிசகேன்வுண்மையிது
எந்தனைமாலையிட்ட இன்பமுள்ளநாயகரே
பாலரைதான்வளர்த்து பக்குவமறிந்தபின்பு
தகுந்தபுருடரை தான்பேசிபாலருக்கு
கலியாணம்நீர்செய்து காட்சிகள்கண்டபின்பு

மாறுக்கலியாணம் மன்னவனேசெய்துகொள்வீர்
இனிபிரர்ணம்நிற்காது யென்பாலரைக்காட்டுமையா
வேந்தனைப்பார்த்து வேககண்ணீர்தானும்விட்டாள்
சங்கராசிவசிவமென்று தன்பிராணம்விட்டாளே
இதைக்கண்டுவேந்தனும் இனிதுக்கம்தானடைந்தான்
தாதிகளும் மந்திரிமாரும் தானழுதாரப்போது
நாட்டின்குடிகளெல்லாம் நால்புரமழுதார்கள்
இழக்குமேடைதன்னில் சிறுவர்கள்யாடிருந்தார்
பழையசாதம் புசிய பாலர்கள்வந்தார்கள்
தாயிருக்கும்மேடைக்கு துரிதமாய்வந்தார்கள்
அம்மாவேயம்மாவே யெங்களைபெற்றதாயாரே
பசியெடுக்குதம்மா பழையசாதம்போடுமம்மா
எங்குபார்த்தபோதில் தாயில்லைமேடைமீது
தாதிகளைதான்பார்த்து தயவுடன்கேழ்க்கலானார்
எங்கள்தாயாரெங்கே யெங்களுக்குச்சொல்லுமம்மா
இந்தமொழிக்கேட்டார் இளம்பிராயதாதிகளும்
பாலரைக்கண்டவுடன் பலதாதிதுக்கங்கொண்டு
துக்கத்தையடக்கிக்கொண்டு மௌனமாயிருந்துவிட்டார்
பதில்மொழிசொல்லாமல் பலதாதிகளிருந்துவிட்டார்
நால்புரம்தன்னில் நலமாகதேடிவிட்டு
பாலநாகம்மாள் பண்புடன்சொல்லலுற்றாள்
அக்காவேநீர்கேளும் அன்புடனேயென்வார்த்தை
மாமன்வீட்டிற்கு மகிழ்ச்சியாய்போய்விட்டாள்
பானுகண்டிபட்டணம் போய்விட்டாள்நமதுதாயார்
நாம்வரப்போறோமென்று நம்முடன்சொல்லவில்லை
இப்படிச்சொல்லியே மேடைமீதேறிப்பார்த்தார்
வீதிதன்னிலேதான் கும்பலாயிருக்குதுபோது
அக்காவேநீர்கேளும் அன்புடன்யென்வார்த்தை
நமதுபட்டணத்தில் மாணிக்கம்விற்குதம்மா
கும்பலாய்ஜனங்களும் கூடிவாங்குறாரவ்விடத்தில்
நாமும்யதைதன்னை நலமாகவாங்கலாமே
தாய்வந்துகேட்டாள் தரணியிலகப்பட்டகென்போம்
விளையாடும்விடத்தில் யகப்பட்டதென்போமே
இப்படிச்சொல்லியே வந்தாரேயப்போது

முந்தியாகவந்தாளே முகந்துசூர்யநாகம்மாள்
பெற்றதாயாரைப் பார்த்துவிட்டாள்கண்ணுலே
அய்யோதங்கையே அன்பானநாகம்மா
நமதுதாயாரும் நலமாகசெத்துவிட்டாள்
ஐயோதங்கையே அவனியில்யெப்போகாண்போம்
மாரில்யரைந்துக்கொண்டு மகிழ்ச்சியாயழுதுநின்ருர்
அன்பானதங்கையே யென்னைபெற்றதாயாரெங்கே
கோடுகோடென்றழுதார் கோமலப்பாலகரும்
ஐயையோயெந்தனை அன்பாய்பெற்றதாயாரே
பத்துமாதம்தன்னை பகர்ந்துயெம்மைசுமந்தாயே
நீரில்லாக்கிணருனோம் நிலையில்லாபடகானோம்
பாரினில்பாதகராய் பாவிகள்பிறந்தோமே
தாயென்றயாசையை தாரணியில்மறந்தோமே
அம்மாவேயம்மாவே யென்னைபெற்றதாயாரே
கொண்டையாரிடுவார்கள் குவலயத்திலெங்களுக்கு
ஆடையாபரணங்கள் ஆர்தானிபூட்டுவார்கள்
பொட்டுதானிட்டுயெவர் பெருமைதன்னைபார்ப்பார்கள்
எங்கள்யழகுதன்னை யெவர்கண்டுசந்தோஷிப்பார்
தாயாரில்லாவிட்டால் தந்தையாதரிப்பாரோ
தாயாருக்கல்லவோ சீர்செய்யதான்தெரியும்
புருஷருக்கென்ன சீர்செய்யதான்தெரியும்
இந்தமொழிக்கேட்டு இன்பமாய்தந்தையும்
பாலரைப்பார்த்துயப்போ பகர்ந்துயழுகலானுர்
நாட்டின்ஜெனங்களெல்லாம் நலமாயழுகலுற்ருர்

வசனம்.

இப்படி மரணமடைந்த லட்சுமிதேவியை பாலர்பார்த்து துயரமடைந்து அழுஞ்சமயத்தில் இந்த கோரத்தைப்பார்த்துவேந்தனும் நாட்டின் குடிஜெனங்களும் துயரப்படவே அதின்பிறகு வேந்தன் தன் துக்கமதை ஆற்றிக்கொண்டு நல்லசந்தனக்கட்டை தேவதாரி குங்குமக்கட்டை முதலான கட்டைகளைக்கொண்டுவந்து காஷ்டமடுக்கி அதில் லட்சுமிதேவியை தகனஞ்செய்து விட்டு கர்மானுஷ்டானங்களை தீர்த்துக்கொண்டு பாலரோடு சந்தோஷமாயிருக்குஞ் சமயத்தில் அப்பாலகரை தாயின்மேல் ஞாபகமில்லாமல் இருக்கும்பொருட்டு தகுந்த வாழை மாம்பழம் பிலாப்பழம் கிச்சிலி முதலான பழங்களைக் கொண்டுவந்து பாலருக்குக் கொடுத்து சிறப்புடன் வாழுஞ்சமயத்தில்.





## நவபோஜமஹாராஜன் தர்பாரில் குடிஜனங்கள்வந்து நீதிசொல்வது.

இப்படியாக இருக்குமந்தக்காலத்தில்
பட்டணத்திலிருக்கும் பலக்குடிஜெனங்களும்
பத்துஜெனங்களும் பலபேர்கொலுவமர்ந்து
அய்யாராஜேந்திரா அன்புடனேநீகேளும்
இப்படியிருப்பது இதுநீதியல்லவே
மாறுக்கலியாணம் மகிழ்ந்துமேசெய்துக்கொள்வீர்
இந்தமொழிக்கேட்டு யேதுசொன்னான்வேந்தனும்
இப்படிச்சொல்வது இதுநீதியல்லவே
மாறுக்கலியாணம் மகிழ்ச்சியாய்செய்யமாட்டேன்
பாலர்பிழைத்திருந்தால் பெரும்பாக்கியமதுவேயாகும்
எந்தனுடதேவிக்கு இன்பமாயானுமேதான்
சத்தியங்கள்தன்னை செய்துக்கொடுத்தேனே
மரணமடையும்போது மங்கைதான்யென்னைப்பார்த்து
மாறுக்கலியாணம் மகிழ்ச்சியாய்செய்யாதீர்
என்றுமேசொல்லி எந்தனுக்குத்திட்டஞ்செய்தாள்
அந்தமொழிதன்னை யன்பாகத்தள்ளமாட்டேன்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்பரிஜனங்கள்
மாறுக்கலியாணம் மன்னவனேயாகாவிட்டால்
உந்தன்கொலுவிற்கு உகந்துயாரும்வருகமாட்டார்
மூண்டைராஜ்யமென்று மூகந்துமேசொல்வார்கள்
எங்கள்மொழிக்கேட்டு இன்பமாய்நடவுமையா
இந்தமொழிக்கேட்டு யேதுசொல்வான்வேந்தனும்
எத்தனைச்சொன்னாலும் என்புத்திபிசகமாட்டேன்

வசனம்.

இப்படியெல்லாம் சொன்னமொழி கேட்ட வேந்தன் சம்மதமடையாமலிருப்பதை மந்திரிமார் தெரிந்துகொண்டு வேந்தனுடைய பெரிய புதல்வியான சூர்யநாகம்மாளைப்பார்த்து அம்மா இப்படி வேந்தன் இருப்பது அழகாகுமா நீங்கள் புத்தியரிந்தவர்கள் உங்களுக்கு சீராட்டுவதற்குறிய தாயாரிருந்தால் நலமல்லவா வேந்தனைக் கலியாணஞ்செய்துகொள்ளும்படி எத்தனை விதமோ சொல்லிப்பார்த்தோம கேழ்க்கவில்லை ஆகையால் உங்கள் தந்தைக்கு உகுந்தப்படிச்சொல்லி மறுகலியாணம் செய்துகொள்ளும்படி திட்டஞ்செய்வீரென்று சொல்லியனுப்ப அம்மொழிக்கேட்டு சூர்யநாகம்மாள் சம்மதமடைந்து தந்தைவருக வெதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

சுந்திரமானதொரு சூர்யநாகம்மாளும்
நல்லதென்றுசொல்லி நலமாகயிருகையிலே
நவபோஜவேந்தன் நாடிகொலுவைவிட்டு
பாலரைநினைந்துக்கொண்டு பார்வேந்தன்தான்வருக
தந்தைவருவதை தனிமையுடனறிந்துகொண்டு



சூர்யநாகம்மாள் தந்தையை கலியாணஞ்செய்துக் கொள்ளும்படி புத்தி கூறுதல.

தந்தைக்குயெதிரில்வந்து தலைவணங்கிதெண்டனிட்டு
எந்தனைபெற்றதந்தை இன்பமாய்நீர்கேளும்
சின்னவயதுதனில் சிறப்புடனேயாதரித்தீர்
சரைந்தவயதாச்சு இப்போதுயெங்களுக்கு
சேலைகள்கட்டவும் சிறப்புடன்நீர்வார்க்க
பெண்களுக்குதகுமேதான் புருஷருக்குதகுமோதான்
மாறுகலியாணம் மன்னவனே செய்துக்கொண்டால்
உங்களுக்குவந்ததேவி உகந்தெம்மையாதரிப்பாள்
ஆகையால்நீரிப்போ அறியவேகலியாணம்
தந்தையேசெய்துக்கொள்வீர் தாரணியோர்தான்மகிழ
இந்தமொழிக்கேட்டு ஏதுசொன்னான் மன்னவனும்
அம்மணிநான்பெற்ற அறிவுள்ளபாலகரே
உங்களுக்குயிந்தமொழி உகந்துசொன்னதாரம்மா
உங்கள்புத்தியாலே ஊகித்துசொன்னீரு
கற்பனைசெய்தாரோ கருணையுள்ளபாலகரே
நான்பெற்றபாலகரே நாகம்மாநீகேளும்
உங்கள்தாயாருக்கு உகந்துசத்தியம்செய்துதந்தேன்
சத்தியம்பிசகமாட்டேன் தாரணியோர்தான்மகிழ
இந்தமொழிகேட்டு யேதுசொன்னாள்நாகம்மாள்
எந்தனுக்குதாயாரை இப்பவேகாட்டுமையா
மாண்டுவிட்டதாய்தானும் மண்டலத்தில்வருவாளோ
இப்படிசொல்லவே இதுகேட்டான்வேந்தனும்
அம்மாவேநீகேளாய் அன்புள்ளநாகம்மா
உங்கள்தாயார்போலாக உலகத்திலிடைக்கமாட்டார்
விரதங்கள்கெட்டபோதில சுகமடையவேணுமம்மா
இப்படிக்கில்லாவிட்டால் ஏன்கலியாணம்செய்வது
இதுபோலசொல்லிவிட்டு யெழுந்துமேபோய்விட்டார்
இந்தசேதிதன்னை மந்திரிமார்தானறிந்தார்

வசனம்.

இப்படிச் சொன்னமொழிகளை மந்திரிமார் தெரிந்துக்கொண்டு இதற்குத்தக்க ஏர்பாடுசெய்யவேண்டுமென்று மனதில் நினைந்து இடுமருந்தெடுத்து எண்ணைதன்னில் கலக்கி தாதிக்கையில் கொடுத்து இதை நாளையதினம் ஸ்நானஞ் செய்யுங்காலத்தில் வேந்தனுக்கு தலைக்குத் தேய்ப்பீரென்றுச் சொல்லிக்கொடுக்கவே

அதுபோல் தாதிகள்பெற்று மறுதினம் உதயத்துக்கெல்லாப் ஸ்நானஞ் செய்யவருக அச்சமயத்தில் எண்ணைத்தீட்டி ஸ்நானஞ் செய்ய வைத்தார் வேந்தன் ஸ்நானம்செய்தபிறகு திவ்யபோஜன மருந்தி ரத்தினகசிதமாகிய மஞ்சத்தின்மீது சயனித்துக்கொண் டார்.

அப்போதுவேந்தன் ஆயாசம்தானடைந்து
மஞ்சத்தின்மீது மகிழ்ந்துநித்திரைசெய்தாரே
நித்திரைசெய்யவே நினைப்பதுக்கொண்டாரே
கலியாணமென்றுசொல்லி கனவுகண்டுதானெழுந்து
இப்படியிருப்பது நலமல்லவென்றுச்சொல்லி
எப்படியாகிலும் இப்புவியில்கலியாணம்
செய்துக்கொள்ளவேண்டும் சிறப்புடனேயிப்போது
என்றுமனமிட்டு யெழுந்துமேகாவலரை
அப்போதானழைத்து அறிவேந்தன்சொல்லலுற்றான்
ஆரடாகாவலனே அதிவேகமாய்நீசென்று





நவபோஜவேந்தன் மந்திரியை அழைத்து
கலியாணத்திற்கு பெண்தேடும்படி திட்டஞ்செய்தல்.

மந்திரிதன்னையே மகிழுடனழைத்துக்கொண்டு
சீக்கிரமாக சிறப்புடன்வாருமப்பா
என்றுமேசொல்லி இசைந்துமேயனுப்பிவிட்டார்

காவலரப்போது கடுகவேவோடிவந்து
மந்திரியெதிரில்வந்து வந்தனங்கள்தான்செய்தார்
அய்யாவேவுங்களை அரிவேந்தனிப்போது
அழைத்துவரும்படி ஆக்கினையிட்டாரே
வாருமையாவென்று வகையுடனழைத்தாரே
இந்தமொழிக்கேட்டு யேதுசொன்னார்மந்திரியும்
ஆனால்வருகின்றேன் அடாகாவலனேயிப்போது
என்றுமேசொல்லி யெழுந்துவந்தான்மந்திரியும்
வேந்தன்முன்னில்வந்து வந்தனங்கள்செய்தாரே
அய்யாவேநீங்களும் அழைத்தக்காரியமேதையா
எங்களுக்குச்சொல்லுமே இன்பமாயிப்போது
இந்தமொழிக்கேட்டு யெடுத்துச்சொன்னான்வேந்தனும்
மந்திரிநீகேளாய் மகிழுடனென்வார்த்தை
எந்தன்தேவிபோல உலகத்தில்தேவிதன்னை
இன்பமாய்நீர்சென்று இப்பவேதேடிதான்
கலியாணத்திற்கு கடுகமுடிவுசெய்துவாரீர்
இந்தமொழிக்கேட்டு யேதுசொல்வார்மந்திரிகளும்
உங்களிஷ்டப்போல உகந்துயான்தேடிவாறோம்
இப்படிச்சொல்லியே இசைந்துமேநடக்கலுற்றார்
மந்திரிகளிருவரும் மகிழந்துமேபுறப்பட்டார்
காடுமலைத்தாண்டி கடுகவனங்கள்தாண்டி
ஆறுநதிகள்தாண்டி ஆவலாய்வருகின்றார்
இஞ்சிவனம்தாண்டி இருண்டவனந்தோப்பைவிட்டு
தேசதேசங்கள்தோரும் திரிந்துமேபார்க்கையில்
எங்குபார்த்தபோதில் இணையில்லைபெண்பாவை
நயனபட்டணம் நலமாகவந்துசேர்ந்தார்
அந்தநாட்டையாளும் அறிவுபெற்றதவளவேந்தன்
தவளவேந்தன்யெதிரில்சென்றார் தயவுடனேமந்திரிகளும்
எதிரில்தான்வந்து இன்பவந்தனம்தான்செய்தார்
இவர்களைக்கண்டவுடன் இச்சையுடன்கேழ்க்கலுற்றார்
எந்தவூரெந்தரர்ஜ்பம் இங்குவரக்காரியமேது
வந்தசங்கதிகளை வகையுடன்சொல்லுமென்றான்
இந்தமொழிக்கேட்டு யெடுத்துச்சொன்னார்மந்திரிகளும்
அய்யாவேநீர்கேளும் அன்புடனேயெங்கள்வார்த்தை

வடக்கேவெகுதூரம் வாழ்வதுசக்கிரபட்டணம்
அந்தப்பட்டணத்தை அன்பாகயாண்டுவரும்
நவபோஜவேந்தனுக்கு நலமுந்திமாதுதான்
மாண்டுசுகமடைந்தாள் கறுகலியாணந்தான்செய்ய
இச்சைதான்கொண்டார் இப்பவேவுங்களிடம்
மாதுயிருந்தாக்கா மகிழுடன்தருவீரு
இந்தமொழிக்கேட்டு யேதுசொன்னன்யவ்வேந்தன்
அப்படியேதருகின்றேன் ஆனதோர்வேந்தனுக்கு
என்னென்னபணிகளதான் ஈடுதான்கட்டுவீர்கள்
இத்தனைகேட்டார்கள் இன்பமுள்ளமந்திரிமார்கள்
அய்யாவேநீகேளும் அன்புடனேயெங்கள்வார்த்தை
காப்புகொலுசுதான் கனமானவொட்டியாணம்
பச்சைப்பதக்கமும் பகுர்த்தசெம்புயட்டிகையும்
இப்படிக்கொர்த்தநகைகள் இன்பமாய்கட்டுவோம்
இந்தமொழிக்கேட்டான் இன்பமுள்ளதவளவேந்தன்
சந்தோஷந்தானடைந்து சம்பிரமாய்சொல்லலுற்றான்
உங்களிஷ்டம்போல உகந்துமேசெய்துக்கொள்வீர்

வசனம்.

இப்படிச் சொன்னவுடனே மந்திரிகள் சந்தோஷ மடைந்திருக்க அந்தச்சமயத்தில் அவ்வேந்தன் விப்பிரவரையழைத்து நாள்பார்க்கையில் இன்று யெட்டாம்தினம் சுபலக்கின மென்றுச் சொல்ல அதுபோல் மந்திரிகளுக்கு திட்டஞ்செய்து எட்டாந்தினத்தில் வேந்தனையும் பந்துஜனங்களையும் வரும்படி சொல்லியனுப்பிவிட்டார் பிறகுபோய் மந்திமார் புறப்பட்டு பூச்சக்கிரப் பட்டணமடைந்து வேந்தனைப்பார்த்து அய்யா நாங்கள் இந்த ஐம்பத்தைந்து தேசமும் சுற்றிப்பார்த்து எங்கும்மாது கிடையாதப்படியால் கடைசியாக நயனதுபட்டணம் பரிபாலிக்கும் தவளவேந்தனிடம் விசாரிக்க அவ்வேந்தனுக்கு மாணிக்கியதேவி யென்றொரு மாதுயிருந்தது அதைப்பார்த்து அவ்வேந்தன் சம்மதிக்கும்படி மொழிகளாடி நாளை எட்டாந்தினத்தில் முகூர்த்தம் வைத்துக்கொண்டு வந்தோமென்றுச் சொல்ல அம்மொழிக்கு சந்தோஷமடைந்து இந்தக்காரியம் உங்களதென்றுச்சொல்லி புறப்பட வெத்தனமிட்டான்.

அந்தச்சமயத்தில் அறிவுள்ளமந்திரிகளும்
எழுபல்லக்கு யெடுத்துமேவெளியில்வைதிதார்

பல்லக்குதன்னிலே பாலரையேற்றிவிட்டு
கூடவுந்தாதிகளை கும்பலாகவருகச்செய்து
மன்னனையலங்கரித்தார் மகிழுடனவ்வேளை
கலியாணபுருடனைப்போல் கடுகயலங்கரித்தார்
மேளங்கள்தான்முழங்க மிருநாகசரமூத
பேரயிகள்தானுமே பல்லக்கெடுக்கலுற்றார்
ஏழுமக்களுடனே இன்பமாயவ்வேந்தன்
சகலசம்பிரமாக தான்வந்தசேதிதன்னை
கேட்டானேதவளவேந்தன் கிருபையுடனிச்சேதி
பாணகநீர்மோரு பக்குவமாய்தான்கொடுத்து
தாகந்தான்தீர்ந்தபின்பு தயவுடனேவிடுதிகாட்டி
விடுதியிலிருக்கச்சொல்லி வேகமாயவ்வேந்தன்
பவளகம்பம்நட்டு பச்சையாகபந்தலிட்டு
நாலுவீதிகளும் நலமாகயலங்கரித்து
முகூர்த்தங்கள்செய்ய முகந்துமேநின்றார்கள்



நவபோஜமகாராஜனுக்கு இரண்டாவது
கலியாணமாகுதல்.

வசனம்.

இப்படி நாடெல்லாம் அலங்கரித்து மாணிக்கதேவிக்கு நலு ங்கிட்டு ஸ்நானஞ் செய்யவைத்து பிறகு வேந்தனை அலங்கரித்து கலியாணபந்தலுக் கழைத்துவருஞ் சமயத்தில் மாணிக்கத்தேவி தாதிகள்,

மாணிக்கதேவிக்கு மகிழுடனலங்கரித்தார்
சம்பங்கியெண்ணெக்கொண்டு சரசமாய்தலைவாரி
ஜன்னல்பின்னலிட்டு தகுந்தமல்லிமுல்லையுடன்
இருவாக்ஷிசெண்பகம் இணையில்லாரோஜாவும்
குண்டுமல்லிகையும் குணமுடன்கொண்டைபோட்டு
நெற்றிக்குசிட்டிகட்டி நேர்விழிக்குமையெழுதி
கஸ்தூரிபொட்டுமிட்டு கனபணிகள்தானும்பூட்டி
கூரைச்சேலைக்கட்டி குணமானமாதர்கள்
சுபமென்றுச்சொல்லி சுருக்காசபந்தல்தன்னில்
கலியாணப்பிள்ளையுடன் கனசுண்டுவிரல்பிடித்து
பந்தக்கால்சுற்றிவந்து பக்குவமாயமர்ந்தாரே

வசனம்.

இப்படிக்கு யிருவரும் அமர்ந்தவுடன் வேதியர் வேதகோஷ்டம்பாடி மாங்கல்யம் தரிக்கச்செய்து பிறகு சேஷையரிசி யிட்டு இருவரும் எழுந்துபோகுஞ் சமயத்தில் பாலர்மீது கியாபகம் வேந்தனுக்கு வருக இதை மாணிக்கதேவி தாயாரறிந்து இப்படி பாலர்மீது கியாபகமுடைய வேந்தனுக்கு நமது புதல்வியை தந்தோம் ஆனல் இவன் கியாபகத்தை மரக்கடிக்கச்செய்யாமல் போவேனென்றுச்சொல்லி அந்தப்புர மடைந்தாள் இதற்குள் மாணிக்கதேவி பாலரிடம்வந்து பாலரைப்பார்த்து நிற்க சூர்யநாகம்மாள் தன் தந்தைக்கு வந்ததேவியென அறிந்து அமரும்படிச்சொல்ல அம்மாது யமர்ந்து அம்மா உங்கள் எழுபேர் நாமதேயமேதா அடியாளுக்குத் தெரியச்சொல்லுமென்று கேழ்க்க அதுபோல் பாலர்சொல்ல அதற்கு மாணிக்கதேவி சொல்லத் தொடங்கினள்.



மாணிக்கதேவி எழுபுதல்வருடைய
துக்கமாற்றி அலங்கரிப்பது.

உங்களுக்குமைப்பொட்டு உகந்தெவர்களிட்டார்கள்
தலைவாரிக்கொண்டைதான் தாரணியில்யார்போட்டார்கள்
இந்தமொழிக்கேட்டு இசைந்துபாலர்சொல்லலுற்றார்
சிற்றன்னைநீகேளாய் சிறப்புடனெங்கள்மொழி
எங்களைபாராட்ட எவர்பாரிலிருக்குறார்
பிறந்தவுடனேதாயை போக்கடித்துக்கொண்டோமே
எங்கள்தந்தைதானும் இந்தபொட்டுயிட்டாரம்மா
எங்கள்தந்தைதானும் இந்தசேலைகட்டினாரே
தாயைநினைந்து தனிபாலர்துக்கமிட்டார்
கண்ணீர்சொறிய கலங்கியவராழுகலுற்றார்
இப்படிபிவரழவே யெதிரிருந்தமாணிக்கதேவி
பாலரைதுக்கமாற்றி பண்புடன்சேலையுடன்
கண்களைதுடைத்து கடுகவேபாலருக்கு
ஜலகங்கள்செய்யவைத்து தன்மையுடன்தலைவாரி
கொண்டையிட்டுபொட்டுமிட்டு குலங்கசந்தனம்பூசி
எழுபேர்பாலருக்கு இன்பசேலைதானுங்கட்டி
நிலக்கண்ணாடியெதிரில் நிர்க்கவைத்துபார்க்கச்செய்தாள்
கண்ணாடிதன்னில்பார்த்து கடுகவேசொல்லலுற்றார்
பெண்களுக்கல்லவோ பிரியமதுயிருக்குமம்மா
புருடருக்கென்ன பாலர்சுகம்தெரியுமம்மா
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்மாணிக்கதேவி
சந்தோஷந்தானடைந்து சம்பிரமாய்ப்போகலுற்றாள்

வசனம்.

இப்படியாக மாணிக்கதேவி கங்கணகையுடன் பாலரிடம் வந்து அவர்களை சிங்காரித்து தெருதலைசெய்துவிட்டுபோக ஐந்தாம் தினத்தில் கங்கணம்யவிழ்க்க அதன் பிறகு வேந்தன் ஐந்துநாள் அங்நாட்டிலிருந்து மறுநாள் உதயத்துக்கெல்லாம் புறப்பட்டு பரிஜனங்களுடன் பூச்சக்கிரப் பட்டணம் வருக அந்தச்சமயத்தில் காவலர் யெதிரே வோடிவந்து பட்டத்துயானை செத்ததென்று சொன்னவுடனே வேந்தன் மந்திரியைப்பார்த்து இதுயென்ன விந்தையென்று கேட்டான் அதற்கு மந்திரி ஐயா அதுகாலஞ்சென்று மரணமடைந்துவிட்டது இதைப்பற்றி துயரப்படவேண்டாம் என்றுச் சொன்னவுடன் வேந்தன் மனக்கவலை அடைந்து நடக்கலுற்றான்.



நவபோஜமகாராஜன் பத்தினியோடு
தந்நாட்டிற்கு வருவது.

பட்டணத்துக்கப்போ பிரியமாய்வந்தாரே
நாலுவீதிகளுங் நலங்கோலம்வந்தாரே
சிங்கதுவாரமாக சிறப்புடன்வந்தாரே
அந்தச்சமயத்தில் ஆண்தூலமப்போது
மடமடவென்று உடைந்ததுயெதிராக
இந்தயதிசயத்தை பார்த்தீருமந்திரிமாரே
அந்தமொழிக்கேட்டு அங்கிருந்தமந்திரிகளும்
ஏதுப்பேசாமல் இருந்தார்களந்தவேளை

வசனம்.

இப்படிச் சொன்னவுடனே சிலமாங்கல்யபெண்கள் கும்புக் கூடி கலியாணப்பெண்ணை அழைத்துக்கொண்டு வீட்டிற்கு வர அந்தச்சமயத்தில் இடதுகால் வைக்கவே அடுக்கு பானைகள் சாய்ந்துவிட்டது இதைக்கண்டு வேந்தன் கேழ்க்க மந்திரிமார் ஏதும் பேசாமல் மவுனமாய் இருந்துவிட்டார் இம்மாதுவந்த தெசையானது பால்பாண்டம் உடைந்தது தொட்டியிலிருந்ததொரு பசுமாடுகள் செத்தது இதையறிந்து வேந்தன் தனியாக மேடைக்கட்டி

அதில் அம்மாதை இருக்கச்செய்து வேந்தன் அம்மாதுடன் வச னிக்காமல் வெறுத்து இருந்தான் இப்படியிருக்க டில்லிசேகுவர் வந்து வேந்தனை டில்லி ஜமாபந்திக்கு வரும்படிச்சொல்ல அந்தச் சமயத்தில் வேந்தன்புறப்பட்டுப்போக எத்தனமிட்டான் இதைக் கண்டு மாணிக்கதேவி பாலரையழைத்து அம்மா உங்களை தந்தை யழைத்தால் சிரியதாயாரிடம் இருக்குறோமென்று சொல்லுங்கள் என்றுச்சொல்லிவிட அதுபோல் பாலர் தந்தையைப்பார்த்து ஐயா நீர் டில்லிக்குப்போய் வருமளவும் நாங்கள் சிற்றனையிடம் இருக்குறோமென்றுச் சொன்னவுடன் வேந்தன் மாணிக்கதேவியிடம் வந்து பாலரை காப்பாற்றுப்படி திட்டஞ்செய்து விட்டுப்போக ஓர்தினம் அமாவாசை வந்தப்படியால் பாலரைப்பார்த்து மாணிக்கதேவி அம்மா நீங்கள் விரதமிருந்து பூர்ணசந்திரனைப்பார்த்துப் புசித்தால்,



மாணிக்கதேவி பாலருக்கு புத்திக் கூறுவது

சந்திரனைப்போல்புருடன் சிறப்புடனமைப்பானம்மா
இந்தமொழிகேட்டுபாலர் சந்தோஷமடைந்தாரே
இரண்டுமணிநேரம் இச்சையுடனவரிருந்து
அந்தச்சமயத்தில் ஆட்சியுள்ளசிற்றனையே
பசியுமெடுக்குதம்மா பாலர்நாங்கள்தாளமாட்டோம்
அன்னமிடுமம்மா அன்புடனேயெங்களுக்கு
இந்தமொழிகேட்டாள் இன்பமாய்மாணிக்கதேவி
இருடிமூண்டைகளே இப்பவேசமிக்குரேன்
மொட்டுமொட்டுயென்றுதலையில் குட்டினளப்போது

இந்தயடிப்பட்டு யெண்ணமிட்டார்பாலகரும்
ஐயோதெய்வமேயென்று அழுதுமேநின்றார்கள்
தந்தையின்பின்பற்றி போகாமல்நின்றோமே
இப்படிக்கெல்லாம் யிம்சைசெய்வாள்யென்றறியோம்
தந்தைவோரடிதான் தயவுடனடிக்கமாட்டார்
பெற்றதாயுமென்னை பிரியமுடனடிக்கமாட்டாள்
இவள்கையாலடிப்பட இட்டானேப்பா விபிரம்மன்
இப்படி துக்கிக்க இதுக்கண்டாள்மாணிக்கதேவி
எழுப்பேருக்கப்போ இன்பமாய்பாண்டங்களை
பாண்டங்கள்தன்னில் தொண்டிகள்தான்செய்து
எழுப்பேர்கையில் இன்பமாய்த்தான்கொடுத்து
அம்மாவேபாலகரே அன்புள்ளசெல்விமாரே
உபவாசமிருந்து உகந்துநித்திரைசெய்யலாமா
தண்ணீரெடுத்துவர தயவுடனிப்போது
இந்தமொழிக்கேட்டார் இன்பமுள்ளபாலகரும்
அம்மாவேநீகேளும் அன்புள்ளசிற்றன்னையே
தாகமெடுக்குதம்மா தயவுடனேநீகொடுப்பாய்.
இதைக்கேட்டுயம்மாது அப்போதுசொல்லலுற்றாள்
தண்ணீர்யெடுத்துவந்தால் தாகமும்தருகின்றேன்
அப்போதுபாலர்கள் அன்புடனேசொல்லலுற்றாள்
பாதைதெரியாதம்மா பண்புடனேதொரைக்கேக
இப்படிச்சொல்லியவர் யெல்லோருமழுதார்கள்
மாணிக்கதேவியும் மகிழுடன்சொல்லுகின்றாள்





கிணற்றருகில் பாலகர் தாயைநினைந்து துக்கிப்பது.

தெருக்கோடி தன்னிலொரு தெப்பக்கிணறிருக்கிறது
நீங்களுஞ்சென்று நிசழுடனெடுத்துவாரீர்
அந்தமொழிக்கேட்டு யெல்லோம்நடந்தார்கள்
இன்றைக்குநமக்கு இந்தகஷ்டம்வந்தது
பாவிவயிற்றினில் பெண்ணாய்ப்பிறந்தோமே
பிறந்ததினத்திலே பெருமையுள்ளயெங்கள்தாயார்
கொல்லாமல்விட்டாளே கொடுமையுடனப்போது
தந்தைச்சொன்னமொழியை தாரணியில்வெறுத்தோமே
கண்ணில்ஜலமொழுக கடுகநடந்தாரே
கிணற்றிலருகில்வந்து கொப்பெனவேநின்றுக்கொண்டு
எப்படிமாள்ளுவோம் இன்பமுள்ளயிக்கிணற்றில்
அம்மாடியம்மாடி அன்புள்ளயென்தாயே
பசியுமெடுக்குதம்மா பாவிகளுக்கிப்போது
எங்கள்பசிதீர்க்க யெவரையுங்காணோமே
வாவென்றழைக்க வையகத்திலாருமில்லை
பிள்ளைகளென்றுச்சொல்லி பிரியமுடன்சாதமிட
ஆரையுங்காணோமே அத்வானகானகத்தில்
இப்படிச்சொல்லிதான் எழுமக்களழுதார்கள்



ஏழுப்பாலகரும் பழவர்க்கங்களைப் பறித்துத் தின்பது.

வசனம்.

இப்படி பாலர் பசியால் பிரலாபித்து அழுஞ்சமயத்தில் லட்சுமிதேவி கிரந்தரமாய், மா, பிலா, வாழை, கொய்யா, கிச்சிலி, இப்

படிக்கொத்த செடிகளைநிர்மித்து யதில் பழ ள் இருக்கச்செய்ய இச்செடிகளைப் பார்த்து பாலர் சந்தோஷமடைந்து செடிகளைமி பழங்களைப்பரித்துத் தின்று கிணற்று ஜலத்தைக்குடித்து பசியாற் றிக்கொண்டு தண்ணீர் குடமெடுத்து இடுப்பில்வைத்துக்கொண்டு வீட்டிற்கு நடக்கலுற்றார்.

தண்ணீர்குடத்தில் தண்ணீர்தான்கிடையாது
பொத்தல்வழியாக போச்சுதுஜலமெல்லாம்
கட்டியசேலைகள் கடுகநனைந்துதப்போ
சிறியதாயாரைப்பார்த்து சிறப்புடன்சொல்லலுற்றார்
அம்மாவேநீகேளாய் அன்புடனெங்கள்வார்த்தை
பானைகளெல்லாம் பொத்தலாயிருக்குதம்மா
இந்தமொழிக்கேட்டாள் இன்பமாய்மாணிக்கதேவி
என்னடிமுண்டைகளே இப்படிசெய்துவந்தீர்
கிணற்றிலுடைத்தீரா கீழப்போட்டுயுடைத்தீரா
இப்படிச்சொல்லியே இசைந்துகொம்பையெடுத்தாளே
வாடிமுண்டைகளென்று வருசையுடனடிக்கலானாள்
தெரித்தியடிக்கலுற்றாள் சிருவரையப்போது
இந்தயடிப்பட்டு ஏதுச்சொன்னார்பாலகரும்
அம்மாசிற்றன்னையே அன்புடனெங்களை
என்னதப்பிதம்செய்தோம் இன்பமாயிப்போது
எங்களையடித்ததால் யெவருந்தன்கைப்பிடிப்பார்
தந்தையில்லாவேளையில் தாமிப்படியடிக்கலாமா
ஐயோதெய்வமேயென்று யலரிதுடித்தாரே
அழுதுமப்போது ஆயாசமடைந்தார்கள்
அம்மாவேயெங்களுக்கு அன்னம்போடாவிட்டாலும்
தாகத்துக்காணும் தயவுடன்தாருமம்மா
இந்தமொழிக்கேட்டு யேதுசெய்தாளத்தேவி
தாகந்தருகின்றேன் தாமதமாயிருப்பீர்கள்
இப்படிச்சொல்லி இசைந்துமேமாணிக்கதேவி
பிழைக்கடைவழியாக பிரியமாய்தான்சென்று
எருக்கங்கள்ளிப்பாலை இன்பமாய்பிழிந்தாளே
சங்குப்பாஷாணத்தை சம்பிரமாய்ப்பொடிசெய்து
மூன்றும்வொன்றாய்க்கலக்கி மூகந்துமேகொண்டுவந்து
பாலுடன்தான்கலக்கி பிரியமாய்காபிசெய்தாள்
எழுக்கிணற்றில் இன்பமாய்வூற்றிவைத்து

வாராய்சூர்யநாகம்மா வகையுடன்தாகங்கொள்ள
செந்திரநாகம்மா சிறப்புடனேவருகுவாய்
பாலநாகம்மா பிரியமாய்வருகுவாய்
சாதமாகநேரஞ்செல்லும் தாகமதைகுடிப்பீரே
இப்படிச்சொல்லவே இச்சைகொண்டார்பாலகரும்
ஏழுப்பேருமப்போது யெடுத்தாரேகிண்ணங்களை
ஒன்றுமறியாத உத்தமபாலகர்தான்
சூதுவாதறியாத சுந்திரபாலகரும்
காப்பியென்றுக்குடித்துவிட்டார் கனமுடனேபாலகரும்
குடித்தநிமிஷத்தில் குணமுடனேமாரடைக்க
என்னடிசிற்றன்னையே யெங்கள்தலைசுழற்றுதடி
கண்கள்சுழற்றுதடி காந்தம்போல்வேர்க்குதடி
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்மாணிக்கதேவி
எந்தன்கைப்பாலு விஷமாச்சோவுங்களுக்கு
உன்-தந்தைக்குவிஷமாச்சு உங்களுக்கும்விஷமாச்சோ
பாவிசண்டாளி படுபாவிமாணிக்கதேவி
இடதுகால்கொண்டு யெட்டியுதைத்தாளே
ஏழுப்பேரையப்போ யெட்டிமயிர்பிடித்தாளே
சிறியவீட்டில்தள்ளி சிறப்புடன்கதவடைத்தாள்
கதவையும்தாளுமிட்டு கடுசவேசயனித்தாள்
தாயில்லர்பாலகர் தத்தளித்தார்வீட்டினில்
நுரைகளும்தள்ளுது நிற்கபாதம்தளருது
பெற்றதாயாரை பிரியமாய்நினைந்தாரே
அந்தச்சமயத்தில் அழகானலட்சுமிதேவி
மாயமாய்தான்வந்து மக்களுக்கப்போது
பாவிகொடுத்தவிஷம் பாலாகச்செய்தாளே
அந்தநிமிஷத்தில் அங்கிருந்தப்பாலகரும்
தட்டினதுபோலாக அப்போயெழுந்தார்கள்
கொஞ்சநேரம்பொருத்துக் கூப்பிட்டார்மக்களும்
பொழுதுமேபோச்சுதம்மா புகழானசிற்றன்னையே
கதவைத்திரவம்மா கடுகபசியெடுக்குதம்மா
இந்தமொழிக்கேட்டு இன்பமாய்மாணிக்கதேவி
மூண்டைதான்பெற்றெடுத்த மூதேவிபாலருக்கு
சாவுதான்வரவில்லை சண்டாளப்பாலருக்கு
அந்தச்சமயத்தில் அந்தப்பாவிமாணிக்கதேவி

பத்துவீசைமுளகாய் பண்புடன்தானெடுத்து
அந்தவீட்டில்கொட்டி அக்கினியைமூட்டிவிட்டாள்
இந்தப்புகைதானும் இவர்களைசூழ்ந்திடவும்
மூச்சியும்பேச்சியும் முகந்துமேவரவில்லை
பெற்றத்தாயாரைப் பிரியமாய்நினைந்தார்கள்
மாண்டதோர்லட்சுமிதேவி மக்கள்படும்துயரம்பார்த்து
சாம்பிருணிவாசனைபோல் சம்பிரமாய்செய்துவிட்டாள்
பாலர்கள்செத்தாரென்று பண்புடன்மாணிக்கதேவி
கதவைத்திறந்தாளே கருணையாயப்போது
மக்களும்தான்பார்த்தார் மாணிக்கதேவியை
அங்கம்பசிக்குதம்மா அமுதைநீதாருமே
இந்தமொழிக்கேட்டாள் இன்பமாய்மாணிக்கதேவி
சொல்லத்தொடங்கினாள் சுந்திரப்பாலருக்கு
மக்களேநீகேளும் மகிழுடனென்வார்த்தைகேளீர்
உபவாசமிருந்து உலகத்தில்பலனென்ன
கோவிலுக்குப்போகாமல் கொப்பனவேசாதந்தின்றாள்
கிழப்புருடன்தான் கிருபையுடனமைப்பானம்மா
கோவிலைதான்தேடி கொப்பனவேபோகலாம்
எல்லோரும்வாருமே இன்பமாய்ப்போகலாம்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்பாலகரும்
சம்மதமடைந்து தாயென்றுபுறப்பட்டார்
ஏழுப்பேருடனே இன்பமாய்மாணிக்கதேவி
காட்டுமார்க்கமாக கடுகநடக்கலானார்
ஆனைப்புலிகள் அன்பாய்வாழுங்காட்டினில்
ஒண்டிக்கோவிலைக்கண்டால் உகந்துமாணிக்கதேவி
கோவிலருகில்வந்து கோவில்கதவுதான்திறந்தாள்
மக்களேநீங்கள்சென்று மாதேவியெதிரில்நின்று
நல்லபுருடரை நலமாயமைக்கச்செய்யுமென்று
வந்தனங்கள்செய்து வருவீரென்றுச்சொல்ல
அந்தமொழிக்கேட்டு அன்பாகப்பாலகரும்
நல்லதுயென்றுச்சொல்லி நடந்தாரேமக்களும்
ஏழுப்பேருமாக இன்பமாய்கோவிலுக்குள்
போனவுடனே பொல்லாதச்சண்டாளி
பாதகிசண்டாளி படுப்பாவிமாணிக்கதேவி
கதவைத்தான்மூடி கடுகவேதாளமிட்டாள்



கோயிலுக்குள் பாலகர் துயரமடைவது.

அந்தச்சமயத்தில் அங்கிருந்தப்பாலகரும்
குய்யோமுறையோவென கூச்சலிட்டழுதாரே
அம்மாசிற்றன்னையே அன்னீதம்செய்யலாமா
இப்படிச்செய்வது இதுவுனக்குத்தர்மந்தானோ
இந்தமொழிகளை இதுகேட்டாள்படுப்பாவி
கேளாமல்வந்தாள் கொடும்பாவிதன் மனைக்கு
ஏழுமக்களும் இருள்தன்னில்தானிருந்தார்
எந்தனைப்பெற்ற இன்பமுள்ளதாயாரே
நாங்கள்பிறந்தபோது நலமானபிராணமதை
போக்காமலேன்வைத்தாய் பொல்லாதப்பாதகரை
இந்தயிருள்தன்னில் இம்சைகள்செய்தாளே
எங்கள்கஷ்டத்தை இனியார்தான்தீர்ப்பார்கள்
இப்படித்துக்கிக்க இதுக்கண்டலட்சுமிதேவி
அந்தகோவிலுக்குள் அமைத்தாளேதேன்கூண்டை

பிராணங்கள்போகாமல் பாலரைக்காப்பாற்றிவிட்டு.
டில்லிபட்டணத்துக்கு சிறப்புடன்போய்விட்டான்
அந்தச்சமையத்தில் அத்தநல்லகாலத்தில்
நவபோஜமகாராஜன் நளிந்துயித்திரை செய்திருந்தார்
நித்திரைத்தன்னிலே நிலமாகத்தான்சென்று
எழுந்திரும்வேந்தனே யென்பாலரெங்கேதான்
பாலரைவொப்பிவித்து பண்புடன்நானிரந்தேன்
காட்டில்கலக்கிவிட்டு கலக்கமுடன்நீருமே
நித்திரைசெய்யுதான் நின்மனதுக்கொண்டீரோ
என்றுமேசொல்லி அரைந்தாளேமுதுகுதன்னில்
அடிப்பட்டமாத்திரத்தில் அலர்ந்தெழுந்தான்வேந்தனும்
அந்தச்சமயத்தில் அருகிருந்தமந்திரிமாரை
தானுமழைத்து தன்மையுடன்சொல்லலுற்றார்
கேட்டீரோமந்திரி கிருபையுடனென்வார்த்தை
செத்துவெகுநாளாச்சு சிறப்புடனேலட்சுமிதேவி
எந்தகாலத்திலும் யென்கினவில்வந்ததில்லை
இன்றுக்கினவில்வந்து இன்பமாயென்முதுகில்
இரண்டுகைகள்தான்கொண்டு ஏந்திழைதானடித்தாள்
பார்த்தீரோமந்திரிகளே பண்புடனென்முதுகை
பாலருக்கென்னமோ பலகஷ்டம்வந்ததங்கு
ஆகையாலென்கினவில் அன்புடன்தான்வந்தாள்

வசனம்.

மந்திரிகளே பாலருக்கு ஏது அபாயம் வந்ததோ தெரியவில்லை ஆகையால் நான் இராஜ்யத்துக்கு போகின்றேன் நீங்களிருந்து ஜமாபந்திப் பார்த்துக்கொண்டு வருவீரென்றுச் சொல்லிவிட்டு டில்லிபாக்ஷாவைக் காணுதப்படிக்கி வேந்தன் புறப்பட்டு கடைவீதி வந்து பாலருக்கு வேண்டிய பழதினுசுகளை வாங்கிக்கொண்டு ரதகெஜதுரக பதாதிகளுடன் புறப்பட்டு தன் தேசம் வருஞ்சமயத்தில் தன்மேடைதனைப் பார்க்க பாலரைக் காணுதப்படியால் துக்கமடைந்து சொல்லலுற்றான்.

வெளியேநான்போய்வருக வேகமாய்பாலகரும்
தந்தைவாருரென்று தனிவழிப்பாப்பாரே

அப்படிப்பார்ப்பவரை இந்தவேளைக்காணேமே
பாலருக்கென்னமோ பார்மீதுகஷ்டங்கள்
என்னென்னவந்ததோ யேதுமறியோமே
இப்படிச்சொல்லி இசைந்துமேடைபுகுந்தான்
பாலரையப்போது பண்புடனழைத்தானே
பேருமிட்டுயழைக்க பெருமையுள்ளபாலகரும்
ஆருமில்லாதப்படியால் யேதுசெய்தானவ்வேந்தன்
நால்புரம்பார்த்தானே நலமுடனவ்வேந்தன்



நவயோஜமகாராஜன் மாணிக்கதேவியை
பாலகர் எங்கேயென்று கேட்பது

வசனம்.

இப்படி நால்புரமும் பார்த்து எங்கும் தன் பாலரைக் காணு தப்படியால் மனவியாகூலமடைந்து மாணிக்கதேவியை அழைத்து அடிமாதே யென்பாலகர் எங்கேயென்று கேட்டமாத்திரத்தில் இம்மொழிக்கேட்டு மாணிக்கதேவி ஒ நாயகா! உனது பாலகரை கேட்டீரே தவிர என்னை விசாரிக்காமல்போனீரே ஆனல் நமது பாலகரை லட்சுமிதேவிவந்து என்னையடித்து அலங்கோலஞ் செய்து பாலகரை அழைத்துக்கொண்டுப் போய்விட்டாள் என்றுச் சொன்னவுடனே வேந்தன் நிஜமென்று எண்ணமிட்டு ஐயோ தெய்வமே எங்குக்கொண்டுபோய்ப் பாலகரை ஒளித்து வைத்திருக்

இன்றுளோ என துக்கமடைந்து பல்லக்கு ஏறிக்கொண்டு காட்டு மார்க்கமாய் போகுஞ்சமயத்தில் அநேகவிடங்களில் தேடவே அகப்படாமல் போனதால் சோகமடைந்து சிலதூரம் நடக்கலானார் அந்தமார்க்கத்தில் பாலகர் பாதக்குறி இருப்பதைப்பார்த்து சந்தேகமுற்று அம்மார்க்கமாகவே ஓ சூர்யநாகம்மா! ஓ சென்திர நாகம்மா! ஓ பாலநாகம்மா! என்றுபெயரிட்டு அழைத்த மாத்திரத்தில் கோவிலுக்குள் அகப்பட்டிருந்த பாலகர் வேந்தன் தொனியைக்கேட்டு தந்தையென்றறிந்து சொல்லத்தொடங்கினர்.

எங்களைப்பெற்ற இன்பமுள்ள தந்தையே
இந்தநல்லகோவில்தன்னில் அடைப்பட்டிருக்குறோம்
எங்களைப்பெற்று இப்படிவிடலாமா
இந்தமொழிதானும் வேந்தனுங்கேட்டானே
ஓட்டம்நடையாக வோடியேதான்வந்து
கதவுதன்னைத்திறந்து கடுகவேபார்க்கையிலே
மக்கள்கோலத்தை மன்னவனும்பார்த்துவிட்டு
குய்யோமுறையோவென கூவியழுதானே
பாலரையழைத்துக்கொண்டு பண்புடன்நாட்டிற்கு
தானுமேவந்து தளராமலிருக்கையிலே
அந்தநல்லசமயத்தில் அரிவேந்தன்பாலகரை
தினமொருமேனியாய் தேடிவளர்த்தானே
இப்படியாகவே இருக்குமந்தச்சமயத்தில்
வேந்தனுமப்போ விடியபோஜனம்தான்செய்து
தாம்பூலம்தரித்தான் தானறிந்தாள்நாகம்மாள்
தந்தையேயெனக்கு தயவிடியம்தான்தாரும்
இசைந்துமேவேந்தன் இன்பமாய்தருகவே
மறுவிசைகேழ்க்கவே மன்னவன்கோபித்து
அம்மணியென்னை ஆயாசம்படுத்துகிறுய்
உங்களுடையதாயார் உகந்தும்மைக்கொண்டுப்போய்
கானகத்தில்வைத்திருக்க கருணைதந்தைமுகம்பார்த்தீரா
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்நாகம்மாள்
தந்தையேநீகேளாய் தயவுடனென்வார்த்தை
டில்லிக்குநீரே தீவிரமாய்போனவுடன்
மறுநாள்தினத்தில் மங்கைமாணிக்கதேவி
எங்களைப்பார்த்து இசைந்துமேதானழைத்து
மக்களேநீங்கள் மகிழுடனேயின்றைக்கு

பூர்ணஅமாவாசை புகழுடனொருப்பொழுது
இருப்பீர்களென்றுச்சொல்லி திட்டஞ்செய்தாள்யெங்களை
அப்படிச்சம்மதித்து அனைவருமிருந்தோமே
அந்தியானவுடனே அம்மாவேயெங்களுக்கு
பசிக்குதுயென்றுகேட்டோம் பண்புடனம்மாது
சில்லிப்பானைதந்து சிறப்புடனேயெங்களை
தண்ணிக்கொண்டுவருகதான் திட்டமுஞ்செய்தாளே
தண்ணிப்பாண்டத்தில் தண்ணியில்லாமல்போக
எங்களையடித்து இம்சைசெய்தாள்பாதகி
பசிக்குதுயென்றுகேட்டோம் பண்புடனுங்கள்தேவி
விஷத்தைக்கலக்கியே விஷக்காப்பிதான்கொடுத்தாள்
அத்தையுங்குடித்து அப்போதுப்பிழைத்தோமே
இப்படியிவர்கள் இசைந்துசாகவில்லையென்று
சின்னவீட்டில்போட்டு சிறுமிளகாய்தான்கொட்டி
தீயிட்டுயப்போது தேடியேதாளுமிட்டாள்
ஈசன்கருணையால் இருந்தோமேவுயிருடனே
இப்படிநாங்கள் இசைந்துசாகவில்லையென்று
மறுநாள்யுதயத்தில் மங்களமாய்நாங்கள்வர
எங்களைப்பார்த்து மாணிக்கதேவியும்
அருமையுள்ளபாலரே அன்பாகநீங்களுமே
கோவிலுக்குவருவீர் கொப்பனவேபோய்வருவோம்
என்றுமேயழைக்க இசைந்துமேநடக்கலானோம்
கானகமார்க்கமாய் கடுகவேயழைத்துவந்து
பாழானகோவில்தன்னில் பார்க்கவேதள்ளிவிட்டு
கதவைமூடியப்போ கனதாளுமிட்டுசென்றாள்
இப்படியிருக்க யிசைந்துதாய்மேல்சொல்லலாமா
எங்கள்தாயுடனே இன்பமாய்நாங்கள்போனால்
உங்களுக்குபயப்பட்டு உகந்துமேவருவோமா
இந்தமொழிக்கேட்டு யெங்குமில்லாக்கோபங்கொண்டு
கண்கள்சிவக்க கடுமீசைதான்பதைக்க
பாவிச்சண்டாளி படுப்பாவிமூதேவி
இப்படிச்செய்தாளா இசைந்துமேவுங்களை
தேவிசொன்னமொழி தேடியிப்போவந்தது

வசனம்.

இப்படிப்பாலகரை வேந்தன் அழைத்துவந்து தினமொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய் வளர்த்துக்கொண்டுவருஞ்

சமயத்தில் மாணிக்கதேவி தன் தாயாருக்கு வேந்தன்மொழி யாடாமலிருப்பதும் தன் மனைக்கு வாராதிருப்பதும் கடிதமூலமாயெழுதி சேகுவர்வசம் கொடுத்தனுப்ப காவலர் கடிதம் கொண்டுவந்து நயனப்பட்டணத்தில் இராகின்ற தவளவேந்தன் பட்டத்துத்தேவியாகிய குணவதியிடம் கொடுக்க அம்மாது அதை வாசித்துப்பார்த்து உடனே இடுமருந்தெடுத்து டப்பியில் அயிக்கம்செய்து ஓர் கடிதத்தில் இம்மருந்தை தின்னுஞ்சாதத்தில் இடும்படியெழுதி காவலன்வசம் கடிதம்கொடுத்தனுப்ப அக்கடிதம் கொண்டுவந்து கொடுக்க மாணிக்கதேவியதை வாசித்துப்பார்த்து சந்தோஷமடைந்து அதுபோல்செய்ய யெத்தனமிட்டு இருக்குஞ்சமயத்தில் மருந்திடும் காலம்பார்த்துக்கொண்டிருக்க ஓர் சமயத்தில் வேந்தன் ஸ்நானம் செய்யப்போன காலத்தில் மாணிக்கதேவி அம்மருந்தை சாதத்தில் கலக்கிவிட்டு தன் மனைக்கு வந்துவிட்டாள் உடனே வேந்தன்வந்து சாதம் சாப்பிட்டு நித்திரைச்செய்ய அந்தப்புரஞ்சென்றார் இப்படியிருக்க.

மருந்துமயக்கத்தால் நித்திரைக்கொள்ளாமல்
மாணிக்கதேவிமீது மயக்கமுங்கொண்டானே
மக்களையொண்டியாக மன்னவன் விட்டுமே
மாணிக்கதேவிவாழும் மாளிகைக்குதானும்வந்தான்
அந்தச்சமயத்தில் அந்தநல்லமாதுமே
கதவைதான்தாளமிட்டு கொப்பன்வேநித்திரைசெய்தாள்
கதவண்டைவேந்தனும் கருணையாய்தான்வந்து
மாணிக்கதேவியென்று மன்னவன்கதவிடித்தான்
இதனையும்கேளாமல் இருந்தாளேயம்மாது
மருபடிவேந்தனும் மகிழ்கதவைதானிடித்தான்
இந்தசப்தம்கேட்டு யெழுந்துமேயத்தேவி
இந்நேரவேளையில் இந்தநல்லகதவுதன்னை
தட்டுகிறதாரோதான் தயவுடன்சொல்லுமே
இந்தமொழிக்கேட்டு எதுச்சொல்வான்வேந்தனும்
என்னடிமாதரமே இளங்குயிலேகண்மணியே
கதவைதான்திரப்பாயடி கருணையாய்யிப்போது
அந்தச்சமயத்தில் அம்மாதுசொல்லலுற்றாள்
இத்தனைநாளாக யெங்குதான்போயிருந்தீர்
என்னைமரந்தீரே யென்சுகம்விட்டீரே
பாலரைவிட்டுநீ பட்சமாய்வந்தீரோ
ஒண்டியாய்விட்டவரை உத்தமரேவருகலாமா

போகுவீர்போகுவீர் பொழுதாகிப்போச்சுது
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்வேந்தனும்
இனிவுன்னைமரக்கமாட்டேன் இதுசிக்ஷபமென்றுநம்பு
மோகத்தைதீர்ப்பாயடி மோகனமாணிக்கம்
இதுவெல்லாங்கேட்டாள் இளமயில்தோகையாரும்
அப்போதுசொல்லலுற்றாள் ஆனழகுவேந்தனுக்கு
நானும்தான்வேண்டுமானால் நலமுடனேபாலகரை
இந்தச்சமயத்தில் இப்போதுநீசென்று
பாலரைக்கொன்றுவிட்டு பக்ஷமாயிங்குவந்தால்
கதவையான்திரப்பேன் கருணையாயிப்போது
வேந்தனுங்கேட்டானே வேகமாயம்மொழியை
பத்துமாதம்சுமந்து பாரதவம்யான்செய்து
பெற்றப்பாலகரை பிரீதியாய்மனம்வந்து
எப்படிச்சொல்வது யென்மனம்தான்வருமா
இப்படிச்சொல்வது இதுநீதியல்லமாதே
உந்தன்மனம்வருமா உத்தமிநீசொல்லுவாய்
அந்தமொழிக்கேட்டு ஆனதோர்மாதுசொல்வாள்
கேட்டீரோநாயகா கிருபையுடனென்வார்த்தை
சொல்லாமல்போனாலும் கொப்பனவேயிப்போது
பாலகரையழைத்துக்கொண்டு பண்புடனேகானகத்தில்
விட்டுமேவந்தாக்கால் இப்போதேசந்தோஷிப்பேன்

வசனம்.

இந்தமொழிக்கேட்டே வேந்தன் சந்தோஷமடைந்து நாயகி உதயமானவுடன் பாலகரை அழைத்துக்கொண்டுபோய் கானகத்தில் விட்டுவருகின்றேன் என்றுச்சொன்னவுடனே மாணிக்கதேவி சந்தோஷமடைந்து கதவைத்திறந்து வேந்தனை வாவழைத்து சந்தோஷமாயிருக்கும் சமயத்தில் கிழக்கு சூரியன் உதயமானான் இதையறிந்து மாணிக்கதேவி ஏழுப்பாலருக்கு விஷத்தைக்கலந்து ஏழுரொட்டிகளைசுட்டு வேந்தன்கையில்கொடுத்து அய்யா நீர்தின்னவேண்டாம் பாலகரை துரோகம்செய்யாதேயென்று அவரிடந்தந்து கொஞ்சசாதம் மூட்டைகட்டி வேந்தனுக்குக்கொடுத்து அனுப்பினாள் அம்மூட்டையை தோளில்மாட்டிக்கொண்டு பாலகரிடம்வந்து அழைக்கலுற்றார். அம்மா சூர்யநாகம்மா ஓ உத்திரகன்

ணி பாலநாகம்மா நீங்கள் எல்லோரும் எழுந்திருங்கள் நமக்கு இன்னுட்டில் கஷ்டமாயிருப்பதால் உங்கள் மாமன்மனைக்குப் போகலாம் வருவீரென்றழைக்க அப்போது சூர்யநாகம்மாள் தந்தையைப் பார்த்து ஓ தந்தையே இதுவரைக்கும் மாமன்மார் வரக்காணேமே நீசொல்வது புதிதாயிருக்கிறதென்று சொல்லவே அதற்கு வேந்தன் அம்மா நீங்கள்வந்து பாருங்களென்றுச்சொல்லி அழைத்துக்கொண்டு நடக்கலுற்றார் அந்தச்சமயத்தில் வேந்தன் மாணிக்கதேவிதந்த ரொட்டிகளை ஏழுப்பேருக்கும் கொடுத்தான் அதை பாலகர் பெற்றுக்கொண்டு மடியில் பதனமசெய்தார். இப்படியிருக்கக் கடசி புதல்வியாகிய பாலநாகம்மாள் அந்தரொட்டியில் கொஞ்சம்புட்டு காகத்துக்குப்போட்டாள் காகம் தின்றவுடனே சுழன்று பூமியில்விழுந்து மரணமடைந்தது. இதைப்பார்த்து ஆச்சரியமுற்று மறுபடியும் கொஞ்சம்புட்டு நாயிக்குப் போட்டாள் அது தின்று மரணமடைந்தது இதையெல்லாம்பார்த்து பாலநாகம்மாள் சொல்லத் தொடங்கினாள்.





நவபோஜமகாராஜன் ஏழுப்பாலகரை இட்டுக்கொண்டு காட்டிற்குப்போவது.

அக்காவே அக்காவே அன்புடன்நீகேளும்
இந்தநல்லரொட்டிகளை இன்பமாய்சுட்டுதந்தாள்
பாஷாணம்தான்கலக்கி பக்குவமாய்சுட்டுதந்தாள்
நாமதைதின்றோமானல் நலமாகசாகவேண்டும்

எரிந்துவிடுவீர்கள் யெல்லோரும்ரொட்டிகளே
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்பெரியவள்
இந்துதான்போட்டாக்கா யெவராகிலுந்தின்றுமே
செத்துதான்போய்விட்டால் சுற்றுமேயப்பாபம்
மண்ணைதான்தோண்டி மகிழ்ச்சியாய்ரொட்டிகளை
புதைத்துமேவைத்துவிட்டு போகுறார்தந்தைபின்னால்
சிலதூரம்தானடக்க சிறப்புடன்நாகம்மாள்
நடக்கமுடியாமல் நடக்குறாளப்போது
சூர்யநாகம்மாள் சொல்லுகிறாளப்போது
அய்யாவேநீகேளும் அன்புடனென்வார்த்தை
தங்கைநடக்காமல்தான் துயரம்படுகின்றாள்
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்வேந்தனும்
காட்டிலேகொம்பைதேடி கடுகதான்வுடைத்துமே
நடந்துவாவென்றுச்சொல்லி அடித்தாரேயப்போது
ஐயையோயென்றுச்சொல்லி அழுதாளேநாகம்மாள்
அந்தச்சமயத்தில் ஏதுச்சொன்னாள்மூத்தவள்
ஏனையாயடிக்குறீர் இப்போதுநீர்தானும்
தங்கைதன்னையிப்போ தயவுடன்யெடுத்துக்கொண்டால்
பாபங்கள்வருகுமோ பாலகராச்சுதே
தாயில்லாப்பிள்ளைகளை தாமுமடிக்கலாமா
ஐயோதெய்வமேயென்று அழுதாரேபாலகர்
அந்தச்சமயத்தில் அறியசூர்யநாகம்மாள்
தங்கையையப்போ தானெடுத்துக்கொண்டாளே
காணகமார்க்கமாக கடுகநடந்தாளே
அத்வானகானகத்தில் பொழுதுமேபோச்சுது
அந்தச்சமயத்தில் அரிவேந்தன்சொல்லலுற்றான்
என்மொழிகேளம்மா இன்பசூர்யநாகம்மா
பொழுதுமேபோச்சுது பொருமையுடன்கானகத்தில்
நித்திரைசெய்துவிட்டு நிகழுதயமானவுடன்
மாமன்மார்வீட்டிற்கு மகிழுடன்போகலாம்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்பாலகரும்

## வசனம்.

அந்தச்சமயத்தில் சூர்யநாகம்மாள் தந்தையைப்பார்த்து ஐயா எங்களுக்கு பசியதிகமா யிருக்கின்றது நீர்வைத்திருக்கும் கட்டமுது வைத்திருக்கின்றீர் அதில் கொஞ்சம் சாதமிடுமையா வெ

ன்றுகேழ்க்க அதற்கு வேந்தன் அம்மா சாதமில்லா கானகத்தில் புலி கரடிகள் வந்தால் ஏது செய்வதென்று மூன்று கருங்கல்லை மூட்டையாகக் கட்டியிருக்கின்றேன் தவிர சாதமல்லவே என்றுச் சொல்ல பாலகர் நிக்ஷயமென்று நம்பி ஏழுப்பேரும் தந்தைச்சமீபத்தில் சயனித்துக்கொண்டார் அந்தச்சமயத்தில் பாலகர் நித்திரைச்செய்துவிட்டார் இதையறிந்து வேந்தன் எழுந்து தாழம்துண்டைவொன்று எடுத்துவந்து தன் பூரணையதற்குமாட்டி ஆடைடை நீக்கி பாலகர் மத்தியில் படுக்கவைத்துவிட்டு பாலகரைமோசஞ்செய்து தன் மனைக்குப்போகுறுர்.

அந்தச்சமயத்தில் அரிவேந்தன் தானுமே
ஆற்றுக்கரையோரம் அன்பாகதானும்வந்து
கட்டமுதவிழ்த்து கடுகபுசிக்கபோனுர்
அந்தமூட்டைதன்னில் அன்பாககல்லுதான்
இருக்கவேகண்டுவேந்தன் அப்போதுசொல்லலுற்றுன்
சண்டாளப்பாபிநான் பாலர்மோசஞ்செய்தேனே
அந்தநிமிஷத்தில் அரிவேந்தன் தானுமே
மாணிக்கதேவிமீது மையலதுக்கொண்டுமே
நடையாநடைநடந்தான் நவபோசமகாராசன்
பூச்சக்கரப்பட்டணத்தை புகழுடன்தானும்வந்தான்
சகலசம்பிரமாக சையோகமாயிருந்தானே



மாணிக்கதேவியுடன் பாலகரைவிட்ட
சங்கதி சொல்வது

வசனம்.

இப்படியிருக்குஞ் சமயத்தில் பாலநாகம்மாளை அந்ததுண்டு தன்னிலிருந்து தேள் ஒன்று கொட்டியது அப்போது ஐயோ தேள்கொட்டியது என்று அலரியெழுந்திருக்க மற்றவர்கள் எல்லாம் எழுந்து என்னடி அம்மாவென்றுகேட்க அதைக்கேட்ட பாலநாகமமாள் அக்கா ஏதோ தேள்கொட்டியது என்றுச்சொல்ல அதைக்கேட்ட சூர்யநாகம்மாள் அருகில் ஓர் தபசி தவஞ்செய்துக் கொண்டிருக்க அவ்விடத்தில் நெருப்பு எடுத்துவந்து வெளிச்சம் போட்டுப் பார்க்க தேள் அகப்படாமையால் அருகிலிருந்த தங்தையை எழுப்பலுற்றார் இதற்குள்ளாக கிழக்கு உதயமாச்சுது.

தந்தையேதந்தையே தயவுள்ளதந்தையே
கிழக்குவுதித்ததையா கிருபையுடன்யெழுந்திரும்
வெய்யற்படாமல் வேகமாய்நடந்துமே
மாமன்மார்பட்டணம் மகிழ்ச்சியாய்போகலாம்
இப்படிச்சொல்லவே ஏதுமொழிசொல்லவில்லை
முக்காடுதானெடுத்து முகந்துமேபார்க்கையிலே
தாழந்துண்டாக இருந்ததுயப்போது
அய்யோதங்கைமாரே அன்னிதமானேமே
தந்தையென்றிருந்தோமே தாழந்துண்டுதானச்சே
மாரில்மோதிக்கொண்டு மகிழ்ச்சியாயழுதாரே
தாய்சொன்னமொழி நிசமாச்சுயிப்போது
தெருவில்விடுவாயென்று சிறப்புடன்சொன்னமொழி
தந்தையும்செய்துவிட்டு தாழந்துண்டாய்போய்விட்டார்



தந்தை மரணமடைந்ததைப்பார்த்து
பாலகர் துயரமடைவது.

ஐயோதந்தையே எங்கேதான்நீர்போனீர்
கானகந்தன்னில் எவ்வார்பிழைப்போமையா
கோடுக்கோடென்றுதான் குழந்தைகளழுதாரே
அந்தச்சமயத்தில் அறிவுள்ளபாலநாகம்மாள்
அக்காவேநீகேளும் அன்புடனென்வார்த்தை
தந்தைவயிற்றினில் தயவுடன்நாம்பிறந்தோம்
ஆகையால்நாமும் அரியவேதந்தையை
தகனமேசெய்யலாம் தயவுடனிப்போது
அந்தமொழிகேட்டு யெல்லோருங்கானகத்தில்
சுப்பல்தனைப்பொருக்கி சுடுகாஷ்டமடக்கினார்
நாராயணாவென்று நலமுடனேபிரேதமதை
ஆறுபேருமாக அன்பாகயெடுத்துக்கொண்டார்
தாழத்துண்டுதனை தகனமுஞ்செய்துவிட்டார்
குளத்தினில்தானிறங்கி கொடுஸ்தானஞ்செய்துவிட்டு
பெற்றதோர்தாயாரை பிரியமாய்நினைந்துக்கொண்டு
தலைகளையாற்றிக்கொண்டு தனிமையாநிற்கையிலே
எப்படிநாம்பிழைப்போம் இந்தநல்லகானகத்தில்
பசியுமெடுக்குதம்மா பாவிகளுக்கிப்போது
இப்படிச்சொல்லியே இசைந்துமேநிற்கையிலே
இவர்கள்யெதிராக இசைந்துமாபிலாச்செடிகள்
நிர்மித்தாலவ்விடத்தில் நிமிஷத்தில்லட்சுமிதேவி





லட்சுமிதேவி நியமித்த பழச்செடிகளைப்பார்த்து
பாலகர் செடியேரிப் பழம்பரித்துத் தின்பது

அந்தச்செடிகளை இன்பமாய்பார்த்துவிட்டார்
செடிகளில்தாநேரி சிறப்புடன்பழமதனை
தின்றுமேபசியாரி சிறப்புடன்சலங்குடித்தார்
அத்வானகானகத்தில் அன்பாகயிவர்களுமே
ஈரெட்டுநாளாக இருந்தாரேயவ்வனத்தில
அன்னம்பசிதானும் அன்பாகயெடுக்காமல்
தனியாயிருக்கும்படி தான்செய்தாள்லட்சுமுதேவி

வசனம்.

இந்தப்பாலகர் இப்படியிருக்குஞ்சமயத்தில் வங்கபுரிப்பட்டணத்தை பரிபாலிக்கும் வேந்தன் வேட்டையாடுவதற்கு சேனைகளுடன் காட்டிற்குவந்து வேட்டையாடி வெய்யலில் ஆயாசப்பட்டதால் வேந்தனுக்கு தாகமெடுக்க அந்தக்காட்டில் எங்குந்தேடிப் பார்த்தபோதிலும் எங்கும் ஜலமில்லாதபடியால் திரிந்துவருஞ்சமயத்தில் ஓர் முனிசிரேஷ்டன் தபஞ்செய்திருப்பதையறிந்து அவனருகில்வந்து ஓ முனிபுங்கவா எங்களுக்கு தாகமெடுக்கிறது ஜலமிருக்குமிடஞ் சொல்லுமென்றுகேட்க முனிவன் பேசாமல் நிஷ்டையிலிருந்துவிட்டார். வேந்தனுக்கு கோபம்பிறந்து அந்தச்சமயத்தில் அருகில் மேய்ந்துகொண்டிருந்த ஆட்டைப்பிடித்து கழுத்தையறுத்து அதின் உதிரத்தை முனி புங்கவன்மேல் தெளிக்க அந்த ரத்தமானது முனிமேல்பட்டமாத்திரத்தில் அவன் பனிசெண்டுவருடந் தபஞ்செய்யும் நிலையானது பிசக்கிடவே கோபம்பிறந்து வேந்தனைப்பார்த்து பிடியடா சாபமென்று சொல்லி அடா சண்டாளா நீ உதயமுதல் சாயந்திரம் வரைக்கும் மனிதனுகவும் தீபம்வைத்த மாத்திரத்தில் வேங்கையாகக்கடவாய் உனது சேனைகள் குரங்குகளாகக் கடவாயென்று சாபமிட்டு இதுவல்லாமல் வீடுவாசலில்லாமல் காடே வீடாக சஞ்சாரம் செய்வாயென்று சாபமிடவே இதைக்கேட்ட வேந்தன் ஏதுச்சொல்லாமல் நடக்கலானுர் அங்கு ஓர் குளமிருப்பதைக்கண்டு தாகந்தீர்த்துக்கொண்டு சிலதூரம் நடக்க பொழுதுபோச்சுது அச்சமயத்தில் வேந்தன் புலியாகவும் சேனைகள் குரங்குகளாகவும் ஆனூர்கள் அந்த இராத்திரியெல்லாம் காடுதிரிந்து உதயமானவுடனே நிசரூபமானுர் அதன்பிறகு சாதம் சமித்துக்கொண்டிருந்தார் இப்படியிருக்க அந்தக்கானகத்தில் பாலநாகம்மாள் முதலானவர்களும் செடிகளேறி பழங்களைப் பரித்துத்தின்று ஆனபிறகு அக்கா நமது தந்தை மாமன்மார் பட்டணம் அருகில் இருக்குதென்றுச் சொன்னூரே அங்குயேதோ புகைவருகின்றது அதுதான் பட்டணம் போகலாமெ

ன்று ஒருவருக வங்கப்புரிவேந்தன் அருகில்வந்து நிற்கவே ஐயோ இதுயென்ன ஊருமில்லை நாடுமில்லை ஏன்வந்தோமென்று அங்கிருந்த செடியருகில் நின்றுவிட்டார்.

அதன்பிறகு வேந்தன் இவர்களைப்பார்த்து இவர் எங்கிருந்து வந்தவரோ இவர்களைப்பார்த்தால் தெய்வீகப்பெண்களைப்போல் இருக்கிறது பொழுதுப்போனால் நாம் புலியாகி கானகமெல்லாம் திரிகின்றோம் இவர்கள் எங்கும் அகப்படவில்லையே விசாரிப்போம் என்று அருகில்வந்து அம்மா உங்கள் நாடேது தந்தைத்தாய் பெயரென்ன தெரியச்சொல்லென்றுகேட்க அதற்கு அப்பாலகர் எங்கள் தாய்தந்தைபெயர் எங்களுக்குத்தெரியாது எங்கள் பெயரும் தெரியாது உம்மை யாரழைத்தார் இங்குயேன் வந்தீரென்று கேட்க அதற்கு வேந்தன் அம்மா நீங்கள் என்னுடன் பிறந்தவர் ஏது பயமில்லாமல் தந்தைதாய்பெயரும் உங்கள் பெயரும் சொல்லென்று கேட்டமாத்திரத்தில் பாலகர் சொல்லத்தொடங்கினர்.

## வங்கமகாராஜனுக்கு பாலகர் தன் வரலாறு கூறுதல்.

ஐயாவேநீகேளும் அன்புள்ளயண்ணாவே
எனது-தந்தைபெயர்தான் எழில்நவபோசவேந்தன்
எனது-தாயார்பெயர்தான் எழில்லட்சுமிதேவியம்மாள்
சூர்யவம்சமையா சுந்திரனேயெங்கள்குலம்
பூச்சக்கரப்பட்டணத்தில் புகழுடன்வாழ்ந்தோமையா
இந்தமொழிக்கேட்டான் இன்பமாய்யவ்வேந்தன்
ஆனால்நீங்களுமே அன்புடன் கானகத்திற்கு
வருகக்காரணமென்ன வகையுடன்சொல்லுமம்மா
அந்தமொழிக்கு அப்போதுநாகம்மாள்
அண்ணாவேநீகேளும் அன்புடன்சொல்லுகிறேன்
நாங்கள்பிறந்ததோர் ஒன்பதாமாண்டதனில்
தாயுமிறந்துவிட்டாள் தந்தைவளர்த்துவந்தார்
இப்படிருக்கையிலே இன்பமாய்யெங்கள்தந்தை
மாறுக்கலியாணம் மகிட்சியாய்செய்துக்கொண்டார்
வந்ததோர்சிமாட்டி வையகத்திலெங்களை
செய்யாதயிம்சைகள் செய்தாளேயண்ணாவே
இம்சைகள்செய்வதை இதைக்கண்டாரெங்கள்தந்தை
மாமன்மார்பட்டணம் மகிழுடன்போவோமென்று
எல்லோரையுமழைத்துக்கொண்டு இன்பமாய்தான்வருக

ஆரண்யமத்தியில் அன்பாய்பொழுதபோச்சு
அத்வானகானகத்தில் அன்புடன்சயனித்தோம்
அருகில்படுத்திருந்தார் அன்புடனெங்கள் தந்தை
உதயமானவுடனே உப்பொங்கினோங்களெழுந்து
தந்தையைப்பார்க்கவேதான் காழக்காண்டுமாய்விட்டார்
ஆருமில்லாப்பாவியாய் கானகத்தில்நின்றோமே
இந்தமொழிக்கேட்டு இன்பமாயவ்வேந்தன்
துயரப்படாதம்மா துணையானுமிருக்கிறேன்
இப்படித்தேருதலை இன்பமாய்தானுஞ்சொன்னான்

வசனம்.

இப்படித் தைரியஞ்சொல்லி பாலகரை அழைத்துவந்து போசனமிட்டு ஆகரித்தார் இதற்குள்ளாக பொழுதுபோவதற்கு நாலுமணி நேரமிருக்கிறது இதையறிந்து அவ்வேந்தன் சிப்பந்திகளை அழைத்து வடா சேனைகளே நான் இந்தப்பாலகரை அழைத்து வந்தேன் இனியான் புலியாகுஞ்சமயம் வந்துவிட்டது இவர்களை புசித்து விடுவேன் ஆகையால் ஓர் பனமாவொயரம் அதிக சீக்கிரத்தில் பர்னசாலை கட்டுவீரென்று சொன்னமாத்திரத்தில் ஆறுபர்னசாலைகட்டி இவர்களை அதில் இருக்கச்செய்து வேந்தனும் சேனைகளும் புலியும் குரங்குகளாய்விட்டார் இதுபோலாகவே தினந்தோரும் செய்துக்கொண்டு வந்தார் இப்படிருக்க.

பானுகண்டி பட்டணம் பரிபாலிக்கும் வேந்தன் வேட்டைக்குவந்து வேட்டையாடி அலர்ந்தபடியால் வேந்தன் சேருவரையழைத்து இக்கானகத்தில் வங்கப்புரிவேந்தன் சாபமடைந்து புலியாயிருப்பதாய் கேழ்வியடைந்தோம் தேடிவருவீரென்றுசொல்ல சேருவர் அறிந்துவந்து வேந்தனுக்குச்சொல்ல அம்மொழிக்கேட்டு வங்கவேந்தன் அருகில்வந்து ஐயா இக்கானகத்தில் நான் வேட்டையாடி வந்தோம் எங்கும் ஜலமகப்படவில்லை என்றுக்கேட்டான் அருகிலிருந்த குளத்தைக்காட்டினார் அக்குளத்திற்குச்சென்று தாகமரிந்து வங்கவேந்தன் அருகில்வந்து அமர்ந்து ஐயா இந்த பர்னசாலையில் யார் இருப்பது என்றுகேட்டார் அதற்கு வங்கவேந்தன் அய்யா எனது தங்கைமார் இருக்கின்றார் என்றுச்சொல்ல இம்மொழிக்கேட்டு பானுகண்டிவேந்தன் ஐயா இராஜோத்தமா இவர்களுக்கு கலியாணமாச்சுதா எனது புதல்வருக்கு தருவீராயென்று கேட்க அதற்குச்சம்மதமடைந்தார் அந்தச்சமயத்தில் பாலரை காட்டும்படிச்சொல்ல அதுபோல் பாலரை இரக்

கிக்காட்ட பானுகண்டி வேந்தன் இவரைப்பார்த்து ஐயா இரா ஜோத்தமா உன் உடன்பிறந்த பெண்பாவைகளேது உனது தந்தைக்கு நீங்கள் இருவரேதவிர வேரேது எனக்குத் தெரியாதா என்றுச்சொன்னவுடன் வங்கதேசத்து வேந்தன் இனி மர்மமிடலாகாது என்று யோசித்து ஐயா யான் சொல்வதைக்கவனிப்பீர் எப்படியென்றால் இவர்கள் தந்தை நவபோஜவேந்தன் தாயார் பூலட்சுமிதேவி இருப்பிடம் பூச்சக்கிரப்பட்டணம் வம்சம் சூர்யவம்சம் தாயும் தந்தையும் இறந்துவிட்டாரும் காட்டில் வந்திருக்க யான் கண்டு தங்கைமார்போல் இதுவரைக்கும் காப்பாற்றினேன் என்றுச்சொன்னவுடனே இதைக்கேட்ட வேந்தன் சொன்னதாவது ஓ வங்கவேந்தனே இவர்கள் உன் உடன்பிறந்த லட்சுமிதேவி கெர்ப்பத்தில் பிறந்தவர் பத்துவருஷமாக அவர் வீட்டிற்கு நாங்கள் போகிறதில்லை எங்கள் வீட்டிற்கு அவர் வருகிறதில்லை ஆகையால் இவர்கள் என் மருமக்கமார்கள் என்றுச் சொன்னவுடனே இம்மாதர்கள் இதைக்கேட்டு இதுயாரோ தெரியவில்லை நம்மைக்காப்பாற்றியவரை ஏமாத்திக்கொண்டுபோக எத்தனமிட்டது போலிருக்கிறது என்று மூத்தவள் சொல்லவே இளையவளாகிய பாலநாகம்மாள் யோசித்து முந்தி நமது தாயார் சொன்னது உங்கள் மாமன் இராமவர்த்தி வேந்தன் பானுகண்டி பட்டணத்தில் இருப்பதாய் சொல்லி இருக்கிறாள் என்று யோசித்து ஐயா உங்கள் தேச



பாலகர் ஏழுபேரும் தன் மாயனைப்பார்த்து
துயரமடைவது

மேது வம்சமேது தங்களுடைய பெயரேது என்று கேட்க அதற்கு அவ்வேந்தன் அம்மா இருப்பது பானுகண்டிபட்டணம் சந்திரவமசம் யான் இராமவர்த்திவேந்தன் என்றுச் சொன்னவுடனே அப்பாலகர் இம்மொழிக்கேட்டு.

ஏழுப்பேரப்போது யெடுத்தாரே பெருந்தொண்டை
கானகம்தானதிர கடுசயழுகலுற்றார்
ஐயோமாமாவென்று யெல்லோரும்யழுதாரே
தாயும்மரணமானாள் தந்தையும்துண்டுமானார்
கானகந்தன்னிலே காவென்றழுகலானோம்
துணையில்லாபட்சிபோல் திடித்தோமேகானகத்தில்
இவருமேயில்லாவிட்டால் இரையாகுவோம்வேங்கைக்கு
ஐயோமாமாவென்று அலரியழுதாரே
பாலகர்தானழுவே பார்வேந்தனப்போது
ஐயோமக்களே அவனியில்லயலேயவிட்டு
பாவிபிரம்மனும் பார்த்திருந்தானேயிப்போது
இப்படியாக இசைந்துவேந்தன் தானழுது
பாலரையப்போது பார்த்துகண்தான் துடைத்து
அந்தச்சமயத்தில் அங்கிருந்தக்காவலரை
தானுமேயழைத்து தயவுடன்சொல்லலுற்றார்
அப்பாகாவலரே அதிவேகமாய்நீங்களிப்போ
நாட்டிற்குநீங்கள்சென்று நலமேழுபல்லக்கு
எடுத்துமேவருவீர்கள் இபபோதுவேகமாய்
இந்தமொழிக்கேட்டு இசைந்துமேகாவலர்கள்
பானுகண்டிபட்டணம் பன்மையுடன்வந்தாரே
ஏழுப்பல்லக்குதன்னை எடுத்தாரேயப்போது
நடையாநடைநடந்து நடந்துமேவந்துசேர்ந்தார்
வந்ததோர்பல்லக்குதன்னில் வகையுடனேழுப்பேரை
அமரவேதான்செய்து அப்போயெடுத்துக்கொண்டு
பூச்சக்கிரப்பட்டணம் புகழாகவந்துசேர்ந்தார்
பாலகர்தன்னையே பிரியமுடன்மாமியும்தான்
பார்த்துசந்தோஷமிட்டு பக்குவமாய்வளர்த்துவந்தாள்

வசனம்.

இப்படியாக பாலகரைக் கொண்டுவந்தவுடன் மாமிப்பார்த்து சந்தோஷமடைந்து இவர்களை தினமொருமேனியும் பொழு

தொருவண்ணமாய் வளர்த்துக்கொண்டுவந்தாள் இப்படியிருக்க இந்த இராமவர்த்தி வேந்தனுக்கு ஏழுப்புதல்வர் அவர்பெயர் யாதெனில் முதல்புதல்வன் சூரியவர்த்திவேந்தன் இரண்டாம்புதல்வன் சந்திரவர்த்திவேந்தன் மூன்றும்புதல்வன் பாபவர்த்திவேந்தன் நான்காம்புதல்வன் சாபவர்த்தி வேந்தன் ஐந்தாம்புதல்வன் காமவர்த்திவேந்தன் ஆறும்புதல்வன் இராமவர்த்திவேந்தன் ஏழாம்புதல்வன் கார்யவர்த்திவேந்தன் இப்படி இலரேழுப்பேரும் ஓர்தாய்வயிற்றினில் பிறந்த பெண்பாலவகளை கலியாணம் செய்வோம் தவிர மற்றவரை இச்சிக்கமாட்டோமென பிருதுவகித்து இருந்தார் இது தந்தையரிந்து அநேகநாடு தேடிப்பார்த்து அகப்படாமையால் சித்தமெலிந்திருந்து அன்று தினம் தானும் தன் தேவியும் சந்தோஷமடைந்து இன்றையதினம் நமது பாலகர் கொண்டயெண்ணம் பூர்த்தியாச்சுதென்று பேசிக்கொண்டு வேந்தன் கொலுவடைந்து வேதியனை அழைத்து ஐயா விப்பிரவரே இன்று முகூர்த்தம் செய்யலாமென்று கேழ்க்க விப்பிரவர் இதை அறிந்து ஐயா இராமோத்தமா நாளையதினம நல்லதென்றுச் சொன்னவுடனே வேந்தன் சந்தோஷமாய் தன் நாடெங்கும் கலியாண பந்தலிட்டு நல்ல சுபமுகூர்த்தத்தில் ஏழுப்பேர்களுக்கும் விவாகம் முடித்துவிட்டார் எப்படியென்றால் மூத்த புதல்வனுக்கு சூரியநாகம்மாளும் இரண்டாம் புதல்வனுக்கு சந்திரநாகம்மாளும் மூன்றும்புதல்வனுக்கு உத்திரகன்னிகையும நான்காம் புதல்வனுக்கு தக்ஷணகன்னிகையும் ஐந்தாம் புதல்வனுக்கு பகடசங்கம்மாளும் ஆறும் புதல்வனுக்கு முனிகன்னிகையும் ஏழாம்புதல்வனுக்கு பாலநாகம்மாளாக விவாகஞ்செய்து பானுகண்டி பட்டணத்தில் சுகக்ஷேமமா யிருந்தார்.

இப்படியிருக்கையிலே இவர்களுடையதந்தையான
நவபோஜமகாராஜன் நலிந்துமாணிக்கதேவியுடன்
சந்தோஷவைபோகமாய் சம்பிரமாய்தானிருந்தார்
இப்படியிவரிருக்க இசைந்தமேடில்லிபாக்ஷா
தன்னைக்காணுவதற்கு தனிவேந்தன்வரவில்லையென்று
கோபமதானடைந்து கொப்பனவேதிவான்ஜியை
தானுமேயழைத்து தகுந்தப்படிசொல்லலானார்
நீங்களுமிப்போது நிகழ்பூச்சக்கிரப்பட்டணம்போய்
கட்டவேண்டியவசூல்தன்னை சட்டினுல்வந்துவிடுவீர்
இல்லாமல்போய்விட்டால் இன்பமாயன்நாட்டை
ஏலஜப்திகள்செய்து இன்பமாய்நமதுபொருள்
பெற்றுவருவீரென்று பெருமையுடன்சொன்னவுடன்





டில்லிபாதுஷா திவான்ஜியையனுப்பி தாலுக்காவை
அமலுசெய்யச்சொல்வது

அப்படியாகவே திவான்ஜியும்புறப்பட்டு
பூச்சக்கிரபட்டணம் புகழுடன் தான்வந்து
வேந்தனைகேட்டார் வெகுவாய்கிஸ்திபணத்தை
ஏதுசொல்லாமல் இருந்தானேநவபோஜவேந்தன்
இத்தனைதான்பார்த்தார் இசைந்துதிவான்ஜியும
வேந்தனையும்தேவியை வெளிதன்னிலேதான்தள்ளி
அந்ததாலுக்காவை அப்போதுயேலமிட்டு
சேரவேண்டியரொக்கத்தை சிறப்புடன்பெற்றுக்கொண்டு
டில்லிபட்டணமே சிறப்புடன்போய்சேர்ந்தார்
அப்போநவபோஜவேந்தன் இசைந்துதன்தேவியோடு
அந்நாடுதன்னில் அயர்ந்துசிலநாளிருந்தார்
டில்லிபாக்ஷாவுக்கு தீவிரமாய்யர்ஜிகன்னை
எழுதியும்பாக்ஷாவும யேனென்றுகேட்கவில்லை
இத்தனைதான்பார்த்து யேதுசொல்வானப்போது
மாதேசெண்பகமே மரகதமேமாணிக்கமே
இப்படிநாமிருக்க இசைந்துமேயவர்வளர்க்க
வேண்டுமேயென்றுச்சொல்லி வேகமாய்சொல்லலானார்
மாதேசுந்திரமே மகிழுடனேகானகத்தில்

விரகுதனையொடித்து வேகமாய்கட்டுகட்டி
தலைமீதுநாமெடுத்து தனியாகபட்டணம்போய்
விரகுதனைவிற்று வேகமாய்ஜீவிக்கலாம்
இப்படிச்சொல்லியே இருவரும்புரப்பட்டார்
கானகம்தான்சென்று கடுகவிரகொடித்து
இரண்டுசுமைகள்கட்டி இசைந்துதலைமீதெடுத்து
பானுகண்டி பட்டணம் மெல்லைதன்னில்வந்தாரே
பெண்ணேநீகேளாய் பிரியமுடனென்வார்த்தை
நாலுவீதிதன்னை நலமாகநீசுற்றியும்
இந்தமரத்தண்டை இன்பமாய்வந்திரும்
இப்படிச்சொல்லியே இசைந்துமேநடந்தானே
விரகோவிரகென்று விற்றானேவேந்தனும்

## நவபோஜமகாராஜன் விரகுவிற்பதையறிந்துவிசாரிப்பது

### வசனம்.

அந்தச்சமயத்தில்ஏழுப்பாலகரும்சந்தோஷமாய்பகடசாலை யாடிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் விரகோ விரகென்றசப்தம் பி றந்தவுடன் இதைக்கேட்ட சூர்யநாகம்மாள் அம்மா தங்கைமாரே நமது தந்தை கண்டத்தொனிபோல் இருக்கிறது என்று எட்டிப் பார்த்தார் வடிவமும் தந்தைபோலாகதான் இருக்கிறது சந்தேக மடைந்து காவலனை அழைத்து அடாகாவலனே அதோ விறகு வி ற்பவரையழைத்து வருவீரென்றுச் சொன்னவுடனே காவலர் அ ழைத்து வருக அந்தச்சமயத்தில் சூர்யநாகம்மாள் விரகை இரக் கச்சொல்லி உனது நாட்டையும் பேரையும் சொல்லும்படி கேழ் க்க அதற்கு அவ்வேந்தன் ஊருமில்லை பல்லை இல்லை என்றுச்சொ ல்ல இதற்குள்ளாக பாலநாகம்மாள் தந்தைக்கு இருந்த குறிகளைக் கண்டுபிடித்து இவர் தந்தையன்றி வேறல்ல கஷ்டதிசையடைந்து இப்படி கஷ்டமனுபவித்தார் என்று மனதில் எண்ணிக்கொண்டு உனதுபேரை சொல்லாமல்போனால் விடமாட்டோமென்றுச்சொ ல்ல வேந்தன் பயமடைந்து அம்மா சொல்லுகிறேன் முந்தி நவ போஜவேந்தன் என்பார் நாடோ பூச்சக்கிரப்பட்டணம் எனது பட்டத்துத்தேவியாகிய லட்சுமிதேவிக்கு ஏழுபெண்பாவைகள் பி றந்தார் பிறந்த ஒன்பதாமாண்டில் அத்தேவி மரணமடைந்தாள் அதன்பிறகு இரண்டாம் கலியாணஞ்செய்தேன் அம்மாது இட்ட

மருந்தால் பாலகரை காட்டில்விட்டு வந்துவிட்டேன் அதுமுதற் கொண்டு இப்படி கஷ்டமெல்லாம் அனுபவித்தோம் என்றுச் சொன்னவுடனே பாலகர் தந்தையைப்பார்த்து சொல்லத் தொடங்கினார்.

கர்மசண்டாளன் கடுகவேநீயாகும்
குலத்துரோகிநீயேயாகும் குவலயத்தில்வும்முடைய
பாலகர்நாங்களாகும் பக்குவமாய்கானகத்தில்
நாங்கள்நித்திரைசெய்ய நலமாகத்தாழ்ந்துண்டை
எங்களருகில்வைத்து இன்பமாய்நீயெழுந்து
மாணிக்கதேவியிடம் மகிழுடன்சென்றீரே
உதயமானவுடனே உப்பொங்கெழுந்திருந்து
பார்க்கதந்தைநீர் பக்குவமாய்துண்டாய்கிற்க
அய்யோதெய்வமேயென அழுதுதுடித்தோமே
எங்களைசெய்கோர் இக்கொடியபாதகம்
இப்படியலைந்தீர் இதுவும்மைவிடுமோதான்
உனதுமூத்தமகள் இதோபாரும்சூர்யநாகம்மா
இரண்டாம்புதல்வி இதோபாரும்சந்திரநாகம்மா
மூன்றும்புதல்வி இதோபாரும்வுத்திரகன்னிகை
நான்காம்புதல்வி இதோபாரும்தக்ஷனகன்னிகை
ஐந்தாம்புதல்வி இதோபாரும்பகடசங்கம்மா
ஆறும்புதல்வி இதோபாரும்முனிகன்னிகை
ஏழாம்புதல்வி நானேயாகும்பாலநாகம்மா
இப்படிச்சொல்லவே இசைந்துமேவேந்தனும்
தலைகுனிந்துமே தான்கண்ணீர்விட்டானே
அப்போதுநாகம்மா இசைந்துமேதந்தையை
தேருதலைசொல்லியேதான் துடைத்தாள்கண்ணீரை
அந்தச்சமயத்தில் அருகிருந்ததாதிகளை
இன்பமாய்தானழைத்து யெடுத்துவாதண்ணீரை
தந்தைக்குயெண்ணெயிட்டு ஸ்நானங்கள்செய்துவைக்தாள்
பட்டுக்களைதோவித்தி பக்குவமாய்க்கட்டச்செய்தாள்
நெற்றிக்குத்திலகமிட்டு நிகழ்தங்கவாழிலைபோட்டு
பருப்புப்பச்சடியுடன் பத்துவகைகறிவர்க்கமும்
நெய்யிசாதமிட்டு நிகழுடன்புசித்தபின்பு
தாம்பூலந்தான்கொடுத்து சயனிக்கசெய்தாரே
இப்படியாகதந்தையை இன்பமாய்வளர்த்துவந்தார்
நவபோஜவேந்தனும் நலமாகயிருந்துவிட்டார்

வசனம்.

நவபோஜவேந்தன் இப்படியாகயிருக்க மாணிக்கதேவி விற குவிற்றுவிட்டு வேந்தன்சொன்ன இடம்வந்துப்பார்க்க வேந்தன் இல்லாமல்போனதால் மனவியாகூலமடைந்து அன்னாட்டைவிட்டு மருதேசம்போய்விட்டாள். இது இப்படிநிற்க பாலநாகம்மாள் தன்கணவன் வந்தவுடன் அய்யா நீர் டில்லிக்குச்சென்று யென் தந்தை பட்டக்கடனை நீர் யேந்திக்கொண்டு மறுபடியும் அன்னாட்டை தந்தைக்கு தரும்படிசெய்வீரென சொல்லவே அதற்கு கார்யவர்த்திவேந்தன் சம்மதமடைந்து அத்தக்ஷணமே டில்லிபட்டணம்சென்று பாதுஷாவுக்கு சலாம்செய்து நிற்க இவரைக்கண்ட பாதுஷா சந்தோஷமடைந்து என்னக்காரியமாய் வந்தீரென்று கேட்க அய்யா எனது மாமனார் ஆண்டுவந்த பூச்சக்கிரப்பட்டணம் அமானிசெய்துக்கொண்டீராம் ஆகையால் அந்தக் கடனுக்கு நானேயாகும் என்றுச்சொல்ல பாதுஷா இவர் வர்த்தமானங்களை விசாரித்துக்கொண்டு இவரிஷ்டப்போலாகவே உகம் எழுதிக்கொடுத் தனுப்பிவிட்டார். அதன்பிறகு கார்யவர்த்திவேந்தன் அந்தக்கடிதம் பெற்றுக்கொண்டு தன் நாட்டிற்குவந்து தேவியாகிய பாலநாகம்மாள் கையில் இக்கடிதம் கொடுக்கவே அதைப்பெற்று தந்தையிடம்வந்து இதைக்கொடுக்க சந்தோஷமடைந்தார். இப்படியாக சிலதினமிருந்து அந்த நவபோஜவேந்தன் மாணிக்கதேவியிட்ட இடுமருந்தால் திரேகமெலிந்து வியாதியடைந்து மரணமடைந்தார். அதன்பிறகு, ஏழுமருகரும் பிரேதத்தையெடுத்து தகனஞ்செய்துவிட்டு கர்மானுஷ்டானங்களை தீர்த்துக்கொண்டு சந்தோஷமாய் இருந்தார். இவ்விதமாக இருக்குஞ்சமயத்தில் இந்த ஏழுவேந்தரும் கண்டிககோட்டைக்குபோக கார்யம்வந்தது அப்போது கடசிபுதல்வனாகிய கார்யவர்த்தி இராஜன் காவலரையழைத்து அடா காவலனே ஆராகிலும் அரிதேசி பரதேசி ஜோகி ஜங்கம பக்கிரி பட்டு பிராமணன் ஆர்வந்தபோதிலும் உழக்கரிசியும், பருப்பு, உப்பு, காசும் தந்து அனுப்புவீர்தவிர உட்பிரவேசிக்கலாகாது அப்படி ஆராகிலும் சென்றால் உன் சிரசு போய்விடும் என்றுச்சொல்லி தன் தேவியிடம்வந்து நாயகி அரிதேசி, பரதேசிகள் ஆர்வந்தபோதிலும இந்த மூன்றுகோட்டைதாண்டி பிச்சை இடாதேயென்று மூன்றுகோட்டைக் கீரிவிட்டு இம்மாதுக்கு திட்டஞ்செய்துவிட்டு கார்யவர்த்திவேந்தன் தமயமாருடன் புறப்பட்டு கண்டிக்கோட்டைக்கு போய்விட்டார்.

இந்த பாலநாகம்மாள் கதைதன்னில்

லட்சுமிதேவம்மாள்கதை சம்பூர்ணம்.

ஓம்

சற்குருவேநமஃ

மீனாக்ஷி யருள்பெறுக.

# பாலநாகம்மாள்கதை

## இரண்டாம் பாகம்.

### காப்பு - வெண்பா.

பாலநாகம்மாள் பண்புள்ள கதைதன்னை
சீலமுட னிரண்டாம்பாகம் சொல்லிடவே—பாலனன்
திங்கள் சடையிலிட்ட திருநேத்திர தார னீன்ற
அங்கரவன் பொற்பாதம் காரு

வசனம்.

இப்படியிருக்க பாலநாகம்மாள் பானுகண்டிபட்டணத்தி லிரா னின்ற சிவப்பெருமானை பூசைசெய்துவருஞ் சமயத்தில் சங்கரமூர்த்தியருளாள் அம்மாது கர்பணியாயிருக்க அந்தச்சமயத்தில் தன் புருடன் முதலானவரும்.

மூத்தாருப்பேரும் முகந்து தன்கணவனும்
பனிரெண்டுசேனையுடன் பண்புடன்புறப்பட்டு
மந்திரிபிரதானிகளை மகிழ்ந்துயழைத்துக்கொண்டு
கண்டிக்கோட்டைக்குக் காரியமாய்போய்விட்டார்
வேந்தர்கள்யாளப்பட்ட விந்தையானபூமிதன்னில்
நாகற்றமூடியொன்று நலமாகபிறந்தது
பிறந்தவுடனேதான் பக்கிரியும்பிறந்தானே
அவனுடையகோட்டை அழகென்னசொல்லலாகும்
ஏழுக்கோட்டையும் இசைந்தவெள்ளிகோட்டைதான்
பதினான்குமேடைகள் பண்புடனிருக்கிறது
அந்தநல்லமேடைநடுவில் யமைத்தாரேசிப்பிகள்
பனிரெண்டுஸ்தம்பம் மகுதியிருக்கிறது
மகுதிதன்னிலே மாயபக்கிரியிருக்கின்றான்

நன்றாய்தமிழைதன்னை நலமுடன்வாசித்தவன்
வடதெலுங்குதன்னை வகையுடன்வாசித்தவன்
மந்திரகாரனவன் மாயங்கள்செய்பவன்
அவனுடையமந்திரபூதம் அறிவிடத்தரமல்ல
எழுநூறுபூதமும் இணையில்லாசெம்பூதம்
மூனூறுபூதம் முகுந்தகருமபூதம்
சிட்டிக்கைதான்போட்டால் சிறப்புடன்வரும்பேய்கள்
வண்ணாரப்பேயிதான் வண்மைதீபிட்டிபிடிக்குமாம்
அமட்டபேயிதான் அழகுக்கண்ணைகாட்டுமாம்
கொசவப்பேயிகள் கொண்டுவருஞ்சாதமும்
எடப்பேயிதான் ஆடுகளைசமைக்குமாம்
பரப்பேயிதான் பிடிக்கும்கட்டைவெட்டிவரும்
கிழப்பேயிதான் கிருபைசரமாடுமாம்
இப்படியிருக்கையிலே நாகள்ளபூடிகரைதன்னில்
பூவரசன்செடிகளும் புகழாகயிருந்தது
அந்தச்செடிமீது அழகானபக்ஷிரெண்டும்
மேற்கேயிருந்து மேன்மையாய்வந்தது
செடிமீதுயமர்ந்து சிறப்பாய்மொழியாடியது
இந்தமொழிகளை இசைந்துபார்த்தானபக்கிரியும்





வணிச்சங்கைப்பார்த்து பக்கிரி சொல்வது

பெரியகூத்தியாரான பெயரெடுத்தவணிகச்சங்கு
இன்பமாயவனைப்பார்த்து இசைந்துமேசொல்லலானான்

காமக்கிளியே கட்டழகிவணிகச்சங்கு
பார்த்தாயாபக்ஷிகளை பண்புடன்ஜோடியாக
இருந்துசரசமாக இன்பமாய்பேசுமது
இப்படிசரசமாக இசைந்துமேயிருப்பதற்கு
எனக்கும்யாருங்காணேன் ஏதுசெய்வேன்பெண்ணரசி
இந்தமொழிக்கேட்டு இசைந்துயவள்சொல்லலானள்
நானிருக்கயுனக்கென்ன நயமுள்ளப்க்கிரி
அந்தமொழிக்கேட்டு ஏதுச்சொன்னன்பக்கிரி
தூரத்தெரிக்கிழப்பிணமே தூரப்போநாற்றமடி
உன்னைப்பிடித்ததுபோல் உகந்துசக்காளத்திகொண்டுவாரேன்
இரண்டுபேர்சண்டைசெய்ய இசைந்துகண்ணுள்பார்க்குரண்டி
இப்படிச்சொல்லியவன் யெடுத்தானேகரும்பூனையை
பூனையைக்கொன்றுபஸ்பம் புகழுடன்செய்தானே
இடதுக்கண்ணுக்குமையி இட்டானேயப்போது
கைதன்னிலஞ்சனம் கடுகவேபார்த்தானே
வடதேசமெல்லாம் வகையுடன்பார்த்தானே
வடதேசம்தன்னிலே வாழ்மாதுதோற்றவில்லை
தென்தேசமெல்லாம் தேடியவன்பார்த்தானே
தெற்குதேசம்தன்னில் திகைமாதுகாணவில்லை
கிழக்குதேசந்தன்னில் கிருபையுடன்பார்த்தானே
கிழக்குதேசம்தன்னில் கனமாதைக்காணவில்லை
மேற்குதேசம்தன்னில் போட்டானேயஞ்சானம்
அந்தநல்லபூமிதன்னில் அகப்பட்டாள்வொருமாது
பனிரெண்டாமயில்தூரம் பானுகண்டிபட்டணமாம்
இவனுடையயஞ்சனத்தில் அகப்பட்டாள்நாகம்மாள்
வாடிவனக்குயிலே வரிசையுள்ளவணிசச்சங்கு
பானுகண்டிபட்டணத்திற்கு பக்ஷமாய்போகுறேன்
உனக்குத்தகுந்தமாதை உகந்தழைத்துவருகின்றேன்
எங்கடாசக்காளத்தி என்னடாபக்கிரி
இந்தமொழிக்கேட்டு ஏதுச்சொல்வான்பக்கிரி

வசனம்.

அடிநாயகி இன்னட்டிற்கு பனிரெண்டு யோசனை தூரமுள்ள பானுகண்டி பட்டணத்தில் நவபோசமகாருசன் ஏழுப்புதல்வரில் கடைசிபெண்ணகிய பாலநாகம்மாளைசிரையெடுத்துவருகின்றேன்

சண்டாளப்பாதகா சிதறிப்போகுமுன் தலைதான்
பொல்லாதவேந்தர் போக்குவாருன்னாவி
நீயேண்டாபோகுராய் நிலைத்தப்பியன்னாடு
போனால்துன்பங்கள் பொருமையுடன்தானமைக்கும்
இந்தமொழிகேட்டான் இனிமையாய்பக்கிரியும்
எனக்குயெதிர்மொழி எதிர்த்துநீபேசுகின்றாய்
கத்திதனையெடுத்தான் கடுகவேயப்போது
மூக்கைகாதறுக்குறேன் மூதேவிமுண்டையே
இப்படியாகச்சொன்னான் இசைந்துமேபக்கிரியும்
அப்போதுவணிகச்சங்கு அன்புடன்சொல்லலானாள்
நீபோனால்யெனக்கென்ன நிமைக்குள்ளேசெத்தாலென்ன
இப்படியாகச்சொல்லி இசைந்துமனைபோய்விட்டாள்

வசனம்.

இந்தப்பிரகாரம் சொன்னமொழி கேட்காதபடியால் வணிகச்சங்கு தன் மனைக்குப் போய்விட்டாள்.

அந்தச்சமயத்தில் அறிந்தானேபக்கிரியும்
வணிகச்சங்குமேடைக்கு வந்தானேபக்கிரியும்
பக்கிரிவந்ததை பார்த்தாளேசங்கோஜி
அன்பாய்குர்ச்சியை இசைந்துமேபோட்டாளே
பைடோஜிபைடோஜி பக்கிரிநாய்கா
பக்கிரியப்போது பகுர்ந்துகொலுவுதீர்ந்தான்
இன்பமாய்மிட்டாயியை இசைந்துகாவென்றுசொன்னான்
நக்கோஜிபக்கிரி நலமுடன்யெந்தனுக்கு
அகேசங்குதூத்கோவா அன்புடன்தின்னுவாய்
பக்கோஜிபக்கிரி நான்தின்னமாட்டேனென்று
இந்தமொழிக்கேட்டு இசைந்துபக்கிரிசொல்லலுற்றான்
தால்ரொட்டியிப்போது தயவுடன்செய்குவாய்
அந்தமொழிக்கேட்டு அப்போதுசங்கோஜி
தங்கச்சாணிக்கையதனை தனியாயடுப்பில்வைத்து
இரண்டுகலமாவை இசைந்துரொட்டிசுட்டாளே
ஒருகரிசைசிறுபருப்பை ஒருமித்துகடைந்தாளே
இத்தனைத்தனையே இசைந்துமேதின்றானே
அருபதுலோட்டா அன்பாய்கள்குடித்தானே
அதிலும்யவனுக்கு இசைந்துமயக்கம்கிடையாது

பனங்காய்பெருமையாய் பண்புடன்யபினிதின்ருன்
அந்தச்சமயத்தில் அழகானசிமிலெடுத்து
ஒருக்கூடைகெஞ்சாவை உகந்துமேதான்கசக்கி
சிமிளியில்தானடக்கி சிறப்புடன்பிடித்தானே
கெஞ்சாபிடித்தவுடன் கிர்ரென்று தலைசுழட்ட
இல்லாதயோசனைகள் அப்போபிறந்தது
அரரேவஷ்றவாரே அரேபாலநாகோஜி
சுந்தரியென்னைவந்து சரசங்களாடுவாய்
முத்தமிட்டுயென்னை முகந்துயென்னைக்கூடுவாய்
மாதுவேஷமெடுத்து மகிழ்ந்துநாகைகொண்டுவாரேன்
குலவுர்த்திவேஷத்தை கொப்பனவேபோட்டானே
டோரீகுல்லாவை தொடுத்தானே தலைதன்னில்
கம்பிளிகந்தையை கயிற்றினில்சுற்றினன்
லுங்கிகுட்டைதன்னை கழுத்திலேபோட்டானே
தங்கவுக்காதன்னை ததுந்துகைபிடித்தானே
பாலமணிகையில்தன்னில் பக்குவமாய்கட்டினன்
பக்கிரிமணிகளைபகர்ந்து கழுத்தினிலேபோட்டானே
நிலைக்கண்ணாடிதன்னில் நின்றுரூபம்பார்த்தானே
அரே-இந்தவேஷம்தானும் அழகல்லநமக்குமே
அந்தவேஷம்தன்னை அப்போதேகலைத்துவிட்டான்
பிராமணவேஷம் பண்புடன்கட்டிக்கொண்டான்
நிலைக்கண்ணாடியெதிரில் நின்றுமேபார்த்தானே
அந்தவேஷம்சரியல்லவென அப்போதுகலைத்தானே



பக்கிரி சன்யாசிவேஷம கட்டிக்கொண்டு புரப்படுவது.

சோமுட்டிவேஷத்தை கொப்பனவேபோட்டானே
அந்தநல்லவேஷமும் சரியல்லவெனக்கலைத்தான்
சன்யாசிவேஷமதை தானப்போசட்டினன்
பட்டுதோவத்தியை பாகைபோல்சுற்றினன்
நெற்றிக்குத்தூளிபூசி நிகழ்சந்தனபொட்டுமிட்டான்
ருத்திராக்ஷமாலையை ருடியாய்மாலையிட்டான்
விபூதிபையெடுத்து இடுப்பினில்சொரிவினன்
கண்ணாடியெதிரில்வந்து கடுகாழனைப்பார்த்தான்
தன்னழகைதான்பார்த்து தான்மூர்ச்சையடைந்தானே
மூர்ச்சைதெளிந்துமே முகந்துதானும்யெழுந்தானே
இந்தவேஷமாய்நான்சென்று இப்போயழைத்துவாரேன்
வாடிவணிகச்சங்கு வண்மையுடன்மொழிகேளும்
பானுகண்டிபட்டணம் பண்மையுடன்நான்போறேன்
மேடைகள்மருதியும் மேன்மையுடன்பத்திரம்
இந்தமொழிக்கேட்டு இன்பமுடன்வணிகச்சங்கு
படுப்பாவிநீபோனல் பானுகண்டிபட்டணத்தில்
உன்னைபலியிடுவார் உண்மையுடன்வேந்தரும்
இந்தமொழிக்கேட்டான் இன்பமாய்பக்கிரியும்
தூத்தரிபாஞ்சேத்து தூரமில்வணிகச்சங்கு
செருப்பாலடிக்குரெண்டி சொல்லாமொழிசொல்லாதடி
இத்தனையும்கேட்டாளே இன்பமுடன்வணிகச்சங்கு
உனதுயிஷ்டம்போல் உண்மையுடன்நீபோவீர்
அந்தச்சமயத்தில் அன்புடன்பக்கிரியும்
மாயபல்லக்கு அன்புடன்செய்தானே
பிந்திகொம்புதன்னை பேயிகள்தான்பிடித்தார்
முந்திகொம்புதன்னில் பேயிகளில்லையே
மந்திரபலத்தாலே மாயப்பல்லக்குநடக்கிறது
ஏறினன்பல்லக்கு இன்பமாய்பக்கிரி
நாகள்ளபூடிகரை நலமாகதாண்டினன்
பானுகண்டிபட்டணம் பாட்டையைதான்பிடித்து
இருண்டவனங்களும் யெலுமிச்சந்தோப்புகளும்
புலிகள்வனத்தைவிட்டு புதுநயனபட்டணம்வந்தான்
கிளிப்பட்டணம்வந்தான் கிருபையுடனப்போது
கெங்காபட்டணம்வந்தான் கெம்பீரமாயப்போது
புலிவேந்தன்பட்டணம்விட்டு பானுகண்டியெல்லைவந்தான்

பாணுகண்டிபட்டணத்தில் புகழ்நந்தவனங்கண்டான்
இரக்கினன்பல்லக்கு இன்பமாயவ்விடத்தில்
அந்தச்சமயத்தில் அந்தநல்லவனந்தன்னிலே
பரமசிவனைப்போல பரதேசிவேஷம்போட்டான்
சங்குசேமகலம் சம்பிரமாய்கைப்பிடிக்கான்
பாணுகண்டிப்பட்டணம் கோட்டைக்கெதிரேவந்து
சங்குதானெடுத்து சம்பிரமாய்வூதினன்
அந்தசப்தம்கேட்டு அங்கிருந்தகாவல்வன்
வந்தனம்சங்கமரே வந்தக்காரியமேதையா
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னன்பக்கிரி
சுகமாய்சுகமடைவாய் சிறப்புடனேகாவற்காரா
நானுமேகாசியாத்திரை நலமாகபோரேன்
கோட்டைக்குள்போவதற்கு நேயமில்லாசெலவுதாருய்
அந்தமொழிக்கேட்டான் அப்போதுகாவலனும்
போகவிடங்கொடுக்கேன் பொல்லாங்குநேரிடுமே
எந்தனுக்குவுத்திரவு இன்பமாய்வேந்தர்தந்தார்
அரிதேசிபரதேசிகள் அன்புமிகபிராமணன்வந்தால்
உழக்குயரிசியும் உப்பொங்கிகாசுதருக
சிலவுதந்துபோனர் சிறப்புடன்வேந்தரும்
அதற்குமிஞ்சியானும் அளவுசொல்லமுடியாது
இந்தமொழிக்கேட்டான் இன்பமுடன்பக்கிரியும்
காவலனேகேளாய் கனமுடன்யென்வார்த்தை
இந்தவிடத்திலே இருந்தேபோறதில்லை
இரண்டுமூன்றுவீடு இன்பபிச்சையெடுத்துக்கொண்டு
ஒருவேளைதானிருந்து உகபொங்கிபோகுரெண்டா
இத்தனையும்தான்கேட்டான் இன்பமுடனகாவலனும்
வேந்தரிதைக்கேட்டால் வேகமென்சிரசுபோகும்
போகவழிவிடேன் போய்விடுவீர்பரதேசியே
இப்படிச்செல்லவே இதுகேட்டான்பக்கிரியும்
பிள்ளைகள்பெருத பெரும்பாதகன்நீயாகுமடா
ஐயாவேநீகேளாய் அன்புடன்பரதேசியே
பிள்ளைகளில்லாசெய்தி யெப்படியறிந்தீரையா
அடபோடாபாதகா அன்புடன்நீகேளாய்
இந்தநல்நாட்டிற்கு இருக்குறேன்தெய்வமாக
பிள்ளைகளில்லாவிட்டால் பிள்ளைகரும்பரிதேசியான்
பாலகரில்லாவிட்டால் பாக்கியம்தரும்பரதேசியான்




### சந்நியாசியை காவலன் புத்திரபாக்கியம் கேட்பது.

#### வசனம்.

இப்படியாக மாயபக்கிரி மர்மமாய் சொல்லவே இதைக்கேட்ட காவலன் ஆச்சரியமடைந்து ஐயா நீர் இதுவரைக்கும் ஆருக்காகிலும் புத்திரபலன் கொடுத்ததுண்டா என்று கேட்டமாத்திரத்தில் இதைக்கேட்ட பக்கிரி அடாபயலே எனது ஞானநிஷ்டிதன்னில் அகப்படுகின்றது இதில்லாமல் இந்த கோட்டையிலிருக்கப்பட்ட பாலநாகம்மாளுக்கு சந்தானப்பலன் யானேகொடுத்தேன் இப்போது எழுநாளாச்சுது அம்மா பிரசவித்ததென்று சொன்னவுடனே காவலன் பயமடைந்து நமதுகோட்டை சங்கதி இதராளுக்குத் தெரியவராதே இவருக்கு எப்படிதெரிந்ததோ அறியோம் அவர் சாக்ஷாத் சாம்பவமூர்த்தியாயிருக்க வேண்டுமென்று சொல்லத்தொடங்கினான்.

வந்தனம்வந்தனம் வடகைலாசமூர்த்தியே
செய்தப்பிழைகளை சித்தம்வைத்துயாளுமையா
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னான்பக்கிரி
உந்தனுக்குபுத்திரபலன் உகந்துயான்தருகின்றேன்
இப்படிச்சொல்லி யெடுத்தானேவிபூதிபையை
விபூதிதானெடுத்து வோதியவன்நெற்றிலிட்டான்
கொஞ்சம்விபூதியை கொடுத்தானேகைதன்னிலே
இந்தவிபூதியை இப்போதுயெடுத்துக்கொண்டு
உந்தனுக்குயேழுப்பேர் உகந்துமேபத்தினிமார்

அவர்கள்நெற்றிதன்னில் அன்பாகநீயிடுவாய்
வீட்டிலும்தொரையிலும் வேகமாய்நீபோடுவாய்
ஏழுப்பேர்வாயில் இன்பமாய்நீபோடுவாய்
இப்படிச்சொல்லி கொடுத்தானேவிபூதியை .
அந்தவிபூதியை அன்பாகக்காவலனும்
கையிலேந்திக்கொண்டு கடுகநடக்கலுற்றான்
ஓட்டமாய்வோடிவந்து பழைத்தானேதேவிகளை
வாடியென்தேவிகளே வண்மையுடனின்றுமே
புத்திரபாக்கியம் பெருவதர்க்குவிபூதியை
பெரியோர்கொடுக்க பிரியமாய்பெற்றுவந்தேன்
என்றுமேசொல்லி இட்டானேநெற்றிதன்னில்
கொஞ்சவிபூதியை சொப்பனவேவாயில்போட்டான்
வீட்டிலும்தொரையிலும் வேகமாய்தான்போட்டான்
போட்டநிமிஷத்திற்கு பிறந்தார்கள்கோடிப்பாலர்
பிறந்தவுடனே பிடித்தார்தந்தைமடியை
தந்தையேபசிக்குதையா தயவுடன்சாதம்போடும்
என்றுமேபாலகர் இடைவிடாமல்மடக்கிக்கொண்டார்
இந்தவேதனைப்பட இவனால்முடியாமல்
இந்தப்பாலருடன் இனிப்படமுடியாதென்று
ஓட்டமும்நடையாக ஓடியேதான்வந்தான்
பக்கிரியெதிரில்வந்து பண்புடன்தான்பார்த்து
போதுமையாயோகியே பொருமையுடன்பாலர்பாக்கியம்
கோடிபாலகரை சொப்பனவேநீதந்தால்
எப்படிசகிக்கலாகும் இந்தநல்லபாலர்கோஷ்டம்
பாக்கியமெனக்குவேண்டாம் வைபோகதினகரரே
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பக்கிரியும்
உனதுயிஷ்டம்போல உகந்துபாலர்தருகின்றேன்
ஏழுப்புதல்வரை இன்பமாய்நான்தந்தேன்
ஏழுப்பாலருடன் இசைந்துநீவாழ்ந்திருப்பாய்
இப்படிச்சொல்லவே இருந்தபாலர்போய்விட்டு
ஏழுப்பாலகரை இசைந்துமேயமைந்துவிட்டார்
வாருமையாபரிதேசி வகையுடன்மொழிகேளும்
கோட்டைக்குப்போவதற்கு சொப்பனவேசிலவுதாரேன்
சந்தடியில்லாமல் தாங்களும்போய்வருவீர்
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னான்பக்கிரியும்

சங்கையான்வூதாமல் சிறப்புடன்போகலாமா
ஏதுக்குமஞ்சவேண்டாம் இன்பமாய்க்கார்க்கின்றேன்
இதுபோல்சொல்லவே ஏதுச்சொன்ஞன்காவலனும்

வசனம்.

ஐயா பரிதேசியே இதோ யான் இருப்பது வோர்வாயல் இப்படி ஏழுவாயல்யிருக்கிறது ஏழுவாயலுக்கும் ஏழுக்காவல் இருக்கிறது இரண்டாவது புலியும் மூன்ருவது கரடியும், நான்காவது காட்டுநாய், ஐந்தாவது காட்டானை, ஆருவது சிங்கம், ஏழாவது ஆளி, இப்படிகாவலிருக்க நீ எப்படிப்போகுவீர் என்றுச்சொல்ல இதுக்கேட்டு பக்கிரி அடா காவலனே போகத்தரமானல் போகுரேன் இல்லாவிடில் திரும்பி வருகுறேன் என்றுச்சொல்லி மாயப் பக்கிரி புரப்பட்டான்.

சிட்டிக்கைதான்போட்டு சிறப்புடன்பேய்களை
அப்போவரவழைத்து யன்புடன்சொல்லுகின்ருன்
கானகம்நீங்கள்சென்று கனமுடனேயெந்தனுக்கு
காட்டாட்டின்கறி கனக்காளாம்கொண்டுவாரீர்
தயிருசாதமும் தனிபாலைக்கொடிகளும்
பவழக்கொடிகளும் பண்புடனேகொண்டுவாரீர்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்பேய்களும்
அந்தச்சமயத்தில் அன்புடனேதான்கொடுத்தார்
இத்தனையும்பெற்றுக்கொண்டு இன்பமாய்பக்கிரி
அந்தவாயல்தாண்டி அன்பாகயிரண்டாம்வாயல்
இரண்டாம்வாயல்வருக இருந்ததுபெரும்புலிதான்
இவனைக்கண்டவுடனே இரைச்சலும்போட்டது
அந்தபுலியைக்கண்டு அன்படனேபக்கிரி
ஆட்டுதுடைதன்னை அன்பாகதான்போட்டான்
கறியைதின்பதற்கு கனமுடனேதிரும்பியது
அந்தநல்லசமயத்தில் அந்தவாயல்தாண்டினுன்
மூன்றும்வாயலண்டை முகந்துமேதான்வந்தான்
கர்டியுமப்போது கண்டதுபாதகனை
எகிரிதான்வருகவே இன்பமாய்பக்கிரியும்
அந்தநல்லசமயத்தில் அதட்டியேகாளானை
எதிரினில்போடவே யெடுக்கதிரும்பியது
அப்போதுபக்கிரி யந்தவாயல்தாண்டினுன்
நான்காம்வாயலண்டை நலமாகவந்துநின்ருன்

காட்டுநாயுமிவனை கண்டுகுலைக்கலாச்சு
அந்தநாயுக்குமே அருந்துகறிதான்போட்டான்
கறியைதின்பதற்கு கனமுடனேதிரும்பியது
அந்தநல்லசமயத்தில் அந்தவாயல்தாண்டியே
ஐந்தாம்வாயலண்டை அன்பாகவந்துநின்றான்
காட்டானையிவனைக் கண்டுகர்ஜித்தது
அப்போதுபலக்கோடி அன்பாகபோட்டானே
அந்தநல்லசமயத்தில் அந்தவாயல்தாண்டினான்
ஆறும்வாயலண்டை அன்பாகதான்வந்தான்
அங்கிருந்தசிங்கம் அதட்டிகர்ஜித்தது
பவழக்கொடியை பண்புடனெதிரேபோட்டான்
அந்தக்கொடியை அதுதின்கத்திரும்பியது
அந்தச்சமயத்தில் அந்தவாயல்தாண்டினான்
ஏழாம்வாயலண்டை இருந்தயாளிதானும்
அந்தவாயல்தாண்டி அன்பாகதான்சென்று
பாணுகண்டிபட்டணம் நடுப்பட்டணம்வந்தானே
உப்பரியருகினில் இருந்தகிணறுவொன்று
அந்தக்கிணற்றருகில் அதட்டிவூதினான்சங்குதன்னை
அந்தச்சமயத்தில் அங்கிருந்தபாலகரும்
கும்பலாய்கூடினார் குணமுடனிவனருகில்
இந்தநல்லபாலகரை இன்பமாய்பார்த்தானே
அங்கிருந்தமண்ணெடுத்து அவுலுகடலைதான்செய்தான்
ஓட்டைதானெடுத்து ஒருமிக்கமோருசெய்தான்
சுப்பலைதானெடுத்து சுழிபாம்புதான்செய்தான்
இந்தநல்லவேடிக்கை இன்பமாய்பாலர்பார்த்தார்
அப்போதுபக்கிரியை அன்புடன்கேழ்க்கலானார்
ஐயாவுனதுபெயர் அரியவேசொல்லுமிப்போ
சொல்லுகிறேன்கேளென்று சுருக்காகபக்கீரி
ஜாலவித்தையாடும் பரிதேசிபாப்பையன்
இந்தபேரைக்கேட்டு யெடுத்துச்சொன்னார்பாலகரும்
இந்நாட்டுவேந்தர்கள் இங்குதானில்லையையா
வேண்டியவெகுமதிகள் வேகமாய்கிட்டுமையா
எங்கள்வேந்தர்தானும் இன்பமாயிப்போது
சண்டிக்கோட்டைக்கு கனமுடன்சென்றாரையா

வசனம்.

இப்படியிருக்க இந்தபக்கிரி ஆறுதேவிமார் வீடுதேடி போவதற்கு உத்தேசமடைந்தான் அச்சமயத்தில் பாலநாகம்மாள் பிரசவித்து ஏழுநாளாச்சுது அந்த தீட்டுதன்னில் எல்லாம் தாதிகளும் அவ்விடத்தில் நின்றுவிட்டார். அதன்பிறகு இந்த ஆறுபேருக்கும் தாகமதிகரிப்பதால் நாமேசென்று வாயலில் இருக்கப்பட்ட கிணற்றில் ஜலமெடுத்துக்கொண்டு வரலாமென்று எண்ணமிட்டு அவரவர் ஓர் செப்புக்குடமிடையில் வைத்து கிணற்றருகில் நடந்துவந்தனர் அந்தச்சமயத்தில்.

அவன்-மந்திரவித்தையில் மகாசிறந்தபக்கிரியாம்
ஆறுப்பேர்களும் அன்பாய்வரக்கண்டானே
இடையிலிருக்கும் இன்பசெப்புகுடந்தன்னில்
கிறயவராகன் கிர்மித்தானவ்வேளே
இந்தவிக்தையை இன்பமாய்பார்த்தாரே
என்னசாமர்த்தியம் இந்தநல்லபரிதேசிக்கு
இன்னம்நமக்கு இதுபோல்பாக்கியம்தருவாரோ
சாம்பவமூர்த்தியோ ஷண்முகதேவனோ
பாலன்பிறந்தவேளே பண்பாய்நலமாச்சுது
குடத்தையெடுத்துக்கொண்டு கொப்பனவேதிரும்பினார்
மனைக்குவந்துமிவர் மகிழ்சூடமிரக்கினார்
சிலதுகுடங்கள்தானும் செப்பகறுங்கல்லாச்சு
சிலதுகுடத்தில் சிறுவோட்டின்பிள்ளையாச்சு
இந்தநல்லயதிசயத்தை இன்பமாய்பார்த்தாரே
ஜாலத்தில்பெருத்தவண்டி சன்யாசிபிவனுதும்
இப்படிச்சொல்லவே இசைந்துமேபக்கிரி
சூர்யநாகம்மாள் சுந்திரனைமனைக்குவந்து
சங்குதானாதினான் சம்பிரமாயப்போது
முாத்தில்முத்துகளை முகந்துமேகொண்டுவந்தார்
இந்தநல்லமுத்தை இசைந்துமேபெற்றுக்கொண்டு
விபூதிதானெடுத்து வேகமாய்பக்கிரியும்

வசனம்.

" அம்மா இந்த விபூதியைக்கொண்டுப்போய் நெற்றியிலிட சகலமான பிரேத பிசாசு பூதராக்ஷச ஏவல் பில்லி சூன்யம் இதுகள் யாவற்றும் அணுகாது குருகடாக்ஷம் அனுசரித்து சந்தோஷமடைவீரென்று விபூதியை அம்மாது நெற்றியில் இட்டான் அதன்பிறகு.

அந்தச்சமயத்தில் அழகானபக்கிரியும்
ஒருபேர்மேடைக்கு யன்பாகதான்சென்றான்
பிக்ஷாந்தேகியென்று பிகுசங்குதானூதினான்
அந்தசப்தங்கேட்டு அதிவேகமாய்தாதிகளும்



தாதிகள் பரிதேசிக்குப் பிச்சையிடுவது.

பிச்சையெடுத்துக்கொண்டு பெருமையுடனெதிரில்வந்தார்
வந்ததோர்தாதியை வாஞ்சையாய்ப்பார்த்தானே
இந்தவீட்டிற்கு இசைந்தபட்டத்துத்தேவிதானா
அந்தமொழிக்கேட்டு அப்போதுதாதியுமே
பட்டத்துத்தேவியல்ல பண்புள்ளதோழிநான்தான்
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பக்கிரியும்
தாத்தரிபாஞ்சோத் தாதிபிச்சைபெறலாமா
சாம்பவமூர்த்திக்கு சரியாகுமாயிந்தபிச்சை
பாலநாகுபிச்சையிட்டாள் பெருமையுடன்பெருவேநான்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்தாதிகளும்
ஐயாபரிதேசி அன்புடனேகேளுமையா
புருண்டுதிராதப்படி பிச்சையெவ்வாரிடுவாரையா
இந்தமொழிக்கேட்டான் இன்பமுடன்பக்கிரியும்
பரிதேசியானவர்க்கு பகரும்புருண்டேதடி
அந்தநாகாளுக்கு அன்பாய்சந்தானங்கொடுத்தேன்
பிச்சையிடாமல்போனால் பெருமையுடபாலகனை
அவன்பிராணன்தன்னையே அன்புடன்வாங்கிப்போறேன்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்தாதிகளும்
உடலும்நடுங்கியே உகந்துமேலோடிவந்து

அம்மாவேநீகேளும் அன்புடனேயென்வார்த்தை
இத்தனைநாளாக இங்குவரும்பரிதேசியல்ல



பாலநாகம்மாளுக்கு தாதிகள் சொல்வது

நீபிச்சைபோடாவிட்டால் நிகழ்பாலனைகொல்லுவானும்
இப்படிச்சொல்லியவன் இசைந்துபந்தியம்கூறுகின்றான்
இந்தமொழிக்கேட்டாள் இன்பமுடன்நாகம்மாள்
பயமதுதான்கொண்டு பண்மையுடன்தாதிகளை
அப்போயழைத்துமே அன்புடன்சொல்லலானாள்
தேசங்கள்திரிபவனோடு தேடிபந்தியம்கூறலாமா
எந்தன்பாலன்போனால் இருக்குமாயெந்தனாவி
தாதிகளேநீங்கள் தயவுடன்வெண்ணீரை
கொண்டுவாருங்களடி கொப்பனவேநீராட
அந்தமொழிக்கேட்டு யப்போதுதாதிகளும்
வெண்ணீரைகொண்டுவந்து வேக்மாய்வைத்தாரே
சுத்தநீராடி சுருக்காய்நகைபூட்டி
பட்டுசேலைதன்னை பண்புடன்தானுங்கட்டி
இருகையிதன்னிலே இன்பமுத்துதானெடுத்து
பரிதேசியெதிருக பண்புடனேதான்வருக
கலீல்கலீலென்றுமே கனமெட்டுசப்திக்க
அந்தச்சமயத்தில் அன்பானபாலகனும்
காவுகாவென்றுமே கண்டுயழுகலானான்

ந்தச்சப்தம்கேட்டு அப்போதுநாகம்மாள்
ந்தன்தவப்பாலா இளம்பாலவர்த்திராஜா
ரிதேசிக்கிப்போது பண்புடனேபிச்சையிட்டு
வகமாய்வருகிறேன் தாதிகளேதாலாட்டும்
ப்படிச்சொல்லவே இதுகேட்டான்பாலகனும்
ன்னவென்றுபாலகன் யப்போதுயழுகலானான்
ம்மாவேநீகேளாய் அன்புடனேயென்வார்த்தை
ரிதேசியல்லவே பார்க்கயவனிப்போது
கள்ளபூடியை கலமாய்யாள்பவன்தான்
ாயக்காரனம்மா மாயப்பக்கிரியவனாகும்
வனுக்குப்பிச்சை யன்பாகயிடவேண்டாம்
க்கிரிகைதனிலே பண்பாயகப்படுவீர்
ந்தனுடதந்தைகள் இந்நாட்டிலில்லையே
ாயும்நீயுமேதான் வேறாய்பிரிகுவாய்
ப்படிச்சொல்லி இசைந்துபாலனழுதான்
ாலகன்சொல்லுமொழி பகர்ந்துதாய்க்குத்தெரியாது
ாய்சொல்லுமொழி தனிப்பாலன்யரிந்திட்டான்
ழுகாதேயென்குமாரா யழுதுபாலவர்த்திராஜா
ப்படிச்சொல்லி இசைந்துகோடியருகில்வந்தாள்
காடுவெளிதன்னில் கொடும்பாவிவந்துநிற்கிறாள்
ந்தப்புரத்தில் இசைந்துநாகாள்நிற்கிறாள்
பருவீரேபரிதேசி பெருமையுடன்பிச்சைதன்னை
ந்தமொழிக்கேட்டு அப்போதுசொல்லுகிறான்
காடுதாண்டிவந்தால் கொப்பனவேநான்பெருவேன்
காடிதாண்டியானும் கொடுக்கமாட்டேன்பிச்சையைத்தான்
ப்படிச்சொல்லவே இதுகேட்டான்பக்கிரியும்
ணலென்சமர்த்தை அன்பாகநீபாரும்
நாட்டிலிருக்கும்பாலகனை தோகையேகொண்டேருவேன்
ப்படிச்சொல்லவே இதுகேட்டாள்நாகம்மாள்
யையோயண்ணாவே அன்புபரிதேசியரே
தந்தைதாயாச்சுதே நீபெற்றபுதல்வியாச்சே
னதுபேரனிப்போ உகந்துயழுகுறானே
ால்கொடுக்கப்போரேன் பண்புடனேநீங்களிப்போ
ச்சையைபெருமையா பாலகனழுகுறான்
ப்படிச்சொல்லியே இசைந்துநாகம்மாளும்

பாலகன்தொட்டிலண்டை பண்புடனேயோடிவந்தாள்
காவுகாவென்றுமே கனகோஷ்டமிட்டானே
என்றுமில்லாயழை யப்போயழுகலானுன்
தனதுகைமோதிரம் தானும்கழன்றித்து
பாலன்கைதன்னில் பண்புடன்கொடுத்தாளே

வசனம்.

அந்தச்சமயத்தில் பாலகன் அழுதுக்கொண்டு என்னசொ லுகிறானென்றால் ஓ! அம்மணி? எனது பாட்டனை ஜமாமுனிவே ந்தன் காட்டிற்கு வேட்டைக்குப்போனர் அந்த கானகத்தில் கா ளியும் துர்க்கியும் அனேகதினமாய் போர்செய்துக்கொண்டிரு தார். இப்படியிருக்க அம்மார்க்கமாய் இவர் சண்டையைப் பார் துக்கொண்டுபோக அவ்விடத்தில் பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வ ன், இவர்கள் அதற்தருந்தி அங்கிருந்தார் இவர்களிவரைக்கண் ஓ! ஜமாமுனிவேந்தனே இந்த துர்க்கியும் காளியும் நிர்நிமித்தமா ய் போர்செய்குறார் அவர்கலகத்தை சமாதானம் செய்வீரென் சொன்னவுடனே வேந்தன் இதைக்கேட்டு ஐயா வீரசக்திகளா சுதே என்னைக்கொன்றால் எதுசெய்வது ஆனாலும்பெரிதல்ல யா சென்று சமாதானஞ் செய்கிறேனென்று அவர்கள் இருவர் இ ம்சென்று அம்மா லோகாக்ஷகியே நீங்கள் இப்படி சண்டைசெ வது நலமல்ல உங்களுக்கு மத்தியஸ்தஞ்செய்கிறேன் எப்படியெ றால், கிழக்கெல்லையில் காளியும், மேற்குயெல்லையில் பிடாரியும், ருக்கவேண்டும். இதோ உங்கள் இருவரும் இருக்குமிடத்திற்கு ம தியில் எல்லைக்கல்லை நட்டுவைத்தேனென்று கல்லை நட்டு இருவரை யும் சமாதானஞ்செய்துவிட்டார். அந்தச்சமயத்தில், பிரம்மா, ஷ்ணு, மகேஸ்வரன், இவர்கள் சந்தோஷமடைந்து செக்கிராயு ம் ஒன்று எனது பாட்டனுக்குக் கொடுத்தார். அந்தச் செந்கி யுதம், லட்சுமிவிவாகத்திலிருக்கிறது அதை எடுத்துக்கொண்டு ந்து எனது தொட்டியில்வைத்தால் யானந்தபக்கிரியைக்கொல் கிறேனென்று சொன்னமொழியானது தாயிக்குத் தெரியவில் பாலகன் அழுவதைக்கண்டுதாதிகளோடுசொல்லத்தொடங்கினா

தாதிகளேநீங்கள் தயவுடனேபாலகனை
தாலாட்டியின்று தயநித்திரைசெய்துவைப்பீர்
இப்படிச்சொல்லியே இசைந்துநடந்துமே
நான்குகோடுகள்தாண்டி நலமாகவந்தாளே
இனியாகிலும்பிச்சை இன்பமாய்பிடியுமையா



பாலநாகம்மாள் பிச்சை யிடுவது.

இந்தமொழிக்கேட்டு யேதுசொல்வான்பக்கிரியும்
கோடுதாண்டாமல் கொடும்பிச்சைவாங்கமாட்டேன்
அந்தக்கோடுகளை அன்பாகத்தாண்டிவந்தாள்
கண்டானேபக்கிரி கனமுடனேநாகம்மாளை
மூர்ச்சையும்தானடைந்தான் முகந்துமேபூமியில்விழ
மூர்ச்சையுந்தான்தெளிந்து முந்தியெழுந்துமே
ஜோல்னாதனைப்பிடித்து பிச்சையைப்பெற்றுக்கொண்டு
விபூதியைதானெடுத்து வைபோகமாகவேதான்
பாலநாகம்மாளுக்கு பண்புடனேநெற்றிலிட்டான்
சிவசாம்பவமூர்த்தி சித்தமாய்க்காப்பாற்றுவான்
இப்படிச்சொல்லியே இசைந்துயாசிக்கூறினான்
பிச்சைதானிட்டுமே பெருமையுடன்திரும்பினாள்
அவன்கையிலிருந்த மந்திரகோல்மூன்றுதான்
வெள்ளிபிரம்பெடுத்து வைத்தானேசிரசுமீது
குபீலென்றுதானெரிந்து சாம்பலாககுவித்தாளே
அந்தசாம்பல்தன்னை அடவாய்கும்பல்செய்தானே
செப்புக்கோலெடுத்து சாம்பல்மீதுதானும்வைத்தான்
அந்தநல்லசாப்பல் அழகுகருப்புநாயாச்சு
நாயாகசெய்துமே நலமாகவிட்டானே
அந்தநல்லநாயும் அப்போதுபாலனிடம்
தொட்டியருகில்வந்து சுத்திசுத்தியழுதது

இதைக்கண்டுபக்கிரி இன்பமாய்போது
அவரேனபரியென்றான் அவ்விடம்வந்தது
தால்ரொட்டிதின்னென்று தயவுடன்தான்கொடுத்தான்
ரொட்டியும்பருப்புமே தீண்டவேயில்லைநாயும்
திகிலடைந்துயிருந்தது தீனியென்றும்தின்னாமல்
இப்படியிருப்பதை இதையரிந்தான்பக்கிரியும்
கழுத்துக்குக்கயிரையும் கனமுடனே தான்கட்டி
கையில்பிடித்துக்கொண்டு கடுகநடந்தானே
பாணுகண்டிபட்டணங் கோட்டைவாயல்வந்தானே
தலையாரிராமனும் காவலிருந்தானே
பக்கிரிதன்னையே பண்புடனேகண்டானே
நல்லாயிருக்குதையா நலமுள்ளபரிதேசியே
இரண்டுநாளாக இவ்விடத்தில்நீரிருந்தால்
வேந்தர்யிதைக்கேட்டால் வேகமென்தலைபோகும்
போகும்போதுமக்கு புகழ்நாயிக்கிடையாதே
வருகும்போதிந்தநாயும் வந்தக்காரணமேதையா
இவ்விடத்துநாயாகும் விடமாட்டேனிப்போது
இந்தமொழிக்கேட்டான் இன்பமாய்ப்பக்கிரியும்
அடாகாவலனேநீ அன்புடனேகேளடா
நான் காசிக்குபோவதாய் கண்டுசினேகித்தழைக்க
வருகதரமல்ல வண்மையுடனின்நாயை
அழைத்துக்கொண்டுபோயி அக்காசியில்குளிக்கவைத்து
அழைத்துவாருமென்று அன்புடனேயிதைக்கொடுத்தார்





காவர்க்காரன் நாயைவிடாமல் மடக்குவது.

அவர்கள்கொடுத்தநாயை அழைத்துக்கொண்டுவருகின்றேன்
இதிலும்கொஞ்சபுண்யம் எந்தனுக்குசேருமப்பா
இப்படிச்சொல்லவே இதுகேட்டான் காவலனும்
எவ்வளவுசொன்னாலும் விடமாட்டேனின்நாயை
இதுகளைக்கேட்டானே ஈனகுலதுரோகியும்
என்கெட்டுப்போகுராய் இன்பமுள்ளகாவலனே
இப்படிச்சொல்லவே இசைந்துமேகாவலனும்
கெட்டுப்போனேன்முந்தி கிருபையுடனுன்னாலே
பனிரெண்டுகரிசை பச்சபயர்கெட்டது
இருபதுகலமரிசி இன்பமாய்கெட்டுது
இன்னமென்னதான் இப்போதுகெடப்போகிறது
இதுகளைக்கேட்டானே இன்பமுள்ளபக்கிரியும்
விபூதிதானெடுத்து வேகமாய்காவலன்மேல்
அள்ளித்தெளித்தானே அப்போதுவிபூதியை
அந்தச்சமயத்தில் அந்தநல்லகாவலனும்
பயித்தியம்பிடித்ததுபோல் பிணத்தினாள்வாயாலே
பிசாசுப்பிடித்ததுபோல் வோடினான்கானகத்தில்
கானகமார்க்கமாய் காவலன்வோடினான்
அந்தச்சமயத்தில் அந்தநல்லபக்கிரியும்
நாயையழைத்துக்கொண்டு நலமாகவோடினான்
மூன்றுந்தினத்திலே முகந்துநாகள்ளபூடி
அந்தநாகள்ளபூடி அழகுகரைபோசத்திலே
மௌலாலிப்பேட்டைக்கு மகிழ்ந்துமேவந்தானே

வசனம்.

அந்த மௌலாலிப்பேட்டைதன்னில் இருக்கப்பட்ட ஆலமரத்த ருகில் வந்து நாயைநிருத்தி வெள்ளிப்பிரம்பை அதன்மேல் வைக்கவே அது சாம்பலாய்விட்டது. அதன்பிறகு, அந்தச்சாம்பலை கும்ப லாக்கி செப்புப்பிரம்பால் தட்டவே அந்தச்சமயத்தில்,

கலகலவென்றுமே எழுந்தாளேநாகம்மாள்
அழகுப்பதுமைப்போலே அப்போதெழுந்தாளே
குமரனைப்பெற்றதொரு கோமலாங்கிபோலாக
பாலகனைப்பெற்றதொரு பண்புள்ளநாகம்மாள்
அழகில்சிறந்தவள் அன்புள்ளநாகம்மாள்
இவளைக்கண்டவுடன் யேதுச்சொன்னான்பக்கிரியும்

கோமலாங்கியே கோரிக்கைதீர்ப்பாயடி
மோஹநாங்கியே முதத்ந்தரலாகாதா
இத்தனையும்கேட்டாளே இன்பமுடன்நாகம்மாள்
அண்ணுவேயண்ணுவே அன்புள்ளபரிதேசியே
தாயுந்தந்தைநீயே தாம்பெற்றபுதல்வியானும்
உனதுபேரப்புதல்வன் உகந்துய்மூகுவான்
பால்கொடுக்கபோகவேணும் பக்ஷமுடன்விடுமையா
இந்தமொழிக்கேட்டான் இன்பமுடன்பக்கிரியும்
இத்தனைநாளுண்மேல் இச்சைவைத்துக்கொண்டுவந்தேன்
பொல்லாதமுறைகள்கொண்டு புகழ்ந்துநீபேசுகின்ருய்
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்நாகம்மாள்
பாவிசண்டாளா பரமலோபிபக்கிரியே
உனதுமாயமெல்லாம் உகந்துயறிந்திட்டேநான்
பனிரெண்டுவருடம் பாரினில்நோம்புவுண்டு
அந்தநோம்புதானும் அன்புடனேதீர்ந்தபின்பு
உனதுமொழிப்போலாக உகந்துயான்கேழ்க்கிறேன்
உனக்கேயென்பிராணம் உகந்துமேதருகின்றேன்
இனியாருக்குயானும் இசைந்துதரப்போரேன்
இல்லாமொழிச்சொல்லி இசைந்துயெந்தன்கைபிடித்தாள்
பூமியைக்கீரியான் புகழ்ந்துசாபம்மிடுகின்றேன்
அந்தச்சாபமிட்டால் அப்போவுன்தலைவுடைந்து
பக்கென்றுயெரிந்திடுவாய் பத்திரஞ்சொல்லிவைத்தேன்
இந்தமொழிகளை இசைந்துபக்கிரிகேட்டுவிட்டு
உள்ளம்நடுநடுங்கி உகந்துபயம்கொண்டானே

வசனம்.

ஆனல் இந்த பக்கிரியிடத்தில் வரச்சொன்னல் வருகிறது போகச்சொன்னல் போகிறது, லட்டியுத்தம்செய்வது, முத்துவோடுமேடை கட்டுகிறது, வெள்ளிப்பிரம்பு, கருப்புப்பிரம்பு, சிகப்புப்பிரம்புஇந்த மூன்றிலும் மாயமிருக்கிறது மனிதரூபமாகிறது சாம்பலாய்போகிறது நாயாய்ப்போகிறது இப்படியாக அனேக வித்தைகளிருக்கிறது தவிற ஸ்ரீபுருடன் அனுகூலமாகும்படியான மந்திரமும், செடிகள்மந்திரமும், இவனிடத்தில் இல்லாதபடியால் பாலநாகம்மாள் சொன்னமொழிக்கு பயமடைந்து நடுநடுங்கி அதேப்பிரகாரம் நாகம்மாளை சாம்பல்செய்து ஜோல்னாதன்னில் போட்டுக்கொண்டு தன்மனைக்கு நடந்தான்.

அவனுடையபத்தினி அழகுவணிகச்சங்குதான்
மசூதிதானேறி வருவதைப்பார்க்கின்றாள்
பக்கிரியொருவனே வருகின்றனவ்வழியே
இவனாலே முடியுமா அம்மாதைகொண்டுவர
பலமானவேந்தர் பார்த்துவிட்டால்கொன்றிடுவார்
இவனுக்குயெப்படி அகப்படுவாளம்மாது
இப்படியாகவே யோசித்துக்கொண்டிருக்க
பக்கிரிதானுமே பக்ஷமுடன்வந்துவிட்டான்
வாடிவணிகச்சங்கு வண்மையுடனிப்போது
உனக்குச்சக்காளத்தியை உகந்துயான்கொண்டுவந்தேன்
இருவரும்போர்கள்செய்ய இசைந்துகண்ணால்பார்க்கின்றேன்
இருவர்கள்தமாஷை இங்குயான்பார்க்கின்றேன்
இந்தமொழிக்கேட்டாள் இசைந்துவணிகச்சங்குமே
இல்லாமல்போனாலும் யேன்மொழியாடுகிறாய்
பலமடைந்தவருடைய பார்புகழும்நாகம்மாள்
இந்தசண்டாளனுக்கு யெப்படியகப்படுவாள்
இப்படியாகவே யிசைந்துசொல்லிக்கொண்டிருந்தாள்
அந்தச்சமயத்தில் அறிவுகெட்டபக்கிரியும்
வந்தானேமசூதிக்கு வகையுடப்போது
வாடியென்கண்ணே வரிசையுள்ளவணிகச்சங்கு
உனக்குச்சக்காளத்தியை உகந்துயானுங்கொண்டுவந்தேன்




பாலநாகம்மாள் நிஜரூபங்காட்டுவது.

இருவரும்போர்கள்செய்ய இசைந்துமேபார்க்குறேன்
உங்கள்தமாஷை உகந்துயான்பார்க்கின்றேன்
எங்கடாபக்கீரி எந்தனுக்குக்காட்டடா
அந்தச்சமயத்தில் அந்தச்சாம்பலெதிரேபோட்டான்
செப்புப்பிரம்பாலே சிறப்புடன்தட்டினன்
கலகலவென்றுச்சொல்லி வளையலும்சப்திக்க
பாலநாகம்மாள் பண்புடன்யெழுந்தவுடன்
மேடைகள்மெத்தைகள் மின்னலுண்டாச்சுது
இந்தசுந்திரத்துக்கு மசூதியெங்கும்வொளியாச்சுது
இம்மாதைக்கண்டு இசைந்துமேவணிகச்சங்கு
உன்தலையுடையாதோ ஓகோசண்டாளபாதகா
இம்மாதையேபேனு இங்குகொண்டுவந்தாய்நீ
அம்மாதைத்தீண்டினல் யப்போதுசாகுவாய்
என்வந்தாய்தாயே இந்தப்பாவிப்பின்னலே
இத்தனைக்கேட்டானே யப்போதுபக்கிரியும்
தூத்தரிபாஞ்சோத் தூரப்போடிவணிகச்சங்கு
இல்லாதமொழிச்சொல்லி யென்மேல்தூருச்சொல்லுகிறாய்
மூக்கையும்நாக்கையும் முகந்துயான்யருப்பேண்டி
அடபோடாபாதகா ஆனலெனக்கென்னடா
நீ எங்குதான்செத்தாலும் யெந்தனுக்கென்னடா
அந்தநல்லபக்கீரி அன்பாகநாகம்மாளை
மசூதிதனனிலே மகிழுடன்யமரச்செய்தான்

வசனம்.

அந்தச்சமயத்தில் பாலநாகம்மாளை மசூதியில் கொண்டுவந்து விடவே அம்மாது கேட்டையா பக்கீரியெனக்கு பனிரெண்டு வருடம் நோம்பு தீரும்பரியந்தம் வாயல்தாண்டி உட்பிரவேசிக்கலாகாது அப்படி மீரிவந்தால் தரணிதேவியை நினைந்து உன் தலையுடையும்படி சாபமிடுவேன்.

இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பக்கிரியும்
உள்ளம்நடுநடுங்கி ஒன்றும்மேபேசவில்லை
பக்கீரிதானுமே பள்ளியறைசேர்ந்தானே
இப்படியிருக்கையிலே யந்தநல்லசமயத்தில்
பாணுகண்டிபட்டணத்தில் பாலநாடிபோனபின்பு
ஆருப்பேரக்காமார் அழுதுபுரண்டாரே

தாதிகள்நீங்களே தயவுடன்பாலகனை
பால்கொடுத்துவளர்ப்பீர் பண்மையுடன்பாலகனை
இந்தவீட்டிற்கெல்லாம் இவன்தானொருப்பிள்ளையாகும்
ஐயோகுமாரா அழகுபாலவர்த்திவேந்தா
நீபிறந்தவுடனே தாயைதுரந்தாயோ
ஜனனமாகாமூந்தி தந்தைகள்தானுமே
கண்டிக்கோட்டைசீமைக்கு காரியமாகபோய்விட்டார்
தந்தைகள்தானும் இங்குயில்லாசமயத்தில்
பாவிப்பக்கிரி பண்புடனேவந்தானே
இப்படிச்சொல்லி இசைந்துயெல்லோ ழுதார்
தாதிகள்தானும் பாலகனைவளர்க்குறார்



குடிஜனங்கள் துயரமடைந்து கண்டிகோட்டைக்கு கடிதமெழுதுதல்.

அந்தப்பட்டணத்தில் இருக்குங்குடிகளெல்லாம்
இந்தப்பக்கிரியும் எப்படிவந்தானோ
அப்படிவந்தவன் எப்படிபோய்விட்டான்
எங்களுக்குமே யேதொன்றுந்தெரியவில்லை
இந்தப்பட்டணத்தில் யார்க்குந்தெரியவில்லை

**வசனம்.**

ஆகையால் நாளையதினம் கண்டிக்கோட்டையிலிருந்து நமதுவேந்தர் வீட்டிற்குவந்தால் ஏதுயெண்ணிக்கொள்வாரோ எங்கள்வீட்டை கொள்ளையடிக்க இருந்தீரோ யென்றுச்சொல்வாரோ இன்னம்யேது எண்ணமிடுவாரோ தெரியாது. ஆகையால், இதற்குள்ளாக வேந்தனுக்கு இந்தசங்கதியை அறிக்கைச் செய்யவேண்டும் என்றுச்சொல்லி கடி

தமெடுத்து கண்டிக்கோட்டைக்கு கடிதமெழுதலானார் எப்படியென்றால் மகாகனம் பொருந்திய சூரவர்த்திவேந்தன் சந்திரவர்த்திவேந்தன் முதலானவர்களுக்கும் எழுதியது யாதெனில்:— இந்த பாணுகண்டிபட்டணம் சமீபத்திலிருக்கும் நாகள்ளபூடிகரைதனை ஆளப்பட்ட மாயப்பக்கிரி வந்து நமது பாலநாகம்மாள் ஜலகமாடிய எழுநாள் சிரையெடுத்துக் கொண்டுபோனான் அவன் வந்ததும்போனதும் யாருக்குந்தெரியாது. இப்போதுகார்யவர்த்தி வேந்தனுக்குபுதல்வன் ஜனித்து அப்பாலகனை தாதிகள் பால்கொடுத்து வளர்க்கிறார்கள் இந்தசங்கதி நீங்கள் அறிவதற்கு கடிதமெழிதினேம் என்று கடிதமெழுதி லகோடாசெய்து வேந்தனுடைய காவலரை யழைத்து இந்த கடிதம் கொண்டுப்போய் வேந்தனுக்குக்கொடுமென்று சொல்ல இதைக்கேட்ட காவலர் ஐயா வேந்தன் எங்களை வேலையில் வைத்துக்கொண்டாலும் சரி தள்ளிவிட்டாலும் பெரிதல்ல அந்தநாடானது ஒன்பது யோசனை தூரம் சூர்யனுடைய காந்தியகப்படாதக் காடு புலிகள்வாசஞ்செய்யுமிடம் என்றுச்சொன்னார் இதைக்கேட்டு குடிஜனங்கள்,

வேந்தர்கள்வளர்த்த அழகானபட்சிதன்னை
அந்தபட்சிதன்னை அப்போதுக்கொண்டுவந்தார்
நாட்டிற்குவெளியில்வந்தார் நலமுடனேகுடிகளும்
கண்டிக்கோட்டைக்குப்போகும் மார்க்கம்தன்னில்நின்றார்
கேட்டீரோபட்சியே கிருபையுடனிப்போது
உங்களைவளர்த்த பிரியமுள்ளவேந்தர்கள்
கண்டிக்கோட்டைக்குக் காரியமாகபோனாரப்பா
அவர்களிடம்போயி அன்புடனேநீசென்று
இந்தக்கடிதத்தை இன்பமாகநீகொடுத்து
வாருமென்றுச்சொல்லி வகைமுக்காடுகழட்டினார்
விட்டாரேயப்போது வேகமாயங்குமேதான்
மேகங்கள் தன்னிலே மறைந்ததுபட்சிதான்
மூன்றுநிமிஷத்தில் முகந்துகண்டிக்கோட்டைக்கு
வந்துமேசேர்ந்து வர்னமேடைமீது தன்னில்
வந்துமேகுந்தியது வகையுடனேபட்சிதான்
அந்தச்சமயத்தில் அழகுகார்யவர்த்திவேந்தன்
பட்சியைப்பார்த்தானே தீவிரமாயப்பொழுது
அண்ணாவேயண்ணாவே அன்புடனேநீகேளும்
நாம்வளர்த்தபட்சிதான் நலமாகவந்ததிங்கு
நமதுமீதுகியாபகம் நன்மையுடன்தான்கொண்டு
பட்சிகளைவிட்டுமே தீவிரமாய்வந்ததிப்போ

சார்யவர்த்தி வேந்தன் டேகையைப்பார்த்து அண்ணனோடு சொல்வது.

வசனம்.

அந்தச்சமயத்தில் வேந்தரெல்லாம் மேடைமீது சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார் அப்போது கார்யவர்த்தி வேந்தன் யெழுந்து டேகதனை யழைக்க

அந்தமேடைமீது அழகாயமர்ந்திருந்த
டேகையைக்கண்டு தீவிரமாயழைத்தானே
அண்ணா மனிதரை நம்பினால் மானிலத்தில் யேதுபலன்
பாணுகண்டிப்பட்டணத்தில் பண்பையுடனிருந்தடேகை
நாம் செத்தோமோ பிழைத்தோமோ யென்று பார்க்கவந்தது
வாயில்லா பட்சியிது வாஞ்சையிட்டு வந்தது
அந்தடேகைதன்னை அன்பாய்தடவிக்கொடுத்தான்
கழுத்திலிருந்தவொரு கடிதத்தைப்பார்த்தானே
நமக்கு சந்தோஷமோ துக்கமோ அண்ணாநீ வாசிப்பாய்
ஆறுபேர் கேட்டாரே அப்போதுதை யெடுத்து
கண்டத்தின்மீது வைத்தார் கடுகமந்திரி கைப்பிடித்தார்
பாருமையா மகாராஜா புகழுடனே யிப்போது
இங்குதான்நீங்களும் இப்போது செத்தீருனல்
அந்த பக்கிரிக்கி அங்கு யேதுபயமுண்டு
செத்தால்தான் யாரை சீராட்ட போரீரையா
நாமிருந்தாலல்லவா சாதிக்கவேண்டுமையா
நீங்களேன் துயர்படுகிரீர் நீனிலத்தின் சேனைகளிருக்க
இரண்டுகோடிபீரங்கியுடன் யுத்தத்திற்குப்போகலாமே
அவனைக் கொன்றல்லவோ மாதைக் கொண்டுவரவேண்டும்
இப்போதே போகலாம் ஈனபக்கிரியைக் கொல்லலாம்
பாலநாகம்மாளை பண்மையுடன் கொண்டுவரலாம்
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொல்வார்வேந்தரும்
அம்மாதைக்கொண்டுவந்தால் அழகான யின்னாட்டில்
வீட்டைவிட்டுப்போனவளை வேகமாய்கொண்டுவந்தால்
நம்மைப்போல்வேந்தர் நால்வர்நகைப்பாரே
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்மந்திரியும்
பயித்தியங்கள்பிடித்ததோ பாருளும் வேந்தரே
ஸ்ரீராமசெந்திரன் செய்தது யேதுக்காரியம்
தசகண்ட ராவணன் தீரமாய் ஜானகியை

சிறையெடுத்துக்கொண்டு சிறப்புடனுறுமாதம்
லங்கையில் வாழச்செய்து இராவணனிருக்கையிலே
அந்த இராவணனை அழகாக சம்மரித்து
அந்தநல்லதேவியை ஸ்ரீராமர் கொண்டுவந்தார்
அப்படிபதிவிரதா அழகானபாலநாகம்மாள்
அதுபோலபோகலாம் யெல்லோரும்வாருமையா
இப்படிச்சொல்லவே எல்லோரும் புரப்பட்டார்
பனிரெண்டாயிரம் பகர்ந்த சேனைகளோடு
புரப்பட்டாரப்போது புகழுடன் வேந்தரும்
இரண்டாயிரம்பீரங்கி வண்டிகள்வருகிறது
மூன்றுபேர்மந்திரிகளுடன் முகந்துவேந்தர்வாரார்கள்





ஏழுப்பேர் வேந்தர்களும் சண்டைக்குப் புரப்படுவேது.

தவளசங்குநாதம் தாமப்போவூதினர்
ரணபேரிதன்னையே தீவிரமாயடித்தார்கள்
கண்டிக்கோட்டைவிட்டு கனமூன்றுதினத்தில்
நாகள்ளபூடிகரை நலமாகவந்துசேர்ந்து
மோரிஜாயெழுப்பியே முகந்துபீரங்கிநிறுத்தினர்
நாலுப்பக்கம்பீரங்கி நலமாகநிருத்தியேதான்
மருந்துகெட்டடம்செய்து மகிழ்ந்துமேசுட்டாரே
பீரங்கிபட்டவிடம் பொதுங்கவில்லைகல்லுதான்
சுண்ணும்புகாரைதான் சிறப்புடன்விழவேயில்லை
மந்திரக்காரனையா மாயமானபக்கிரி

வசனம்.

கேட்டீரா மந்திரிகளே எத்தனை பீரங்கிகளை நாம் சுட்டபோதி லும் ஏதென்று கேழ்க்கவில்லை இதைப்பார்த்தால் பாழ்கோட்டைப் போல் இருக்கிறது மனிதர் இருந்தால் மேடைமீதேரி பார்க்கமாட் டாரு யாருமில்லாததுப்போல்காட்டுகிறது இப்படிச்சொன்னவுடன் மந்திரி நிச்சனிபோட்டு அம்மேடைமீது ஏரிபார்க்க அங்கு புருடர் அகப்படவில்லை சிரையெடுத்துக்கொண்டு வந்த நூறுபெண்கள் மாத் திரம்கோட்டையில்இருக்கின்றார் தவிர பக்கிரியெங்கும் அகப்படவில்லை நாம் யாருடன் யுத்தம்செய்வது என்று மனவியாகூலமடைய இதற்கு ள்ளாக காவலன் ஒருவன் பக்கிரியைப்பார்த்து விட்டு ஐயா இராஜோ த்தமா அதோ படுத்துக்கொண்டிருப்பவன் பக்கிரிதான் ஆகையால் அவனெழுந்தால் அகப்படமாட்டான் இதுதான்சமயம் அவனைகொ ல்வதற்கு என்றுச்சொன்னவுடனே வேந்தன் சந்தோஷமடைந்து பீர ங்கிகளை கோட்டைமீது நிறுத்தி சுடுஞ்சமயத்தில் அந்தகுண்டுகள் அவனை ஏதுஞ்செய்யவில்லை ஆனால் பக்கிரி சாயந்திரமே இரண்டாயி ரம் ரொட்டிகள் இரண்டுகலம்பருப்பு மூன்றுகரிசை எண்ணை அறுபது லோட்டாக்கள்ளு முப்பது புட்டி சாராயம் ஆகாரஞ்செய்துக்கொண்டு பணங்காயளவு அபினிதின்று பூசனிக்காயளவு மாஜினம்தின்று படுத் துக்கொண்டிருக்கிறான் உதயமானவுடன் எழுந்திருப்பான் இதற்கு ள்ளாக ஏதாகிலும் காரியமிருந்து எழுப்பவேண்டுமானால் கூச்சலிட் டாலும்ஆட்டுமந்தையை ஓட்டினாலும் ஆனையைவிட்டு மிதிக்கச்செய்தா லும்எழுந்திருப்பது அதிகதுர்லபம் எழுப்பவேண்டுமானால் கெட்டப் பாரைதன்னை செகப்பாய்காய்ச்சி அவன்காதிலிட்டுதுழாவினால் எழுந் திருப்பானென்றுச் சேகுவன் சொல்ல இதைவேந்தன் கேட்டு ஆச்சரி யமடைந்து இருக்க அச்சமயத்தில் பக்கிரி முதல் பத்தினியாகிய,

வணிகச்சங்குயப்போ வந்தாளேமேடைமீது
பார்த்தாளேயிவர்களை பயமதுகொண்டாளே
எழுந்திரடாயெழுந்திரும் ஈனம்கெட்டபக்கிரியே
அன்றுசொன்னேனே அம்மாதைதான்வேண்டாமென்று
பகைவரும்வந்துயிப்போ பண்புடன்சுற்றிக்கொண்டார்
எப்படியெழுப்பினால் ஏதென்றுகேழ்க்கவில்லை
கம்மாளனையழைத்து கடுகரும்மட்டிபோடச்சொல்லி
கெட்டப்பாரையை தீவிரமாய்காய்ச்சினார்
எடுத்துயவன்காதில் அப்போதுதிருப்பினார்
அப்போதுபக்கிரி அசந்துமேபுரண்டானே

வசனம்.

அப்போது வேந்தர் பக்கிரியைப்பார்த்து இவன் யெழுந்திருக்க போகுருனென்று.

பக்கிரியை குண்டால் சுடுவது.

பக்கிரியிடதுபக்கம் பண்புக்குரியிட்டாரே
பிரங்கிதன்னையே குறிப்புடன்சுட்டாரே
அந்தயடிப்பட அப்போதுபக்கிரி
என்னடிசங்கு இங்குமூட்டுகடிக்குதடி
வலதுபக்கங்குண்டு வண்மையுடன்சுட்டாரே
இந்தயடிப்பட்டு அப்போதுபக்கிரியும்
என்னடிசங்கு இங்குகொசுவுகடிக்குதடி
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்வணிகச்சங்கு
சண்டாளபாதகா சீக்கிரமாய்யெழுந்திருப்பாய்
அன்றுசொன்னமொழி இன்றுசரியாச்சுதடா
பகைவர்வந்துயிப்போ பகர்ந்துகொண்டார்நாலுபக்கம்
அந்தமொழிக்கேட்டு யப்போயெழுந்தானே
வாடியம்மாபாலநாகு வகையுடனிப்போது
உன்னுடையமனிதர்கள் உகந்துமேவந்தாரே
என்னுடையசண்டைய இன்பமாய்ப்பாராடிநீ
இப்படிச்சொல்லிதான் யேணியைப்போட்டானே
ஏரடிபெண்ணேநீ இந்தநல்லயேணிதன்னில்
பாரடியுந்தன் பலமானசேனைகளை
இப்படிச்சொல்கவே இதுகேட்டாள்நாகம்மாள்
பணிரெண்டுலருடமும் பண்புடன்பொருத்துக்கோடா
இப்படிச்சொல்லிதான் யேரிநாரிருவரும்
மேடைமீதேரிநாள் மேன்மையுடநாகம்மாள்

பாலநாகம்மாள் மேடையேரி கணவனையும் மூத்தார்மார்களை பார்த்தது

ஆறுபேர்மூத்தாரை அன்புடனேபார்த்தாளே
தனதுகணவனைத் தான்பார்த்தாள்கண்ணாலே
பணிரெண்டுலக்ஷம் சேனைகளைப்பார்த்தாளே
அவர்களைப்பார்த்துமே யெங்குமில்லாத்துக்கமானாள்
கண்ணில்ஜலம்சொரிய கடுதானழுதாளே
இவளழுவதைதான் யப்போபார்த்தானேபக்கிரியும்

ஏண்டிபெண்ணேயழுகிறாய் இவர்களைநீபார்த்து
சேனைகளைப்பார்த்து சித்தம்பயமடைந்தாயே
நானிருக்கும்போது யுனக்கென்னபயமடி
மேடையைவிட்டேயப்போ இருவரும்மிரங்கினார்
பாரடிபெண்ணே பண்புடனென்பலத்தை
இப்படிச்சொல்லியே அப்போதுபக்கிரியும்
லட்டியைத்தானெடுத்து லட்டிக்குபிராணந்தந்தான்
கிழக்குசேனைகள்மீது கிருபையுடன்மாறேயென்றான்
அப்போதுலட்டிதான் ஆகாயம்பரக்குது
மூன்றுலக்ஷம்சேனையை முந்திதான்கொன்றது
மூன்றுநிமிஷமட்டும் முகந்துயுத்தம்செய்தது
ஆவுரேலட்டியென்று அழைத்தானேயப்போது
லட்டியைக்கையில்பிடித்து லகுவாகபிராணமதை
வாங்கியேபிறகுதான் வைத்தானேலட்டியைகீழே
இப்படியுத்தஞ்செய்ய இதுநீதியல்லவே
குல்லாவையெடுத்துமே குறிப்புடன்தலைக்குப்போட்டான்
கம்பிளியைக்கிழித்துதான் யிடுப்பிலேகட்டினான்
லுங்கிசொக்காயைதான் துடியாய்ப்போட்டுக்கொண்டான்
மந்திரவிபூதியை மகிழுடனெடுத்துக்கொண்டு
கிழக்குவாயல்மார்க்கம் சீறியெழுந்தானே
அப்போதுவேந்தர்கள் அன்புடன்பார்த்தாரே



பக்கீருடன் வேந்தர் சண்டைச் செய்வது.

வந்தான்பக்கீரியென்று வந்துசேனைச்சூழ்ந்துக்கொண்டார்
பனிரெண்டுலக்ஷஞ்சேனைப் பண்புடன்சூழ்ந்துக்கொண்டார்

கத்தியாலப்போது கடுகவேவெட்டினார்
சதையுங்கொடலும் அறுந்துவிழுந்தது
நீலுமணிநேரமாய் நலமாயடித்தாரே
கிழக்குளத்திலே வெட்டினாரவன்தலையை
அல்லாயெனக்குமேதான் அன்பாகதுணையிருப்பார்
குதாயெனக்குமே கூடத்துணையிருப்பார்
இப்படிச்சொல்லியே இசைந்துமோஷசதான்பிறந்தான்
நாலுதிசைகளிலும் யன்பாகக்கொன்றார்கள்
அப்படியும்மவன் அப்போதும்பிழைத்தானே
பக்கிரியைப்பிடித்து பக்குவமாய்தலைகொய்து
சுட்டுமேபஸ்பஞ்செய்தார் சொகுசாய் ஜலத்தில்கலக்க
அந்தஜலத்திலவன் அப்போதேதான்பிறந்தான்

வசனம்.

அடா கார்யவர்த்திவேந்தனே, சூர்யவர்த்திவேந்தனே செந்திரவர்த்திவேந்தனே, இதுவரைக்கும் உங்களுடைய சண்டையாச்சுது

இனியெனது தமாஷா சற்றுபாரென்று சொல்லி.
மந்திரவிபூதியை மகிழுடனேதான்தெளித்தான்
ஆனைகளெல்லாமப்போ கருங்கல்லாயாச்சுது
குதிரைகளெல்லாமப்போ குத்துக்கல்லாச்சுது
ஒட்டைகளெல்லாமப்போ குண்டுக்கல்லாச்சுது
பீரங்கியெல்லாம் நீண்டகல்லாச்சுது
ஏழுப்பேர்டோராக்கள் மலைக்குன்றாச்சுது
அந்தநல்லவேந்தரை யழகுபுத்துசெய்தானே
மூன்றுப்பேர்மந்திரிகளை முகந்துசிலைசெய்தானே
இப்படியாகவே இவர்களைசெய்துவிட்டு
திரும்பினான்மசூதிக்கு தீவிரமாயப்போது
வாடிநீபாலநாகு வண்மையுடனிப்போது
கோமலாங்கியேயெந்தன் கோரிக்கைதீரடிநீ
முத்தமிட்டு யெந்தன் மேகத்தைத்தீரடிநீ
உங்கள்சேனைகளெல்லாம் யுகந்துபஸ்பஞ்செய்துவிட்டேன்
உனக்குப்பயமேயில்லை ஓடிவந்துநீகேளும்
இப்படியாகச் சொல்லவே இதுகேட்டாள்நாகம்மாள்

அருகிலேவாராதடா அத்துமீறிபடுப்பாவி
உந்தன் தலைவுடையும் ஓடிப்போடா தூரமாக
இளமயிலேகோகிலமே உன்மன துயிதங்கலியோ
பனிரெண்டுவருடம்போனால் பண்புடனுந்தனுக்கு
என் பிராணத்தைதருகுவேன் பயப்படாதேபக்ஷிரியே
இத்தனையுங்கேட்டானே இன்பமாய்ப்பக்ஷிரியும்
அந்தப்புரத்தினில் அன்பாகத்தான்சேர்ந்தான்
இப்படியிருக்க இன்பமுடன்வேந்தர்கள்
இந்த சங்கதிகளையெல்லாம் சரியாகபானுகண்டிக்கு
தெரிந்ததுயப்போது தீவிரமாய்மாதருக்கு
அய்யோயென்தங்கைமாரே யலைந்திடலானோமே
நமதுகுடைகள்போச்சு நாமெவ்வார்பிழைப்போமம்மா
இப்படிச்சொல்லியே யெல்லோரும்யழுதாரே
அக்காவேநீகேளாய் அன்பானசூர்யநாகம்மா
ஆறுபேரும்மாண்டுவிட்டால் அன்பாகப்பாலகனை
ஆர்கையில் கொடுப்பது ஆசையுள்ளகுமாரனையும்
வீட்டின்பேரில்லாமல் போகுதேயின்னாட்டில்
நாமென்றைக்குயானாலும் நலமாகசாகப்போறோம்
இந்தநல்லப்பாலகனை யின்பமாய்வளர்த்துயாமும்
கலியாணஞ்செய்துவைத்து கண்குளிரப்பார்த்துவிட்டு
பிறகுசெத்தால்நமக்கு பெரும்பதவிகிட்டுமம்மா
நமக்கு எள்ளுதண்ணீரையும் நலமாகதானிரைப்பான்
பாலன்மீதுயன்புவைத்து பாலகனைவளர்க்குறார்
இப்படிவளர்த்துவர வயதுயைந்துமாச்சுதப்போ
ஐந்துவயதானவுடன் அன்பாகபாலகனை
பள்ளியில்போட பட்சமும்கொண்டாரே
அந்தநல்லசமயத்தில் அந்நாட்டிலிருக்கப்பட்ட
வாத்தியார்தன்னை வகையுடன்தானழைத்து
ஐயாவேநீர்கேளும் அன்புடனெங்கள்மொழி
இந்தநல்லபாலகனுக்கு இன்பமாய்நீருமே
படிப்புகள்கற்றுதான் பக்ஷமும்வையுமையா
இப்படிச்சொல்லவே இசைந்துமேவாத்தியாரும்
நாளையதினத்திற்கு நாள்நன்றாயிருக்குதம்மா

அனுப்புவீர்பள்ளிக்கு அன்புடனேபாலகனை
நல்லதென்றுச்சொல்லி நலமுடனேமாதர்கள்
அப்போதுசூர்யநாகம்மா யன்புடனே தானுமே
மணக்கபச்சரிசி மகிழுடன்வூரப்போட்டு
கொழிகட்டைவுண்டைகள் கொப்பனவே தான்சுட்டு
கடலையும்வேகவைத்து கனவடைகள் தான்சுட்டு
பத்துவிதபச்சடிபருப்புசாதம் தான்சமைத்தார்
பாலகனுக்கப்போ பட்சமாய்நீர்வார்த்து
தலையும்துவட்டி சந்தனபொட்டுமிட்டு
பட்டுதோவத்தியை பண்புடன்கட்டச்செய்து
கணபதிபூஜைதனை கணமுடனேசெய்யச்செய்தார்
வாத்தியார்தானும் வகையுடன்வந்துமே
பாலகன்கைதனிலே பக்குவமாய்பாடந்தந்தார்



பாலவர்த்திவேந்தன் பாடசாலையில் வாசிப்பது.

ஹரிநமோசிந்தமென்று அய்யருந்தான்சொல்ல
அந்தமொழிக்கேட்டு யன்புடனேபாலகனும்
அதுபோலசொல்லவே அய்யருஞ்சந்தோஷித்தார்
அந்தநல்லபாலகனை அன்புடனேபள்ளிக்கு
அழைத்துமேசென்றார் அய்யருமப்போது
அந்தநிமிஷத்தில் அரிச்சுவடிதான்படித்தான்
ஆத்திச்சுவடியும் அறிவுவருங்கொன்றைவேந்தன்
எண்சுவடிலெக்கமும் இணையில்லாமல்தான்படித்தான்

வசனம்.

இப்படிப் பாலகனுக்கு எட்டுவயதிற்கெல்லாம் பாரதம், பாகவதம் சம்பூர்த்திசெய்தான். பதினோராவதுவயதில் பரதசாஸ்திரம் படித்தான் பனிரெண்டாம் வயதில் காவ்யத்தைப்படித்தான் பதிமூன்றும் வயதில் அலங்காரம் படித்தான். இதற்குள்ளாக வாத்தியாரைப் பார்த்து ஐயா இதுவெல்லாம் பூர்த்தியாகி விட்டது இனிமேயதாகிலுமிருந்தால் சொல்லென்று கேட்க. இதைக்கேட்டு வாத்தியார் சொன்னது யாதெனில் அப்பா இராஜகுலோத்தமா இதுதான் யான் கற்றறிந்த வித்தை இனி உனக்குச்சொல்ல என்தரமல்லவென்றுச் சொல்லவே பாலகன் சந்தோஷமடைந்து தாய்மாரிடஞ்சென்று வாத்தியாருக்கு வேண்டிய வெகுமானங் கொடுக்கச்செய்து சந்தோஷித்த பிறகு பாலகன் தாயாரைப்பார்த்து சொல்லத்தொடங்கினான்.

அம்மாவே நீகேளாய் அன்புள்ள தாய்மாரே
படித்தது யினிபோதும் பகர்ந்து கொட்டடி யான்சென்று
சந்தணே செய்துவாரேன் தக்கபடி விடையீகுவீர்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார் தாய்மார்கள்
செல்வகுமாரா சொல்வதைநீகேளாய்
நமக்குயேனடா நியாயமில்லாகொட்டடிதான்
இதுவெல்லாங் கர்க்காமல் யிருந்திட்டாய் நலமப்பா
இப்படிச் சொல்லவே இதுகேட்டான் பாலகனும்
அம்மாவேநீகேளாய் அன்புடனேஎன்வார்த்தை
பிழைப்பதுபெரிதல்ல புவிதன்னில்கீர்த்திதான்
செத்தாலுங்கீர்த்திதான் சிறப்புடனிருக்கவேண்டும்
கொட்டடிக்குப்போகாமல் கொஞ்சநேரமிருக்கமாட்டேன்
இந்த மொழிக்கேட்டார் யிசைந்துமே தாய்மார்கள்
ஜட்டிகள்மூவரை சீக்கிரமழைத்தாரே
கேட்டீரோஜட்டிகளே கிருபையுடனென்வார்த்தை
எனது பாலகனுக்கு இன்பமாய் கரடிவித்தை
நலமாகயிவனுக்கு நீங்களேசொல்லுமையா
அந்த நல்ல ஜட்டிகள் அன்பாக பாலகனை
கொட்டடிக்கு யப்போது சம்பிரமா யழைத்துச்சென்றார்

வசனம்.

அடா பாலகனே எங்களுக்கு ஏதுகீர்த்தி கொண்டுவருவாயோ தெரியாது உனக்கு இந்தவித்தைகளெப்படி வருகுமோ ஆனால் உனது திரேகமெல்லாம் ஒடிக்கவேண்டும் என்றுச் சொன்னவுடனே பாலகன்

இவர்களைப்பார்த்து ஐயா என்னை எதுசெய்யச்சொல்லுகிறீர் அதைச் சொன்னால் அதுபோல் செய்குறேன் என்றுச்சொன்னவுடனே ஜட்டி தள் சொல்லத்தொடங்கினர்.

நூறுபஸ்கிகளை நீயெடுக்கவேணுமப்பா
அப்படிநானுமே அன்பாகயெடுத்தேனே
மூன்றுநூறு பஸ்கிகளை முகந்துநீயெடுப்பாயே
அப்படியே யெடுக்குறேன் அன்புடனே பாருமையா
ஐந்துநூறு பஸ்கிகளை அன்பாக எடுப்பாயே
ஐயாவே நீங்கள் கேளும் அன்புடனே என் வார்த்தை
நானெடுக்கும்போது நலமுடனேகணக்கிடுவீர்
அதுபோலாகவே ஐந்நூறுபஸ்கியெடுத்தானே
சந்தனப்பட்டாவும் சிறப்புடன்தான்செய்தானே
இரட்டைக்கோல்கைப்பிடித்து இன்பமாய்யாடினன்
பாணைவைத்தானெடுத்துப் பலத்தையெல்லாங்காட்டினன்

வசனம்.

இதற்குள்ளாக பாலகனுக்கு பனிரெண்டுவயதாச்சுது கொட்டடி விஷயத்தில் மகா சாமர்த்தியனா யிருந்தான் அப்போது அந்த மூவரையும் பார்த்து எனக்கு நீங்கள் கற்று தந்தீர் ஆனால் ஒரு பக்கம் நீங்கள் இருப்பீர் யான் ஒருவன் ஒருப்பக்கமிருந்து இரட்டைகோலை செய்துப்பார்க்கலாமென்றுச்சொல்ல இதற்கு அவர் சம்மதமடைந்தார்.

கொம்புகள் தன்னை கொப்பெனவே கைப்பிடித்தார்
மூவருமப்போது முகந்துமேபாலனையும்
அடிக்கப்புரப்பட்டார் அந்தயடிகளை
தப்பித்துக்கொண்டானே தயவுடன்பாலகனும்
மூவரை யப்போது முகந்துமே யடித்தானே
இத்தனையும்பார்த்தார்கள் இன்பமாய்மூவரும்
சந்தோஷமடைந்தார்கள் தயவுடன்பாலன்மீது
இப்படியிருக்க இன்பமாயொருதினத்தில்
வீட்டிற்குவருக வேகமாய் வந்தானே

வசனம்.

பாலகன் தன் வீட்டிற்கு வருஞ்சமயத்தில் அந்த வீதியில் சிலது பேர்பொம்பரம் ஆடிக்கொண்டிருந்தார். அதைக்கண்டு அப்பா பாலகனே அந்த பொம்பரம் தருவீர் நான் ஆடிப்பார்க்கிறேன், என்றுச் சொன்னவுடனே அந்தப்பாலகர் இவனைப்பார்த்து ஐயா நீர் பாக்கிய

புருடர் நீங்கள் வெள்ளியினாலும் அல்லது பொன்னினாலும் செய்துக் கொண்டால் ஆகாதா நாங்கள் ஏழைகள் ஆகையால் மரக்கட்டைப் பொம்பரம் ஆடிக்கொண்டிருக்கிறோம். உனக்கேன் இது யென்றுச் சொன்னவுடனே ஐயா, நான் ஒரு விசை ஆடித்தருகின்றேனென்று கேழ்க்க அதற்க்கந்தப் பாலகர் ஐயா, இதைக் கொடுத்தால் எங்கள் தந்தை தண்டிப்பாரென்றுச்சொன்னவுடனே பாலகன்கோபத்துடன் தன் வீட்டிற்கு வந்து தாய்மார்களைக்கண்டு கேழ்க்கலானான்.

அம்மாடியம்மாடி யென்னைப்பெற்றத்தாய்மாரே
எனதுபாட்டன்மார் யின்பமாயாடிருந்த
பொம்பரந்தானெங்கே புகழுடனே சொல்லுமம்மா
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னாறப்போது

வசனம்.

அடாயென் கண்மணியே உனது பாட்டன்மாராடிய பொம்பரமானது, இந்நாட்டிற்கு வடமூலையில் இராநின்ற காளிகோவிலருகில் யொதிந்துபோயிருக்கிறது. அடா யென்செல்வமே, அதை உனது தந்தைமார் ஆட்டிப்பார்த்தும் அசையவில்லை. அதை நீ எப்படி யெடுத்துவருவாயென்றுச் சொன்ன வுடனே பாலகன் சொல்லத் தொடங்கினான்.

மூன்றுகரிசையரிசி முகந்துமே தாருமம்மா
முப்பதுயெருமைக்கிடா மூந்திநீ தாருமம்மா
முப்பதுதேங்காயும் முகந்துமே தாருமம்மா
கர்ப்பூரசாம்பிராணி கனமுடன்தாருமம்மா
இந்தமொழிக்கேட்டு யேதுசெய்தார்தாய்மார்கள்
அப்படியேகொடுக்க யப்போதுபாலகனும்
இதுகளையெல்லாம் யின்பமாயெடுத்துக்கொண்டு
காளிக்கோவிலண்டை கடுகவே வந்தானே
அரிசியைத் தானெடுத்து யப்போது பொங்கல் வைத்தானே
காளியெதிராக கும்பத்தைக்கொட்டினான்
எருமைக்கிடாபொலி யின்பமாய் வெட்டினான்
ஆட்டுக்கிடாபொலி யப்போது வெட்டினான்
கர்ப்பூர தீபத்தைக் கனமுடனேத்திவைத்தான்
சாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்தானே





பாலவர்த்தி வேந்தன் காளியைத் தியானிப்பது.

ஓம்காளிநீகேளாய் யிப்போதுயென்வார்த்தை
ஐயும்கிலியும்சவ்வுமென்று யன்பாகயுச்சரித்தான்
ரீயுங்கிலியும்வசியமென்று யின்பமாய்ப்பூஜித்தேன்
அம்மணிநீவந்து யன்பாகயெந்தனுக்கு
எனதுபாட்டன்மார்கள் யின்பமாய்ச்செத்தபின்பு
உனக்குயாகாரமதை யுகந்துமேகொடுக்கவில்லை
உந்தனுக்கிப்போது யுகந்தாகாரம்யான்கொடுத்தேன்
இப்போபொம்பரமீது யின்பமனங்கொண்டேனே
இப்படிச்சொல்லவே யிதுக்கேட்டாள்காளிதேவி
சந்தோஷந்தானடைந்து தனதுபலத்தையெல்லாம்
பாலனுக்கப்போது பலமதைக்கொடுத்தாளே
அந்தச்சமயத்தில் யந்தநல்லபொம்பரத்தை
கயற்றையுஞ்சுற்றி கடுகவேயாடினன்
பூமியில்நிற்காமல் புகழுடனேபரந்தது
நந்தவனத்தினில் நலமுடனேவந்தது

பட்டணமெங்குமே புகந்துவனிக்கேட்டது
இந்தபதிசயத்தை யன்னாட்டின்பிரஜைகளெல்லாம்
வந்துமேபார்த்தாரே வகையுடனேபொம்பரத்தை
அப்போதுஜனங்களும் அன்பாகப்பேசிக்கொண்டார்
இந்தயதிசயத்தை யிவன்தந்தைகள்பார்த்தாராலுல்
என்னசந்தோஷம் யவர்களுங்கொண்டிடுவார்
ஒருவராகிலும் யிருக்காமல்போய்விட்டார்
அவர்கள்வயிற்றினில் யன்பாகயிவன்பிறந்தான்
தாய்தந்தைமாருக்கு பேரெடுக்கபிறந்தானே
இப்படியாக வந்தஜனஞ்சொல்லிக்கொண்டார்
பாலகனப்போ பக்ஷமாய்வீட்டிற்கு
ஓடிதான்வந்து உகந்துமேதாய்மாரை
அம்மாடியம்மாடி யென்னைப்பெற்றத்தாயாரே
பொம்பாந்தன்னை புகழுடனேகொண்டுவந்தேன்
எந்தனைப்பெற்ற யின்பமுள்ளதாயாரே
பனிரெண்டுகெரிசை யரிசிதான்கொடுமம்மா
இப்படிச்சொல்லவே யப்படித்லந்தாரே
நந்தவனத்திலே நலமாகயடுப்புமூட்டி
சாதம்வடித்து சம்பிரமாயப்போது
அன்னதானங்கள் பண்புடன்தான்செய்தான்
இப்படிருக்கையிலே யிசைந்துமேவோர்தினத்தில்
அம்புவில்லேதானெடுத்து அன்பாகசரம்பிடித்து
நந்தவனத்திற்கு நலமாகவந்தானே
அந்தச்சமயத்தில் யந்தநல்லவேளையிலே
நரசம்மாயென்றோர் நலமானமங்கைதானும்
தண்ணிக்குடமெடுத்துத் தண்ணிக்குவந்தாளே
குடத்தில்தண்ணீரெடுத்து குணமுடனேபுஜத்தில்வைத்தாள்
அப்போதுபாலகன் அன்புடனேவில்வித்தை
குரிப்பாகவேண்டுமென்று குணமுடனேசரம்பிடித்து
அந்தக்குடத்தையும் அன்பாகதான்பார்த்து
அப்போதான்விடவே யந்தக்குடமுடைந்தது
அப்போதம்மாது அப்பாலகனைப்பார்த்துமே
ஏண்டாபயலே நீ இந்தவேலைசெய்யலாமா
தாய்தந்தைகள்மாரை சிறையிருக்கச்செய்துநீ

பிழைத்துவருகுராய் புவிமீதுபாதகனே
பிரக்காதநாகம்மாள் போய்விட்டாளிப்போது
உனக்குயேனோதான் சாவுதான்வரவில்லை
அப்போதுபாலகனை அன்பாகச்சாபித்தாள்
இந்தமொழிகளை யின்பமாய்க்கேட்டானே
அம்மணிகேளடி அன்பானநரசம்மா
நீயேதாய்தந்தை நானேயுன்பாலகன்
இப்போதுசொன்னமொழி யிசைந்துமேசொல்லுமம்மா
எனக்குத்தெரியாது நீபோடாபாலகா
நல்லவனானால் நியாயத்தைச்சொல்லலாகும்
மூர்க்கன்நீயாகும் யுன்னுடன்மொழியென்னடா
இப்படிச்சொல்லவே யிதுகேட்டான்பாலகனும்
அம்மாடியம்மாடி யன்புள்ளத்தாயாரே
என்னைப்பெற்றத்தாயார் யெப்படிசிறைப்போனாள்
என் தந்தைதானெப்படி சிறைப்போனார்சொல்லுமம்மா
அந்தச்சவிஸ்தாரம் யன்புடனேசொல்லுமம்மா
எனக்குத்தெரியாது நீபோடாபாலகா
இப்படிச்சொல்லி யிசைந்துமேநடந்தாளே
அந்தமொழிதன்னை அப்போதுகேட்டாளே
இந்தக்கத்தியாலே இப்போதுன்னைவெட்டுகிறேன்
பாரடிஎன்றுச்சொல்லி பட்டாகத்திகையெடுத்தான்
கத்தியைக்கண்டாளே கனமுடனேநரசம்மாள்
உள்ளம்நடுநடுங்கி உப்பொங்கிதானுமப்போ
ஐயோபாலகா அரிபாலவர்த்திவேந்தா
என்னையேனோடா இப்போதுகொல்லவாராய்
நானும்சொல்கிறேன் நயமுடன்நீகேளடா
உன்தாயாருனால் உகந்துபாலநாகம்மாள்
உன்தந்தையான உகந்துகார்யவர்த்திவேந்தன்
உந்தனைஜனித்த உகந்துயேழாந்தினத்தில்
நாகள்ளபுரியை நல்மாகயாள்பவன்
மாயப்பக்கிரி மாயமாகவந்துமே
பாலநாகம்மாளை பகர்ந்துசிறைப்பிடித்தானே
உன்தந்தைகள்யவன்மீது யுகந்துயுத்தம்செய்தார்கள்
ஆசையுள்ளதந்தைமாரை அதமாகசெய்துவிட்டான்
உன்பெரியதாயார்கள் உந்தனைவளர்த்தார்கள்
அந்தமொழிக்கேட்டு அப்போதுபாலகனும்

பாதத்தில்விழுந்து பகர்ந்துவந்தனஞ்செய்தானே
அம்மாநீகேளாய் அன்புள்ளநரசம்மா
திட்டாதேயென்னை தீவிரமாயிப்போது
ஆசீர்வாதஞ்செய்வாய் அன்புடனே யிப்போது
இந்தமொழிக்கேட்டு இசைந்துமேநரசம்மா
சுகமாசுகமடைவாய் சுந்திரப்பாலவர்த்திவேந்தா
உந்தன்தாயாரை உகந்துகொண்டுநீவருவாய்
அவனுடைய கையாலே நீ சாகமாட்டாய் பாலகனே
உந்தன் கையாலே அவனுக்கு சாவுமுண்டு
இப்படியாசீர்வதித்து இசைந்து தாம்பூலம்கொடுத்தால்
தாம்பூலம்பெற்றுக்கொண்டு தானுமேவந்தானே
வந்துக்கொட்டடியை வண்மைகதவைபூட்டினான்
தனதுவீட்டைத்தேடி தானுமேபோகையிலே
பாலகன்வருவதை பார்த்தாரேதோழிமார்கள்
வெண்ணீரைக்கொண்டுவந்து வேகமாய்வைத்துமே
அழைத்தாரேபாலகனை அப்போது தாதிகளும்
அந்தபுரத்தினில் அப்போபடுத்துக்கொண்டான்
தாதிகளப்போது தயவுடனெழிப்பினார்
ஆருமெழுப்பினாலும் பாலகன்பேசவில்லை
இந்தசங்கதியை இசைந்துமேதாய்மாருக்கு
அப்போதுச்சொன்னாரே அன்பாகதாதிமார்கள்
ஆறுபேர் தாய்மார்கள் அப்போது வோடிவந்து
அழகுசுந்திரனே அன்புள்ளயென்குமாரா
ஸ்நானங்கள் செய்துமே தணிபுசிப்பு கொண்டிட
எழுந்துமேவாடா நான்பெற்றசெல்வமே
இப்படியழைக்கவே யேதுமேபேசாமல்
தனக்குள்ளே தானும் தான் துக்கப்பட்டானே
இத்தனை பார்த்தார்கள் இன்பமாய்தாய்மார்கள்
ஏண்டாகுமாரா ஏனழுகிறாயிப்போ
ஆராகிலும் வுன்னை யடித்தாரு திட்டினாரு
பந்தியத்திலேதாகிலும் பிழைவந்துநேர்ந்ததோ
வித்தைபரிக்ஷைதன்னில் வேதியன் தூஷித்தானு
சாதனக் கொட்டடியில் சமர்த்துகள் வந்ததோ
எந்தசங்கதியானாலும் எங்களுக்குச்சொல்லுமே
ஏதுமே சொல்லாமல் பாலகனிருந்தானே

அந்தச்சமயத்தில் எல்லோருமழுதாரே
தாயழபிள்ளையழ தனிதாதிகள்தானழவே
துக்கத்தையாற்றிக்கொண்டு சிறப்புடன் கேழ்க்கலானர்
நான்பெற்ற செல்வமே நலமுடனே யிப்போது
அழுதக்காரியத்தை அன்பாக சொல்லடா
அந்தமொழிக்கேட்டு ஏதுச்சொன்னன்பாலகனும்



பெரியதாயை பாலவர்த்தி வேந்தன் தாய்தந்தைகளை விசாரிப்பது

அம்மாவே நீகேளும் அன்புடனே யென்வார்த்தை
எனது தந்தையார் எனது தாயாருரம்மா
தாயுமோ நாங்கள்தான் தந்தையு மிறந்துவிட்டார்
இந்த ஆறுபேர்களில் என்தாயாருரம்மா
இப்படிக்கேழ்க்கையிலே ஏதுமேசொல்லவில்லை
அந்தச்சமயத்தில் அரிபாலவர்த்திவேந்தன்
இடுப்பிலிருந்ததொரு பிச்சுவாதனை தானெடுத்து
உங்களைக்குத்துகிறேன் உகந்து யானும் குத்திக்கொள்வேன்
ஐயோமகனே அறிவுள்ளசிகாமணியே
எந்த முண்டைதான் உந்தனுடன் சொன்னளிப்போ
ஆனலும்யானுமே அன்பாகசொல்லுகிறேன்
உனதுதாயாராகும் உகந்துபாலநாகம்மாள்
ஏழுநாள்புருண்டில் இன்பமாயிருக்கையிலே
நாகள்ளபுரியாளப்பட்ட நலபக்கிரி சிறையெடுத்தான்

இந்தச்சங்கதிகேட்டு யின்பமாயுனது தந்தைகள்
யுத்தசன்னுத்தராய் யப்போதுசென்றாரே
அவர்களைப்போ அதஞ்செய்தான் பக்கிரியும்
அப்போயிருந்து அன்பாகவுந்தனையே
பிரியமாகவளர்க்கிறோம் பெற்றபுதல்வனைப்போல்
இத்தனையுந்தான்கேட்டான் யின்பமாயப்போது
அம்மாவேநீகேளாய் அன்புடனென்வார்த்தை
என்தாயார் தன்னையே இப்பவேபார்த்துவாரேன்
எந்தனுக்குவுத்திரவு யிப்பவேகொடுமம்மா
இந்தமொழிக்கேட்டார் இசைந்துமேதாய்மார்கள்
ஐயோமகனே அழகுபாலவர்த்திவேந்தா
நீயங்குபோனால்தான் யுனைபிழைக்கச்செய்வானே
பணிரெண்டுலக்ஷம் சேனைகளைக்கொன்றவன்
ஏழுப்பேர்தந்தைகளை யதமாகச்செய்தவன்
நீசென்றால்நாங்கள் நிலத்தில்பிழைப்போமா
நீபோகும்பக்ஷத்தில் யெங்களுக்கிப்போது
விஷத்தைகொடுத்துமே யெங்களைக்கொன்றுவிட்டு
உன்கையால்மண்ணை யெங்களுக்கு கொடுத்துநீ
அதன்பிறகுநீயுமே யன்பாகப்போகுவாய்
இந்தமொழிக்கேட்டான் இன்பமாய்பாலகனும்
அம்மாவேநீகேளாய் அன்புடனெந்தன்மொழி
மல்லிகைச்செடியை மகிழுடன்வைக்குரேன்
என்பிராணமிருந்தால் யிந்தசெடிப்பூர்க்குமம்மா
என்பிராணம் போனால் யிந்தச்செடிவதங்குமம்மா
இப்படியாகவே நம்பிக்கைதந்தானே
இத்தனையுங்கேட்டாரே யின்பமாய்மாதர்களும்
எத்தனைச்சொன்னாலும் யெங்கள்மொழிகேட்கவில்லை
உனதுயிஷ்டம்போல போகுவாய்பாலகனே
அப்போதுபாலகன் யன்பாகஸ்நானஞ்செய்து
போஜனஞ்செய்தாரே பொருமையுடனப்போது
அம்மாவேயிப்போது அன்புடன்வார்த்தைகேளீர்
உதயமானவுடனே உப்பொங்கிபோகவேண்டும்
கட்டுச்சாதமும் கட்டித்தாருமெந்தன்கையில்
அப்போதுமாதர்கள் யன்பாகபாலகனுக்கு

கட்டியமுதைதான் கட்டிதந்தாரப்போது
பாலகனப்போது பக்குவமாய்ப்பெட்டியை
திறந்துமேவேஷ்டியை திறமுடனேதானெடுத்தான்
பட்டுக்கரைதோவித்தியை பக்குவமாய்க்கட்டினான்
இடுப்பினில்தட்டியை யிரிக்கியேகட்டினான்
ஈட்டிபிச்சுவாதனை யிடுப்பினில்சொரிவினான்
காதில்கடுக்கனும் கழுத்தினில்சந்திரஹாரமும்
கையிலேபாஜிபந்தும் கைவிரலில்மோதிரமும்
சரிகைப்பாகைதன்னை தலைதன்னில் போட்டானே
இப்படியலங்கரித்து இசைந்துதாயாரெதிரினில்
வந்துமேநின்று வந்தனங்கள்தான்செய்தான்
அப்போதுமாதர்கள் அன்புடனேபாலகனை
ஆசீர்வதித்துயன்பாய் தாம்பூலங்கொடுத்தார்கள்

வசனம்.

இப்படியாக பாலவர்த்தி வேந்தன் தாய்மாரிடத்தில் செலவுபெ ற்றுக்கொண்டு பிரயாணமடைந்து நடக்கலானார்.



பாலவர்த்திவேந்தன் தாயாரைப்பார்க்க புரப்பட்டுப்போவது.

பாணுகண்டிப்பட்டணத்தை பலமுடன்தாண்டினான்
பொழுதுயரியாமல் புகழுடன்நடந்தானே
எட்டுயோசனை தூரம் வந்தானேபாலகனும்
எங்குமேபார்த்தாலும் வீடுமில்லைநாடுமில்லை
போகிலவனத்தினில் பொழுதுமேபோச்சுது
ஆகாரத்துக்குமப்போ அன்புடனே துமில்லை
அங்கிருக்கும்யாலமரம் யன்பாகப்பார்த்தானே
அந்தச்செடிக்கீழே யன்பாகத்துணியைப்போட்டு

ஸ்வராயென்றுசொல்லி யின்பமாய்ப்படுத்தானே
ல்லுசல்லாவை மகிழ்ந்துமுக்காடிட்டானே
செடியின்கிழாத சிறந்துநித்திரைபோகுருன்
ந்தச்சமயத்தில் அங்கிருந்தநாகேந்திரன்
லகனருகில்வந்து பக்குவமாய்பணிபடாமல்
டம்போல்படமெடுத்துக் குவிழ்ந்ததுபாலனுக்கு
அப்போதுகிழக்கு யன்பாகவுதித்தது
லகன்யப்போது பக்குவமாய்யெழுந்தானே
வனெழுந்தவுடன் யிந்தப்பாம்புயப்போது
ட்டுமார்க்கமாக கடுகவேநடந்தது
ர்த்தானேநாகமதை பாலகன்கண்ணாலே
த்தியைக்கைப்பிடித்து கடுகவேவெட்டபோனன்
அப்போதுநாகமது அரிந்துசொல்லலுற்றது
கேட்டையாபாலகா கிருபையுடனென்வார்த்தை
ன்னைத்தின்பதற்கு யுகந்துயான்வந்தேனே
ந்துவுன்னைப்பார்க்க வகையுடனுனதுதாயார்
கேந்திரன்வரத்தில் நலமாகபிறந்தவன்
அம்மாதுபுதல்வன் யரிந்தபேரனுச்சுதே
ன்றுமேசொல்லி யிசைந்துகாவலிருந்து
போகுரேனிப்போது புகழுடனிருப்பிடமே
ஆனால்கேள்பாலகனே யரிந்திடசொல்லுகிறேன்
க்கிரியிருப்பிடம் பக்குவமாய்நீபோக
னதுக்கையாலே யவன்சாகப்போகுருன்
அவனுக்குமரணமே அருகினில்கிட்டியது
னதுத்தாயாரை யுகந்துகொண்டுநீவருவாய்
ந்தனுக்குகண்டமொன்று யுகந்துமேயிருக்குதப்பா
இப்படிச்சொல்லவே யிசைந்துபாலகன்கேட்டு
ஐயாநீவநாகேந்திரா அந்தகண்டம் சொல்லுமையா
அப்போதுநாகேந்திரன் அறியவே சொல்லுகிருன்

வசனம்.

அப்பா! பாலகா நாகள்ளபூடிகரைகருகில் இருக்கப்பட்ட நயன வாதி பட்டணத்து எல்லைக்கோடியி லிருக்கப்பட்ட பராசத்தியை அந்த பகிக்கிரியமைத்திருக்கின்ருன். ஏனெனில் எந்தப் பகையாளியா னாலும் கோட்டைமீது வந்தால் அவனைத்தின்பதற்கு உத்திரவு செய்

திருக்கின்ருன் ஆகையால் நீ போகும்போது அந்த சத்திமாயப்பெண் ரூபந்தரித்து புன்சிரிப்புக்காட்டி சந்தோஷ மொழிகளாடிக்கொண்டு உன்னெதிரில் வருவாள் அப்போது.

ஜாக்கிரதையாக நீபோகுவாய்பாலகா
அப்போதுபாலகன் அந்தப்பாம்பைசுற்றிவந்து
வந்தனஞ்செய்தானே வகையுடன்பாம்புக்த
ஆசிர்வதித்தது அந்தநல்லநாகேந்திரன்
அங்கிருந்துபாலகன் யன்பாகநடந்தானே
அந்தப்பொழுதெல்லாம் யக்காட்டில்நடந்தானே
புலிவேந்தன்பட்டணம் புகழுடன்வந்தானே

## பாலவர்த்திவேந்தன் புலியைக்கோன்று வேந்தன்புதல்வியை கலியாணஞ் செய்வது

அந்தப்பட்டணத்தில் அன்பாகதான்சென்ருன்
சத்திரங்தேடியே சிறப்புடன் நடந்தானே
அந்தச்சத்திரத்தில் கிழவியைத்தான்பார்த்து
பாட்டியேயின்று பணந்தாரேன்யெந்தனுக்கு
சாதம்நீயிடுவாயா சம்பிரமாயிப்போது
அந்தமொழிக்கேட்டு அந்தநல்லக்கிழவியும்
நல்லதுயென்றுச்சொல்லி நலமாகசம்மதித்தாள்
அந்தச்சமயத்தில் அந்தநல்லப்பாலனுக்கு
நாலுவிதக்கரியுடனே நலமாய்சாதமிட்டாள்
அந்தச்சாதந்தன்னை அன்பாகத்தான்புசித்து
கையலம்பிக்கொண்டு கடுகசயனித்தானே
உதயமானவுடனே உப்பொங்கியெழுந்தானே
கேட்டையாபாட்டி கிருபையுடனென்வார்த்தை
நேற்றுமுழுதுமே நடந்தேனேவெகுதூரம்
சாதம்புசியாமல் சம்பிரமாய் நடக்கமாட்டேன்
மருவிசைசாதம் மகிழுடனே சமிப்பாயம்மா

வசனம்.

இப்படிச்சொல்லவே அக்கிழவு சம்மதமடைந்து பாலகன்கொடுத்த வராகன் பெற்றுக்கொண்டு சாதம் சமைத்துக் கொண்டிருந்தாள் அச்சமயத்தில் பாலகன் அக்கிழவியைப் பார்த்து அம்மா பாட்டி இந்தப்பட்டணத்தில் ஏதாகிலும் புதுமை யுண்டாயென்றுக்கேட்க அத

ற்கு; அக்கிழவி அப்பா பாலகா இன்னாட்டிலேதும் புதுமைக்கிடையா
து ஆனால் இன்னாட்டில் நல்லதண்ணீர் கிடையாது உப்புதண்ணீர்
தான்குடிப்பது அதுயேயென்றால் இந்நாட்டில் நல்லதண்ணீர் கிணற்
றருகில்பதினாரடிவேங்கை ஒன்றிருக்கின்றது அது தினத்திற்கு ஐந்
ப்பேரைக் கொன்றுப்போட்டு வருகிறது. அதையாரும் கொல்வதற்கு
சக்தியற்று இருக்கின்றார் ஆகையால் இந்தநாட்டின் வேந்தன் இந்தப்
புலியை எவர் கொல்லுகின்றாரோ அவருக்கு தன் மகளாகிய சுபத்தி
ராதேவியைத் தந்து கலியாணஞ் செய்துக் கொடுப்பதாய் பிரதிக்கினை
செய்திருக்கின்றார் இதில்லாமல் நாலுமூலையிலும் எல்லோரும் அரியு
ம்படி பலகையெழுதி விளம்பரஞ் செய்திருக்கின்றார் என்றுச்சொன்ன
வுடன் இம்மொழிக்கேட்டுப் பாலகன்,

ஸ்நானங்கள்செய்துதான் போஜனஞ்செய்தும்ம
சந்திராயுதத்தை சீக்கிரமெடுத்துக்கொண்டு
இரத்தினகம்பிளியை யிடையில்தரித்தானே
அந்நாட்டின்வடகெவுனி அப்போதுவந்தானே
அக்கெவுனிக்கதவு தாளமிட்டுயிருந்தது
அந்தவிடத்திலே அப்போபாராயிருந்தாரோ
அவர்களைப்பார்த்து அப்போதுபாலகனும்
பூரடாகாவலனே அன்புடனேநிற்கிறவன்



பாலவர்த்திவேந்தன் காவலரை வடகதவு திறக்கும்படி சொல்வது.

கதவைதாளுந்திரப்பாய் கடுகயானும்போகவேண்டும்
இந்தமொழிக்கேட்டார் யின்பமாய்க்காவலனும்
ஐயாவேநீர்க்கேளும் அன்புடனேயெந்தன்வார்த்தை
இந்தவழியாக யிப்போபோகலாகாதையா
மிஞ்சிநீர்போனால் மிகுந்துமேபுலியொன்று
அடித்துதான்கொல்லுமையா யன்பாகபோகவேண்டாம்
கிழக்குவாயலாக கொப்பெனவேநீர்போவீர்
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பாலகனும்
எந்தனுக்குயிஷ்டமாகும் இந்தமார்க்கம்யான்போக
இப்படிச்சொல்லவே யிதுகேட்டார்காவலர்
ஆனால்சந்தோஷந்தான் அப்படியேவிடுகின்றோம்
என்றுமேசொல்லி இசைந்துகதவுதிறந்தாரே
கதவைத்திறந்தது கண்டானேபாலகனும்
சந்தோஷமாகவே தான்போனனம்மார்க்கம்
போனவுடனே புகழ்ந்துமேசேகுவர்
கதவைதான்மூடி கனகதாளமிட்டாரே
தண்ணீர்கிணற்றருகில் தான்போனான்பாலகனும்
நாலுதிசையும் நலமாகதேடிப்பார்த்தான்
அந்தப்புலியுந்தான் அங்குயகப்படவில்லை
கானகமப்போது கண்டியிரைத்தேடிப்போச்சு
புலிபடுக்குமிடம் புண்ணியனுங்கண்டானே
அந்தவிடந்தினில் யன்பாகக்கம்பிளியை
போட்டுப்படுத்துமே புகழுடனே சல்லாவை
முக்காடுப்போட்டுக்கொண்டு முகந்துமேசெந்திருயுதத்தை
பக்கத்தில்வைத்துக்கொண்டு பண்புடன்நித்திரைசெய்தான்
அந்தச்சமயத்தில் அந்தப்புலிதானுமே
காட்டைதான்விட்டுமப்பே க❋கவேவருகிறது

வசனம்.

இப்படியாக புலியானது தினமும் ஐந்துப்பேரை தின்றுவிட்டு வ்ருவது வழக்கம் அன்றையதினம் ஒருவரும் அகப்படாமல் இருப்பதால் ஐயோ பகவான் நமக்கு இரைத்தராமல் நிருத்திவிட்டார் நாம் செய்தப்பாக்கியம் இது தானென்று எண்ணமிட்டுக்கொண்டு வருஞ் சமயத்தில் எனது இருப்பிடத்தில் பாலகனைக்கண்டு சந்தோஷமிட்டு இதுதான் சமயம் நமக்கு பகவான் தேடியழைத்துவந்து தந்தாரென

ன்று சந்தோஷமடைந்து வருக இதற்குள்ளாக தன்மனதில் திகிலடை ந்து தூரமாய் நின்று கர்ஜித்து பாலகனைப்பார்த்து ஆரடா யென்று படுக்கைமீது படுத்திருப்பவன் என்றுக் கூச்சலிட்டு நிற்க இதற்குள் தனக்குத்தானே யோசித்து இவனைப்பார்த்தால் ஸ்ரீராமரைப்போல் இருக்கிறது இவர்கையில் நாம்செத்தால் நலம் இல்லாமல் மனிதனுயிருந்தால் நமது கையால் சாகுவாரென்று யோசித்து சொல்லத் தொடங்கியது.

ஆரையாநீருமேதான் அன்புடன்பேசுமையா
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பாலகனும்
திடுக்கிட்டுயெழுந்து சிறப்புடன்தானமர்ந்து
அந்தப்புலியை யன்புடன் தான்பார்த்து
வாவென்றழைத்தான் வகையுடன்தானுமப்பே
அந்தமொழியை அப்போதுகேட்டது
உந்தனைப்பார்த்தால் விஷ்ணுபோலிருக்குதையா
சாம்பவமூர்த்திபோல் நீயுமிருக்கின்றீரே
உந்தனருகில்வர எந்தனுக்குபயமாது
அப்போதுபாலகன் அன்புடன்சொல்லலானார்
பயமொன்றுமில்லாமல் வருகுவாய்யென்னருகில்
திகிலையுந்தானடைந்து தீவிரமாய்வந்தது
இடதுக்கையாலே யெட்டிப்பிடித்தானே
வலதுகைகத்தியாலே வீசினன்புலியைப்போ
இரண்டுதுண்டமாக விழுந்தது புலிமீது
புலியைக்கொன்றபாபம் யெப்படிம்போகுமென்று
யோசித்துத்தானுமே நின்றனேயப்போது
நெகத்தையும்வாலையும் வெட்டிக்கொண்டால்சந்தோஷந் தான்
போமென்றுபெரியோர்கள் புகழுடன்சொல்லக்கேட்டேன்
அப்போதுகிபாபகம் அன்பாகவந்தது
புலிநெகங்களை பூவாலையருத்துக்கொண்டான்
நடையாநடைநடந்தான் நாணயமாய்கிழக்குவாயல்
தானுமேதாண்டிவந்து தனிமனைதான்சேர்ந்தான்
பாலகனைப்பார்த்து பண்புடன்கிழவியும்
எங்கடாபோயிருந்தாய் என்தவப்பாலகனே
அம்மாடிநீகேளாய் அன்புடன்நானுமே
வீதியலங்காரம் வேடிக்கைபார்த்திருந்தேன்

திரேகங்கள்நோகுதம்மா தீவிரமாய்நடக்கமாட்டேன
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னாள்கிழவதான்
நீபோகவேண்டாமப்பா நிற்பாய்யிரண்டுதினம்

வசனம்.

இப்படிச்சொல்லவே பாலவர்த்தி வேந்தன் அந்தக்கிழவி வீட்டில் தானே இருந்துவிட்டான் இப்படியிருக்க அவ்வேந்தன் புதல்வியாகிய சுபத்திரா ஏதென்று துக்கமடைந்தாளென்றால் யென்னை என் தந்தை பதினெட்டு ஜாதிகுலத்தார் ஆராகிலும் புலியைக்கொன்றால் பெண்ணைக்கொடுப்பதாய் சொல்லியிருக்கின்றார் இந்தப்புலியை யார் கொல்லுவாரோ என் தலையில் எதுயெழுதி இருக்கிறதோ என்று எண்ணமிட்டு ஆகாரம்விட்டு மேடைமீது பார்த்துக்கொண்டிருந்தாள் அந்தச்சமயத்தில் இவ்வேந்தக் குமாரன் புலியைக்கொன்றது பலகைப்படித்ததும் கிழவிவீட்டில் இருப்பதும் பார்த்துக்கொண்டிருந்தும் இதையாரோடும் சொன்னது கிடையாது.

## வண்ணான் துணிமூட்டை யெடுத்துக்கோண்டு துரைக்குப்போகையில் புலியைக் காணுவது.

இப்படியிருக்கவே இசைந்துயன்னாட்டின்வண்ணான்
திப்படுயென்றவன் திரமுடன்மூன்றுமாதமாய்
சலவைகள்செய்யாமல் தானுமேயிருந்துவிட்டான்
அன்றுதினத்திலே அன்புடனேயவ்வண்ணானும்
நாட்டுத்துணிகளை நலமுடனேயெடுத்துக்கொண்டு
நல்லதண்ணீர்கிணற்றருகில் நலமாகநடந்தானே
வண்ணானுமப்போது வகையுடன்போகுறான்
இப்படியாக இவன்போகுஞ்சமயத்தில்
நாலுபக்கமும் நண்பாகபார்த்தானே
ஐயோபுலியென்று அலரிக்கூச்சலிட்டானே
இதின்வாயில்யகப்பட இப்போதுநாம்வந்தோம்
என்றுமேசொல்லி இசைந்துதாநின்றானே
ஆ-ஆ-இதுயிப்யோ அலர்ந்துதூங்குகிறது
இன்னாட்டின்வேந்தன் இதையுந்த தான்யறியானே
கொல்லப்பட்டவனுக்கு இதுநல்லச்சமயமையா
ஆ-ஆ-இப்புலியை நானேதான்கொல்லுகின்றேன்

இதைப்புலியைக்கொன்றால் இசைந்துவேந்தனுருவேன்
சுபத்திராதேவியை சுபகலியாணஞ்செய்வேன்
இந்தநாட்டிற்கு இசைந்துவேந்தனுருவேன்
இப்படித்தன்மனதில் இசைந்துதானுமெண்ணமிட்டு
அழுக்குத்துணிகளை அக்காட்டில்போட்டுவிட்டு
ஓட்டமும்நடையாக ஓடிவந்தான்வீட்டிற்கு
வீட்டிலிருக்கிறது விந்தையானமொக்கைகழீட்டி
அந்தகழீட்டியை அப்போதுஎடுத்தானே
அந்தச்சமயத்தில் அவனுடையதேவியும்
நீர்யெங்குபோகுறாய் இப்போதுயென்கணவா
இந்தமொழிக்கேட்டான் இசைந்துமேவண்ணானும்
வேந்தனுருவேன் விந்தைசுபத்திரையைகூடுகிறேன்
உனக்குநல்லசக்காளத்தி உகந்துமேகொண்டுவாறேன்
இந்தமொழிக்கேட்டாள் இசைந்துமேவண்ணாத்தி
உன்தலையுடையாதோ உகந்துயிவ்வார்பேசுகிறாய்
இந்தச்சந்தோஷம் இசைந்துதுக்கமடைவதற்கு
பாதகாவீணாக பழியெண்டாசுமக்கிறாய்
இத்தனையுங்கேட்டான இசைந்துமேவண்ணானும்
அடியா-புலியைக்கொன்றுவிட்டு சுபமடையபோகையிலே
மங்களமொழிகள் மகிழ்ந்துசொல்லுகின்றாயா
அடிமுண்டைசண்டாளி அடிக்கிறேன்பாரென்று
உலக்கைதனையெடுத்து ஓட்டிவோட்டியடித்தானே
ஐயாதெய்வமேயென்று அழுதுமேநின்றாளே
பாதகாவுனக்கு பழிவந்துசம்பவிக்கும்
இப்படிச்சொல்லி இசைந்துயவள்வோடிவிட்டாள்
அப்போதுவண்ணானும் இசைந்துருமால்கைப்பிடித்தான்
ஈட்டியையெடுத்துக்கொண்டு இசைந்துகிணற்றருகில்
ஓட்டமும்நடையாக ஓடிவந்துபார்க்கையிலே
அந்தப்புலியும் அவ்விடத்திலிருந்தது
ஆ-ஆ-இந்தப்புலியைக்கொன்று இசைந்துசுபத்திரியை
கலியாணஞ்செய்ய சாதித்தோமிப்போது
கலியாணஞ்செய்கிறமோ கடுகவேசாகிறமோ
இப்படிச்சொல்லி ஏரிநான்செடிமீது
கிளைகளைவொடித்து போட்டானேயதின்மீது
ஏதும்பேசாமல்தான் இருந்ததுயந்தப்புலி

இத்தனைம்பார்த்தானே இசைந்துமேவண்ணானும்
செடிமீதுநாமிருந்தால் சிறப்புடனேயேரிவந்து
நம்மைக்கொன்றுவிடும் நலமானயிந்தப்புலி
இப்படியெண்ணமிட்டு இசைத்துமேசெடியிறங்கி
செத்தாலும்பேருதான் பிழைத்தாலும்பேரென்றுமே
தைரியங்கள்செய்துகொண்டு யீட்டியால்குத்தினான்
கொஞ்சமாகிலும் குத்துப்படவில்லையே
அந்தயீட்டிதான் அடர்ந்ததுப்புப்பிடித்தது
இதைதானறிந்து இசைந்துயதையெறிந்துவிட்டு
அதின்வயிற்றுமீது அன்பாகயேரிக்குத்தி
கத்தியால்வயரை கண்டுக்கிழித்தான
அப்போதுரத்தம் அன்பாகவெளிவரவே
ஈட்டிநிறைய அந்தரத்தம்பூசிக்கொண்டான்
உடம்பெங்கும்ரத்தமாய் உகந்துபூசிக்கொண்டானே
புலியைக்கொன்றதொரு குறிப்புவேணுமென்றுசொல்லி
நகத்தையும்வாலையும் அப்போதுயருத்துமே
கையிலேவைத்துக்கொண்டு கடுகவேகடுக்கனான்
எதிரேயார்வந்தாலும் இடித்துக்கொண்டுவருகின்றான்
எங்குபோகுறாய்நீ வண்ணானேயென்றுகேட்டாலும்
ஏண்டாபயலேயென்னை வண்ணானென்றுசொல்குறாய்
வேந்தன்மருமகன்நான்தான் வேந்தனென்றழையுமே
இப்படிசொல்லிகொண்டு இசைந்துமேநடந்தானே
அந்தச்சமயத்தில் அடர்ந்தகச்சேரிதன்னில்
வேந்தன்யெதிருக வேகமாய்தான்வந்து
ஈட்டிநகம்வாலை இன்பமாய்வைத்தானே

புலிவேந்தன் யெதிரில் வண்ணான் கலியாணஞ்சேய்யும்படி சோல்வது.

வசனம்.

புலிவேந்தன் கொலுவமர்ந்திருக்கும் சமயத்தில் வண்ணான் புலியுடைய பாதிநகமும் பாதிவாலையும் வேந்தன் எதிரில்வைத்து சாஷ்டாங்க வந்தனஞ்செய்து தீனதயாளா ஓ இராஜோத்தமா உனதுயருகில் கோடானகோடி சேனைகளிருந்து எதுபயன மாதமாதவுடனே சம்பளம் பெற்றுக்கொண்டு போகிறார் தவிர இந்த ஆபத்தை தீர்ந்தவர் யாருமில்லை ஆனால் உங்களுடைய திரவியத்தை எதுமரியமாட்டேன் யானு நாட்டிலிருந்து அழுக்குத்துணிகளை மூட்டைக்கட்டிக்கொண்டு தொரைச

குப் போகையில் அந்தப்புலி வந்து என்மீது விழுந்து என்னை ரத்தமய மாகச் செய்தது அச்சமயத்தில் இந்த ஈட்டியால் குத்தியதைக் கொன் றேனையா இதோபாரும் அதின்நெகமும் வாலும் என்றுக்காட்ட வேந்தன் விசனமடைந்து நிற்க அருகில் இருந்த மந்திரிகள் பார்த்து ஓ இராஜோத் தமா புலியை இவன் கொன்றவனல்ல ஆரோவேந்தர் கொன்றதுபோல் தெரிகிறது என்றுச்சொல்லவே இதைக்கேட்டு வேந்தன் அப்பா மந்திரி களே நீங்கள் எதைப்பார்த்து சொல்லுகிறீர் என்றுகேட்க அப்போது மந்திரிகள் மொண்டிவாலேயும் மொண்டிநெகத்தையும் பார்த்துச்சொல்லு கிறோம் என்றுச் சொல்லவே இம்மொழிக்கேட்டு வண்ணான் போதும் போதுமையா இந்தப்புலியானது வேந்தன் கோட்டையிலிருக்கும் கருங் கல்லை தனது நெகத்தால்கீரி அதின் நெகம் மொண்டியாகிவிட்டது எனச் சொல்லவே வேந்தன் மந்திரிகளைப்பார்த்து அப்பா மந்திரிகளே இந்த மொழியை தவரினால் பெருத்த பிரமாணம் செய்திருக்கின்றேன் அந்தப் பாபம் என்னைச்சுற்றும் இதில்லாமல் சொன்னமொழித்தவரலாகாது இந்த வண்ணானுக்கே எனது குமாரத்தியைக்கொடுதது கலியாணஞ்செய் வது நிகூயம் இம்மொழி எந்த வேந்தருக்கும் சமாதானமில்லாமல் போச்சுது அப்போவேந்தன் விப்பிரவரையழைத்து முகூர்த்தம் விசா ரிக்கவே அப்பிராமணர், ஐயா பொழுதுபோகும் லக்கினம் நன்றாயிருக்கி றது தேசமெங்கும் அலங்காரஞ்செய்தும் இதில்லாமல் தன்னாட்டில் இராநின்ற துரைகளும் உத்யோகஸ்தரும் மந்திரிமார்களும் வித்வான் களும் கத்திக்காரர்களும் காவலாளிகளும் இவனை யாராகிலும் வண்ணா னென்றுச்சொன்னால் அவன் தலையை கண்டிக்கப்படும் இவனை எக் காலத்திலும் திப்பவேந்தனென்று அழைக்கவேண்டுமென்று பறைசாற்றி விட்டு.

எனதுதேசத்தை அவனுக்குக்கொடுக்கிறேன்
இதரப்பூமியை இனியாளண்டுக்கொள்வேன்
அந்தச்சமயத்தில் அறிவேந்தன்சொல்லலுற்றான்
ஆதிதாதிகளே அன்புடனேயப்போது
திப்பவேந்தனை சீக்கிரமாய்மரப்பிள்ளைப்போல்
அலங்காரஞ்செய்வீரே அன்புடனேயப்போது
இப்படிச்சொல்லவே இதுகேட்டார் தாதிகளும்
சம்பங்கியெண்ணைவிட்டுஸ் தானங்கள்செய்துவைத்தார்

பட்டுக்கரைதோவத்தி பகறவேகட்டச்செய்தார்
இரண்டுக்காதிலும் இணையில்லாகடுக்கம்போட்டார்
ந்திரகாந்திப்பாகை சிறப்புடன்தலையில்போட்டார்
கலியாணமாப்பிள்ளைப்போல் கடுகவேசெய்தாரே

வசனம்.

இப்படியாக தயார்செய்த சங்கதியெல்லாம் வேந்தன் அறிந்து மேளவாத்தியங்கள் முழங்கவும் நாட்டியப்பெண்கள் ஆடவும் முத்துபல்லக்கு அலங்கரித்து அதின்மீது அமரும்படிச்செய்து கோலம்வரும்படிச் செய்யவே அச்சமயத்தில் அப்பட்டணத்திலிருக்கும் குடிகளும் கணக்கரும் இவன்பின் தொடர்ந்து ஐயா திம்பவேந்தனே மூன்றுவருடமாக மழையில்லாமல் அதிக துன்பப்படுகிறோம் இந்த வருடம் நீர் அரசுக்கு வந்தப்படியால் எங்கள் எல்லோரையும் காப்பாற்றவேண்டும் சுவாமியென தெண்டனிட்டார் இதைக்கேட்டவுடன் வண்ணன திப்பவேந்தன்.

இதுசமயமல்ல இசைக்துயான்சொல்வதற்கு
ஆகட்டுமென்றுச்சொல்லி அப்போபல்லக்கேறினன்
மேளமடியுமென்று மேளக்காரைத்திட்டஞ்செய்து
நாட்டியமாடுவீரென வேசியரைத்திட்டஞ்செய்தோன்
தீவிட்டிக்காறு தீவட்டிபிடியுமென்றான்
அக்றக்கோலமது அழகாககிழக்குவீதி
சந்தோஷமாக சம்பிரமாய்வருகிறது

வசனம்.

அந்தச்சமயத்தில் புலிமகாராஜன் சேடிகளையழைத்து கலியாணமாப்பிள்ளை ஊருக்கோலம் வருகின்றான் நீங்கள் சீக்கிரமாக எனது புதல்வியை அலங்காரம் செய்வீரென்று சேடிகளை அனுப்பினர் அச்சமயத்தில் சேடிகள் ஓடிவந்து

அம்மாசுபத்திராதேவி உன்தலையில்பாழும்பிரமன்
இப்படியெழுதுவானே இசைந்துமேவையகத்தில்
வேந்தர்கிடையாரோ வேண்டிமணம்நீபுரிய
பிரந்தவுடனேயெமன் புகழ்ந்துகொல்லாமல்போனானே
இந்தமொழிக்கேட்டாள் இன்பமாய்சுபத்திராதேவி
அப்போதுதாதிகளை அன்புடன்கேழ்க்கலானாள்
ஏன்னடிதாதிகளே இப்படிச்சொன்னீரே
ஒளியாமல்யெந்தனுக்கு உண்மையைச்சொல்லுவீரே



சுபத்திருதேவியை தாதிகள்கண்டு துயரமடையது.

அப்போது தாதிகளும் அன்பாகசொல்லலானர்
அம்மாவேநீகேளாய் அன்புடன்யென்வார்த்தை
வண்ணாரப்பையன் வகுந்தகணவன்வுந்தனுக்கு
நாலுவீதிகோலமும் நலமாகவருகுறுனும்
உன்னையலங்கரித்து உகந்துமேயழைத்துக்கொண்டு
வருகதான்சொன்னாரம்மா வகையுடன்வுந்தன்தந்தை
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்சுபத்திராதேவி
அந்தமொழிக்கேட்டு அப்போது தாதிகளை
அடித்தானே தாடைமீது இணையில்லாகோபங்கொண்டு
அந்தயடிப்பட்டு அப்போது தாதிகளும்
வேந்தன்கொலுவில்வந்து வேகமாய்நின்றுனே
கண்ணில்ஜலஞ்சொரிய கடுகவேயழுதாரே
ஐயாவேநீர்கேளும் அன்புடன்யென்வார்த்தை
நாங்கள்போய்ச்சொல்ல நலமுடனேவும்புதல்வி
அடித்தானே தாடைமீது ஐயாவேயிப்போது

வசனம்.

இந்தப்பிரகாரம் சேடிகள் வந்துச்சொல்லவே இதைக்கேட்டுவேந்தன் இனி நமது புதல்விக்கு யாரும் சமாதானஞ் சொன்னாலும் கேழ்க்கமாட்டாள் என்றுதானே புறப்பட்டு அந்தப்புரம்வர இவர் வருவதை சுபத்திராதேவி அறிந்து கடிதமெடுத்து ஓ தந்தையே அந்தப் புலியைக்

கொன்றவன் இன்னாட்டில் இருக்கும் சத்திரத்தில் இருக்கின்றார் அவர் கொன்றப்புலியை வண்ணான் கொண்டுவந்துகாட்ட சம்மதித்தீர் இது நியாயமா செடியைவைத்தவன் ஒருவன் பலத்தை யனுபவிப்பது யொருவனா இன்னங்கேழ்ப்பீர்.

விருத்தம்.

தந்தையேசொல்லக்கேளீர் தனிபலவேந்தன்கைதன்னை
அந்தமாய்கொன்றவரை அவனியில்விட்டுயானும்
பந்தமாயிந்தமுடன் பலவாணுய்வந்தாலிப்போ
சிந்தையில்நினைக்கமாட்டேன் சீரியேமாலைதீட்டேன்.

வசனம்.

தந்தையே அவ்வேந்தனைவிட்டு இதரயுருடனை ஒருக்காலும் விருப்பமடையேன் என்று கடிதமெழுதி தயாராய்வைத்திருக்க அச்சமையத்தில் வேந்தன் அந்தப்புரம்வைத்து சுபத்திராதேவியைப்பார்த்து சொல்லத் தொடர்ந்தான்.

நான்பெற்றசெல்வமே நவரத்தினசெண்பகமே
தாதிமார்தன்னையே தானடித்தக்காரியமேன்
வண்ணானென்றுமே வகைமோசம்போனாயோ
உந்தனுக்குயேதும் உலகத்தில்கஷ்டம்வர
நான்பார்க்கமாட்டேனம்மா நயமுடனேயெப்போதும்
இந்தராஜ்யம்தந்து இனிதிரவ்யம்தருகின்றேன்
கலியாணஞ்செய்யாவிட்டால் கபடனென்றுசொல்வாரே
சீக்கிரமெழுந்திருமாய் சிறப்புடனென்தேவி
இத்தனையுங்கேட்டாள் இன்பமாய்சுபத்திராதேவி
காகிதமப்போது கனமுடனேகைக்கொடுத்தாள்
அந்தக்கடிதத்தை அன்பாகவேந்தனும்
படித்துமேசங்கதி பக்குவமாயறிந்திட்டான்

வசனம்.

அந்தக்கடிதம் வாசித்து சங்கதியறிந்துக்கொண்டு அருகில் இருக்கப்பட்ட சேகுவரை பனிரெண்டுப்பேரை அழைத்து அடா சேகுவரே நீங்கள் சென்று ஊருகோலம் வரப்பட்டவண்ணானை என்கண்ணெதிரில் வாராதப்படிக்கு முத்துப்பல்லக்கு தன்னிலிருந்து கேட்டைக்குகொண்டு வருவதற்குள் பனிரெண்டு குடம் உதிரம் கக்கும்படி அடிக்கவேண்டுமென்று உத்திரவிடவே அதுபோல் சேகுவர் ஓடி,

ஆரையா திப்பவேந்தா அன்புடனேயிரங்குமையா
இந்தமொழிக்கேட்டான் அப்போது வண்ணானும்
உதியமானவுடனே உங்களுக்குபூசிதாரேன்
மேளமடியுமென்று மேன்மையாய்போகுறான்
இப்படிச்சொல்லிக்கொண்டு யவனுமேபோகுரான்
அந்தச்சமயத்தில் அந்தநல்லசேருவரும்
ஆனையைப்போது அன்பாய்படுக்கவைத்தார்
துப்பாக்கியாலே இடித்தாரேபக்கத்தில்
குத்தினகுத்து தன்னில் கொம்பனவேவிழுந்தானே
என்னையேன்யடிக்குநீர் இப்போதுசேருவரே
உங்கள்வஸ்திரத்தை உகந்துசலவைசெய்துத்தாரேன்
இந்தக்கலியாணம் யெந்தனுக்குவேண்டாமையா
இப்படிவருமென்று யரியாமல்போனேனே

வசனம்.

அப்போது வண்ணான் தரித்து இருந்த பூஷணங்களும் ஆடைகளும் பிடுங்கிக்கொண்டு கோட்டைக்கு அனுப்பிவிட்டு அதன்பிறகு கம்மாளனை யழைத்து இரண்டுகொடா கொண்டுவரும்படி திட்டஞ்செய்து செமைபுளியன்மலார் கொண்டுவந்து தயாருயிருத்தி வண்ணானை செடியருகில் கொண்டுவந்தார்.

புளியன்மலரை புகழுடன்பார்த்தானே
இதுகள்யேனையா யெந்தனுக்குச்சொல்லுமிப்போ

வசனம்.

ஓ திப்பவேந்தனே உனது கலியாணத்திற்கு ஆராகிலும் திருடன் தொடர்ந்தான் அவர்களை யடிப்பதிற்கு வேந்தன் கொண்டுவரும்படி திட்டஞ்செய்தார் என்றுச்சொல்லி-

வண்ணானையப்போது வகையுடன்பிடித்தாரே
இரண்டுகைகளை இருக்கிதான்கட்டினார்
பெரியமரத்தில் பிகியவேகட்டினார்
ஒன்பதுசெமைமலார் வொடியயடித்தாரே
அவனுதிரேகமெங்கும் பிளக்கயடித்தாரே
கொடாவை தன்னை கொப்பனவேவேகவைத்து
அவனுதிரேகமெல்லாம் சுட்டாரேகொடாவே
அங்கிருந்தசேருவர் அப்போதுவோடினார்

வண்ணான்வீட்டைத்தேடி வகையுடன்வோடினார்
அவன்-வீட்டிற்குசென்று யழைத்தாரேயவன்தேவியை
ஆாடிபெண்ணே யரைக்கூடைசுன்னங்கொட்டி
இத்தனைமொழிகேட்டாள் யின்பமாய்வண்ணாத்தி
ஏனையாசுன்னம் யெந்தனுக்குச்சொல்லுமையா
அப்போது காவலர் யரியவேசொல்லுகிறார்
உந்தன்கணவனை யுடம்பொடியயடித்தோமே
இரத்தமும்வந்தற்கு சுண்ணும்புப்போடவேணும்
இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னாளப்போது
நன்றாய்யுங்கள் நாளியங்கெட்டப்படுப்பாவியை
இப்படிச்சொல்லி கொடுத்தான்கூடைசுன்னம்
கொண்டுவந்தசுன்னம் கொப்பனவேயவன்மீதில்
நிரையபூசிவிட்டு நிர்மாணமாய்வோட்டிவிட்டார்
அப்போதுவண்ணான் யழுதுகொண்டுவீட்டைத்தேடி
ஓடிவருகவே பார்த்தானேயவன்தேவியும்
சட்டியில்யாலாத்தி சிறப்புடன்கொண்டுவந்தாள்
இந்தயாலாத்தி யெனக்கேன்பாதகியே
நான்பட்டபாட்டை நானிலத்தில்சொல்லலாமா
மானமும்யீனம்போச்சு மரியாதிக்கெட்டுப்போச்சு
ஆனல்யானுமே யாண்டேன்வொருநிமிஷம்
ஏரினேன்பல்லக்கு யெடுத்தாரேயெந்தனை
இப்படியாகவே யிவனிருந்தான்தன்மனையில்

புலிவேந்தன் பாலவர்த்திவேந்தனை யழைத்துவருவது.

வசனம்.

இப்படியிருக்க புலிவேந்தன் பல்லக்கு ஏரிக்கொண்டு அந்நாட்டி லிருக்கப்பட்ட சத்திரம் யெதிரில் வந்து தனது மந்திரிகளை அனுப்பி இவ்விடத்தில் புலியைக்கொன்ற இராஜகுமாரன் இருக்கின்றான் அழைத்து வரும்படிச்சொல்லவே அதுபோல் மந்திரிகள்சென்று பார்க்க அவ்விடத்தில் அப்பாலகன் இருந்தான் அவனைப்பார்த்து அய்யா! உம்மை புலிவேந்தன் அழைக்குறுரேன்றார். அப்போது அப்பாலகன் ஐயா என்னை பிலிவேந்தர் யெப்படி யரிவார் யான் அவரை யெப்படி யரிவேன் என்னுடன் வேந்தனுக்கு என்னக்காரியமிருக்கிறது. ஏது மில்லே வருவதில்லை என்றுச்சொல்ல அம்மொழிக்கேட்டு மந்திரிகள் வந்தனுக்குச் சொல்ல வேந்தன் உடனே உட்பிரவேசித்து வாருமப்

பா வேந்தனே நீர் என்னுட்டில் வசித்துக்கொண்டிருந்த துஷ்டமிருக மாகியபுலியைக்கொன்றதாய் அறிந்திட்டேன் ஆகையால் உனக்கு என் புதல்வியைத்தந்து கலியாணஞ்செய்து வைக்கிறேன் என்றுச்சொல்ல, அம்மொழிகேட்டு பாலகன் இதுவென்ன அன்னீதம் நான்யென்ன புலிக்கொல்லப்படவல்லவனு அதுமேல்விழுந்து ஓர் அரையரைந்தால் யான் எம்மாத்திரம் இதுயெல்லாம் வீண் சங்கதிகள் வண்ணாரதிப்பன் புலியைக்கொன்றவன் அவனுக்கு உமது புதல்வியை தந்து கலியாண ஞ்செய்யலாகாதா என்றுச்சொல்ல இதைக்கேட்டப் புலிவேந்தன் அப்பா இராஜபுதல்வனே அந்தச்சங்கதி போகட்டும் நீரே புலியைக்கொன்றதாக நிஜமாகிறது என்றுச்சொல்லி அவன் கைப்பிடித்துயழைக்க அப்பாலகன் எழுந்துபல்லக்குமீதமர்ந்தான் அப்போது நாலுவீதியும் கோலமாகவந்து கோட்டைக்குள்சென்று இருவரும் அந்தப்புரமடைந்து ஸ்தானமுதலிய ஷட்கிரயங்களை தீர்த்துக்கொண்டு திவ்யபோஜனங்களரிந்து தாம்பூலந்தரித்து லட்சுமிவிலாசத்தில் நித்திரையடைந்தார் உடனே சூரியன் கிழக்குத்திசையில் உதித்தான் புலிவேந்தன் எழுந்து கொலுச்சாவடியடைந்துவிப்பிரவரையழைத்துபுதல்விக்கும் பாலவர்த்தி வேந்தனுக்கு பெயரமைப்புப்பார்த்து முகூர்த்தலக்கிண மிடும்படிச் சொல்ல இதைக்கேட்ட பாலவர்த்தி வேந்தன் அய்யா அந்தப்புலியை நானே கொன்றதாய் தீர்மானித்தீர் அது நிசுஷயமே. இதோபாருமதனுடைய நெகமும் வாலுமென்றுஎதிரில்வைத்துவிட்டு அய்யா நீர் யென்னைக் கலியாணஞ் செய்துக்கொள்ளும்படி சொல்லுகிறீர். இப்போது யேதும் தடையில்லை. ஆனல் எனது தாயாராகிய ஸ்ரீபாலநாகம்மாளை நாகள்ளபூடி கரைதன்னில் வசிக்கப்பட்ட பக்கிரி சிறையெடுத்துவைத்திருக்கிறனும். அவனைஜெயிக்கயான்போகுறேன் இச்சமயங் கலியாணஞ்செய்வது நலமல்ல நான் திரும்பிவரும்போது கலியாணஞ் செய்துக் கொள்ளுகிறே னென்றுச் சொல்ல அதற்கு புலிவேந்தன் சம்மதமடைந்து இவன் நமக்கே மருமகனுகப்போகிறு னென்று சந்தோஷமடைந்தான். அதன்பிறகு, பாலகனைப்பார்த்து அப்பா ராஜகுமாரா நீ நாக்கள்ளபூடிக்கு போவதால் எனது சேனைகளை அனுப்புகிறேன் அழைத்து செல்லுவாயென்றுச்சொல்ல, இதைக்கேட்டபாலகன் அப்பா சேனைகள் வேண்டாம் நானே போகிறே னென்றுச்சொல்ல புலிவேந்தன் கேட்டு அய்யா என் நகரத்தில் சுப்பா சாஸ்திரியென்றெருப் பிராமணன் இருக்கின்றுன் அவனை துணையாக யழைத்துக்கொண்டு போவாயென்றுச்சொல்ல அதற்கு சம்மதமடைந்து அப்பிராமணனை அழைத்துக்கொண்டு போகலுற்றுர்.

இருவருமப்போது இசைந்து நடக்கலானார்
இரண்டுஜாமமாக இருவரும் நடந்தாரே
பாலனுக்கப்போது பார்க்கநாவு வரண்டது
அய்யாவேவிப்பிரவரே அன்புடன்கேளுமையா
எந்தனுக்குதாகம் யிப்போயெடுக்குதையா
ஜலமிப்போகொண்டுவாரும் தயவுடனெந்தனுக்கு
அந்தமொழிகேட்டான் யப்போது வேதியனும்
நடையாநடைநடந்தான் நாலபக்கந்தேடிபார்க்க
வெளிவழிதன்னிலேக் கண்டானேகிணறொன்றை



பாலவர்த்தி வேந்தனும் விப்பிரவனும் புறப்படுவது.

வசனம்.

அச்சமயத்தில் வேதியன் கிணற்றைக்கண்டு இராஜபுத்திர அழைத்துக்கொண்டுவந்து ஓ இராமேஜந்திரா முந்தி யென்னைக் கிண றில் இரக்கும்நான் தாகமறிந்தபின்பு தங்களை விடுகிறேனென்றுசொ ல வேந்தன் சம்மதமடைந்து இரண்டுபேர்களுடையபாகைகள்கழட் ஒன்றாய் முடிபோட்டு பிராமணன் இடுப்பில்கட்டி கிணற்றிலிரக்கி அப்போது விப்பிரவன் தனது தாகம் தீரும்படி ஜலமருந்தி கயற்ற அசக்கவே வேந்தன் சேந்திக்கொண்டார். கரைக்குவந்தப் பிறகு வே தியன் வேந்தனைபார்த்து அய்யா இக்கிணற்றில் செடிகள் சூழ்ந்திரு கிறது. தாங்கள் இறங்கினால், காதில் இருக்கப்பட்ட கடுக்கன் செந் ரஹாரம் இதுகள் சிக்கிக்கொண்டு தொந்திரவுபடுவீர் ஆகையா இதையெல்லாங்கழட்டிகரையில்வைத்துவிட்டுகிணற்றில் இறங்கின நலமென்றுசொல்ல அதுபோல் வேந்தனும் சம்மதித்து பூஷணங்களை கழட்டி கரைமீது வைத்துவிட்டு இடுப்புக்குக்கயர் கட்டிக்கொண்

கிணற்றில் இரக்கி ஜலமருந்தி கயற்றையசக்க அச்சமயத்தில்வேதியன் பாதிகயர்ச்சேந்தி மத்தியில்வரும் சமயத்தில் செந்திராயுதமெடுத்து கயற்றை யறுத்துவிட்டான் அப்போது,

## பாலவர்த்தி வேந்தனை கிணற்றில் தள்ளிவிட்டு வேதியன் ஓடிப்போவது

வேந்தனும்கிணற்றினில் வேகமாய்விழுந்தானே
முழுகிதெப்பலாடி மூச்சுகள்விடுகின்றான்
அந்தச்சமயத்தில் யறிவுள்ளபாலகன்
தனதுபாட்டியைத் தன்மனதில்நினைந்தானே
அய்யோலட்சுமிதேவி யம்மாயென்னைக்காருமே
எந்தன்தாயாரை யேன்பெற்றார் முந்திநீ
அந்தப்பாதகி அய்யோயென்னைப்பெற்றாளே
எந்தனுக்கெத்தனை இடுக்குகள்நேர்ந்ததம்மா
இனியான்பிழைப்பது யேதடியென்தாயே
இந்தக்கிணற்றினில் யென்னுயிர்விடுகிறேன்
என்னைக்காப்பவர் ஆருமில்லைகானகத்தில்
இப்படிச்சொல்லி அழுதானேபாலகன்
இப்படித்துயரப்பட இதுக்கண்ட லட்சுமிதேவி
அந்தக்கிணற்றில் அறியதர்பைவுண்டாச்சுது
முழங்கால்ஜலமாக செய்தாளேயக்கிணற்றில்
மாயக்கொடையென்று மகிழுடனிர்மித்தால்
விஷபூச்சிகள்வொன்றும் தீண்டாமல்செய்தாளே
இப்படியாகபாலன் இருந்தானேயேழ்தினம்
அப்போதுவிப்பிரவன் அங்கிருந்தபூஷணத்தை
எடுத்துமூட்டைக்கட்டி இசைந்துநடந்தானே
கெங்கவாதிபட்டணம் வந்தானேவிப்பிரவன்
அந்தநல்லபட்டணத்தில் குடியிருக்கும்வேசியை
கண்டானேவிப்பிரவன் காமமதுவுப்பொங்கி
மோகமதிகரித்து மோகனாங்கியைக்கண்டு
கொண்டுவந்தபூஷணத்தை கொப்பனவேதான்கொடுத்து
அந்தராத்திரி யாசைநித்திரைதான்செய்தான்
உதியமானவுடனே யெழுந்தானேவிப்பிரவன்
குளத்தருகில்வந்து குந்தினான்விப்பிரவன்
அந்தச்சமயத்தில் யந்தவேதியனுக்கு

மேகரோகங்கள் மேன்மையாய்யுண்டாச்சு
கிரந்திசெலந்தி கீல்வாதம்மொடக்குவாதம்
இரத்தவெள்ளையும் யிரணபுத்துயுண்டாச்சு
இத்தனைவியாதிவர யிதுகண்டு துயரமிட்டான்
இந்தவிப்பிரவனை யெவருமேசேர்க்கவில்லை
அந்தத்தெருக்கோடியில் அயர்ந்துபடுத்திருந்தான்
இப்படியிவனிருந்தான் யிசைந்துமேயன்னாட்டில்
அன்னாட்டுவேந்தர் ஆருப்பேரப்போது
இன்பமாய்ப்புறப்பட்டார் யிசைந்துமே வேட்டையாட
கானகத்தில்வேட்டையாடி கலந்துவருஞ்சமயத்தில்
வேட்டைநாயிக்கு தாகமதுக்கொண்டது
அப்போதுயன்னாய்கள் வேந்தனுடைய பல்லக்கை
போகவிடாமல் புகழ்ந்துமடக்கியது
இந்தவொருகாரத்தை வேந்தர்கள்கண்டாரோ
அப்போதுகாவலவர் யன்புடன்தானழைத்து
இந்தநாய்களுக்கு யிப்போதுஜலமதை
கொண்டுவருவீரென்று கொப்பனவேதிட்டஞ்செய்தார்
அப்போதுகாவலர் யன்பாகவோடினார்
ஆலமரத்தடியில் யிருந்ததுகிணறென்று
அந்தக்கிணற்றிலே அன்பாகதுணிக்கட்டி
சொம்பையும்விடவே சிறப்புடன்பாலகனும்
சொம்புதன்னையே பிடித்துக்கொண்டானப்போது
இந்தக்காவலர்கள் யிழுத்துப்பார்த்தார்கயிற்றைதான்
கயருமசயவில்லை கடுங்குறல்கேட்குதப்பா

வசனம்.

இந்த துவனியைக்கேட்டு இதை யாம்பலமாய்வலித்தால் பாகை யருந்துவிடுமென்று சந்தேகமடைந்து அதில் இரண்டுபேர் ஓடி வேந்தரைக்கண்டு ஐயா அந்தக்கிணற்றில் ஆரோவிழுந்ததுபோல் இருக்கிறது அவர் துயரமடைகுரர் நாங்கள் போட்ட செம்பைப்பிடித்துக்கொண்டார் வரவில்லை என்றுச்சொல்ல இதைக்கேட்டு வேந்தர்கள் அடா காவலனே ஆரோ மனிதர் விழுந்திருப்பார் அவரைக்கரையேற்றினால் நமக்கு நல்லபலன்தான் என்றுச்சொல்லி அவர்களுடைய பாகையும் இடுப்பில் தரித்துக்கொண்டிருந்த காச்சாவும் கழட்டிக்கொடுத்து இதுகளையெல்லாம்சேர்த்துக்கிணற்றிலிட்டு அந்தமனிதரைக்கரையேற்றிவிடுவீர் என்றுச்சொல்ல அதுபோல் சேகுவர் விட...

அந்தக்கயற்றைப் பிடித்தானேபாலகன்
தூக்கினார்காவலர் சிறப்புடன்பாலகனை
அப்போதுபாலகன் அரியநனைந்திருந்தான்
பாலகன்திரேகம் வற்றியிருந்ததப்போது
கிள்ளினால்யிரத்தம் கொஞ்சமானால்வரவில்லை
காட்டுகட்டைக்கொண்டு கடுகதீமூட்டினார்
தீயைகாட்டச்சொல்லி திகழ்பாலகனைநிறுத்தினார்
அட்டைகள் தானும் அடையாயிருந்தது
இத்தனைக்கோலமதை அப்போதுக்கண்டாரே
பிச்சுவாதாநெடுத்துத் தள்ளினார்யட்டைகளை
அப்போதுபாலகனை யன்புடன்பல்லக்கியில்
ஏற்றிக்கொண்டுமே நடந்தாரேயப்போது
கெங்கவாதிப்பட்டணம் வந்துமேசேர்ந்தாரே
பாலகனுக்கப்போ பக்குவஞ்செய்தாரே
இப்படிச்செய்ய யந்தநல்லப்பாலகனும்
தினத்திற்குதினம் தேரினான்பாலகன்
அந்தச்சமயத்தில் யங்கிருந்தவேந்தர்கள்
பாலகனைப்பார்த்து பண்புடன்கேழ்க்கலானார்
எந்தவூரெந்ததேசம் யிசைந்துவுன்நாடேது
உனதுதாய்தந்தை யுகந்துபெயர்சொல்லுமே
இப்படியும்நீதான் யிசைந்துவந்தக்காரியமென்ன
இத்தனையுங்கேட்டான் யிசைந்துமேபாலகனும்
சொல்லத்தொடர்ந்தான் சொகுசுடனப்போது
பானுகண்டிபட்டணம் பரிபாலித்துவந்த
கார்பவர்த்திவேந்தன் கருணையுள்ளயென்தந்தை
பாலநாகம்மாள் யென்னைப்பெற்றதாயாராகும்
எந்தனைப்பெற்றமூதார் யேழாந்தினந்தன்னில்
நாகள்ளபூடில் நலமாகவா ப்பட்ட
மாயப்பக்கிரி மகிழ்ந்துசி ரயெடுத்தானும்
எங்கள்தந்தையேழ்பேரு யிசைந்துயுத்தஞ்செய்யபோனார்
அந்தநல்லதந்தைகளை ய மாகச்செய்துவிட்டான்
எந்தனுடத்தாரை யிசைந்துமேபார்க்கப்போரேன்
இத்தனையுங்கேட்டாரே பப்போது வேந்தர்களும்
ஆனல்பாலகனை யரிவுள்ளசிலனை
இந்தநல்லகிணற்றினில் பேன்விழுந்தாயிப்போது

இந்தமொழிக்கேட்டு யேதுச்சொன்னான்பாலகனும்
காட்டையான்பார்த்துக்கொண்டு கலக்கமுற்றுவருகவே
காற்றடிக்கவே காணுதகிணற்றில்விழுந்தேன்

வசனம்.

இந்தப்பிரகாரமாக பாலகன் சொல்லவே இந்த வேந்தர் சந்தோஷமடைந்து எனது புதல்வியை உனக்கு கலியாணஞ் செய்துவைக்கிறேன் கலியாணஞ் செய்துக்கொண்டுப் போவீரென்று சொல்லஅதற்குப் பாலகன்கேட்டு அய்யா நீர் சொல்வதுசரிதான் எனது தாயார் சிறையிலிருக்க யான் இங்கு கலியாணமாகுவது தகுதியாகுமா இது நீதிக்கு தர்மமா உத்தமற்கு யழகாகுமா யான் நாளைவரும்போது கலியாணஞ் செய்துக்கொள்கிறேன். நான்வந்து வெகுநாளாச்சுது போகவேண்டும் உத்திரவு தாருமய்யாவென்றுகேட்க அதற்கு வேந்தர்கள் சந்தோஷமடைந்து அப்பா பாலவர்த்திவேந்தனே நீவந்த வொருமாதமாச்சுது இதுவரைக்கும் யாங்கள் இன்னுட்டில்கட்டிய வேணுகோபாலசுவாமி சன்னதி நீர் பார்க்காமல்போவது நலமல்ல இந்தவேளை இருந்து நாம் கோவிலுக்குப்போய் வருதர்க்குள்ளாக சமயல் ஆகிறது வந்தவுடன் புசித்துவிட்டு உமதிஷ்டப்படி போவீரென்றுச்சொல்ல அதற்குசம்மதமடைந்து வேந்தரும் பாலகனும் சுவாமிக்கோவிலுக்கு வந்துக்கொண்டிருந்தார்.



பாலவர்த்திவேந்தனும் கேங்கவாதிப்பட்டணத்து வேந்தரும் வேணுகோபால சுவாமியைத் சேவிப்பது.

தேரடியருகினில் விப்பிரவன்யிருந்தானே
விப்பிரவனைக்கண்டு வேகமாய்பாலகனும்
வந்தனமையா விப்பிரவரேயுந்தனுக்கு
இப்படிச்சொல்லவே யிசைந்துமேபிராமணன்
பாலகனைக்காண பலமதுகுண்ணியது
தலைதனை கும்பிட்டு தானுமேகுந்தினன்
அப்போதந்தவேந்தர் யன்புடனேபாலகனை
கண்ணாலேதான்பார்த்து கடுகவேகேழ்க்கலானார்
இந்தநிர்பாக்கியனுக்கு யேன்வந்தனஞ்செய்தீர்
பாதகஞ்செய்தவன்போல் பார்க்கயிப்போதோணுதே
இந்தமொழிகேட்டான் யிசைந்துமேபாலகன்
அய்யாவேநீர்கேளும் யன்புடனென்வார்த்தை
இவன்குலமேதென்று யிப்பமாயறிந்தீரா
குலத்தில்வேதியன் குருபீடமானவன்
இத்தனையுங்கேட்டாரே யப்போதுவேந்தரும்
ஆனால்பாலகனே யந்தநல்லவிப்பிறவனை
எப்படியறிவீர் யெந்தனுக்குசொல்லுமப்பா

## வசனம்.

இப்படியாக வேந்தர்கேட்க பாலவர்த்திவேந்தன் அய்யோ இவன்செய்தக் காரியத்தை நாம் சொல்வோமாகில் இந்தப் பிராமணனை அநியாயமாய்க் கொன்று விடுவார். அபகாரம் செய்தவனுக்கு உபகாரமேசெய்தால் நலமென்றுச்சொல்லி இருப்பதுபோல் இவனைக்காட்டலாகாதென்று தன் மனதில்தானே திடப்படுத்திக்கொண்டு ஓ வேந்தரே இந்த விப்பிரவனிருப்பது எங்களுடைய பட்டணமே இவர் யெனக்கு பால்ய சினேகிதரென்றுச் சொல்ல அதற்கவ்வேந்தர் கேட்டு ஆனால் இப்பட்டணத்திற்கு ஏன் வந்தாயென்றுகேட்க அய்யா நான் நாகள்ளபூடி பட்டணத்திற்கு பிரயாணமாகுமுந்தி இவரையனுப்பி பக்கீரியெம்மாத்திரம் சிப்பந்தியோடு இருக்கிறனே.அறிந்துவாவென்று யனுப்பினேனென்றுச்சொல்ல. அதற்கு யவ்வேந்தர் இவரிப்படி காயலாவாகயிருக்க எப்படி யனுப்பினீரென்றுகேட்க அய்யா இவரை யனுப்பும்போது நன்றாயிருந்தார் ஆனால் மனிதருக்கு க்ஷணத்தில் வருவது யாருக்குந்தெரியும், இப்போதுதான் இவருக்கிப்படி வியாதியுண்டாயிற்றென்றுச்சொல்ல நல்லதென்று சந்தோஷமடைந்து யெல்லோரும் கோவிலுக்குச்சென்று சுவாமியைத் தியானஞ்செய்து வரும்போது அந்த விப்பிரவனைப் பாலகன் தன்னுடன் அழைத்துக் கொண்டு இருப்பிடம்வருக அத்தினத்தில் பிரயாணம் நிறுத்திவிட்டு

பதினான்குதினம் அங்கிருந்து அவனுக்குத்தகுந்த அவுஷதங்கொடு த்து திரேகத்தை திடப்படுத்தி பலம் வந்தப்பிறகு பாலகன் ஓர் தினத் தில் கெங்கவாகிப்பட்டண வேந்தரைப்பார்த்து அய்யா இந்தவிப்பிர வன் வெகுகஷ்டப்பட்டான். இவன்கோரியப்படி செலவுக்கொடுத்து காப்பாற்றுவீர் செலவாகும் மொத்தத்தை யான் வரும்போது தருகு ரேனென்றுச் சொல்லி அந்தவிப்பிரவனை அவரிடம் வொப்பிவித்து சாதம் மூட்டை கட்டிக்கொண்டு பிரயாணப்படவே அவ்வேந்தர் இப் பாலகனுக்கு வேண்டிய திரவியங்களைக்கொடுத்து அனுப்பினர் அப் போது பாலகன்.

வெள்ளிமுளைந்திட வேகமாயெழுந்தானே
பொழுதுதெரியாமல் நடந்தானே பாலகனும்
கிளிப்பட்டணம் கிருபையுடன்வருகின்றான்
அந்தநல்லப்பட்டணம் யிருக்குதுயிரண்டுகாதம்
அந்தக்கானகத்தில் பொழுதுமேபோச்சுது
இனிகானகத்தில் யெப்படிநடக்கலாகும்
சாதமுங்கிடையாது ஜலமரியகுட்டைக்காணும்
இந்தநல்லகானகத்தில் இருக்கலாமென்றுச்சொல்லி
எண்ணமிட்டுயவன் இருந்தானேயப்போது

வசனம்.

இந்தக்கானகத்தில் இருப்பதற்கு சத்திரம் காணும் எதுசெய் வது என்று நாலுதிசைகளும் பார்க்குஞ்சமயத்தில் அங்கு பாழடை ந்த கோவிலகப்பட இதுவேநமக்கு கோட்டையென்றுஎண்ண மிட்டு அந்தக்கோவிற்குள் சென்று பசியால் நித்திரைப்பிடிக்காமல் உட்கார் ந்துக் கொண்டிருந்தான்.

இப்படியிருக்க நடுஜாமத்தில் நாலுஜீவஜந்துக்கள் வந்து ஒரு பக்கம் பெரியபுலியும் ஒருபக்கம் சிங்கமும் ஒருபக்கம் காட்டுநரி யும் ஒருபக்கம் நல்லசர்பமும் இந்தநாலும் கோயிலுக்கு வெளியில் உட்கார்ந்து ஆலோசனைச் செய்துக்கொண்டிருந்தது அச்சமயத்தில் நரியானது ஓ! புலிமாமா இந்தவேளை உமக்கு என்னபோஜனம் கிடை த்தது என்றுக்கேழ்க்க அதற்குப் புலியானது ஓ நரியே நான் கான கஞ்சென்று வேண்டிய எருதுகளைக் கொன்றுதின்றேன் என்றுச்சொ ல்ல அதின்பிறகு சிங்கத்தைப் பார்த்து ஓ சிங்கமாமா உனக்குயேது ஆகாரம் கிட்டியது என்றுகேழ்க்க அதற்குசிங்கம் அப்பாநரியே நான் கானகம் போகும்போது எதிரில் பெரிய யானை வருக அதையடித்து

த்தகத்தை ஒடித்து மூளை நன்றாய்த்தின்று வந்தேன் என்றுச் சொல்ல அதின்பிறகு ஓசர்பமேஉனக்கு ஏது இரைக்கிடைத்ததுயென் றுக்கேட்க அப்பா நரியே நான் பெரிய மீன்களைத்தின்று வந்தேன் என்றுச்சொல்ல இதற்குள்ளாகப்புலியானது நரியைப்பார்த்து ஓநரியே உனக்கு ஏதுயிரைக்கிடைத்தது சொல்லென்றுக் கேட்க அப்போது நரியானது புலியைப்பார்த்து ஓ புலிவேந்தா யான் இன்னாட்டிலிருக் கும் ஏரியில்சென்று நண்டுகளை செவ்வையாய் தின்றுவந்தேன் இதில் லாமல் இன்னங்கேளும்,

புலியெநீகேளு பெருமையுடனென் வார்த்தை
நாளையதினம் நல்லபோஜனமிருக்குதப்பா
இந்தமொழிதன்னை இன்பமாய்புலிகேட்டு
எங்கேபலகார மிருக்கிறதுவுந்தனுக்கு
எந்தனுக்குச்சொல்லுமே யிசைந்துமேயிப்போது
இப்படிகேழ்க்க யப்போதுயந்தநரி
ஆனல்நீகேளும் அன்புடனேயென் வார்த்தை
கிளிப்பட்டணத்தில் கிருபையுடனிருக்கப்பட்ட
வேந்தன் புதல்விக்கு வேதனமாய்முதுகுதன்னில்
இராஜகட்டிவந்து ஆறுமாதமாச்சுது
அநேகவைதியர் வந்துமேபார்த்துவிட்டார்
ஆருல்முடியவில்லை யந்தகட்டியாற்றுதற்கு
நான் - தினந்தினம்யத்தேசம் யருகினில்சென்றுமே
இரண்டுகூச்சல்போட்டு யின்பமாய் வருகுறேன்
நாளைசாயந்திரம் யம்மாதுசாகுராள்
அந்தச்சமயத்தில் யிஷ்டம்போல்தின்குவன்

வசனம்.

இப்படியாக நரிசொல்லவே இதின்வாயில் மண்ணைப்போடவே ணுமென்று மனமிட்டு ஓ நரியே அந்த ஔஷதம் இந்நாட்டில்கிடை யாதா என்றுகேட்க அப்போதுநரியானது ஓபுலியே ஔஷதமென்ன மோ இருக்கிறது மனிதருக்கு அகப்படாது என்றுச்சொல்ல அதற்கு புலியானது கேட்டு ஓ நரியே அதுயெங்கிருக்கிறது சொல்லென்று கேழ்க்க நரியானது ஓ புலியே நாமிருக்கப்பட்ட ஆலயத்தின் மேல் வெள்ளையாக எழுயிலையோடு கருத்தபுஷ்பம் பூர்த்து ஓர் செடியிருக்கி றது அந்தச்செடியில் எழுயிலைகள் அறுத்துக்கொண்டு அந்தச்செடி

யின் கீழ் சஞ்சீவி கொம்பிருக்கிறது அந்தக்கொம்பை யெடுத்துக்கொண்டு சுத்தஜலத்தில் அந்தக் கட்டியைக்கழுவி இந்த இலைகளுக்கு எண்ணெதீட்டி அனல்காட்டி இலைமீதுயிலையாமௌழுயிலைகள்போட்டு இந்த கொம்பால் அடித்து கட்டுக்கட்டி மூன்றுந்தினத்தில் அவிழ்த்துப்பார்க்ககட்டியிருந்தவிடம் இன்னதென்று தெரியாது என்றுச் சொல்லியது.

இத்தனை மொழிகளை பாலகன்கேட்டிருந்தான்
இதற்குள்சூரியன் உதயமானன்கிழக்குதிசையில்
அங்கிருந்தஜீவங்கள் அப்போதுபோச்சுதே
இதைப்பாலகனரிந்து யின்பமாய்வெளியில்வந்து
கோவில்மீதப்போ கொப்பனவேயேரினன்
அந்தயிலைகளை யன்புடனறுத்துக்கொண்டு
சஞ்சீவிகொம்பை தானுமேயெடுத்துக்கொண்டு
இடுப்புதனில் பத்திரஞ்செய்துக்கொண்டான்
பொழுதுபோவதற்குமுந்தி அழகானகிழவியைக்கண்டு
கேட்டையாபாட்டி கிருபையுடனென்வார்த்தை
காசுகள்தருகின்றேன் கன்மூடனன்னமிடு
அந்தமொழிகேட்டு அந்தநல்லக்கிழவிதான்
இந்தச்சமயத்தில் யெந்தனுக்குத்தீறுது
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பாலகனும்
ஏண்டியம்மாதீராது யெந்தனுக்குச்சொல்லுமே
பணத்தைவிட இனிகாரியமென்னடி
நீ-சத்திரக்கிழவி சாதமிடும்தாயாச்சே
இப்படிச்சாதமிட்டு இசைந்துநீபிழைக்குறாய்

## பாலவர்த்திவேந்தன் சத்திரகிழவியை தேசவிந்தைவிசாரிப்பது.

### வசனம்.

இப்படிச்சொல்லவே இதுகேட்டுக் கிழவி அப்பா இராஜகுமாரனே இதுநான்பிழைப்பது நிட்சயமே ஆனல் இப்பட்டணம் பரிபாலிக்கும்வேந்தன்புதல்விக்கு இராஜக்கட்டிப்பிறந்து ஆறுமாதமாய் ஆராதப்படிக்கி தொந்திரவுபட்டு இராத்திரி இரண்டு ஜாமமாய் நிலைக்கண்பட்டு மொழித்தடுமாரி ஆகாரமில்லாமல் இருக்க இன்றுயம்மாது கைச்சோர்ந்து விட்டாளென்று தலைக்கடையில் போட்டார் ஆகையால் அதிக துக்கத்துடன் இருக்கின்றோம் இதுவல்லாமல் அந்தசமஸ்தான

த்தில் பிழைக்கப்பட்டவள் நான் அங்குபோகின்றேன் என்றால் சமயல் செய்யமுடியாது இனியெங்காகிலும் கொடுத்து சாப்பிடுவீர் என்றுச்சொல்ல இதை கேட்டப்பாலகன் ஓபாட்டி இராத்திரிமுதல் சாதம் கிடையாது அந்த இராஜக்கட்டியை நான் தீர்க்கின்றேன் யெனக்கு இந்தவேளை சாதம் போடுவாயென்று கேழ்க்க அதற்கு அந்தக் கிழவி அப்பா உனது கைபால் அந்தக்கட்டியை ஆற்றுவாயா யென்றுக்கேட்க அம்மா யான் அநேக ஜனங்களுகக்கு சவுக்கியம் செய்திருக்கின்றேன் என்று சொல்ல அந்தக்கிழவி தான் இராத்திரிப் பொழுதுக்கு வைத்துக் கொண்டிருந்த சாதம் அப்பாலனுக்குப் போடவே அச்சாதம் தின்றுவிட்டு ஓ? பாட்டி நீபோகும்போது என்னையும் அழைத்து செல்லுவாய் என்றுச்சொல்ல அதுபோல அக்கிழவி பாலவர்த்தி வேந்தனையும் அழைத்துக் கொண்டும்மேடைக்குச்செல்லுஞ் சமையத்தில் அந்த இராஜன் புதல்வியை மேடைமீதிருந்து தலைக்கடைக்கு எடுத்து வருஞ்சமயத்தில் அப்புதல்வி தந்தையும் அநேக வைத்தியரும் வேந்தரும் பந்துக்களும் முகவாட்டமிட்டு சோகமடைந்து தலைக்குணிந்துக்கொண்டு வருக அச்சமயத்தில் கிழவி அவ்வேந்தனைப் பார்த்து ஐயா? இதோயென்னுடன் வந்திருக்கும் மஹானுபாவர் அந்தக்கட்டியைசுவஸ்தம் செய்வாரென்று சொல்லுகிறார்என்றுச்சொல்ல இதைக் கேட்ட வேந்தன் ஓ? கிழவி இதுவெல்லாம் வீண்வார்த்தை அநேகவைத்தியரும் பார்த்து தீரவில்லை இவரால் எதுமுடியும் இதில்லாமல் இப்பெண்ணுக்கு ஆயிசு இவ்வளவுதான் ஆகையால் இந்தக்கட்டிப் பிறந்தது என்றுச்சொல்ல, இதற்குள்ளாக அங்கிருந்த பெரியோர்இதைக் கேட்டு ஒ இராஜோத்தமா நீயிப்படிச் சொல்வது சரியல்ல எவர் கைபாக யெப்படியிருக்குமோ தெரியாது அப்படியிருக்க அப்புதல்வனையழைத்து அக்கட்டியைக் காட்டும்படி திட்டஞ்செய்ய அதுபோல் அவ்வேந்தன் அப்பாலகனையழைத்து அப்பா இந்தக்கட்டியைபார்த்து சொல்லென்றார் அதுபோல் பாலகன் அந்தக்கட்டியைப் பார்த்து ஐயா இதையான் லகுவாக்கிறேன் என்றுச் சொல்லி நலல ஜலத்தைக் கொண்டு வரும்படி திட்டஞ்செய்ய அதுக்கொண்டுவந்தவுடன் அந்த ஜலத்தால் அக்கட்டியைக் கழுவிசுத்தம்படுத்தி தன் இடுப்பிலிருக்கும் இலைகளை எடுத்து யெண்ணெத்தடவி ஒன்றும்மேலொன்றாய் ஏழுயிலைகள் போட்டு கந்தைத்துணியால் கட்டி தன் கையிலிருக்கும் சஞ்சீவிக் கொம்பால் அந்தக்கட்டியை ஓரடியடித்து. விட்டான்

## பாலவர்த்திவேந்தன் கிளிப்பட்டணத்து இராஜபுதல்விக்கு வந்த இராஜக்கட்டியை ஆற்றுதல்.

சற்றுநேரத்திற்குள் சாமிகிருபையாலே
அந்தமாதுக்குமே அறிவுபிறந்தது
கண்ணைத்திறந்துமே கடுகப்பார்த்தாளப்போது
அங்கிருந்தசிலபேர்கள். அப்போது பேசிக்கொண்டார்
மயக்கமும்போச்சுது மரணமுந்தீர்ந்தது
இன்னஞ்சிலபேர்கள் யேதென்றுச்சொல்லுகின்றார்
இனிபயமில்லேதான் யிந்தநல்லமாதுக்கு
இப்படிபேசிக்கொண்டு யிருந்தாரேபரிஜனங்கள்
அந்தநல்ல சமயத்தில் யறிபாலவேந்தனும்
சிவனைநினைந்து சிவயோகஞ்செய்திருந்தான்
அப்போதுபாலகன் போஜனஞ்செய்யவில்லை
ஐயோசிவனே அன்னிதமாகவேதான்
மிருகங்கள்சொன்னதொரு நிக்ஷயமென்றுசொல்லி
இந்தவைதியத்தை இன்பமாயான்செய்தேன்
அபகீர்த்திவருகாமல் ஆதரிக்கவேணுமையா
நீயேகெதியென்று நின்றேனேவையகத்தில்
காக்கவேவாருமையா கைலாசபதிதேவா
இப்படிச்சொல்லிக்கொண்டு இருந்தானேபாலகனும்
இப்படியேமூன்றுதினம் இசைந்துபோச்சுது
அப்போதுபாலகன் யெல்லோரையும் வரச்சொல்லி
அருகினில்வைத்துக்கொண்டு அப்போதுபாலகனும்
சொல்லத்தொடங்கினான் சிறப்புடனச்சமயம்
கேட்டீரோவேந்தர்களே கிருபையுடனென்வார்த்தை
இந்தக்கட்டியைதான் இப்போதவிழ்க்குரேன்
கட்டியிருந்தவிடம் காட்டிவீரெந்தனுக்கு
இப்படிச்சொல்லி யவிழ்த்தானேகட்டியை
வேந்தர்கள்அப்போது பார்த்தாரேகட்டியை
கட்டியிருந்தவிடம் கானவேதோற்றவில்லை
அப்போதுயவ்வேந்தன் யறிவுற்றப்பாலகனை
வாரியெடுத்துக்கொண்டு வண்மையாய்மடியில்வைத்து
அழகுசுந்தரமே ஆஸ்தானரத்தினமே
பிரம்மதேவனுன்னை பிரியமாயனுப்பினானோ

ஆதிசிவனுன்னை அன்பாயனுப்பினானே
சந்திரப்பாலகனே சிறப்புடனிந்தவித்தை
எங்குநீகற்றாயடா இந்தவயதுதன்னில்
இப்படிச்சொல்லி அவ்வேந்தன் சந்தோஷித்தான்
இந்தச்சேதிதன்னை யன்னாடுயெங்குமே
இருக்கும்பிரஜைகளும் யரிந்தாரேசேதிதன்னை
எல்லோரும்வந்துமே பார்த்தாரேபாலகனை
இப்படிப்பார்க்க இசைந்துயவ்வேந்தனும்
இதுநீதியல்லவென்று அப்போதுபாலகனை
பல்லக்குதன்னிலேற்றி பக்குவமாய்நாலுவீதி
ஊர்கோலம்செய்யவைத்தார் உப்பொங்கியாலகனை
நாலுவீதியுஞ்சுற்றி நலமாகவந்தபிறகு
வேந்தனும்பாலகனும் வேகமாய்ஸ்தானஞ்செய்து
போஜனம்தானரிந்து புகழ்ந்துகொலுவில் வந்து
வைத்தியருக்கெல்லாம் வெகுமதிகள் தான்கொடுத்தார்
எல்லோரும்போனபின்பு இசைந்துமேவேந்தனும்
பாலகனைப்பார்த்து பக்குவமாய்சொல்லலானார்
எந்தன்மகளையிப்போதுநீ பிழைக்கச்செய்தீரையா

## கிளிப்பட்டணத்து வேந்தன் தன்மகளை பாலவர்த்திவேந்தனை கலியாணம் செய்துக்கொள்ளும்படி சொல்வது.

### வசனம்.

ஓ? இராஜபுத்திரனே நீ யென்புதல்வியை பிழைக்கச்செய்தப்படியால் என்புதல்வியை,

நீரேகலியாணம் இன்பமாய்செய்துக்கொள்ளும்
அந்தமொழிக்கேட்டு அப்போதுபாலகனும்
வந்துவெகுநாளாச்சு அய்யாவேபோகவேண்டும்
இப்படிச்சொல்லவே இதுகேட்டார்வேந்தனும்
கலியாணஞ்செய்துக்கொண்டு கடுகவேநீர் போவீர்
இப்படிச்சொல்லவே இதுகேட்டான்பாலகனும்

### வசனம்.

ஐயா இராஜோத்தமா எனது தந்தையான சார்பவர்த்தி வேந்தனும் எனது பெரியதந்தைகள் ஆறுபேரும் பாணுகண்டி பட்டணம்பரிபாலித்தவர் எனது தாயாராகிய ஸ்ரீ பாலநாகம்மாளை நாகள்ளபூடியில் இருக்கப்பட்ட மாயப் பக்கிரியானவன் சிறை யெடுத்துக் கொண்டு போனான் அவன்மீது என் தந்தைகள் யுத்தசன்னுத்தராய்

போக அவரை யதஞ்செய்து விட்டான் யென் தாயார் சிரையிலிருக்குறுள் நானிப்போது கலியாணஞ் செய்வது நீதியல்ல மறுபடியும் வரும்போது கலியாணம் செய்யுகுரேன் ஆகையால் எனக்கு செலவுக் கொடுக்க வேண்டுமென்று கேட்க அதற்கு அவ்வேந்தன் பாலகனைப் பார்த்து? ஓ இராஜபுதல்வனே யின்று அஷ்டமி நாளையதினம் நவமி அதன் மறுநாள் தசமி ஆகையால் இதைத்தள்ளிப் போகலாமென்று அவர் பிரயாணத்தை நிறுத்தினர் இப்படிருக்க கெங்கவாதி பட்டணத்தில் விட்டு வந்த விப்பிரவன் பதினைந்து தினத்திற்கெல்லாம் திரேகத்திற்கு அதிக பலம்வந்து அப்போது அந்தப்பிராமணன் வேந்தனைப் பார்த்து ஐயா நீர் கொடுக்கும்படியான உழக்கு அரிசியைப் பார்ப்பது எனக்கு கிரஹசாரமா இதோ யான்சென்று அந்தப்பாலவர்த்தி வேந்தனைக் கலந்துக்கொண்டு போகுரேன் என்று அவருடன் சொல்லி பிறகு தன்மனதில் எவ்விதத்திலாவது அவனைக் கொன்று அவன் தரித்திரிக்கும்படியான பூஷணங்களை அபகரித்துக்கொள்ள எண்ணமிட்டு உடனே உதயமானவுடன் செம்பு ஒன்றை யெடுத்துக்கொண்டு கத்திவொன்றை சம்பாதித்துக்கொண்டு பொழுது போவதற்குள்ளாக கிளிப்பட்டணம் வந்து சேர்ந்தான். அப்பட்டணம் வந்தவுடனே சத்திரக்கிழவியைக் கண்டு நீர் மோர் தாகம் பெற்றுக்கொண்டு அம்மா பாட்டி இந்தப்பட்டணத்தில் என்ன வர்த்தமானம் யென்று கேட்க அதற்கு அந்தக்கிழவி அப்பா எங்கள் வேந்தன் புதல்விக்கு முதுகில் இராஜகட்டிக் கண்டு துயரப்பட அதைப் பாணுகண்டிப்பட்டணத்துவேந்தர் புதல்வன் அக்கட்டியை ஆற்றினன் அவன்பெயரோ பாலவர்த்தி வேந்தன் என்பார் அவனுக்குயெங்கள் சூர்யவர்த்திவேந்தன் தன் புதல்வியைக் கொடுத்து கலியாணம் செய்குரேன் யென்றார் அதைவெறுத்து தன் தாயாரை யழைத்து வருவதற்காக உதயமானவுடன் புசித்துப்போகிறான் என்று அக்கிழவிச்சொல்ல அதைக்கேட்டப்பிராமணன் அம்மா உதயத்திற்கு போகுறரா அவருக்கு உமதுவேந்தன் ஏதாகிலும் வெகுமதிகள் கொடுத்தாரா என்றுக்கேட்க அம்மாது அப்பா யவருக்கு பதினாயிரம் வராகன் வெகுமதிகள் கொடுத்தார் என்றுச்சொல்ல அதற்கு யந்தச்சண்டாளப் பிராமணன்,

---

பிராமணன் கிளிப்பட்டன சத்திரம் வந்துசாப்பாடு கேழ்ப்பது.

என்னசந்தோஷம் இந்தமொழிக்கேட்டேனம்மா
உனக்குஉதயமாகாமுந்தி யெழுந்துசாதமிடுவாயா

சாதம்யான்புசித்து சம்பிரமாயானுமே
அவருடன்சென்றுமே அன்பாய்நான்போகுறேன்
ல்லதுயென்றுச்சொல்லி நயவார்த்தைசொன்னால்கிழவி
அப்போதுவேதியன் அயர்ந்துநித்திரைசெய்தானே
உதயமானஉடனே யெழுந்தானேபிராமணன்
எழுந்திரடிபாட்டி யிப்போதுநீயுமே
உதயமாச்சுதடி உகந்துசாதம்சமிப்பாயடி
இந்தமொழிகேட்டாள் இன்பமாய்கிழவி
நாந்தன்வீட்டினில் அரிசியில்லையிப்போது
அரிசிக்கொண்டுவந்தால் அன்புடன்சாதம்செய்வேன்
கடைவீதிசென்றுமே கருணையாய்வாங்கிவந்தால்
சாதம்சமிப்பேன் சிறப்புடன்வட்டிப்பேன்
இத்தனையுங்கேட்டான் இன்பமாய்பிராமணன்

வசனம்.

கிழக்கு வீதியிலிருக்கப்பட்ட கோமுட்டி வீட்டிற்குவந்து ஆரை
ா கோமுட்டி கதவுதிரப்பீர் என்றுக்கேட்டான் அதற்கு கோமுட்டி
ீ ஆரையா யென்றுக்கேட்டான் இம்மொழிக்கேட்டப் பிராமணன்
லயா ஒருபடி அரிசிவேண்டியது என்றுச்சொல்ல கோமுட்டிகேட்டு
இதுமகா லாபமடையும்படியான பேரம்வந்தது ஆனால் இங்குபடியும்
அரைப்படியும்உழக்கு இந்தயிருட்டினில் அகப்படாது ஆகையால்உத
யமானபிறகு வந்தால் கொடுக்கிறேன் என்றுச்சொல்ல யம்மொழி
பிராமணன் கேட்டு உதயமாகிரவரைக்கும் அங்கு உட்கார்ந்திருந்து
ஓய் செட்டியாரே அரிசிகொடும் யான்போகிறேன் என்றுக்கேட்டான்
அதற்கு அந்தச்செட்டி போனிசெய்யுமென்று கேட்க விப்பிரவன்கே
ட்டு இப்போதென்னிடம் காசுக்கிடையாது இரண்டுமணி நேரமானப்
பிறகு தருகிறேன் அதுவரைக்கும் இந்த சொம்பு வைத்துக்கொண்டு
போணிசெய்யும் என்றுச்சொல்லிக் கொண்டிருக்க உதயமாகி இரண்டு
மணிநேரமாச்சுது அச்சமயத்தில் பாலவர்த்தி வேந்தன் போஜனஞ்
செய்துக்கொண்டு,

**பாலவர்த்தி வேந்தன் புறப்பட்டு நாகள்ள பூடிக்கு போகும் சமயத்தில் வேதியனைக்கண்டு விசாரிப்பது.**

பிரயாணமென்று புறப்பட்டான்பாலகன்
வேந்தருமப்போது வழிவிட்டார்பாலகனை

இராஜவீதியாக வருகுறான் பாலகனும்
அந்தச்சமயத்தில் அறிவுகெட்டப்பிராமணன்
அரிசிவாங்காமல் அந்தச்சந்துவந்தானே
அந்தப்பிராமணனை பார்த்தானேபாலகனும்
வந்தனமையா வாருமையாபிராமணா
இங்குயேனோநீ இன்பமாய்வந்தீரையா
அந்தவிடத்தில் அன்பாகவிட்டுவந்தேன்
அந்தவிடம்விட்டு இங்குவரக்காரியமென்ன

வசனம்.

ஐயா இராஜோத்தமா யான் இப்போது தான் வந்தேன் இந்த சத்திரத்தின் கிழவியிடம் சாதம் செய்யும்படி திட்டஞ் செய்திருக்கின்றேன் இதோ யான் புசித்து வருகிறேன் என்றுச்சொல்ல அந்த மொழிக் கேட்ட பாலவர்த்தி வேந்தன் கேட்டு இதுயெல்லாஞ் சரிதான் நீ வந்தக்காரியம் ஏதென்றுக் கேட்க அப்போது விப்பிரவன் சொல்லத்தொடங்கினான், ஐயா இந்நாட்டு சூர்யவர்த்தி வேந்தன் புதல்விக்குயிருந்த இராஜகட்டி உன்னால் லகுவாச்சுதென்ற சங்கதி புலிவேந்தன் கேட்டார் அவர் மாமன் குமாரத்திக்கு இதுப்போல் இருக்கிறதென்று உம்முடன் சொல்லும்படி சேதுவரை அனுப்பினார் மறுபடியும் அவர் சொன்னது அவ்வேந்தன் தாயாரையழைத்து வருகப்போகுறார் நாங்கள் வரும்படிச்சொன்னால் வருகுவாரா ஓ பிராமணா உனக்கு மவருக்கும் சிநேகிதமல்லவா நீசென்றால் வருவார் யென்று என்னை அனுப்பினார் யென்றுச் சொல்ல இதை கேட்டப் பாலகன் இவன் யுக்தியை தெரிந்து நானெங்குவருகிறது போகிறபிரயாணம் திரும்பலாகுமா அந்த கட்டிக்கு மருந்துச் சொல்லுகிறேன் நீ எடுத்துக்கொண்டுப் போகிறாயா என்றுச் சொல்ல நல்லது நீர் சொல்லுமென்று கேட்டான் அப்போது பாலகன் இதைக்கேட்டு சந்தோஷமடைந்து ஐயா வேதியரே இந்தக் கிளிப்பட்டணத்திற்கு வடமூலையில் இருக்குங் கானகத்தில்பாழுங்கோவில் இருக்கிறது நீபோஜனமருந்தி பொழுதுப்போனப்பிறகு அங்குசென்று அந்தக் கோயிலுக்குள் புகுந்து கதவு திறந்து வைத்துக் கொண்டிருந்தால் நடுஜாமத்திற்கு அந்தக்கோவில் நாலு பக்கமும் நாலுஜீவராசிகள் வந்து குந்திக்கொண்டு ஆலோசனை செய்துக் கொண்டிருக்கும் அந்தச் சமயத்தில் ஓ புலி வேந்தனே இராஜக்கட்டிக்கு மருந்து ஏதென்றுக் கேளும் அந்தப் புலி அம்மருந்தைச் சொல்லும் யென்றுச் சொல்லி,

பாலகனப்போது பகர்ந்துநடந்தானே
இத்தனை கேட்டப்பாப்பான் யின்பமாய்புசித்துப்பரிந்து
பொழுதுபோவதும் பார்த்தானேயப்போது
கோவிலுக்குவந்து யமர்ந்தானே விப்பிரவன்
தவுதிரக்கயப்போ கடும்பயம்கொண்டானே
தவுயிரண்டையும் கனத்தாளமிட்டானே
அந்தச்சமயத்தில் வந்ததுநாலுஜீவம்

வசனம்.

இப்படியாக வந்த மிருகங்கள் அதுகள்புசித்த ஆகாரத்தை
னைந்து பேசியது,

புலிவேந்தாநீயுமே புலிதன்னிலிப்போது
என்னஆகாரம் இன்பமாய்தின்றுவந்தாய்
அப்போதுபுலியும் அன்பாகச்சொல்லியது
காட்டிலெனக்கு காட்டெருதுகிட்டியது
அந்தச்சமயத்தில் அந்தநரிதானெழுந்து
இந்தவிடத்தில் இனியேதுமனிதர்நாற்றம்
அந்தமொழிக்கேட்டு யப்போதுவேங்கையும்
பயித்தியம்பிடித்தவனே பாழ்க்காட்டில்மனிதரோது

வசனம்.

இப்படிச்சொல்லவே நரியானது இதோ யான் அந்தமனிதனைப் பிடித்து தருகின்றேன் என்று தன்வாலை அந்தக்கதவு சந்தில் விட்டுப் பார்க்க இவன் யிருப்பதை அறிந்து கதவைத்திறந்து யெல்லாம் ஜீவமும் உட்புகுந்து அவனைகொன்று தின்றுவிட்டது.

அப்போதுபாலகன் யன்பாகத்தானடந்து
நயனவாதிப்பட்டணம் வந்துபுசித்தானப்போ
நாகள்ளபூடி நடுயெல்லைவந்தானே
அப்போதம்மருதி அகப்பட்டதுயவனுக்கு

வசனம்.

பாலகன் இந்த மருதியைப்பார்த்து இந்தமருதிதன்னிலேதான் நமது தாயார் இருப்பது அந்தக்கோட்டை சுற்றிலும்தான் நமது தந்தைமார் அதமாய்விட்டது என்றுச் சொல்லிக்கொண்டு வருக அந்த எல்லைமீது பக்கிரி பராசத்தியை காவல் வைத்திருக்கிறுன் எனென்றால் யாராகிலும் பகையாளி கோட்டைமீது வந்தால் அவர்களை கொல்லும்படி திட்டஞ்செய்து வைத்தான் இப்படிருக்க அந்தப்பாலகன்

வருவதைக்கண்டு ஆ.ஆ நாமெப்போது இப்படிக்ொத்த ரூபவந்த
னைப் பார்த்தது கிடையாது நாம் இந்த கோரவேஷத்துடன் போனல்
நம்மைக்கண்டு பயமடைந்து சாகுவான் அப்படிச்செத்தவனைத் தின்
ருல் ருசிக்கரமிருக்காது என்று மாருவேஷம் போட்டுக் கொண்டு
போய் அவனை பிராணத்துடன் கரகரவென்றுகடித்து முழுங்கினல்
என்மனம் சந்தோஷிக்குமென்று எண்ணமிட்டுயதிபால்ய ரூபந்தரித்து
கில்கொண்டைப்போட்டு இடது கையில் தாம்பூலம்பிடித்து புன்னகை
நகைத்துக்கொண்டு அந்தபாலியன் எதிராக கலகலென்று நடந்து வா
தாள் அச்சமயம் பாலகன் பார்த்து நீயாரென்றுகேட்க அய்யா? நாங்
கள்தம்பதி யுக்தமாய் இந்த மார்க்கமாய் வருக இக்கானகத்தில் இரா
நின்ற செடியின் கீழ்பிரசவித்தேன் உங்கள் கடாக்ஷத்தால் ஆண்புத
ல்வன் ஜனித்தான் அந்தப்புதல்வனுக்கு எண்ணையிடுக எங்களிடம்
ஒத்தைக்காசுக் கிடையாதப்படியால் ஓர் மகாப்பிரபு நேற்றியதினம்
நாலுக்காசுதந்தார் அது செலவழிந்து விட இந்த வேளைக்கு ஏதும்
கிடையாதப்படியால் விசனமடைந்திருக்க பகவான் உம்மைக்காட்டி
ஞர் ஆகையால் யேதாகிலு கேட்கலாமென்று வருகலானேன் என்
றுச்சொல்ல இதைக்கேட்டப்பாலகன்,



காளி பாலவர்த்திவேந்தனை மோகிப்பது.

எல்லையிலிருக்கும் காளிநீயல்லவோடி
இதற்குமுந்திதான் உன்வேஷமென்னடி

இப்போதுநீதான் யிவ்வேஷமெடுத்ததேண்டி
அப்போதுபாலகன் அன்பாய்கத்திவுருவினான்
த்தியைக்கண்டு சக்தியும்நடுகினாள்
அய்யாவேஅய்யாவே அன்புள்ளவேந்தனே
ன்னைத்தின்பதற்கு வுகந்துமேவந்தேன்நான்
இப்போவுன்னைக்காண யிடிவிழுந்ததென்மனதில்
இந்தச்சமயத்தில் இச்சைக்கொண்டேனுன்மீது
மோகத்தைத்தீர்த்துவிட்டு முகந்துநீபோகுவீர்
இந்தமொழிக்கேட்டான் இன்பமாய்பாலகனும்
ன்னம்சிருப்பிள்ளை சித்தம்வைத்தாய்யென்மீது
ாயைத்தின்றால் கனிருசிகொள்ளுமோதான்
னக்குயேண்டியிம்மோகம் வுருதியாய்கொண்டதடி
இப்படிச்சொல்வது யிதுவுனக்குபுத்தியல்ல
தூரமாய்போடி துர்மதிகொண்டவளே
இப்படிச்சொல்லவே இதுகேட்டாள்சத்தியும்
ஐயாவேயெந்தனே யன்புடன்சேர்ந்திட்டால்
ன்தாயார்கிடைக்க தருந்தமார்க்கம்காட்டுரேன்
ாதகியானுமே பக்குவமரியாதவன்
ாதருடநடப்பது மங்கையேநானறியேன்
இப்படிக்கொத்தவனை இச்சிக்கலாகுமடி
இதுகளைக்கேட்டாளே இன்பமாய்சத்தியும்
ஆனால்நீர்கேளுமே அன்புடனென்வார்த்தை
என்பலத்தைவுந்தனுக்கு இப்போதுயான்தாரேன்
இப்படிச்சொல்லி இசைந்துபலந்தான்கொடுத்து
பாலகனோடெயப்போ பலக்கிரீடைதான்புரிந்தாள்
அந்தமோகத்தாலே அவள்கைப்பிரம்புக்கொடுத்தாள்
அந்தச்சமயத்தில் அறிவுபெற்றபாலகன்
என்னடிபராசத்தி செந்தாயார்கிடைக்குமார்க்கம்
இப்பவேசொல்லடி யின்பமாயெந்தனுக்கு
அய்யாவேந்தனே அன்புடநீகேளும்
நாகள்ளபூடிகரைக்கு நயந்துநீபோகுவீர்
அந்தக்கரைதன்னில் அன்பாகயிருக்கப்பட்ட
வணிகக்கிழவியொருத்தி வாழ்கிறாளங்குதான்
அந்தநல்லக்கிழவி அன்புடனேபக்கீரிக்கு
புஷ்பங்கள்கட்டி புகழுடனவசிக்கிறாள்

அந்தப்பக்கிரி அந்தநல்லமாதுக்கு
தம்பள்ளக்கிழவியென தானுமேபேருமிட்டான்
அவள்-ஜாதியிலேவணிகச்சி ஜெகமெங்குமரிந்தவள்
அந்தக்கிழவிவீட்டை அன்பாகநீதேடி
அங்குதான்நீசென்று அறிவுள்ளவேந்தனே
தாகத்துக்குநீகேட்டால் தயவுடனேவுந்தனே
எந்தவூரென்று இன்பமாயவள்கேழ்ப்பாள்
மேற்குசீமையென்று மேன்மையாநீசொல்லும்
வீட்டின்பேர்தந்தைபெயர் வேகமாயவள்கேழ்ப்பாள்
அப்போதுநீதான் அன்பாகச்சொல்லுமே
எந்தன்தந்தைபெயர் தம்பள்ளசரபையா
எந்தன்தாயார்பெயர் தம்மள்ளநாகம்மாள்
எந்தன்வீட்டின்பெயர் தம்பள்ளகுலமென்பாய்
எந்தனுடையபெயர் வீரையானென்றுமே
இப்படிசூதாக அப்போதுநீசொன்னால்
உன்னைப்பெற்றதாயார் உகந்துமேயகப்படுவாள்
பக்கிரிக்குநீதான் பகையாளியாகுவாய்
உந்தன்தாயாரை இன்பமாய்கொண்டுவருவாய்
இப்படிச்சொல்லவே இசைந்துமேபாலகன்
நல்லதுயென்றுசொல்லி நடந்தானேயப்போது
நாகள்ளப்பூடி நலக்கரைவந்துசேர்ந்தான்
தம்பள்ளவீட்டை தானுமேகேட்டுக்கொண்டு
அப்போதுபாலகன் அந்தவீட்டிற்குவந்து




பாலவர்த்திவேந்தன் நாகள்ளபூடியில் இராநின்ற புஷ்ப வணிகச்சி வீட்டிற்குப் போவது.

வசனம்.

ஆரம்மா இந்தவீட்டினில் என்றுகேட்டவுடன் அக்கிழவி ஓடி வந்து நீயாரென்று கேழ்க்க அதற்கு பாலகன் அம்மா ஆராகிலு மென்னகொஞ்சம் குடிப்பதற்குஜலம்தாருமம்மா என்றுக்கேட்டவுட னே அம்மாது அதுபோல் தாகம் கொடுக்க அதைகுடித்தப்பிறகுகிழ வியானவள் இப்பாலகனைப் பார்த்து அப்பா நீ என்னுடு என்றுகேட்க அதற்குபாலகன் அம்மா எனது மேற்குராஜ்யம் எனது வீட்டின்பெ யர் தம்பள்ளகுலம் என்றுச்சொல்லவே இதைக்கேட்ட கிழவி ஆச்சரி யமுற்று அப்பா பாலகனே உனது தாய் தந்தை பெயரென்ன உன் பெயரென்ன தெரியச்சொல்லு மென்றுகேட்க அப்போது பாலகன் அம்மா பாட்டி என்தந்தை பெயர் சரபையன் என்தாய்பெயர் நாகம் மா என்பெயர் வீரய்யன் என்றுச் சொன்னவுடனே,

எந்தன்மகள்புதல்வன் இவனுகுமென்றுசொல்லி
சந்தோஷந்தானடைந்து சிறப்புடன்வோடிவந்து
பாலகனையப்போ பக்ஷமாயெடுத்துக்கொண்டு
உச்சிமுகந்து உள்ளங்கால்முத்தமிட்டு
சந்தோஷமடைய சம்பிரமாயன்னுட்டில்
அண்டையசலில் அன்பாகயிருப்பவர்கள்
எல்லோரும்வந்து இன்பமாயிவனைப்பார்த்து
ஆரம்மாயிவன் அன்பாகசொல்லுமென்முர்
அப்போதுக்கிழவி அவருக்குவுரைத்தாளே
எந்தன்புதல்விகுமாரன் இவனுகும்யம்மாமாரே
இப்படிச்சொல்லி அப்போதுயக்கிழவி
பாலகனைப்பார்த்து பண்புடன்கேழ்க்கலானுள்
இத்தனைநாளாக யெங்கிருந்தாய்பாலகனே
உன்தாய்தந்தைமார்கள் சிறப்புடனிருக்கிறூர்
இந்தமொழிக்கேட்டு அப்போதுபாலகனும்
அம்மாடியம்மாடி அன்புள்ளபாட்டியரே
என்தாய்தந்தைமார்கள் சம்பிரமாய்மாண்டுவிட்டார்
இப்படிச்சொல்லவே இதுகேட்டுக்கிழவிதான்
குய்யோமுறையோவென கூச்சலிட்டுயழுதாளே

வசனம்

இப்படிக்கிழவி அங்கு யிருப்பர்களுக்கு எல்லாம் அம்மா என் புதல்விபெயர் நாகம்மாள்தான் என்மருமகன் பெயர் சரபையன்தான் அவருக்கு ஓரே புதல்வன்தான் அவன்பெயர் வீரையன் முந்தி இங்



பாலவர்த்திவேந்தனைநாகள்ளபூடியிலிருக்கும்ஜனங்கள்வந்துபார்ப்பது.

பிழைப்பில்லாதப்படியால் மேற்கு சீமைபோய் விட்டார் ஆகையால் இவன் என்பேரப்புதல்வன் என்றுச் சொல்லிவிட்டு அடா பாலகா நீ எங்குபோக வந்தாய் என்றுக் கிழவிகேட்க அதற்கு அவ்வேந்தன் அம்மா பாட்டி தாய்தந்தைமார் இறந்தபிறகு திக்கில்லாதப்படியால் ஏதாகிலும்இராஜ்யம்சென்றுபிழைப்போம்என்று எண்ணமிட்டேன் பிறகு நான் சின்னவனாய் இருக்கும்போது என்தாய் தந்தைமார் இந் நாட்டில் எனதுபாட்டி இருப்பதாய் சொல்லி இருந்தார் அம்மொழி ஞாபகம் வந்து நாடெங்கும் கேட்டுக்கொண்டு உன்னருகில் இருக்க லாமென்று இத்தனை தூரம் வரலானேன் என்றுச் சொல்ல இதைக் கேட்டக்கிழவி அடா கண்மணியே எனக்கும் ஆருமில்லை திக்கில்லா தப்படியால்தான் நான் இந்த பக்கிரிக்கு புஷ்பமாலைகள் கட்டிக்கொடு ப்பதாய் சம்மதமடைந்து இருக்கயவன் நித்தியமும் அரைப்படிசோ ளம் தருகின்றான் அதுவொருவேளைக்கு வருவது கஷ்டமாயிருக்கிற தென்றுச்சொல்லி நல்லதுநீயெங்கும் போகவேண்டாம் இங்குதானே இருப்பாய் யெனச்செப்பி நிறுத்திக்கொண்டாள் இப்படிமூன்றுநாள் சென்றப் பிறகு நாளாந்தினத்தில் அப்பாலகன் அக்கிழவியைப் பார் த்து அடிப்பாட்டி நீ கட்டும்படியான புஷ்பஹாரத்தை யான் கட் டுவேன் என்றுச்சொல்ல இதைக்கேட்டு அடாசெல்வமே உனக்குத் தெரியுமா யென்றுகேட்க அதற்கு அப்பாலகன் அடிப்பாட்டி இத் தனை நாளாக நாங்கள் இந்தப்புஷ்பம் கட்டியல்லவா பிழைத்தோம் என்றுச் சொல்லவே,

உன்கையாலாலால் கட்டுமென்றுதான் கொடுத்தாள்
அப்போதுபாலகன் அன்பாகபுஷ்பங்களை
போராகவொட்டிக்கொண்டு பெருமையாய்தானமர்ந்து
அப்போதுபாக்கிரிக்கு அன்பாககட்டலானான்
மல்லிமொக்குமாலை மகிழ்ந்துமேகட்டினான்
புஷ்பத்தாலங்கி புகழ்ந்துமேகட்டினான்
பாரிஜாதகட்டில் பகர்ந்தானேபுஷ்பத்தால்
அளவுசரியாக அந்தக்கட்டில்செய்தானே
வேரேகய்ரெடுத்தான் வேகமாய்பால்கவும்
தன்னைப்பெற்றதாயக்கு தானுமேயப்போது
ஒண்டிமாலைதான் வேகமாய்கட்டினான்
அந்தமாலைதன்னில் அன்பாகமோதிரம்
கழட்டியேவைத்து கடுகவேமாலைகட்டி
அம்மாடியம்மாடி அன்புள்ளபாட்டியரே
இந்தபுஷ்பஆரம் இன்பமாநீயெடுத்து
பக்கிரிதனக்கு பக்குவாய்கொடுப்பாயே
இந்தபுஷ்பஆரம் பாலநாகம்மாளுக்கு
இப்படிகொடுமென்று ரெண்டாய்பிரித்துதந்தான்
அந்தக்கிழவியும் அன்புடனேஆரங்களை
கையில்பிடித்துக்கொண்டு கடுகநடந்துவந்தாள்
பக்கிரியெதிரில்வந்து பகுர்ந்தஆரம்தான்கொடுத்தாள்
அந்தஆரங்களை அப்போதுபார்த்தானே

வசனம்.

அரே தம்பள்ளக்கிழவி இத்தனைநாளாக இந்தவேலை எங்கேவைத்திருந்தாய் இந்தபுஷ்ப ஆரத்தின் விநோதத்தை நான் என்னவென்றுச்சொல்வேன் அரேக்கிழவி இதையார் கட்டியது என்றுக் கேட்க ஐயாஎனது மகளுடைய குமாரன் கட்டினனய்யா யென்றுசசொல்ல இதைகேட்டப் பக்கிரி அவன் எப்போவந்தான் ஐயாமூன்றுதினமாச்சுது சரிதான் இன்றைக்காகிலும் நாளையதினம் அதிகசம்பிரமாய்இருக்கட்டும் அந்தபையன் அதிகவேலைக்காரன் அவனைநன்றாய் காப்பாற்றுவாய் என்றுச்சொல்ல இதைக்கேட்டகிழவி ஐயா நீர் கொடுப்பது அரைப்படிசோளம் அதுயெனக்கு ஒருவேளைக்கு வருவதுமகா கஷ்டமாயிருக்கிறது அவனுக்கு எப்படி யான் போஷிப்பது நீங்கள் ஏதாகிலும் கொடுத்தால்காப்பாற்றுகிறேன் என்றுச்சொல்லவே இதைக்கேட்டப்பக்கிரி அக்கிழவியை அழைத்துக்கொண்டுப்போய் உக்கிரா

ணவீட்டைத் திறந்து இரண்டு கரிசைஅரிசியும் ஐந்துமரக்கால் பருப்பும் நாலுமணங்கு புளியும் மூன்றுமணங்கு மிளகாயும் ஒருசித்தை நெய்யும் கொடுத்து பாலகனை காப்பாற்றும்படி திட்டஞ் செய்தனுப்பினுன் அதைப்பெற்றுக்கொண்டு சந்தோஷமாய் பாலநாகம்மாள்மேடைக்கு வந்து அம்மாதுக்கு கொடுக்க வேண்டிய புஷ்ப ஆரத்தை கொடுக்க அந்த மாலைதனைப்பார்த்து அம்மா பாட்டிநான் எந்த வேஷமாயிருக்கின்றேனே அந்த வேஷத்திற்குத் தகுந்தபடி நீமாலை கொண்டுவந்துக்கொடுத்தாய் ஆனல் இதுயெனக்கு வேண்டாம் என் அழகு யார் பார்க்கப்போகுமுர் என்றுச்சொல்லி அந்தமாலைதனை தூணுக்கு விசிரி அடித்தாள் அடித்த மாத்திரத்தில் அந்த மாலைதன்னிலிருந்து மோதிரம்விழ அதைக்கண்ணுலே பார்த்தவுடனே,



பாலநாகம்மாளுக்கு தம்பள்ளக்கிழவி பூமாலைக் கொடுப்பது.

ஸ்தன்யபானத்தில் பாலும்பொங்கியது
அய்யோமகனே அருமையுள்ளகண்மணியே
நான்பெற்றசெல்வமே நவபாலவர்த்திவேந்தா
என்குமாரன்கைமோதிரம் இங்குவரக்காரியமென்ன
பார்க்ககண்கூசுதே பாலகன்கைமோதிரத்தை
எப்படிவந்தாய் யென்புதல்வன்மோதிரமே
பாலகன்வாராமல் பார்க்கமோதிரமனுப்பினானே
நீயேன்வந்தாய்பாலகா இந்தபாவிநாட்டிற்கு
பாவிச்சண்டாளன் படுப்பாவிபக்கிரிதான்
உன்தந்தைகளை உகந்துவதம்செய்தானே

இப்படிச்சொல்லி யிசைந்து துக்கங்கொண்டாளே
அந்தமோதிரத்தை அன்பாக யெடுத்துக்கொண்டு
மவுனமாயிருந்தாளே மங்கையுமப்போது
இந்தக்கிழவியும் யிசைந்து தன் வீடுவந்து
பாலகனைப் பார்த்து பக்குவமாய் சொல்லலானாள்
உந்தன்கை மாலைதன்னை யுகந்துபார்த்து பக்கிரியும்
சந்தோஷப்பட்டு சரிபரிப்புயரிசி தந்தான்
இன்னம் மாலைகள் விந்தையாக நீட்டுவாய்
மாலை தன்னைப் பார்த்து மகிழ்ந்த ரிசிதான்தருவான்
அந்தச் சமயத்தில் அந்த நல்லபாலகனும்
புஷ்பங்கள்கொட்டிக்கொண்டு புகழுடனேகயரெடுத்து

வசனம்.

இப்படியாக பாலகன் அநேகவிதமாகிய புஷ்பங்கள் எதிரில்கொட்டிக்கொண்டு ஒருயடுக்கு வெண்மைபுஷ்பமும் ஒருயடுக்கு கருப்புபுஷ்பமும் ஒருயடுக்கு செகப்புபுஷ்பமும் குச்சுகள்கட்டி விந்தையான அங்கிசெய்து அந்த தம்பள்ளக் கிழவியைப்பார்த்து ஓ? பாட்டி நீ இந்த புஷ்ப ஆரமெடுத்துக் கொண்டுப்போய் பக்கிரிக்கு கொடுமென்றுச் சொல்லஅம்மொழிக்கேட்டு அக்கெழ்வி சந்தோஷமடைந்து புஷ்பயங்கியை எடுத்துக்கொண்டுபோய் பக்கிரிக்குகொடுக்க இந்தயங்கியைப் பார்த்து பக்கிரி அதிக சந்தோஷமடைந்து அடிக்கிழவி நேற்றுக்காகிலும் இன்றைக்கு அதிகவிந்தையாயிருக்கிறது அவனோ மகாவேலை தெரிந்தவன் அவனை நன்றாய் காப்பாற்றுவாயென்றுச் சொல்லி அந்தக் கிழவியைப்பார்த்து நேற்றியதினம் தந்தது ஆகிவிட்டதாயென்று கேட்க அதற்கு அந்தக்கிழவி ஐயா அவன் சாதமென்று அதிக ஆவலடைந்தான் ஆகையால் ஆகிவிட்டது யென்றுச்சொல்ல மறுபடியும் முந்திபோலவே கொடுத்து அனுப்பினான் இதில்லாமல் அவனைநான் பார்க்கவேண்டும் நாளையதினம் அழைத்துவருவாய் என்றுச்சொல்ல அதற்குசம்மதித்து அக்கிழவி தனதுவீட்டிற்கு வந்தாள் வந்தவுடனே பாலகனைப் பார்த்து அடா வீரையா இன்றைக்கு வெகுமேன்மையாக மாலைகள் கட்டுவாய் என்றுச் செப்பியவுடன் அதுபோல் பாலகன் வெகு விந்தையாக மாலைகள் கட்டிக்கிழவிகையில் கொடுத்தான் கொடுத்த மாத்திரத்தில்,

உன்னையழைத்துக்கொண்டு வுகந்துவரச்சொன்னான்
இந்தமொழிக்கேட்டு ஏதுச்சொன்னான்பாலகனும்
நான்யேண்டிபாட்டி நலமாகநீபோடி
இப்படிச்சொல்ல யிதுகேட்டாளக்கிழவி
அப்பா உன்னையவன்பார்க்க அழைத்துமேவரச்சொன்னான்
இந்தமொழிதான் நிக்ஷயமெண்ணுவாய்
இந்தமொழியை பாலகன்கேட்டுமே

ஆனல்முந்திநடவாய் அன்புடன்வருகுறேன்
இப்படிச்சொல்லி இரண்டுபேர்நடந்தாரே
பக்கிரியிருக்கப்பட்ட மசூதிக்குவந்தாரே
அப்போதுயக்கிழவி யன்புடனேபக்கிரிக்கு
கொண்டுவந்தமாலே கொப்பனவே தான்கொடுத்தாள்
மாலேதனைப்பார்த்து மகிழ்ந்துமேபக்கிரி
சந்தோஷம்தானடைந்து சம்பிரமாய்சொல்லலானார்
எங்கடிவுந்தன்பேரன் எந்தனுக்குகாட்டடி
இப்படிச்சொல்லவே அப்போதுயக்கிழவி
அந்தப்பாலகனே அப்போயெதிரில்நிறுத்தினாள்
அந்தநல்லப்பாலகனே கண்ணுலேபார்த்தானே
அரே இவள்குமாரனேப்போல் இவனுமேயிருக்கிறான்
உந்தன்பேரப்புதல்வன் இவன்தானசொல்லடி
எந்தன்பேரப்புதல்வன் இவனன்றிவேறுமுண்டோ

வசனம்.

ஓ? கிழவி இவன் உனது பேரப்புதல்வன் நிச்சயமாயென்று கேழ்க்க அதற்கு அக்கிழவி ஐயா இந்த கறைதன்னிலிருக்கும் தூர்க்கிசாக்ஷியாய் இவன் எனதுபுதல்வியுடையபுதல்வன் என்றுச்சொல்லஇதைக்கேட்ட பக்கிரி அடிக்கிழவி உன்புதல்வி இருக்கின்றளா ஐயா என்புதல்வி இறந்துப்போய்விட்டாள் என்றுச்சொல்ல இதைக்கேட்டப்பக்கிரி அரேயல்லா அரேயல்லா உன்மகள் குமாரன் இத்தனையழகாயிருக்க அம்மாது யெப்படிருப்பாள் அவளேயும் சிரையெடுப்பேன் அல்லவா உன்மருமகனும் அந்த வம்சத்தாரும் நாசமடைந்து விட்டாரா எனக்கேட்டு அப்பாலகனேப் பார்த்து அடாப்பாலகா உனதுவீட்டின் பெயரென்னவென்று கேழ்க்க அதற்குப்பாலகன் ஐயா எங்கள்வீட்டின்பெயர் தம்பள்ளகுலத்தார் என் தந்தைபெயர் சரபய்யா தாய்பெயர் நாகம்மா என்பெயர் வீரய்யா என்றுச்சொல்ல இதைக்கேட்டு சந்தோஷமடைந்து அடாப்பாலகா உனக்கு குதிரைகள் யானைகள் இராஜியங்கள் வேண்டுமா என்றுக்கேட்க அதற்குபாலகன் ஐயா இதுவெல்லாம் எந்தனுக்கேன் நான் அனுபவிக்கப்பட்ட பலசாலியா ஆனல் உனது பனிரெண்டு ஸ்தம்பத்தால்கட்டியமக்காமசூதி இருக்கிறது அந்தமசூதியில் வெள்ளியானேயும் தங்கக்குதிரைகளும் கிளிகளும் புராக்களும் கல்லால் செதிக்கி இருப்பதைப்பார்க்க ஆவலடைந்தேன் உத்திரவு தருவீருனல்பார்த்து வருகிறேனென்றுச்சொல்ல அதற்கு பக்கிரிசொன்னது அடாபாலகா அதைப்பார்ப்பதால் என்னவருகிறது இராஜ்யமாளவேண்டும் சாதம் தின்னவேண்டும் என்றுச்சொல்ல இதைக்கேட்டு ஓ பக்கிரி யான் சிறுவன் அதைப்பார்க்க ஆவலடைந்தேன் என்றுச்சொல்ல இதுகேட்டு அடாப்பாலகா அங்குபோவதற்கு சாத்தியப்படமாட்டான் என்றுச்சொல்ல அதுயேனப்பா என்றுக்கேட்க அப்பா பாலகா மேற்கேயிருக்கும் பாணுகண்டி பட்டணத்தில் இருந்து பாலநாகு யெ

ன்ற ஓர்மாதை சிறைக்கொண்டு வந்தேன் அந்தமசூதியில் இருத்தினேன் அம்மாது பனிரெண்டு வருடம் நோம்புயென்று சாதித்தாள் நான் அருகில்போனால் பயமடைகுராள் அவளுக்குமெனக்கும் இனி மூன்றுவருட காலமிருக்கிறது அதுவரைக்கும் அங்குபோவதற்கு தரமல்ல வென்றுச்சொல்ல அப்பாலகன் ஓ பக்கிரியே நீ வராவிட்டால் யான் சென்று பார்த்து வருகின்றேன் எனச்செப்ப இதைக்கேட்டு அடா போவதற்கு நலமல்ல எப்படியென்றால் மந்திரசாவிகள் பூட்டியிருக்கின்றேன் எனச்சொல்ல ஓ? பக்கிரி நாளையதினம் இன்னம் தமாஷாக மாலைகட்டித் தருகிறேன் எனக்குஇதுயெல்லாம் நீர்வந்துகாட்டுமையா யெனச்சொல்ல அதற்கு பக்கிரி அடாபாலகனே அதற்கு ஒரு மொழியிருக்கிறது அதைச்சொல்லுகிறேன் அதைஞாபகம் வைத்துக் கொள்வாயென்று சொல்லத்தொடர்ந்தான் அப்பா கோட்டையருகில் சென்று ஓம்மஹாம்காளி (நவீ) யென்றுச்சொன்னால் கதவுதிரந்துவிடும் உட்பிரவேசித்து வேடிக்கை பார்த்துவிட்டு மருபடியும் வரும்போது (கியாரே அஸ்திநீகடோரே) என்றுச்சொன்னால் கதவுகள் மூடிக்கொள்ளும் நீசென்று ஒருமணிநேரத்தில் வரவேண்டுமென்றுச் சொல்லியனுப்ப அதுபோல் பாலகன் சம்மதித்து கோட்டைக்குவந்து ஓம் காளிதுர்கி (நவீ) என்றவுடன் கதவுகள் திரந்துக்கொண்டது உடனே பாலகன் மசூதிக்குள் சென்றான்

மசூதிக்குச்சென்றான் மகிழுடன்பாலகன்
தாயானநாகம்மாளை தானும்மேபார்த்தானே
தலையைக்குனிந்துக்கொண்டு தாஅமமர்ந்திருந்தாள்
அப்போதுபாலகன் யருகினில்போகையிலே
மனிதர்யடிகள் மகிழ்ந்துமேகேட்டாளே
தலையையெடுத்துப்பார்த்தாள் யப்போதுநாகம்மாள்
அரிகினில்வாருதடா அரிவிக்கெட்டப்பக்கிரியே
உன்-சிரசுவுடையும் சிரப்புன்சாபமிடுவேன்
இந்தமொழிகளை பாலகன்கேட்டானே
மாயபக்கிரி நானல்லயம்மாடி
உன்னுடையபாலகன் யுத்தமியேநானுந்தான்
என்னுடையபெயர்தான் இயல்பாலவர்த்திவேந்தன்
இப்படியுஞ்சொல்லியும் யம்மொழிநம்பவில்லை
நிமிஷத்திற்குநிமிஷம் நிகழ்வேடம்போடுவான்
உனதுமாயைகள் யெந்தனுக்குதெரியும்போடா
கொஞ்சமாகிலும் கொப்பனவேநம்பவில்லை
எப்படிச்சொன்னாலும் யென்மொழியைநம்பவில்லை
அப்போதுபாலகன் அன்புடனேசெய்தான்
யெத்தனைச்சொன்னாலும் யென்மொழிகேழ்க்கவில்லை
ஆகாசவாணி நீயாகிலும்சொல்லுவாய்
பூமிதேவித்தாயே நீயாகிலும்சொல்லுவாய்

கைலாசபதியே நீயாகிலுஞ்சொல்லுவாய்
பார்வதிதேவியே நீயாகிலுஞ்சொல்லுவாய்

வசனம்.

இந்தப்பாலகன் இப்படித் துயரமடையுஞ் சமயத்தில் பார்வதி பரமசிவன் ரிஷபவாகனரூடமாய் அங்குநின்று ஸ்ரீ பால நாகம்மாளைப் பார்த்து ஓ அம்மணி இவன் உனது கெர்ப்பத்தில் ஜனித்தவன் நிக்ஷயம் நீ ஏழுதினத்தில் விட்டுவந்தப்பிறகு அவன்பெரியதாய்மார்கள் இதுவரைக்கும் வளர்த்துவந்தார். இப்போது உன்னை பார்க்கவந்தப்படியால் அவனைக் கண்ணால்பார்த்து நல்லமொழி கூறலாகாததென்றுச்சொல்ல இம்மொழிகேட்டு நாகம்மாள்

தலையையெடுத்துப்பார்த்தாள் தன்மையுடன்பாலகனை
ஸ்தன்யபானத்தில் தனியாலுபொங்கியது
அய்யோ குமாரா அறிவுள்ள யென்புதல்வா
வாடாயென்றுச்சொல்லி வகையுடனெடுத்துக்கொண்டு
உச்சிமுகந்து யுள்ளங்கால்முத்தமிட்டு
இடுப்பிலெடுத்துக்கொண்டு யிசைந்துமேதான்பார்த்து
எந்தன்தவப்பாலகனே யேன்வந்தாய்யிங்குமேதான்
உந்தன் தந்தைமார்கள் யுகந்துமூழ்கி விட்டாரே
தாயென்றுநீதான் தனியார்க்கவந்தையேடா
உந்தனுக்குயானும் யுகந்ததாயாரல்லவே
உந்தன்மதன்சொல்லை உகந்துயார்தான் கேட்டாரோ
இன்பமாவுன்னை யெடுத்துவளர்த்தாரையா
அவரேவுனக்குத்தாய்மார் அறிந்துநீகொள்ளடா
நீயேன்யிங்குவந்தாய் நான்பெற்றசெல்வமே
பாவி சண்டாளன் பரமலோபி பக்கிரியும்
மந்திரங்கற்றவன் மாயக்காரனிவன்
மனிதரைக்கண்டால் மலைக்கல்லாக்குவான்
நமதுபனிரெண்டாயிரம் நல்முள்ளசேனைகளை
கல்லாகச்செய்துமே கடுகவிட்டான்பாதகன்
உன்னையுமிப்போது உகந்து கொல்லுவான் பாதகன்
சீக்கிரம்நீபோவாய் செல்வகுமாரனே
எனதார்பேராக்காமார் அன்புடன்வளர்த்தாரே
அவருக்குநீதான் ஆஸ்தானபுதல்வன்தான்
ஆசையாய் வளர்த்தாரே அவரைவிட்டு வரலாமா
செல்வமே நீ போடா சிறப்புட னிந்தவேளை

வசனம்.

இப்படி தாயர் சொன்னமொழிக்கேட்டு அம்மா உன்னுடன்பேசுவதற்கு காலமல்ல என்னைபக்கிரி ஒரு மணிநேரத்துக்கெல்லாம் வரச்சொன்னான் ஆகையால் யான் சீக்கிரம்போகிறேன் ஆனால் நாளையதின

த்தில் பக்கிரி புஷ்பவனத்திற்கு ஷிகாரிபோகுவான் அவன்மறுபடியும் வீட்டிற்கு வருவதற்குள்ளாக அவனிருக்கும் மசூதியெல்லாம் மொழி கி அவன்புசிக்கும் சாப்பாடு தயார்செய்குவாய் அதையெல்லாம்யவன் புசித்து சந்தோஷமாய் உட்காருஞ்சமயத்தில் யான்வித்தையானமாலை கள் கட்டி அனுப்புகிறேன் அதைப்பார்த்து சந்தோஷமடைகுவான் அந்தச்சமயத்தில் எனது தந்தையிடம் நீயெப்படி சந்தோஷமடைகு வாயோ அப்படி சந்தோஷமொழியாடி அவன் எதிராகவந்து நிற்க அவன் உன்னைப்பார்த்து என்னடி பாலநாகு இன்றைக் வெகுசந்தோ ஷமடைந்தாய் என்றுக்கேட்பான் அதற்கு நீ ஓ? பக்கிரி எனது பனி ரெண்டுவருட நோம்புதீர்ந்தது இனி ஒன்பதுதினமிருக்கிறது ஆகை யால் சந்தோஷமடைகுரேன் அப்போது அவன் சந்தோஷமாயிருப் பான் அச்சமயத்தில் ஐயா நான் இப்படிருக்க உனது உயிர் நிலையை எனக்குச் சொல்லாமல் இருப்பது நலமாகுமா என்றுகேள் அதற்கு அவனது உயிர்நிலைசொல்லும்படி கேழ்ப்பான் அப்போது ஐயா எனது உயிர்நிலையானது பாணுகண்டி பட்டணத்திற்கு மேற்கு பாகத் திலிருக்கும் ஆலமரத்தில் பனிரெண்டாவது கிளைவெட்டினல் நான் மரணமடைகுவேன் என்றுச்சொல்லும் அவன் சந்தோஷமடைகுவான் அந்தக்காலத்தில் நீ அவனுடன் எனக்கு இனியார் ஆதரவு இருக்கிறர் என்று நயனமொழியாடுவீர் அப்போது அவன் சந்தோஷமிட்டு வா பால் ஏதுச்சொல்கிறுனே அந்தசங்கதி தம்பள்ளக்கிழவி வீட்டிர் க்கு அனுப்பும்படி சொல்லிவிட்டு கோட்டைக்கு வெளியில் வந்து (கியாரே அஸ்திநீகடோரே) என்றுச்சொல்ல கதவுகள் மூடிக்கொண் டது அந்தச்சமயத்தில் பாலகன் மசூதிவிட்டு வரும்பரியந்திரம் அக்கி ழவியைவிடாமல் நிருத்திவைத்தான் அப்போது அந்தக்கிழவியைப் பார்த்து அடி தம்பள்ளக்கிழவி அப்பாலகன் மகாயுக்திசாலி அதிக ரூபவந்தன் அந்த பாலகனுக்கு நெய்யைவிட்டு வளர்த்துக்கொண்டு வருவாய் என்றுச்சொல்ல அதற்கு அக்கிழவி நான் ஏதுவைத்து வளர்ப்பது இரண்டுவேளைக்குச் சரியாய் போகிறது இந்தவேளைக்கு ஏதுங்கிடையாது என்றுச்சொல்ல அப்போதுபக்கிரி அரேகிழவி கொடுக்கிறேன் வாவென்று கிடங்குயருகில் அழைத்துச் சென்று பத்துலக்ஷம்வராகன் கைக்கொடுத்தான். அதைப் பெற்றுக்கொண் டிருக்க இதற்குள்ளாக பாலகன் பக்கிரியெதிரில்வருக. அப்பாலகனை ப்பார்த்து இந்த மூன்றுதினத்தில் யேதுபார்த்தாயென்றுக்கேட்க ஐயா நான் சகலமான வேடிக்கை பார்த்துவிட்டேன் என்றுச்சொல்ல

பக்கிரி சந்தோஷமடைந்து அப்பா பாலகனே அதிகயழகுடையமாலை கள் கட்டிக்கொடென்று திட்டஞ்செய்தனுப்ப பாலகன் தன் மனைக்கு வந்துசேர்ந்தான்.

இப்படிருக்க மருதினத்தில் பக்கிரி நந்தவனத்திற்குப் போகவே இதையறிந்த பாலநாகம்மாள் அந்த மருதியெல்லாம் மொழிகி அவ னுக்குவேண்டிய வுணவுகளைத் தயார்செய்து வைத்திருந்தாள். இவன் வந்தவுடன் வுணவுகளை எதிரில்வைத்துச் சந்தோஷமாய் தின்னபிறகு பூவணிகச்சி விந்தையான அங்கி புஷ்பத்தால் கட்டிக்கொண்டுவருக அதைப் பூட்டிக்கொண்டு உல்லாசமாயிருக்குஞ் சமயத்தில், இதை யறிந்த பாலநாகம்மாள், அவனுக் கெதிரில்வந்து நிற்கவே, இம்மா தைக்கண்டு ஆ! ஆ! பாலநாகு, ஏது இவ்வளவு சந்தோஷமாய்வந்தா யென்றுகேட்க. அதற்கு பாலநாகம்மாள், அய்யா? எனதுநோன்பு தீர்ந்துவிட இனிவொன்பதுதினமிருப்பதால், சந்தோஷமடைந்தேன் ஆனல் யான் உன்னை நம்பியிருந்தால் நலமென்னவென்றுச்சொல்ல. இதைக்கேட்டபக்கிரி மாதே உனக்கேதுங் கொரை வொன்றுமில்லா மல் வைத்துக்கொண்டிருக்கிறேன். இதில்லாமல், இந்த நகரத்திலிரு ப்பதெல்லாம் உன்னுடையதன்றி இனியார் அனுபவிப்பவ ரென்றுச் சொல்ல. இதைக்கேட்ட நாகம்மாள், இதுகளெல்லாம் யெந்தனுக் கேன் உன்னைநம்பியிருக்க எவராகிலும் பகையாளி உன்னைக்கொன் ருல் ஏதுசெய்வேனென்றுச் சொல்ல இதைக்கேட்டப் பக்கிரி நகை த்து, அடிமாதே, என்னைக்கொல்ல யெவரால்முடியும். எப்படியெ ன்ருல், ஏழுக்கடல் தாண்டிப் போக மண்கோட்டை யகப்படும் அது மத்தியில் எழுகு கோட்டையிருக்கும், அந்தகோட்டைக்குள் ஐன்னூ று வெளாமரமும், முன்னூறு முருங்கச்செடியும், நூறு பனமாம், ஐன்னூறு வேப்பமரம், இதுமத்தியில் முந்திரிசெடியொன்றிருக்கும் அந்தச் செடித்தொரையில் ஏழடுக்குப்பானையிருக்கும், அந்தக்கீழடுக் கில் தங்ககூண்டு வொன்றிருக்கும். அந்தக்கூண்டில் பஞ்சவர்னக்கிளி இருக்கும் அந்தக் கிளிகண்டத்தில், எனது பிராணமிருக்கும். அதைக் கொன்ருல், யான் சாகுவேன் தவிர இனி ஏதுசெய்தாலும் மரணங் கிட்டாது. மாதேயென்றுச்சொல்ல, இதைக்கேட்ட நாகம்மாள் ஐயா இப்போது சந்தோஷமடைந்தேன். இனிவொன்பதுதினம் பொருப் பீர் உமதிஷ்டம் பூர்த்தியாகிறதென்றுச்சொல்லி மருதிக்குச் சென்று விட்டாள்.

அதன் பிறகு பூவணிகச்சி புஷ்பங்கொண்டுவந்தவுடன் அவளைப் பார்த்து ஓ கிழவி நேற்றியதினங் கட்டிக்கொண்டுவந்த மாலைதன் னில், இருக்கப்பட்டபுஷ்பம் இத்தனையென்று கணக்குத்தெரியுமா

யென்றுக்கேட்க்க அதற்கு, அக்கிழவி அம்மாயெனக்கேதும் தெரியா
தென்றுச்சொல்ல. அப்போது, பாலநாகம்மாள் கிழவியைப்பார்த்து
டிக்கிழவி யான் புஷ்பக்கணக்கு எழுதித்தருகிறேன். அதுபோல்
ாலைகணக்காகக் கட்டிக்கொண்டுவருவாய். ஆனாலிந்தக்கடிதம் பக்
ரி பார்க்கப்போகிறு னென்றுச்சொல்லி யனுப்ப அதுபோல் கிழவி
வோடி பாலகனையழைத்து அப்பா இந்தகடிதத்திலிருக்கும் கணக்
ப்போல் மாலைகட்டும்படி திட்டஞ் செய்தாளென்றுஞ் சொல்ல
தைப் பாலகன்வாங்கி தன்னுள்வாசித்து சங்கதியறிந்துக்கொண்டு
ப்படியே ஆகட்டுமென்றுச்சொல்லி மாலைகட்டிவிட்டு மறுநாள் உதி
த்துக்குப் பாலகனெழுந்து அம்மாப்பாட்டி யெனதுதந்தை மரண
டையும்போது அடுத்தநாட்டி லிருக்கப்பட்ட கடன்காரர்பத்திரம்
ன்னிடங் கொடுத்துவிட்டார். நான் வரும்போதுகேட்க இத்தினம்
ரும்படி திட்டஞ்செய்தார். ஆகையால், அங்குசென்றால். ஏதாகி
லும் காசுவந்தால் நமக்கு நலமல்லவாவென்றுச்சொல்ல அம்மொழிக்
துச் சம்மந்தமடைந்தாள். இதையரிந்த பாலகன் பாட்டி எனக்குக்கொ
ஞ்சம் சாதங் கட்டிக்கொடுமென்றுச்சொல்ல அதுபோல் கிழவிக் கட்
டிக்கொடுக்க அதை யெடுத்துக்கொண்டு அனேகமான காடு, வனம்,
வனாந்திரந்தாண்டி சமுத்திரகரையோரம்வந்து நின்றுக்கொண்டு நாம்
எப்படி இதைத் தாண்டுவதுயென்று துயரமடைந்து அங்கிருந்த ஆல
மரத்தின்கீழ் சயனித்துக்கொண்டான். அச்சமயத்தில், அந்தச் செடி
மீது இரண்டு கண்டபேருண்டபக்ஷியின் குஞ்சுகள் இருந்தது. இந்தக்
குஞ்சுகளை தின்பதற்கு அங்குநாகமானது செடியேருவதைபாலகன்பா
ர்த்து தனதுசெந்திராயுதத்தால் வெட்டினான். அதில்வோர்சிரசானது
இவன்கையில் கடித்தவுடன் விஷமேரி பூமியில்விழுந்து சாவுக்குச்சரி
யான மூர்ச்சையடைந்தான். இவன் இப்படிவிழ பானுகண்டிப்பட்ட
ணத்தில் இவன் வைத்துவிட்டுவந்த மல்லிகைச்செடியானது வொணர்
ந்துபோய்விட இதைக்கண்ட பெரியதாய்மார்கள் பாலகன் இறந்தா
னென்று, சோகமடைந்தார். இது இப்படியிருக்க இந்த இரண்டுகுஞ்
சுகளும் இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்து நாம் நமது தாய்
தந்தை இரையெடுத்துவந்தால் தின்னுதபடிக்கி இருந்து இவரை
யெழுப்பும் மார்க்கம் தேடிய பிறகு இவர் வந்தக்காரியமும் பூர்த்தி
செய்த பிறகு நாம் புசிப்பரியவேண்டுமென்று மனதை திடஞ்செய்துக்
கொண்டு இரண்டுகுஞ்சுகளும் இருந்தது.

இப்படியிருக்குஞ் சமயத்தில் அந்த இரண்டு கண்டபேருண்ட
பக்ஷிகள் ஆகாரமெடுத்துக்கொண்டு கூண்டில் வந்து பார்க்க இரண்டு
குஞ்சுகளும் சோகமாயிருப்பதரிந்து அப்பா பாலகரே இப்படியிருக்க

காரணமேதென்று கேட்க அதற்கு அந்தக் குஞ்சுகள் பிராணமற்று விழுந்திருக்கும் வேந்தரில்லாமல்போனால் நாங்கள் இருவரும்நாகத்திற் சிரையாகுவோம். ஆகையாலந்த உத்தமரை யெழுப்பிவிட்டு அவர் வந்தக்காரிய மென்னவென்று விசாரித்து அந்தகாரியத்தை பூர்த்திசெய்கிறவரையில் நாங்கள் இரைத் தீண்டமாட்டோமென்றுச்சொல்ல, அப்போது அந்த இரண்டுபக்ஷிகளும் பூமியைப்பார்க்கவே நாகம் இரண்டு துண்டமாக வீழ்ந்திருப்பதையறிந்து சந்தோஷத்துடன் சஞ்ஜீவிமலைக்குப்போய் சஞ்ஜீவிக்கொண்டுவந்து இப்பாலனுக்குக்காட்ட பாலகன் நித்திரைசெய்தவன்போல் யெழுந்தான். இவனெழுந்தவுடன் பாணுகண்டிபட்டணத்தில் மல்லிகைச்செடி துளிர்பிடித்தது. அப்போது பெரியதாய்மார்கள் சந்தோஷமடைந்தார். அதன்பிறகு, இந்த இரண்டுபக்ஷிகளும் இப்பாலகனைப்பார்த்து,

உந்தன்பெயரென்ன யுகந்துமேசொல்லுமப்பா
இந்தமொழிகேட்டு யிசைந்துமேபாலகனே
சொல்லத்தொடங்கினான் சிறப்புடனப்போது
பாலவர்த்திவந்தன் பக்ஷிகளேயெந்தன்பெயர்
இப்படிச்சொல்ல யிதுகேட்டதுபக்ஷிகளும்
ஆனல்பாலகனே யன்புடன்நீயுமேதான்
எங்குதான்போகுறாய் யெங்களுக்குச் சொல்லும்
அப்போதுபாலகன் யன்புடன்சொல்லலானான்
நான் சஞ்ஜீவிமலைக்கு சர்ப்பிரமாய்போகவேண்டும்
உனக்குயென்னக்காரியம் உகந்துமேயவ்விடத்தில்
இன்பமாய்ச்சொல்லுமே இப்போதுதெங்களுக்கு

வசனம்.

இந்தப் பக்ஷிகளை பக்கிரி வைத்தால் நாம் வந்தக் காரியம் பூர்த்தியாகாமல் போகுமென்று அப்பா யெனக்கங்கு காரியமிருக்கிறதென்றுச்சொல்ல அப்போது பக்ஷிகள்

உன்னையெப்படி யுகந்துகொண்டுபோகுவோம்
ஆகாயமார்க்கமாய் கெப்பிரமாய்போகவேண்டும்
போகுஞ்சமயத்தில் விஷக்காற்றுயடிக்குமே
அந்தக் காற்றடித்தால் அப்போ நீ சாகுவாய்
அப்போவுந்தனை யன்பாய்புழைக்கசெய்யமாட்டோம்
இப்படிச்சொல்லி இரண்டுப்பக்ஷியிருந்தது
அப்போதுபாலகன் யன்புடன்பக்ஷியோடு
எப்படிச்செய்தாலும் யிதுவுந்தன்பாரமென்றான்
அந்தமொழிக்கேட்டு யந்தநல்லப்பக்ஷிகளும்
ஈசந்துண்டை யின்பமாய்க்கொண்டுவந்து
மூக்காலப்போது முகந்துதொளைசெய்தது
அந்தத்தொளைதன்னில் யப்பாலகனையிருக்கச்செய்து

ஆண்பக்ஷிபொட்டைகளை அப்போவிரித்தது
பெண்பக்ஷிவேந்தனை பெருமையாய் தூக்கியது
ஆண்பக்ஷிமுதுகினில் அப்போதுவைத்தது
விஷக் காற்றுப் பட வழியேதுமிடாமல்
பெரட்டைகளாலே போர்வைகள் செய்தது
சந்தோஷமாக சாம்பிரமாய்ப்பரந்தது
பாலசமுத்திரத்தை பண்முடன்தாண்டியது
ஏழுக்கடலை யின்பமாய்தாண்டியது
சஞ்சீவிமலைக்கருகில் சம்பிரமாயிரங்கியது
பாலகனை யப்போது பக்குவமாய்விட்டது
அந்தக்கானகத்தை அப்போதுபார்த்தானே
கோட்டைக்குள்ளாக காட்டைதான்கண்டானே
செந்திராயுதத்தை சிரப்புடன்கைப்பிடித்தான்

வசனம்.

இப்படியாகச்செந்திராயுதத்தை கைப்பிடித்து அந்தப்பக்கிரி கைதன்னில் என்தாயார் விரதம் கெடாதபடிக்கி இருந்தால் இந்த செந்திராயுதத்தால் இந்தச் செடிகளெல்லாம் வெட்டுக்கு விழவேண்டியது இல்லாமற் போனால் விழலாகாது என்றுச் சொல்லி வெட்டத் துணிந்தான் அப்போது,

மூந்நூரு வெலாம்பழமரத்தைதான்வெட்டினான்
ஏழுநூறுவேப்பமரத்தையும் வெட்டினான்
அறுபத்திநான்கு பனமரத்தைவெட்டினான்
முந்திரிச்செடி சுற்றிலுமப்போது
மைதானம்செய்தானே மனமிட்டுப் பாலகன்
முந்திநடந்து முந்திரிசெடிவெட்டினான்
செடியுங்கிழவிழவே அடுக்குப்பானை தெரிந்தது
அந்தப்பக்ஷிகள் அப்போதுகேழ்க்கலாச்சிது

வசனம்.

அப்பா ராஜகுமாரனே அந்தமுந்திரிசெடியை வெட்டி அந்தயடுக்குபானை இருக்குமிடத்தில் போகின்றாய் அந்தயடுக்குப்பானை பக்கிரியுடையது' அவன் வந்தால் உன்னைக் கொன்றுப் போடுவான் என்றுச் சொல்ல அப்போது பாலகன் அப்பாபக்ஷிகளே யானும் அவனிடம் வேலை செய்துக்கொண்டிருக்கிறேன் அந்தச் சமயத்தில் என்னைப் பார்த்து ஓ? பாலகா யான்கிழவனாகிவிட்டேன்நடக்கமுடியாது ஆகையால்

இப்போது நீசென்று ஏழுக்கடலுக்குஅப்புரமிருக்கும்சஞ்சீவிமலையில் ஏழுகுகோட்டை இருக்கிறது அந்தக்கோட்டை மத்தியில் முந்திரிச் செடி இருக்கிறது அந்தச்செடியில் ஏழடுக்குபானை யிருக்கும் கீழடுக்கில் தங்ககூண்டில் பஞ்சவர்னக்கிளி இருக்கிறது அந்தக்கிளியை கொண்டு வரும்படி திட்டஞ்செய்தான் ஆகையால் நான்வந்தேன் என்றுச் சொல்ல இதைக்கேட்டு பக்ஷிகள் நீவந்ததுசரிதான் அவன்சொன்னது சரிதான் நாங்கள் வருவதற்குமுந்தி எனது பாலருடையபிராணத்தைக் காப்பாற்றி தந்தபடியால் உம்மை யித்தனை தூரங் கொண்டு வந்தோம் இப்போது இந்தச்செடிகளை வெட்டிவிட்டாய் அந்தக்கிளியை எப்படி கொண்டுவருவாய் என்றுக்கேட்க அப்போது பாலகன் சொன்னது இந்தப்பானைகளை உடைத்து கூண்டைகொண்டு வருவேனென அப் போது பக்ஷிகள் இவனைப்பார்த்து அப்பா இதைவுடைத்தால் இதில் மந்திரவண்டுக்கள் இருக்கிறது அதுவொன்று யடித்தால் நீசாகுவாய் என்றுச்சொல்ல அதற்குப்பாலகன் எனது கத்தியால் வெட்டித்தள்ளுவேன் என்றுச்செப்ப அதற்கு அப்பா ஒன்றைவெட்டினுல் ஆயிரமாகுமே இதற்கேது செய்குவாய் என்றுச்சொல்ல அதற்கு பாலகன் இடிவிழுந்த மரம்போல் உட்கார்ந்தான்.

இப்படிருக்க அந்த பக்ஷிகள் குபீலென்று பரந்து காட்டுக்குச் சென்று வயதுநிறைய தீனிதின்றுவிட்டு பாலகருக்கு தீனியெடுத்துக் கொண்டு பாலகன் எதிரில்வந்து பாலகனை வாருமென்று அழைக்க அதற்கு பாலகன் ஐயா யான் கொண்டுவருவதாய் சொல்லிவிட்டு இப் படிபோனுல் ஏதுச்சொல்வான் இதற்காகிலும் இங்கு சாவது நலம் உமது பாலகர் எப்படிபசியால் வாடுறோ தெரியாது நீங்கள் போவீரெனச்சொல்ல இம்மொழிக்கேட்ட பெண்பக்ஷி தன் கணவனைப்பார்த்து நாயகாநாமும் நமது பாலகரும் சந்தோஷமிட இப்பாலகன் கானகத்தில் துயர்படுவது, நீதியாகுமா நீரெப்படியாகிலும் சாதித்து அந்த கிளியை கொடுமென்றுச்சொல்ல அப்போது இப்பாலகனை இருள்சூழ்ந்த பொதரில் குந்தவைத்துவிட்டு ஆண்பக்ஷிவோட்டமாய் வந்து,

எட்டியுதைத்தது அப்போதுபாலகனை
மடமடவென்று பானைகள்யுடைந்தது
கருத்தவண்டுக்கள் கர்ஜித்துவந்தது
அந்தகானகமெல்லாம் அடர்ந்துசூழ்ந்துவிட்டது
பெண்பக்ஷிபறந்து பிறட்டைகளால்டித்தது
அந்தவண்டுகள் அதமாகிபோச்சுது
ஆண்பக்ஷிபறந்து அக்கூட்டையப்போது
மூக்கால்கடித்துக்கொண்டு முகந்துமேபறந்தது

வசனம்.

ஓ? பாலகனை பக்கிரி இப்போதே தெரிந்திடுவான் அவன்வந்தால் உன்னையும் என்னையுங் கொன்றுவிடுவான் இந்தக்கிளியை பத்திரஞ்செய்வாயென்றுச் சொல்லி அவன்காதிலிருக்கப்பட்ட கடுக்கனை கழட்டி அந்த கிளிக்கு இரண்டு காலுக்கும் விளங்குமாட்டிவிட அந்தப் பக்கிரிக்கு இரண்டுக் காலுக்கும் விலங்கு பூட்டியதுபோல் ஆகிவிட்டது அப்போது;

அரே-எனதுவுயிர்கிளியை யெவனோகொண்டுவாறான்
இல்லாவிடிலெந்தகிளி இரைதேடப்போச்சுதோ
கானகக்கொடியில் கண்டுயகப்பட்டதோ
இப்படிபக்கீரி யோசித்துக்கொண்டிருந்தான்

வசனம்.

இப்படிருக்க அந்தக்கிளிஸப பாலகன் பிடித்துக்கொண்டு ஈசன் பொந்தியில் புகுந்துயிருக்க பக்ஷிகள் அந்தபொந்துதனை எடுத்துமுதுகில் வைத்துக்கொண்டு,

ஆகாயவீதியாக அப்போபரந்தது
ஏழுக்கடலை யின்பமாய்தாண்டியது
ஆலமரத்தருகில் அப்போயிரங்கியது
பாலகன்யப்போ வெலியிலேவந்தானே
உதயமுமாச்சுது போகலாமென்றுசொல்ல
அப்போதுபாலகன் யந்தபக்ஷிகளைப்பார்த்து
நீங்கள்யேன்வருகிறீர் நில்லுமேயிவ்விடத்தில்
நாங்கள்சிலதூரம் வருகிறோம்வுங்களுடன்
இதுகேட்டான்பாலகன் யின்பமாயப்போது
வேண்டாம்நீங்கள் நில்லுங்கள்போகிறேனென்
இப்படிச்சொல்லி நடந்தானேபாலகன்
காடுசெடிகள் கடுகவனந்தாண்டினான்
நாகள்ளபூடிக்கு நலமாகவந்துசேர்ந்தான்
நம்பள்ளக்கிழவி வீடுவந்துசேர்ந்தான்
பாட்டியேபாட்டி பசிதாகமெடுக்குதே
நாகங்கொடடி தயவுடனிப்போது
இப்படிச்சொல்ல இதுகேட்டாளக்கிழவி
நாகங்கொண்டுவர தயவுடன்பெற்றுக்கொண்டு
நாகங்குடித்தானே தயவுடன்பாலகன்

எந்தனுடபேரனே என்னடாசேதியென்றால்
அம்மாடியம்மாடி கடங்காரர்செத்தாரே
இத்தனையான்பார்த்து அப்பத்திரங்கிழித்தேனே
இதுகளைக்கேட்டு அழுதாளேயக்கிழவி

வசனம்.

அடிப்பாட்டி நீயேன் அழுகிறாய் எனக்குபசியெடுக்கிறது சாதம் போடுவாய் இரண்டுநாள் பொருத்துக்கொண்டிருப்பாய் இந்தக்கோட்டையிலிருக்கும் திரவியமெல்லாம் உனக்கே தருகிறேனென்றுச்சொல்ல இதுகேட்டுக்கிழவி சந்தோஷமடைந்துபொசிப்பிட பாலகன்சாப்பிட்டு நித்திரைச்செய்ய அதன்பிறகு சந்தோஷமடைந்து சூரியன் கிழக்குதிசையில் உதயமானான் இப்பாலகன் எழுந்து பாட்டி எனக்கு பழைதுபோடுவாய் நான் விளையாட போகவேண்டுமென்றுச் சொல்ல அதுபோல்பழைதுபோடபுசித்துபாலகன்கிளியையெடுத்து அக்களில் வைத்துக்கொண்டு வணிகச்சங்கு வீட்டிற்கு வந்து அம்மாயான் இந்த செக்குமாட்டை வோட்டுகிறேன் எனக்கு புண்ணாக்கு தருகின்றாயா என்றுக்கேட்க அதற்குவணிகச்சி சம்மதமடைந்து ஓட்டச்சொன்னாள் பாலகன் ஓட்ட நந்தவனத்திலிருக்கும் பக்கிரி கிரகிரவென்று சுழன்றான் அப்படிச்சுற்றவே அவன்தள்ளாடிக்கொண்டு வணிகச்சிவீட்டை தேடிவந்தான்.

வணிகச்சங்குவீட்டிற்கு அப்போதுவந்தான்
செக்குயருகினில் சிரப்புடன்வந்தானே
பக்கிரிவருவதை பார்த்தானேபாலகன்
வேகமாய்மாட்டை ஓட்டினனப்போது
அந்தப்பக்கிரி யப்போதுச்சுற்றினான்
வணிகச்சங்குதனை பார்த்தானேபக்கிரியும்
அப்போதுவணிகச்சங்கு அன்புடன்பாலகனை
நிறுத்தடாநிறுத்தடா ஓட்டவேண்டாம்செக்குதான்
பக்கிரிக்கானால் வாயுவுகள்வந்தது
பார்த்துவருகிறேன் பாலகாநிறுத்தடா
இப்படிச்சொல்லவே அப்போதுபாலகன்
செத்தால்யெனக்கென்ன விழுந்தால்யெனக்கென்னடி
அந்தச்சமயத்தில் அந்தநல்லபக்கிரியும்
செக்குயருகினில் சிறப்புடன்வந்தானே

வசனம்.

அரே வாணிகச்சங்கு என் திரேகமெல்லாம் பாரமாயிருக்குதடி கால்கள் நடக்க விலங்கு பூட்டியதுபோலிருக்கிறது என்து உயிர்நிலையை எவனோ கொண்டுவந்ததுபோல் இருக்கிறது என்றுச்சொல்லிக் கொண்டிருக்குஞ் சமயத்தில் பாலகன் அக்களில் இருந்த கிளியை எடுத்து செக்குமீது வைத்து ஆட்டிக்கொண்டிருந்தான் அப்போது பக்கிரி பார்த்து,

அப்பாபாலகா அந்தக்கிளிஎன்னுதடா
உந்தன்கிளிதான் யெந்தன்கையில்வந்ததேனோ
அப்பாபாலகா யந்தக்கிளியென்னுதல்ல
பஞ்சவர்னக்கிளி யெந்தன்கிளியாகுமடா
இப்படிச்சொல்லவே மறுபடிதிருப்பினான்
பக்கிரிசுழன்று பாலகாகிளியென்னுதென்றான்

வசனம்.

அப்போது பக்கிரி அரே பாலகா அந்தக் கிளி என்னுடையதென்றுக்கேட்க ஆனால் உனதானால் உனக்கே தருகின்றேன் அந்த பாலநாகம்மாள் உனக்கு என்னவேண்டுமென்று பாலகன் கேட்க அப்போது பக்கிரி,

எனதுகூத்தியார் அவளாகுமிப்போது
இதைக்கேட்டுப்பாலகன் அப்போதுகிளியெடுத்து
கழுத்தையமுக்கினான் கடுகவேபக்கிரிக்கு
மூச்சிவராமல் முழிகள்வெளிவருகிறது
அப்பாபாலகா அந்தக்கிளியைக்கொல்லவேண்டாம்
பாலநாகம்மாள் யெந்தனுக்குத்தாயாகும்

வசனம்.

இப்படிப் பக்கிரிசொல்ல இதைக்கேட்டுப் பாலகன் அடா பக்கிரி உந்தனிடம் நல்ல மந்திரமிருக்கிறது அதுயேதென்றால் வாவென்றால்வரும் போவென்றால்போகும் மூன்றுநூறு இராக்ஷத பூதங்கள் ஏழுநூறு செகப்புபூதங்கள் இருக்கிறது அதையெனக்குச் சொல்லென்றவுடன் பக்கிரிக்கேட்டு அப்பா அது எனது ஜீவனம் யான் யாருக்கும் சொல்லமாட்டேன் னென்றவுடன் சொல்லாமல்போனால் இக்கிளியை கொல்லுகிறேன்.

அப்பாபாலகா அக்கிளியைகொல்லவேண்டாம்
உனக்குமந்திரங்கள் யுன்மையாய்சொல்லுகிறேன்
மந்திரங்கள்தன்னை மகிழ்ந்துயுபதேசஞ்செய்தான்

வசனம்.

இப்படிப்பாலகன் உபதேசமடைந்து மறுபடியும் அடா பக்கிரி உந்தனிடத்தில் லட்டியிருக்கிறது அது நீ இங்கிருந்து யுத்தஞ்செய்து வாவென்றால் வருகுமாம் அது எனக்குக் கொடுமென்றுக்கேட்க அப்பா பாலகா அது எனது பிராணம் எவருக்குங் கொடுக்கமாட்டேனென்றுசொல்ல.

இல்லாமல்போனால் யிக்கிளியைகொல்லுகிறேன்
பாலகாகொல்லாதே பக்ஷமாய்தருகிறேன்
எந்தன்பிராணக்கிளியை யெடுத்துயக்களில்வைத்தாயே
எந்தன்பிராணம்போனால் உனக்கென்னலாபமுண்டு
அந்தலட்டியை யன்பாககைக்கொடுத்தான்

வசனம்.

இதைப் பெற்றுக்கொண்டு அடா பக்கிரி உன்னிடத்தில் முத்துவோடு இருக்கின்றது அந்தவோடு கோட்டைக்கட்டும் ஆகையாலதை எனக்குக் கொடுமென்றுக்கேட்க நான் கொடுக்கமாட்டேனென்று சொல்ல கொடுக்காமல்போய்விட்டால் கொல்லுகிறேன் கிளியை.

அப்பாபாலகா கொல்லவேண்டாமக்கிளியை
உயிரிடநாமிருந்தால் யின்னமொன்றுதேடலாம்
இப்படிச்சொல்லியந்த வோட்டையுங்கைக்கொடுத்தான்
வோட்டையும்பெற்றுக்கொண்டு வேகமாய்பாலகனும்
சொல்லத்தொடர்ந்தானே சிங்காரவாய்திரந்து

வசனம்.

அடாபக்கிரி உன்னிடத்தில் மனிதனைச்செய்கிறதும் சாம்பலக்கிறதும் நாயாகச்செய்கிறதும் இந்தவித்தைகளடங்கிய மூன்றுபெரம்பு இருக்கிறது அதை கொடென்று கேட்க பக்கிரி இதைக்கேட்டு அப்பா பாலகா அது எனது பிராணம் அதைக் கொடுக்கமாட்டேனென்றுச் சொல்ல அப்போது பாலகன்,

கொடுக்காமல்போனால் கிளியைநான்கொல்லுகிறேன்
அப்பாநீபாலகா அக்கிளியைக்கொல்லவேண்டாம்
எந்தன்பிராணத்திற்கு யெமனாகவந்தாயடா
இதுயிருந்தென்னை யிப்போதுகார்க்கிறதா
பிராணம்யிருந்தால் யெத்தனையோசம்பாதிப்பேன்
இப்படிசொல்லியந்த பிரம்பதைகைகொடுத்தான்

வசனம்.

அந்தப் பிரம்பு பெற்றுக்கொண்டு மறுபடியும் அவனைப்பார்த்து அடாபக்கிரி கோட்டைவெளியில் செடிகளாகவும் கல்லாகவும் மலையாகவும் இருப்பது ஏதுயென்றுகேட்க அப்போது பக்கிரி பாலகனைப்பார்த்து அப்பா ஏழுபேர் வேந்தர்என்மீது உத்தஞ்செய்ய வந்தார்கள் அவரை இப்படி செய்துவிட்டேனென்றுச்சொல்ல இதைக்கேட்டுப் பாலகன் ஐயோ பாவமாச்சுதே அவர்களை எழுப்புவாயென்று கேட்க அப்பாயென் பகையாளிகளை எழுப்பமாட்டே னென்றுச் சொல்ல பாலகன் கிளியைக் கொல்லுவேனென்றான் அதற்கு பக்கிரி

கிளியைநீகொன்றால் கொப்பனவேயுந்தனுக்கு
என்னலாபம் யிப்போகிடைக்குமப்பா
இந்தமொழிகேட்டு யப்போதுபாலகன்
பக்கிரியைப்பார்த்து பக்குவமாய்ச்சொல்லலானன்
நான்பார்க்கபவரை நலமாகயெழுப்புவாய்
அந்தச்சமயத்தில் யந்தநல்லப்பக்கிரியும்
விபூதிபோடவே யெழுந்தாரேவேந்தரும்
மந்திரிகளும்சேனைகளும் மகிழ்ந்துயெழுந்தாரே
பக்கிரிதன்னையே துரத்திக்கொண்டுவந்தாரே
கோட்டைக்குள்ளாக கொலுவேந்தர்வந்தாரே
கத்தியால்வெட்ட கடுகவேவந்தாரே
அப்போதுபக்கிரி யந்தபாலகனிடம்
வோடிதான்வந்து வொளித்தானேயவனிடம்
நிறுத்தும்நிறுத்துமையா நிர்மலவேந்தரே
ஒளித்தவரைக்கொல்ல யுகந்துசாஸ்திரம்சொல்லுதா
அப்போதுவேந்தர் யன்பாகபாலகனை
எந்தவூரெந்ததேசம் யெங்களுக்குச்சொல்லடா
பானுகண்டிப்பட்டணம் யெந்தனுடபட்டணம்
உன்தாய்தந்தையாரடா தயவுடன்சொல்லடா
கார்யவர்த்திவேந்தன் கருணையுள்ளயென்தந்தை
பாலநாகம்மாள் யென்னைப்பெற்றதாயாராகும்
அப்போதுயவ்வேந்தர் யன்பாகபாலகனை
வாரியெடுத்து வகுந்தமடிமீதுவைத்து
அப்பாநீபிறந்து யன்புடனேயங்களை
எழுப்பிவிட்டாய்நீயும் யில்லாமல்போய்விட்டால்
எங்கள்பிழைப்பு யெப்படியோயறியமாட்டோம்

இந்தமொழிகளை அப்போகேட்டான்பக்கிரியும்
நல்லசமர்த்துகாரன் நமதுகோட்டைகைப்பிடித்தான்
எனதுபிராணத்தை அவன்கையில்வைத்துக்கொண்டான்
கொண்டுவந்தக்கிழவியை கொப்பனவேகொல்லுகிருன்
என்றுச்சொல்லியவன் வீடுயப்போநடந்தானே
அப்போதுபாலகன் ஏதுசெய்தானந்தவேளை
அந்தக்கிளிக்காலை அப்போவொடித்தானே
பக்கிரியப்போதுயிர் மீதுவிழுந்தானே
அப்பாபாலகா கொல்லவேண்டாமக்கிளியை

வசனம்.

இப்படிச்சொல்ல இதுகேட்டுப் பாலகன் கிழவிவீட்டிற்கு வந்து அம்மாபாட்டி நீ இருந்தால் பக்கிரிகொல்லுவான் என்தேசம் வருகிருயா என்றுக்கேட்க அதற்கு அக்கிழவி சம்மதமடைந்து நடக்க இக்கிழவியை அழைத்துக் கொண்டுப்போய் வேந்தரிடம்விட்டு எல்லோரும் சந்தோஷமாயிருக்க முத்துபல்லக்கு கொண்டுவந்து அப்பல்லக்கில் தன் தாயாராகிய நாகம்மாளை அமரச்செய்து

வாடிவாடிநீ வாணிகசங்குயிப்போது
பின்னால்நீசென்று பிடியடியிந்தக்கொம்பை
அப்போதுவாணிகச்சி அலரிதுடித்துமே
அவன்தலைவுடைய அப்போவேண்டாமென்றேனே
இந்தக்கர்மத்தை யாரிடம்சொல்லுவேன்
இப்படிச்சொல்லி பிடித்தாளேபிந்திகொம்பை
வாடாநீபக்கிரி அறிவுகெட்டசாயபு
முந்திக்கொம்பை எடுத்துக்கொள்முதுகினில்
இப்படியான்பிழைத்து யிந்தமாதுக்குமே
பல்லுக்குசுமக்க பாழும்பிரம்மனெழுதினானே
எடுக்கமாட்டேனென்றுச்சொல்லி யெட்டிதான்நின்றனே
அப்போகிளிக்கழுத்தை அமுக்கினன்பாலகன்
பக்கிரிக்கப்போ பிராணம்போகும்சமயமாச்சுது
அப்பாபாலகா யெடுக்குரேண்டாபல்லுக்கு
உந்தன்பலத்தால் யேனோடாகொல்லுகிருய்
பிந்திகொம்பை பிடித்தாள்வணிகச்சங்கு
முந்திக்கொம்பை பிடித்தானேபக்கிரியும்
பல்லக்குயப்போது புறப்பட்டுவருகிறது

நாகள்ளபூடி கரைவிட்டுவந்தாரே
டேருயருகினில் யிரக்கிஞர்பல்லக்குதான்
ஆறுபேர்தந்தைகளே பார்த்தானேபாலகன்
தனது தந்தையை தான்பார்த்தான்பாலகன்
பாலகனையப்போ பக்ஷமாயெடுத்துக்கொண்டார்
உச்சிமுகந்து உள்ளங்கால்முத்தமிட்டார்
அப்போதுபாலகன் அன்பாகச்சொல்லலானான்
போகலாம்வாருவீர் புகழுடன்நமதுதேசம்
இந்தமொழிக்கேட்டு யெடுத்தாரேடேருக்களே
குதிரைமீதுடங்கா கொப்பனவேபோட்டாரே
வேந்தரெல்லோரும் வேகமாய்ப்புரப்பட்டார்
அந்தச்சமயத்தில் அன்புள்ளபாலகன்
சிலதுசேனைகளே சிறப்புடன்தானழைத்து
நான்வருமளவும் நீங்களிக்கோட்டைதனை
ஜாக்கிரதையாக காவல்கள்செய்வீரே
இப்படிச்சொல்லி யெழுந்தானேபாலகன்
தகுந்தகுதிரைமீது தானுமேயேறிக்கொண்டு
நடந்தாரேயெல்லோரும் நலமுடனேகாட்டுமார்க்கம்

வசனம்.

இப்படியிருக்க பாலகன் தனது பரிவாரத்தை அழைத்துக் கொண்டு எல்லையிலிருக்கும் சத்தி எதிரில் வருக. இப்பாலகனைப் பார்த்தவுடன் வேந்தனே சந்தோஷமாய் தந்தைகளே அழைத்து வந்தீரா என்று கேட்க. பாலகன் இதைக்கேட்டு தேவி யான் சந்தோஷமடைந்து அழைத்துவந்தேன் ஆனல் பக்கிரியிடமிருக்கும் பூதங்கள் மந்திரம் உன்னிடமிருக்கிறது அதை எந்தனுக்கு உபதேசஞ் செய்ய வேண்டு மென்றுசொல்ல அதுபோல் தேவி உபதேசஞ்செய்ய அந்தப் பாலகன் நிமிஷத்தில் ஸ்மரிக்க பூதங்கள் எதிரில் வந்து நின்றது அதைப்பார்த்து ஏ! பூதமே பக்கிரியழைத்தால் போக வேண்டாமென்று திட்டஞ் செய்துவிட்டு எல்லோரும் புறப்பட்டு

அந்தவிடத்தைவிட்டு அப்போதுபுறப்பட்டான்
நயனவாதிப்பட்டணம் வந்தானேமருதினம்
அந்தவிடம்விட்டு புறப்பட்டானப்போது
கிளிப்பட்டணம்வந்து சேர்ந்தானேபாலகன்
அந்தநல்லகானகத்தில் டேருதான்போட்டாரே
எல்லோருந்தானமர்ந்து இருக்கும்நல்லசமயத்தில்
டங்காயடித்தானே டம்பமாயப்போது
சூர்யவர்த்திவேந்தன் சொகுசாகக்கேட்டானே

வசனம்.

இந்த டங்கர் சப்தம் கேட்டவுடன் சூர்யவர்த்திவேந்தன்கேட்டு காவலரையழைத்து ஆரோ எதிரி வந்திருக்கிறார் அதை அரிந்து

வரும்படி திட்டஞ்செய்ய பாருக்காரர் வந்து பாலகன் எதிரில் நின்று சந்தோஷமடைந்து அய்யா உம்மை எமது வேந்தர் அழைத்துவரும்படி திட்டஞ்செய்தார் என்றுச் சென்னவுடனே எல்லோரும் புறப்பட்டு சூர்யவர்த்திவேந்தன் எதிரில் வந்து நிற்க இவரைப்பார்த்து அய்யா பாலவர்த்திவேந்தா போனக் காரியஞ் சந்தோஷமடைந்திருவென்று கேட்க. பாலகன் இதைக்கேட்டு ஓ இராஜோத்தமா யான் சந்தோஷத்துடன் இதோ யென்தந்தைமார் ஏழுபேரையும் என்தாயையும் அழைத்துவந்தேனென்றுச்சொல்ல வேந்தன் அதிகசந்தோஷமடைந்து தன் புதல்வியைதந்து நல்லசுபமுகூர்த்தத்தில் கலியாணஞ்செய்து முடித்தார். அதின் பிறகு, பாலவர்த்திவேந்தன் சூர்யவர்த்திவேந்தனைப்பார்த்து யான் போகவேணும் விடைதருவீரென்றுகேட்க அதுபோல் அவ்வேந்தன் சம்மதமடைந்தார் உடனே பாலகன் தன் பரிவாரத்துடன் யுறப்பட்டு கெங்காவதிபட்டணம் வந்துசேர்ந்தான். சேர்ந்தவுடனே அவ்வேந்தர் இவர்களைப்பார்த்து சந்தோஷமடைந்து நல்ல சுபமுகூர்த்தத்தில் தன் புதல்வியைத்தந்து பாலவர்த்திவேந்தனுக்கு விவாகமுடித்தார். அதன்பிறகு பாலவர்த்திவேந்தன் தன் பரிவாரத்துடன் புறப்பட்டு புலிவேந்தன் பட்டணஞ் சேர்ந்தார்.

நாட்டிற்குவெளியில் நலமாகடேருபோட்டார்
வந்தசேனைகளெல்லாம் இன்பமாயமர்ந்தாரே
இந்தசேதிகேட்டு இன்பமாய்புலிவேந்தன்
மந்திரியுந்தானும்வந்து மகிழுடன்பாலகனை
கண்டுசந்தோஷித்து கடுகயழைத்துச்சென்றார்
க்ஷேமத்தைவிசாரித்தார் சிறப்புடன்பாலகனை
அப்பாகுமாரா அறிவுள்ளவேந்தனே
கூடயனுப்பின குருபிராமணன்யெங்கே
அய்யாவேகேள்கேளும் அன்புடன்விப்பிரவன்
வருகும்வழிதனிலே வன்மைவேங்கைதின்றது
உந்தன்கிருபையாலே எந்தன் தாய்தந்தைகளை
கொண்டுவந்தேனையா கொப்பனேவெயிப்போது
எந்தனுடபட்டணம் போகவேண்டுமய்யனே
விடைதாருமையா வேகமாயிப்போது

வசனம்.

இதைக்கேட்டவுடன் புலிவேந்தன் சந்தோஷமடைந்து அப்பா பாலவர்த்தி வேந்தனே இனிகலியாணம் செய்துக்கொள்ள என்னதாமதம் என்றுச்சொல்ல இதற்கு சம்மதமடைய அப்போது வேதியரை அழைத்து முகூர்த்தலக்கினமிட்டு அத்தினத்தில் தன்னுடெல்லாம் அலங்காரஞ்செய்து பாலவர்த்தி வேந்தனுக்கு கலியாணமுகூர்த்தஞ் செய்து ஈரெட்டுநாள் வைத்திருந்து பாலவர்த்தி வேந்தனையும் தன் மகளையும் கூட்டியனுப்ப சந்தோஷமாய் புறப்பட்டு தந்தை தாயை யழைத்துக்கொண்டு வந்தான்.

வனமாய்வுனங்கடந்து வருகுருரப்போது
காடுசெடிகளும் கண்டுமேதரண்டிவந்தார்
பாணுகண்டிபட்டணத்தில் பூஞ்சோலைக்கண்டானே
அந்தநல்லபூஞ்சோலையிற் அன்பாகடேறுபோட்டார்
வந்தசேனைகள்வேந்தர் வாஞ்சமாய்தானமர்ந்தார்
இவர்களைவிட்டுமே இன்பமாய்பாலகனும்
ஓண்டியாய்வந்தானே உகந்துதன்மனைக்குமே
வந்துமேபெரியதாயை வாஞ்சாயயழைத்தானே
அம்மாடிநீகேளாய் அன்புடன்யென்வார்த்தை
எல்லோரையயழைத்துக்கொண்டு இப்போதுவந்தேனென்றான்
இந்தமொழிக்கேட்டு யெங்குமில்லாசந்தோஷத்தை
சூர்யநாகம்மாள் சிந்தையும்பொங்கிநாள்
பாலகனையப்போது பண்புடனெடுத்துக்கொண்டு
இன்றைக்குவுன்முகத்தை யின்பமாய்பார்த்தோமப்போ
உனதுதன்தைகள்செத்த யிடந்தன்னைபார்த்தாயோ

வசனம்.

அம்மா எனதுதன்தைகளையும் தாயாரையும்யழைத்துக்கொண்டு வந்தேன் என்றுச்சொல்ல இதைக்கேட்ட பெரியதாயார்கள் சந்தோஷமடைந்தார் இதற்குள்பாலகன் காவலரையயழைத்து வலையல்காரசெட்டியை அழைத்துவரும்படி திட்டஞ்செய்ய அதுபோல்காவலர் அழைத்துவருக ஆறுபேர் தாய்களுக்கும் வளையலிட்டு பிறகு தன்னுடலங்காரஞ்செய்ய அந்தச்சமயத்தில் தந்தையான காரியவர்த்திவேந்தன் பாலகனைப்பார்த்து அப்பா இதுயேனென்றுக்கேட்க இதைகேட்ட பாலகன் தந்தையே நீங்கள் நாகள்ளபூடியில் கல்லாகிவிட்டப்பிறது என்தாய்மார்கள் அமங்கல்ய ஸ்திரீயானர் இப்போது இந்த பந்தலில் உங்கள் ஏழுபேருக்கும் கலியாணம்போல் செய்துநால்வர் அரிந்து சந்தோஷமடையச் செய்குரேன் என்றுச்சொல்ல இதுகேட்டு கார்யவர்த்திவேந்தன் அப்பாயிந்த ஆறுப்பேருக்கு உனதிஷ்டம்போல் செய்யும் எந்தனுக்கு வேண்டாம் என்றுவெருக்க இதைக்கேட்ட பாலகன் ஐயா அதுயேன் எந்தனுக்குச்சொல்லும் என்றுக்கேட்க அப்போது கார்யவர்த்திவேந்தன் சொல்லத்தொடங்கினன்

உந்தன்தாயாரான உகந்தபாலநாகம்மாளை
பக்கிரிகையால் விரதமதுகேட்டாளே
இப்படிக்கொத்தவளை எப்படியிச்சிக்கலாம்
இந்தமொழிக்கேட்டு யப்போதுபாலகன்
தந்தையேநீகேளும் தனிமையுடனெந்தாய்
செய்யாதபரிக்ஷைகள் செய்யச்சொல்லுகிறேனிப்போ
பரிக்ஷைகள்பிசக்கினல் பன்மையுடன்வெட்டுவீர்
இப்படிச்சொல்லியே யிசைந்துமேபாலகனும்

நாலுகுடமெண்ணை நலமாககொண்டுவந்து
எழுகுதொட்டிதன்னில் யின்பமாய்கொட்டினார்
அக்கினிமூட்டியே அனலாககாயவைத்தான்
தனதுவிரல்மோதிரம் தன்மையுடன்தானும்போட்டு
அம்மாடியம்மாடி யன்பாயென்னைபெற்றதாயே
இந்தமோதிரத்தை இப்போயெடுத்துக்கொள்வாய்
இப்படிச்சொல்ல இதுகேட்டாள்நாகம்மாள்
சூர்யனைசாக்ஷிவைத்தாள் சுருதிபூமிசாக்ஷியிட்டாள்
அப்பாகுமரா அன்புள்ளபாலகனே
உன்தந்தையன்றி ஒருவர்முகம்பார்த்தறியேன்
நிஜயமென்றுசொல்லி பெடுத்தாளேமோதிரத்தை
கார்யவர்த்திவேந்தன் கண்டானேயப்போது
பக்கிரியிடத்தில் பகர்ந்தவித்தையிதுதானப்பா
இந்தமோதிரத்தை யெடுப்பதுபெரிதாமோ
'இதுவெல்லாம்நம்பமாட்டேன் இந்தவித்தையானறிதேன்
இத்தனையுங்கேட்டானே இன்பமுடன்பாலகனும்
ஆழக்குருயை வெட்டினான்யப்போது
அந்தக்குழிதன்னில் அன்பாகக்கட்டைகளை
போட்டுநெருப்பிட்டு பொரிபொரியாயெரியவே
அந்தத்தீயிதன்னில் அன்பாகயென்னைக்கொட்டி
எரியுஞ்சமயத்தில் இன்பமாய்த்தாயாரை
குதிக்கவேசொன்னானே கொப்பனவேயப்போது

வசனம்.

அந்தச்சமயத்தில் கார்யவர்த்திவேந்தன்பார்த்து அப்பா இது குதிப்பது எப்படியென்றால் அந்தக்குண்டத்தில் நாலுமணிநேரம் மொழியாடவேண்டும் பிறகு கரையேரவேணும் அப்போது கட்டிய சேலை பங்கமாகலாகாது. குங்குமம் அழியக்கூடாது. திரேகங் கொப்பளிக்கலாகாது இப்படிருந்தால் யான் நம்புவேனென்றுச்சொல்ல,

அப்போதுநாகம்பாள் அன்பாகக்குதித்தாளே
நாலுமணிநேரம் நலமாகயிருந்தாளே
பிந்திகரையேரி பிரியமாய்வருகவே
கட்டியசேலைதன்னில் கடுகதீபடவில்லை
நெற்றியில்குங்குமம் கலையாமலிருந்தது
ஏதுபங்கமில்லாமல் யெழுந்துமேவந்தாளே
அப்போதுவேந்தன் அன்பாகசிறித்துமே
எந்தன்தவப்பாலா இம்போநம்புனேனுன்தாயை
இதைகேட்டுப்பாலகன் இன்பமாய்ச்சிரித்தானே
என்னைபெற்றதாயார் யெனக்குக்கீர்த்திகொண்டுவந்தாள்

வசனம்

இப்படிச் சொல்லி வேதியரை யழைத்து இவர்களுக்குக் கலியாணசாங்கிய முதலானதுஞ்செய்து சம்பிரமாயிருக்க அப்போது பனி ரெண்டுலக்ஷ சேனைகளும் பார்த்து அய்யா பாலவர்த்தி வேந்தா நாங்கள் எப்படி யெங்களுடைய மாதர்களைப் பார்ப்பதுயென்று சொல்ல அப்போது அவரவருடைய மாதர்களை யழைத்து வளையலிட்டு அந்த பந்தல் தன்னிலே அவர்களுக்குக் கலியாணஞ் செய்து யனுப்பினான். இப்படி நான்கு தினமடைந்தபிறகு ஐந்தாந்தினத்தில் பக்கிரியானவன்

அப்பா-பாலவர்த்தி வேந்தா அக்கிளிகொடுமையா
இங்குகிளிக்கொடுக்கேன் உன்னுடபோகலாம்
என்றுமேசொல்ல இதுகேட்டான்பக்கிரியும்
வணிகச்சங்குபெண்ணை வருகிறாயாயிப்போது
அடபோடாபடுபாவி அடியெடுத்துவைக்கமாட்டேன்
இப்பாலகனிடத்தில் இன்பமாயாணிருப்பேன்
இப்படிச்சொல்ல இதுகேட்டான்பக்கிரியும்
நல்லதுயென்றுசொல்லி நடந்தாரேயிருவரும்
நாலாந்தினத்தில் நாகள்ளபூடிவந்தார்
அப்போதுபாலகன் அன்பாகசொல்லலானான்
கேட்டையாபக்கிரி கிருபையுடனென்வார்த்தை
உந்தன்திரவ்வியமெல்லாம் உகந்துமேகாட்டடா
இல்லாமல்போனல் இக்கிளியைகொல்லுகிறேன்
கிளியைநீகொல்லவேண்டாம் கிருபையுடன்காட்டுகிறேன்
தனமிருக்குமிடமெல்லாம் தைர்யமாய்காட்டினான்

வசனம்.

அப்போது பாலர்த்திவேந்தன் கிளிபட்டணத்திலும் கங்காவதி பட்டணத்திலும் புலிவேந்தன் பட்டணத்திலும் இருந்து வண்டிகளும் ஆனைகளும் ஒட்டைகளும் வரவழைத்து பனிரெண்டு ஸ்தம்பத்தினிடத்திலிருக்கும் தங்கமுதலாகிய நவரத்தினங்களையும் ஜவ்வாது புனுகு முதலான வாசனை திரவியங்களையும் எடுத்து வண்டிகள்மீதும் ஆனைகள் மீது ஒட்டைகள்மீது ஏற்றி தனது பட்டணத்துக்கொண்டு போகும் படிதிட்டஞ்செய்து விட்டு அன்னட்டிற்கு சுற்றிலும்இராநின்ற ஒட்டரையழைத்து அக்கோட்டைதனை இடித்து தூளிதஞ்செய்து அதில் எருக்கன் ஊமத்தி எட்டி முத்துக்கொட்டை இப்படிக்கொத்த விரைகள் விரைத்துவிட்டு வண்டிமீது ஏறுஞ்சமயத்தில்பக்கிரிபார்த்து அப்பா இன்னட்டில் நாலுவீதியில் பிச்சையெடுத்து பிழைக்குறேன் கிளி கொடுமென்றுகேட்க அதற்குபாலகன் அடா பக்கிரி உனது ஆாகிலுமிருந்தால் அவருடன்சொல்லிக்கொள் பயமில்லை என்றுச் சொல்ல பக்கிரி ஓடியந்தக்கிளியை பிடித்தான் கிளித்தலை பாகன்கையிலும் கால்கள் பக்கிரிகையிலும் அகப்பட்டு இருக்கயப்போது,

விடடாவிடடா பாலவர்த்திவேந்தனே
விடமாட்டேன்விடமாட்டேன் பக்கிரிசாகிப்பு
இப்படிஇருவரும் இசைந்துமேயிழுக்கும்போது
கிளிதலையப்போது கிள்ளிதான்விழுந்தது
ஹல்லஹூதா வென்று அப்போதுபக்கிரியும்
மலைபோல்விழுந்தானே மண்மீதுயப்போது
பக்கிரிபிராணமும் போச்சுதேகிளிசாக

வசனம்.

இப்படிபக்கிரி செந்தபிறகு பாலவர்த்திவேந்தன் தனக்குள்தானே இந்ததிரவியம்நமக்கேனென்றுச்சொல்லி போகும்வண்டிகள் திருப்பிக்கொண்டு வந்து அன்பதுபக்கிரிகளை யழைத்து அவனுக்குகோரி கட்டச்செய்து அந்தகோரி சுற்றிலும் விந்தையான பூஞ்சோலையமைத்துவிட்டு அவனுக்குச் செய்யவேண்டிய கர்மங்கள்செய்துவிட்டு மிகுதி திரவியத்தை கோரியில்வைத்து தினம் சாம்பிராணி தூபமிடும்படி திட்டஞ்செய்து அந்தபக்கிரிகளிடத்தில் இதையெல்லாம் ஒப்பிவித்துவிட்டு பாலகன் பாணுகண்டிபட்டணம் வந்தவுடனே தந்தைகள் இராஜ்யபார மாண்டுக்கொண்டிருந்தார் பூச்சக்கிரப்பட்டணத்தை தந்தைக்கு மகுடஞ்சூட்டினான் பிறகு மாமன்மார் காலஞ்சென்றபிந்தி பாலவர்த்திவேந்தன் அந்நாட்டை பரிபாலித்துக்கொண்டு சுகாசம்பத்துடன் வாழ்ந்திருந்தான் ஆகையால் இந்தபாலநாகம்மாள் கதை வாசித்தபேர்களும் கேட்டபேர்களும் அவரவர் கஷ்டானசாரம் தொலைந்து புத்ர களத்ர சம்பத்தை அடைந்து இருக்கும்படி ஸ்ரீ கைலாசபதியாகிய உமாநாயகனை தினந்தோரும் தியானிக்கிறேன்.

## வாழ்த்து.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

சீர்பெருக சிறப்புடனேபெரியோர்பாதம்
சித்தமகிழ்ந்து நித்தமும்வாழ்க
பேர்பெருக பாலநாகம்மாளென்னும்
பெண்பாவை சரித்திரம்புகழ்ந்துவாழ்க
நீர்வாழ்க ணிதைப்படித்தோர்வாழ்க
நீனிலத்தில் கேழ்ப்பவரும்நிதமும்வாழ்க
கார்வாழ்க கவிசிங்கர்தானும்வாழ்க
கண்டரிந்த குருபாதம்சென்னியில்வாழ்க.

## பாலநாகம்மாள் கதை

## முற்றிற்று.

உ

சிவமயம்.

பெரியபுராணம்

அறுபான்மும்மை நாயன்மார்களில்

ஒருவராகிய

திருநாளைப்போவார் என்னும்

# நந்தனார் கீர்த்தனை.

இவை

ஆனைதாண்டாபுரம்,

பாரதி-கோபாலகிருஷ்ணையரால்

இயற்றப்பட்டு,

திருமழிசை,

அருணாசலமுதலியாரால்

பரிசோதித்த பிரதிக்கிணங்க

ஐதீகப்படங்களுடன்

அமரம்பேடு

இரங்கசாமிமுதலியார் அண்டு சன்ஸ்

அவர்களாற்றமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1923.

நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி.

திருச்சிற்றம்பலம்.

# நந்தனார்சரித்திரவரலாறு,

திருவெண்ணீறு தரித்த பரமசிவனார் திருக்கொலுவீற்றிருக்கும் வெள்ளிமலையானது, இமயமலையின்பக்கத்தி லிருக்கின்றது! அது, பெரியோர்கள் பரிசுத்தமனம்போலும், படிகம்போலும் பலவுலகிற் புண்ணியங்களெல்லாந் திரண்டுருண் டொருவடிவாகப் பிரகாசிக்கின்றதுபோலு மிருக்கின்றது. அதில், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்குவேதங்களி னோசையும், வித்தியாதரர்கள் வீணையோசையும், யானைகளுடைய முழக்கமும், வானதுந்துபி முழக்கமும், இடைவிடாதொலிக்கின்றன அன்றியும், தேவர்கள் சிரமாலைகளும், கற்பகமாலைகளும்கண்டு பற்பலமுனிவர்களஞ்சலிசெய்து சார்ந்து மலர்மாலைகளும் அம்மலைப்பக்கங்களெங்கு நெருங்கியிருக்கின்றனர். அது அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள்போகபூமியர் என்னும் பதினெண்கணங்களுந் துதிக்கத்தக்கது. அக்கயிலாயமலையின்மேல், கோடிசூரியர் பிரகாசிப்பதுபோலும் விளங்குகின்ற நவமணிகள் பதிக்கப்பட்ட திருக்கோயிலின் முதற்கோபுரவாயிற் காவற்றலைவராயிருப்பவர் நந்திதேவர். அவர், பரமசிவனுடைய திருப்பணிகளுக்கும திருக்கொலுவிற்கும் அதிகாரத் தலைவர். இவர், உடைவாளும் திருப்பிரம்பும்பெற்றுக் கைலையைக் காக்கப்பட்டவர். தேவர்முதலான யாவருக்கு மேலானவர், பரமசிவனிடத்து அதிகபக்தியும் அன்புமுடையவர். இவரால், இரவும் பகலும் இடைவிடாது காக்கப்பட்ட வெள்ளிமலையென்னும் கைலாயத்தின் அடிவாரத்தில், எச்சமயங்களினும் மேலானசமயம் சைவசமயமென்றும், எக்கடவுளினும் பரமசிவனே மெய்க்கடவுளென்றும் அறிந்தவர் உபமன்னிய மகாமுனிவர். இவர், கிருஷ்ணபகவானுடைய சிரசின்மேல் தம்முடைய திருவடிகளால் தீக்ஷைசெய்வித்தவர், இறப்பற்றிருக்கின்றவர், சிவபிரானுடைய கிருபையால் திருப்பாற்கடலைக்குடித்தவர், சிவனிடத் திடைவிடாதன்புள்ளவர்.

இந்த உபமன்னிய மகாமுனிவர் தம்மிடத்தில் அடியார்களும், பெரியோர்களும், முனிவர்களும் புடைசூழ்ந்திருக்கின்ற சமயத்தில், அவ்விடத்தில் ஆயிரஞ்சூரிய கிரணங்கள் ஒன்றாகத்திரண்டாற்போலும் ஒருபிரகாசந் திரண்டுதோன்ற அங்கிருந்தவர்களெல்லோரும் உபமன்னிய மகாமுனிவரை நோக்கி, இதென்ன ஆச்சரியம் இப்படிப்பட்ட பிரகாசந் தோன்றவேண்டிய காரணமென்னவென்றுகேட்க, உபமன்னியர் சிவபிரானைத் தியானித்துச்சொல்லுகின்றார். தென்திசையில் ஆதனூரில் அவதரித்த திருநாளைப்போவார் என்னும் திருநாமம் பெற்றவர் சிவனது திருவருளால் வருகிறாரென்று இருகரமுஞ் சிரமேற்குவித்து அத்திசையை நோ

க்கி வந்தனஞ்செய்து ஆனந்தக்கண்ணீர் அங்கமெங்குஞ்சிந்த உப மன்னியர் துதிக்கும்போது, மற்றவர்கள் தங்களுக் குண்டாகிய சந் தேகந்தீரும்படி அம்முனிவரைப் பணிந்து கேட்கத் தொடங்கினா ர்கள்.

எங்களாண்டவராகிய முனிவரே! சிவபிரானுடைய திருவடிக ளையன்றி மற்றொரு தெய்வத்தையும் வணங்கமாட்டீரே இப்பொழு துவணங்கவேண்டிய காரணமென்னவென்று முனிவர்கள் கேட்க உபமன்னியர் சொல்லுகின்றார். கேளுங்கள் முனிவர்களே? பரம சிவன் தரிக்கப்பட்ட திருமாலையையும், திருவெண்ணீற்றினையும்அணி கின்றவர் எள்ளிடவிடமில்லாது கொள்ளிடநதிசூழ்ந்த சோழவள நாட்டிலிருக்கும் மேற்காநாட்டில் ஆதனூரில் தீண்டப்படாதவர்கு லத்தில் சேற்றிற்செந்தாமரை யுற்பவமானாற்போலும் நந்தனா ரெ ன்பவ ரொருவர்பிறந்தார். அவர் விவேகசூட்சியும், வெட்டிமைத் தனமாகிய காணியாட்சியும், சிவபணிவிடைகளில் மாட்சியும், சிவன டியாரைக்காணுங் கண்காட்சியும் உடையவர். இவர், குலாசாரத் தன்மையுஞ்செய்து மலர்கொய்து தாஞ் சிவபூசைசெய்து சிவாலயங் களுக்கு அறையும் பேரிகை மத்தளங்களுக்குத் தோலும் வாறுப் யாழுக்குநரம்பும், சுவாமிக்குக் கோரோசனையும் முறையாகவும் இறையாகவும் கொடுத்துவருவார். சிவாலயத்தில் அந்தி சந்தியிற் போய் தூரத்திலிருந்து மனங்கசிந்துருகிச் சிவனைப் பாடியாடி வரு கிறநாளில், திருப்புன்கூரில் பரமசிவனைத் தரிசிக்க ஆதனூரி லிருந் துவந்து திருக்கோயிலின் திருவாயிலினின்று சிவலிங்க தரிசனை காண ஆவலாகவும் காவலாகவும் வணங்கிப் பாடுகையில், பரமசிவ னார் சந்நிதிக்கு முன்னிருக்கும் நந்திதேவரை விலகும்படிசெய்து காட்சிகொடுத்தருளினார்.

நந்தனார், சுவாமி தரிசனைசெய்து வரும்வழியில் ஒரு பள்ளத் தைக் கண்டு (அதைப் பெருங்குளமாக வெட்டித்) தம்முடைய ஆத னூரென்னுஞ் சேரிக்குப் போனார். இவ்வாறு பலதலங்களையும் வண ஞ்செய்து தொழுதுக்கொண்டு சிதம்பரத்திற்குச் செல்ல மனம்வை த்து தம்முடையசாதி கோயிலுக்குப்போக யோக்கியமில்லையென்று விசனமடைந்து நாளைக்குப் போவோமென்று சொல்லியிருந்தார். சிவபணிவிடையாலும் தன்னை யடிமைக்கொண்டிருந்த வேதியருத் தரவு தடையினாலும் போகக்கூடாமல் அநேகநாட்கள் சென்றபடி யால், அவருக்குத் திருநாளைப்போவாரென்று பெயர்வந்தது. அத ன்பிறகு, திருநாளைப்போவார் சிதம்பரம் வந்ததும் சுவாமி அவருக் குக் காக்ஷிதந்ததும் ஆகிய சரித்திரங்களை உபமன்னிய மகாமுனிவர் சொல்லக்கேட்டு யாவரும் பேரானந்த மடைந்தனர். இதனடியில் வரும் நொண்டிச்சிந்தினால் ஷை சரித்திரவிவரங்களைத் தெரிந்து கொள்ளலாம்.



உ

சிவமயம்.

திருநாளைப்போவார் என்னும்

# நந்தனார் சரித்திரக்கீர்த்தனை.

## கற்பகவிநாயகர் துதி.

காப்பு-வெண்பா.

கந்தன் றனையளித்த காதலனாற் பேறுபெற்ற
நந்தன் சரித்திரத்தை நானியம்பச்—சுந்தரஞ்சேர்
தில்லைமணி கோபுரத்திற் றேடிவளர் கற்பகத்தாள்
அல்லும் பகற்றுணையே யாம்.

## முக்குறுணிவிநாயகர் துதி.

விருத்தம்.

நந்தணி கரத்தான்றில்லை நாயக னருளால்வந்த
நந்தன்முக் குறுணியான்றன் னளினபொற் றாள்வணங்கி
நந்தன்பே ரருட்பாலுண்ட நற்புகழ்ச் சொலிப்பின்பேரா
நந்தமுற் றுலகினாளும நலமுடன் வாழ்குவேனே.

## சபாபதி தோத்திரம்.

கலி விருத்தம்.

தக்க சீர்த்திகொள் நந்தன் சரித்திரம்
இக்கதை யையெடுத் தேயி யம்பிட
செக்கர் மேனியன் தில்லைச் சபைதனிற்
றக்கத் தோமெனுந் தாள்கள் சிரங்கொள்வாம்.

## சிவகாமவல்லி தோத்திரம்.

விருத்தம்.

பாம்பினைத் தந்தையாகப் படைத்துப்பின் பெவருங்காணப்
பாம்பினைப் பணியாய்க்கொண்ட பரையருட் பாதமேத்திப்
பாம்பினிற் புலியும்பாம்பும் பார்த்திட நந்தனூர்க்கன்
பாம்படி முத்திதந்த பழங்கதைப் பகருவேனே.

## சுப்பிரமணியர் தெய்வயானை சரஸ்வதி இலக்குமி விஷ்ணு இவர்கள் துதி.

விருத்தம்.

சச்சிதானந்த சதாசிவனருளைச் சார்ந்தநித்தியா னந்தநந்தன்
உச்சிதக்கதையைக் கீர்த்தனையாக வுலகெலாந் துதித்திடச்சொல்ல
அச்சிலைவேற்கை யறுமுகன்தெய்வ யானைசெங் கலைமகள்கமலை
பச்சைமான்மற்றும் பரவியதேவர் பாதபங்கயம் பணிகுவனே.

## திருத்தொண்டர் முதலிய தில்லை மூவாயிரவர் துதி.

விருத்தம்.

வாதவூ ரடியாரோடு மற்றறு பத்துமூவர்
பாதமே வணங்கித்தில்லைப் பதிதனி லுளுமேவும்
போதமூ வாயிரத்தோர் பொன்னடிக் கமலமுன்னி
யோதுநந்த னூர்சரிதை யுரைத்திடத் துணிந்ததாமே.

## அவையடக்கம்.

விருத்தம்.

சிற்பிகள்காண்போர் சிந்தையும் விழியும் செப்புநல்லின்புறத்தீட்டு
விற்பனங்கண்ட வறிவிலானெழுதும் விதமெனமுத்தமிழென்னுஞ்
சொற்புகழ்கல்வித் துறையெலாந்தெரிந்த தூயநற்புலவர்முன்கருதி
பொற்புறவிசைக்குங் கீர்த்தனமிதனைப் புவிமிசைமதிப்பர்களம்மா

---

## விநாயகர் துதி.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

கணநாதாசரணம் காத்தருள்
கணநாதாசரணம்

அநுபல்லவி.

பணமார்சேஷன்ருங்கியபார்மீதினிலே நேருங்
குணமார்நந்தன்சரித்திரங்கூறகிருபைக்கண் பாருங் கண

சரணங்கள்.

சால்லும்ப்ரணவமூலாதுயவேதாந்த நாதா
துலங்குமுனிவர்மனத்துகளறுத்தருட் போதா
லமோதகமுதல்நாடிநுகர்வி ஞேதா
நாயேன்சொலுந்தமிழைநாடிரக்ஷிக்குந் தாதா கண

ம்பரமானமன்றுள்ளாடும்பர னளிக்க
அரைநொடியினில்வலமாகிமனங் களிக்க
ம்பர்பிரானுகந்துவுயர்மாங்கனி யளிக்க
உளந்தளராமலுண்டமுதல்வாதுய ரொழிக்க கண

தஜோங்குநவரத்னச்சிகரமேலக்கோ புரத்
தேவீற்றிருக்குமெங்கள்தேவாகுண்ட லாதர
ஜித்தவர்க்குவரம்புரிந்தருளு மாதார
பூமிசைநாடகஞ்செய்புசிதவோ மரகர கண

புராணிகர்சொல் விருத்தம்.

வளம்பெறத்தரும மோங்கியவாத
ஞரில்வாழ்ந்திடும்புலையர்
உளமகிழ்ந்தெங்கள் குடிப்பெயர்விளங்க
வுதித்தநற்றீபமேமணியே
களங்கிலாக்கதிரேயெனப்புகழ்ந்தோதக்
கதித்தசீர்நந்தனர்சரிதம்
விளம்பிடமுதலிற் றேடயம்படித்து
மேன்மையுமிகப்படைத்தனனே.

தோடயம்.

இராகம்-நாட்டை-ஆதிதாளம்.

ருவளர்தருமாத ஞரார்-செறிபுலைக்குடிலவதாரர்
ருமநெறிநந்தனர்ப் பேரர்-சரித்திரமதனைச்சொலவே ஆ ஆ
ருள்வளர்கஜமுக சாமி-அம்பிகைதந்தருளுஞ்சாமி
ங்குசக்கரதல சாமி-அம்புயத்தாணிதந்துணையே ஜெ
ண்டணிமாமலர்த் தாரன்-மண்டலம்வாழ்த்தியதீரன்
ண்டுமெளியற்கு தாரன்-மன்னுங்கதைசொலவே ஆ ஆ

புண்டரீகபுரத் தீசன்-புராரியுளமகிழ்நேசன்
தண்டலர்மாமண வாசன்-தாமரைத்தாள்கடுணேயே ஜெ

## மங்களம்.

விருத்தம்.

சங்கரன்றனக்குஞ்சண்முகன்றனக்கும் சதுர்முகப்பிரமனுர்தனக்கு
பங்கயமாற்கு மவர்மனையாட்கும் பார்மகட்பாவலர்தமக்கும்
தங்கியவட்ட வசுக்களானவர்க்கும் சதுர்மறையோதுமந்தணர்க்கு
பொங்கியமூவாயிர நந்தனுர்க்கும் பொதுப்படமங்களம்புகல்வாம்.

இராகம்-அசாவேரி-அடதாளம்.

பல்லவி.

ஆதிமத்தியாந்தனுக்குமங்களம் எங்கள்
ஆநந்தநந்தனுர்க்கு மங்களம்

அநுபல்லவி.

பாதிமதிநதியும் பாம்பும்புலி யுரியும்
சோதிக்குழையணியுந் துலங்கவருட் புரியும் ஆ

சரணங்கள்.

சிலையைவடிவழகிற் சிறந்தவொருபெண் ணுக்கி
சிலைவளைத்தபரசி ராமன்கெர்வத்தைப் போக்கி
மலையைச்சுமந்துபெரு மடுவிலொருகாற் றாக்கி
மாநடனங்கள்செய்த மாயமானினையெய்த ஆ

குருபரநாதருக்குங் குறமகட்பாக ருக்கும்
அருணகிரிநாதனுக் கருள்செய்விசாக ருக்கும்
ஒருமுருகாவென வுளங்களித்தவ ருக்கும்
உம்பர்கோனுக்குகந்த வுயரரசினைத்தந்த ஆ

சக்கரைமுக்கனியவல் தனைநுகர் நாதருக்கும்
சகலதேவர்தமக்குஞ் சகலவசுக் களுக்கும்
பக்குவமாகவிதைப் பாடுஞ்சங்கீத ருக்கும்
பார்மகட்கும்பங்கயப் பாவையர்க்கும்விஜய ஆதிம

## பெரியபுராணச்செய்யுள் விருத்தம்.

திருமறையோர்புராணமவைபதின்மூன்றுசிவவே
தியரரனைவழிபட்டபுராணமீரிரண்டு
குரைகழன்மாமாத்திரரொன்றறுவர்முடிமன்னர்
குறுநிலமன்னவரைவர்வணிகர்குலத்தைவ

ரிருமைநெறிவேளாளர் பதின்மூவரிடைய
ரிருவர்சாலியர்குயவர் தயிலவினையாளர்
பாதவர்சான்றூர்வண்ணூர் சிலைமறவர்நீசர்
பாணரிவரோரொருவ ராம்பகருங்காலே.

உபமன்னியபகவான்

ரிஷிகளுக்குச் சொல்லுகிற-வசனம்.

இவ்வுலகில், பெரிதாகிய வேதசாஸ்திரங்களுக்குள்ளே மிகவு
சாரமாகிய பரமசிவபத்தியை யுண்டுபண்ணுகின்ற பக்திவிலாசத்தி
(உபமன்னிய பகவானனவர்) அநேகம்ரிஷிகள் கேட்கச்சொல்லுகி
றூர். (பெரியபுராண)மென்று சொல்லப்பட்ட நூல் சேக்கிழார் சுவ
மிகளாலே செய்யப்பட்டது. ஸ்காந்தபுராணத்திலும், இன்னமனே
புராணங்களிலுஞ் சொல்லப்பட்ட பத்திமார்க்கங்களாகிற கடலி
நீரைக் கையாலள்ளிக் குடித்ததுபோலச் சிலதுகீர்த்தனங்களினு
விருத்தங்களினலும், சிலபக்தர்கள் சரித்திரங்களைக்கொண்டாடுவ
போல உளறினேனென்று (ஆனைதாண்டாபுரம் கோபாலகிருஷ்
யன்) பெரியோர் அடிவணங்கி ஆனந்தம்பெருகிச் சொல்லிய (தி
நாளைப்போவார்)சரித்திரத்தை யாவரும் வினவிக் கேட்கும்படி சி
வணங்கி விஞவினேன், பாரதம், பாகவதம், பகவற்கீதை, சிவர
யம், ஸ்காந்தமுதலாகிய பக்திஞான வைராக்கிய சாஸ்திரங்களி
மிகவுஞ் சாரமாகிய பரசிவ பத்திபண்ணமல், இச்சுரவேத பராங்
ஞயிருக்கின்ற பிராமணனைப்பார்க்கிலும், பரமசிவ பாதாரவிந்த
திபண்ணுகிறவன் பறையனுயிருந்தாலும், பதினுன்கு லோகத்தை
பரிசுத்தம் பண்ணுவானென்று (உபமன்னியபகவான்) சொல்ல, அ
ற்கு ரிஷிகள் சொல்லுகின்றூர்கள். பத்திஞான வைராக்கியங்க
தெரியப்படுத்தானின்ற வேதபுராணங்களைப்பார்க்க அறியாராம், அ
றியில் அவிவேகிகளாயிருக்கிற சண்டாளர்களுக்கு எப்போது ப
வருமென்று ரிஷிகள் கேட்க (உபமன்னியபகவான்) சொல்லுகின்

திருநாளைப்போவார் சரித்திரமுழுதும் நொண்டிச் சிந்தா
பாடியிருப்பதால் முன்னம் சிந்துபாடி அதன் பிறகு சரித்திரத்தி
தொடர்ச்சியில் கீர்த்தனங்களோடும் விருத்தங்களோடும் இடை
வில் சிந்து துண்டுதுண்டாகச் சேர்ந்துவரும்.

உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச் சொல்லுகின்ற

நொண்டிச்சிந்து-இராகம்-புன்னுகவராளி.

பழனமருங்கணையும் - புலைப் - பாடியதுகூறைவீடுதனில், சு
யோபடர்ந்திருக்கும்-அதைச் - சுற்றிலும் நாய்கள் குலைத்திருக்கு

நந்தோடிவட்டமிடும் - இளம் - பச்சைப்பிசிதமேலிச்சைகொண்டு,
ாழிகூவுங்கூக்குரலும்-பாழுங் - கொல்லையருகினில் வெள்ளெலும்
ம், நரம்புங்குவித்திருக்கும்-பல-நெட்டிமிதந்திடுங் குட்டைகளில்,
ண்டோ குடியிருக்கும்-சிறு-நத்தைகமடம் வலுத்திருக்கும், தோ
ருங்கேணிகளில் - வெகு - தொல்லைப்படும்வாடை சொல்லறியாப்,
ம்போ அடித்திருக்கும்-வயற்-பக்கங்களில்மெத்த நொக்கெலும்
ம், கிழித்தோல் நரம்புகளும்- அவர்க் - கீனமில்லைசிறு மீனுலரும்,
தருவில்விளையாடிக்கொண்டு - அவர் - தெந்தினம்பாடுவர்சுந்தரமாய்
லுப்பை மணியரையில்-கட்டி-இண்டந்தலைகளில் பூண்டிருக்கும்,
ங்குதோடுகாதணியும்-அருந் - தாவடமேயவர் தூவிடமாம், மணி
பாதரித்திருப்பார்-தெரு - வாசற்புறத்தினி லேஙிக்கொண்டு, கொ
டாட்டமாயிருப்பார் - கையைக்-கொட்டிக்கொண்டுதனக் கிஷ்ட
டன், மதுவுண்டு கெக்கலிப்பார்-பறை-வாத்தியமும்வெகு நேத்தி
டன், இருக்கும்புலைப்பாடி-அதில்-ஈசன்திருவடி நேசமுடன்; சாரு
ஒருபுலையர் - அவர் - சாதிமுறைதவறாதவராம், நந்தனாரவர்பெய
ம்-வெகு - நல்லவராமிந்தத் தொல்லுலகில், அவரேசிவனடியார்-
வர்க்-காருமெதிரில்லைத்தாரணியில், கோடிகோடிசென்மங்களோ-
ன்னங் - குற்றமறச்செய்தநற்றவமே, அவதாரமானதுவோ-ஈசன்-
ன்புபுரியும்பேரின்பசுகம், கொள்ளைகொள்ளவோபிறந்தார்-திருக்-
காயில்வலஞ்சுழன்றுவலுடன், செய்யும்பணிவிடைகள் - ஈசன்-சிந்
தமகிழ்ந்து குளிர்ந்திடவே, மத்தளபேரிகைகளும் - இசை-வார்
காடுத்துப்புறந் தோல்கொடுத்து, மறவாமலேதினமும்-நல்ல-வாசம்
பருகுங்கோரோசனையும், தேவாலயங்கள்தோறும் - தந்து-சித்தமு
கியபத்திவெள்ளம், புரண்டோடிக்கங்குகரை - என்று-பேதமறிய-
வாணுதுகண்டீர்-சாதியில் நீசனவர் பேணிச் - சாருந்தொழின்
ரையாரும்பகல், திருப்புன்கூர்சென்றனைக்-கண்டு - சேவித்திசை
டிபாவித்தபின், தில்லைச்சிதம்பரத்தைக் - கண்டு-சேவிக்கவேண்டு
ன்றுவலுடன், நாளைப்போவேனென்றாராம் - தன்னை-நாடும்பறை
ர்களோடிவந்து, அண்ணேநீ போகாதே-நமக்-காண்டைபொல்லா
வன் வேண்டிக்கொள்ளான், பார்ப்பாரசாதியுண்டே - அதென்ன-
டுபடுமுழக் காடுமங்கே, நமக்குந்திருநாளோ - அந்த - ஞாயு
ண்டோ யென்னமாயமிது, வென்றேதடைசெய்தார்-சிவன்-வேடி
கைதானென்று நாடிக்கொண்டே, அறியாதுபோலிருந்த - செம்
பான் - னம்பலத்தாடியைக்கும்பிடவே, ஆதனூர்தனிலிருந்து-விடு
-அம்புபோலப்பறந் தையமின்றித், தில்லையருகில் வந்தார்-மனந்-
தறிக்கொண்டார் குறை யாறிக்கொண்டார், கெண்டா மணியே

னைச-காதில்-கேட்குதென்றாரதைப் பார்க்கவென்றே, கொண்டாட்ட
மாகிவந்தார்-கையைக்-குவித்துக்கொண்டேதனக்கம்பிட்டதோ, வெ
ன்றே மனமகிழ்ந்தார்-தெரு-வீதியிலேவந்து காதலுடன் கண்டா
களையாறி-இருகண்களிலானந்தம் பொங்கிடவே, நின்றார்மதிற்புறத்
தே-வெகு-நேத்தியென்றாரிதைப் பார்த்ததில்லை, பணிந்தார் பரவச
மாய்-நல்ல - பாக்கியசாலிகளாகுமென்றார், இதுதானோதில்லைப்பதி
என்று-எக்கலித்தாராடிக் கெக்கலித்தார், ஐயாவுன்சந்நிதியோ-ந
ன்-ஆசைகொண்டு வந்தேனேசமுடன், தெருவில் பொடித்தூளை
அள்ளித்-தேகமுழுதினுந் தாகமுடன், தரித்தார் திருநீறாய்-நாலு
சாஸ்திரவேதங்கள் பார்த்துணரும், பெரியோரிருக்குமிடம் - இ
தப்-பேயனிருப்பது ஞாயமல்ல, நானோபறைச்சாதி - தில்லை-நாதன்
தரிசனமாதரவாய்ப், பண்ணுப்படுபாவி-இந்தப்-பாரிலிருப்பது சீ
லவே, என்றேகுளத்தோரம்-புக்கி-ஏங்கிநின்றார் துயர்நீங்கிநின்றார்
ஓயாப்பெருங்கவலை-கொண்டு - உள்ளங்குழைந்திட வெள்ளமெனக்
கண்ணீர்கரைபுரள-இரு-கைதொழுவாரவர் -மெய்தொழுதார் - கீழே
புரண்டழுதார்-ஒன்றுங்-கேள்விமுறையில்லையோ நாதா, வென்றே
தலைகுனிந்தார்-எந்தன்-வேதனையைக்கண்டு-ஆதரிக்கும், தெய்வங்கி
டையாதோ-பாவி-சித்தந்தெளியவிரத்திதந்து, வாவென்றழைப்பா
ரோ-விண்ணில்-வானவர்கள்போற்று மூனமிலாகனகசபை நடனம்
கண்ணிற்-காட்டக்களித்திடநாயடியேன், வருந்தித் துதிப்பேனோ
எந்தன்-வாணாளொழிவது வீணெனவே, அடடாயிதென்னவென்று
சொல்லி-அந்நகர்வீதியைச் சுற்றிவந்தார், இரவும்பகலோயா-ரதை
ஈசன்கண்டு விசுவாசமுடன், (பாலகிருஷ்ணன்) பணியும்-திருப்-பா
தமுள்ள (தில்லைநாயகனே,) கனவிலுருவாகி-வந்து-காக்ஷிக்கொடுத்
துக்கடாக்ஷித்தபின், எரியினிடைமூழ்கி-வெகு-இன்பம்பெருகிய அ
ன்பர்துதி; வேதமுனிவடிவாய்த்-தில்லை-வேதியர் கண்டிருகைதொ
ழுதார், அங்கம்புளகிதமாய்ச்-செம்பொன்-னம்பலத்தாடியசம்பிரமத்
தைக் கண்டாரறிந்திலரால்,

இராகம்-எதுகுலகாம்போதி-சாப்புதாளம்.

பல்லவி.

நீசனாய்ப்பிறந்தாலும் போதும்-ஐயா
நீசனாய்ப்பிறந்தாலும் போதும்

அநுபல்லவி.

ஆசையுடனம்பலவனடியி லிருந்தாலும் நீசனாய்

சரணங்கள்.

கோதிலாத்தவங்கள் புரிந்தாலும்-தங்கள்
குலவண்மைதவறாதநெறியி லிருந்தாலும்
வேதமுடியாவுமுணர்ந் தாலும்-மாயை
விலகாதுஒருநாளுந் துலையாதுதுன்பம் நீசனாய்

களவுகுலைசெய்து வந்தாலும்-பழி
காரருடன்என்னேரங்கூடியிருந் தாலும்
வளமறவேவாழ்வு கெட்டாலும்-நல்ல
மனிதனவனிடமாகமறலியணு காது நீசனுய்ப்,

ஏத்தகருமங்கள்செய் தாலும்-எங்கு
மிடையாதகொடையாளியென விருந்தாலும்
கோத்திரக்கீர்த்திமிகுந் தாலும்-எங்கள்
கோபாலகிருஷ்ணன்தொழும் பாதம்நினையாதோன் நீச

வசனம்.

இப்படியே பத்திசெய்தால் போதும் மற்றசாதி வருணாசிரமங்
களினாலே ஒன்றும் பிரயோசனமில்லையென்றும், ஒரு இதிகாசத்
தைச் சொல்லுகின்றார். பூர்வத்திலே, தில்லைவெட்டியானென்றும்
மற்றான்சாம்பனென்றும், ஆதனார் நந்தசாம்பனென்கிற திரு
நாளைப்போவானென்றும் பெயர்பெற்ற இம்மூன்றுபேர்களுந் திருச்
சிற்றம்பலத்தை யடைந்தார்கள். இம்மூன்றுபேர்களில், நந்தசாம்ப
னென்பவர் மாத்திரம் தில்லை மூவாயிரம்பேர்களும் பார்க்கச் சபாப்
பிரவேசமானா ரென்றுசொல்ல, ரிஷிகளெல்லாரும் ஆநந்தமடைந்து
உபமன்னிய மகாரிஷியைப் பிரதக்ஷணஞ்செய்துப் பாடி வணங்கி
அஞ்சலிசெய்து ஓய் சுவாமி? எல்லோரும் பார்த்திருக்கையில் முத்தி
யடைந்த திருநாளைப்போவாரென்று பெயர் படைத்துப் பேறு
பெற்ற சிவபத்தருடைய சரித்திரத்தைச் சொல்லுங்களென்று ரிஷி
கள் பிரார்த்தித்துக் கேட்கும்போது, உபமன்னிய மகாரிஷியான
வர் மிகவுஞ் சந்தோஷமடைந்து ஈஸ்வரனுடைய குணங்களை வரு
ணிப்பதைப் பார்க்கினும், ஈஸ்வர பக்தர்களுடைய குணங்களைச்
சொல்லுகிறது மெத்தவும் புருஷார்த்தமென்று சொல்லத் தொடங்
கினார். சிதம்பரத்திற்கு நாளைப்போவேனென்று சிலதுநாள் நந்தன்
சொல்லிவந்தபடியால், நந்தனுக்கு நாளைப்போவாரென்று நாமதேய
முண்டாச்சுது, ஆகிலும், ஈஸ்வரனுடைய குணங்களைச் சொன்னா
லுஞ் சொல்லலாம் பத்தர்களுடைய குணங்களைச் சொல்ல யாவர்க்
குந் தெரியாது தெரிந்தமட்டுஞ் சொல்லுவோமென்று மயிர்சிலிர்த்து
ஆநந்தக்கண்ணீர் வடித்து மனங்களித்துப் பரமசிவனை நினைத்து
வாயால் துதித்து ஆத்துமா ஆத்துமிகளாயிருக்கின்ற தாபத்திரயங்
களினாலே துன்பப்பட்டிருக்கின்ற செந்துக்களுக்கு அமிர்த வருஷம்
வருஷித்தல்போல நந்தனாருடைய புண்ணிய கதாமிர்தத்தை வரு
ஷிக்கத் தொடங்கினார்.

இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தன்சரித்திரமானந்தம்-ஆனாலுமத்தி
யந்தம்பத்திரசகெந்தஞ்-சொல்லச்சொல்ல நந்தன

அநுபல்லவி.

நந்தன்சரித்திரம்வெகுஅந்தஞ்-சிவனாருக்குச்
சொந்தந்துலையும்பவபந்தங்-கேட்டபேர்க்கு நந்தன

சரணங்கள்.

ஏதுயிவனைப்போலே சாது-பூமியிலிருக்
காது அரிது இருகாது-படைத்தபேர்க்கு நந்தன
வாடிமனதிளகிப் பாடி-அரகராவென்
றாடிகனகசபை நாடிச்-சேருவேனென்ற நந்தன
ஆண்டர்கொண்டாடுஞ் சோழ-மண்டலநாதனைச்சூழக்
கொண்டமேற்காநட்டில்விண்ட-ஆதனூரில்வாழ் நந்தன

இராகம்-கமாசு-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவான்-சரித்திரம்
தேனிலும்பாலினுமினியதுகண்டீர் திரு

அநுபல்லவி.

சித்தமுருகிய சிவயோகிகளுக்
கர்த்தமிதுவென்றனுதினம்பணியும் திரு

சரணங்கள்.

மேதினிபுகழுமாதனூர்விளங்கவந்த மாதவஞ்சாதனைபெருகிய
பேதமிலாதவன்வேதகுருபரநாதனைப்பணியும் திரு
மனதில்குற்றமில்லாதவனிந்தை வஞ்சனைமாய்கைசொல்லாதவன்
கனவிலும்நினைவிலும் சிவபதங்குருபதங்
கருத்துறைகளிததிடப் பெருத்திடவரசனும் திரு
சாதிமுறைமைதவறாதவன்பவ சாகரத்திடைமுழுகாதவன்
பூதமாயாதிகளாகியவுலகம்
பொய்யிதுமெய்யிது வல்லவென்றறிந்திடும் திரு

## பெரியபுராணச்செய்யுள்.

கொச்சகக்கலிப்பா.

பகர்ந்துலகுசீர்போற்றும் பழையவளம்பதியாகுந்
திகழ்ந்தபுனற்கொள்ளிடம்பொன் செழுமணிகடிரைகரத்தான்
முகந்துதர்விருமருங்கு முளரிமலர்க்கையேற்கும்
அகன்பணைநீர்நன்னாட்டு மேற்காநாட்டாதனூர்.

வசனம்.

கொள்ளிடத்துக்குச் சமீபமாகிய உலகமெல்லாம் புகழும்படிக்கு
கீர்த்திபெற்றிருக்கின்ற அமராபதி, அளகாபுரி பட்டணத்தை தோ

ச்செய்யும் மாடமாளிகை கூடகோபுரத்தோடும் அணிமாதிசித்திகள் றைந்து திரண்ட செல்வத்தோடும் வேதவேதாந்த தத்துவஞான றிந்து சாட்சாத்காரம்பெற்ற வேதியரோடு மற்ற மூன்று வருண ரமங்களாலே சூழப்பட்டு பூலோகத்தி லதிகமென்று சொல்லப் ட்ட ஆதனூரென்னும் கிராமத்துக்கு வெளியில் நஞ்சைநிலங்களா ல சூழப்பட்டிருக்கின்ற கடைசாதியர் குடியிருக்குஞ் சேரியைக் காண்டாடிச் சொல்லுவார். ஏனென்றால், ஸ்காந்த புராணத்தில் ஞ்சுபோககண்டத்திலே சிவபத்தன் குடியிருக்குஞ் சேரியைக் கை சமென்று வருணித்துச் சொன்னபடியால், உபமன்னியபகவான் கவுங்கொண்டாடிச் சொல்லுகின்றார்.

சிந்து.

பழனமருங்கணையும்-புலைப்-பாடியது கூரைவீடுதனில், சுரை பாபடர்ந்திருக்கும் - அதைச்-சுற்றிலும் நாய்கள் குலைத்திருக்கும், ருந்தோடி வட்டமிடும்-இளம்-பச்சைப்பிசிதமே லிச்சைகொண்டு, காழிகூவுங்கூக்குரலும் - பாழுங்-கொல்லையருகினில் வெள்ளெலும் ம், நரம்புங்குவிந்திருக்கும் - பல - கெட்டிமிதங்கிடும் குட்டைகளில் ண்டோகுடியிருக்கும்-சிறு - நத்தைகமடம் வலுத்திருக்கும், தோ ருங்கேணிகளில்-வெகு-தொல்லைப்படும் வாடைசொல்லறியாப், ப ம்போ அடித்திருக்கும் - வயற் - பக்கங்களில் மெத்த நொக்கெலும் ம், கிழித்தோல் நரம்புகளும்-அவர்க்-கீனமில்லை சிறுமீனுலரும், தெ வில் விளையாடிக்கொண்டு - அவர் - தெந்தினம்பாடுவர் சுந்தரமாய், ஹுப்பைமணியரையில் - கட்டி - இண்டந்தலைகளில் பூண்டிருக்கும், ங்குதோடு காதணியும்-அருந்-தாவடமேயவர் தாவிடமாய், மணி யாதரித்திருப்பார்-தெரு-வாசற்புறந்தனிலேசிக்கொண்டு, கொண் ாட்டமாயிருப்பார் - கையைக் - கொட்டிக்கொண்டு தனக்கிஷ்டமு ன், மதுவுண்டு கெக்கலிப்பார்-பற-வாத்தியமும் வெகு கேத்தியுட , இருக்கும் புலைப்பாடி-அதில்-ஈசன் திருவடிநேசமுடன், தரிக்கும் ருபுலையர்-அவர்-சாதிமுறைதவறுதவராம், நந்தனரவர்பெயராம்.

வசனம்.

இவ்விதமாய்க் கடையரிருப்பின் வரப்பினில் வாழ்வார் இப்ப வுடன் சிவன்கழற்கே விளைத்த வுணர்வோடு மந்தராபத்தி லூற்புல மையாண்ட தொழிலனுபத்திலொப்பிய நந்தனரென் றொருவருண் ாயிருக்கும் புலைப்பாடியில் பரமசிவன் பாதாரவிந்தத்தில மிகுந்த ுந்தரங்கம் பொருந்தினவராகிய நந்தனர் மிகுந்த பத்திபுரிந்திருக் ார் வீச்சுடன் சேற்றில் விழுந்தாலும் பிள்ளைப் பூச்சியேலொட்

டாது அத்தன்மைபோல், எத்தனை காரியமிருக்கினும் முக்தியளிக்கும் கர்த்தனாகிய அத்தனை தனது சுத்தமாகிய சித்தத்தில் நிதமும் வைத்து உத்தமபத்தி பெற்றிருந்தார் மற்றது மறந்தார் உற்றது முணர்ந்தார் இப்படியெல்லாமிருந்தும், நல்லகுண மில்லாமற்போனால், உமை பொல்லாங்கு சொல்லுமல்லவா.

சிந்து.

இவர்வெகு-நல்லவராமிந்தத் தொல்லுலகில் அவரே சிவனடியார்.

வசனம்.

என்று ஆச்சரியங்கொண்டு சொன்னபடியினாலே, இவரைப் போல பததிமார்க்கத்தில் மிகுந்தவர யிருந்தவர் ஆரிருக்கிறார் ஆரிருப்பார் என்று இணைசொல்லப்போகா தணைகடந்த பரமசிவபத்திமானென்று சொல்லப்படும்.

சிந்து.

அவர்க்-காருமெதிரில்லைத்தாரணியில், கோடிகோடி சென்மங்களோ-முன்னங்-குற்றமறச்செய்த நற்றவமே, அவதாரமான தேவா ஈசன் - அன்புபுரியும பேரின்பசுகம, கொள்ளைகொள்ளவோ பிறந்தார்-திருக்-கோவில்வலஞ் சுழன்றுவலுடன், செய்யும் பணிவிடைகள்,

## பெரியபுராணச் செய்யுள்.

### கொச்சகக்கலிப்பா.

ஊரில்விடும்பறைத்துடவை யுணவுரிமையாக்கொண்டு
சார்பில்வருந்தொழிலசெய்வார் தலைநின்றார்தொண்டினாற்
கூரியலையமைக்குடுமிப் படையண்ணல்கோயிறோறும்
பேரிகையேமுதலாய முகக்கருவிபிறவினுககும்.

இதுவுமது.

போர்வைத்தோல்விசிவாரென் றினையனவும்புகலுமிசை
நேர்வைத்தவீணைக்கும் யாழுக்குநிலைவகையாற்
சேர்வுற்றதந்திரியுந் தேவர்பிரானர்ச்சனைகட்
கார்வத்தினுடன்கோரோசனையுமிவையளித்துள்ளார்.

வசனம.

இந்தப்பிரகாரம் நந்தனார் சிவஸ்தலங்கள்தோறும் போய் சுவாமியைத் தோத்திரஞ்செய்கிற தெப்படியெனறால்.

இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

செந்தாமரைமலர்சூழோடைசளூ மேடையுஞ்
செறிந்தமாதர்க ளாட்டப-சிறந்தவேளூர்
எந்தைபிரானுக்கபி டேகக்கோரோசனைமற்
றீந்தொழிற்தார் மணவாட்டம்

சிவசரவணமூர்த்தி ஞானசம்பந்தரெனத்
திருவவதார மாக-வந்தசீர்காழி
பவனரட்சகன்றிரு நீலநாயகியையேத்தி
பூரித்தார்வெகு வாக
ஒருபொற்புரமதி லோங்கியமாயூரத்
துவந்தவிஸ்வநா தீசரை-மிகத்தொழுது
ஒருமுகக்கருவிக்குந் தோல்நரம்பிவைதந்தா
ருலகிற்புகழவுந்தன் பெயரை
உமையொருபாகத்தி லுயர்ந்தபரன்றரும
னொருபசுவுங்கன் றுக-மாயவேடன்
சமைந்துப்பின்மனுநீதிச்சோழன்றனக்குக்காட்சித்
தந்தவாரூர்சென்றாரன் பாக

வசனம்

பின்னும் நந்தனார் தாம் செய்யுந் தருமமேதென்றால், இவர் புலை
ானபடியால் சிவஸ்தலங்களுக்குப்போய் வீதியைச்சுற்றி சந்நிதி
ல்வந்து தடிவிழுந்ததுபோல் உடல்பணியப் பணிந்து புழுதியில்
ண்டு மயிர்சிலிர்ப்பக் கண்ணீருதிர்ப்ப வாய்குளறி உரைதடுமாறி
ருதரமழுது ஒருதரந்தொழுது எக்கலித்து கெக்கலித்து ஒருதர
சிரித்து ஒருதரம் வெறுத்து சகமறந்து அகமிழந்து அனல்கண்
மெழுகதுபோ லுள்ளமுருகி ஆனந்தவெள்ளம்பெருகி கள்ளங்க
கிச் சிவன் சிவனேயென்று வாய்வலிக்கப்பேசி கைவலிக்கக் கொ
டி கால்வலிக்கக் கூத்தாடி நிற்பவரொரு முகூர்த்தஞ் சித்திரத்தி
லெழுதும் பதுமைபோல் கண்ணிமையாமல் வாயசையாமல் கைய
சையாமல் காலெழாமல் வாயசையாமல் ஓசை தெரியாமல் அலையடி
தோய்ந்த கடல்போல நிறைந்து தன்னைமறந்திருப்பார் தன்னினைவு
ந்து பரவசந்தெளிந்து ஈசனைப் பணிந்துகொண்டு வந்தபணிவிடை
னுத்தக் கோவிலார் கேட்கக் கும்பிடுபோட்டுச் சொல்லுவார்.

இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

ாரிருக்குதுதோலிருக்குது வாங்கிக்கொள்ளுவீரே-மத்தளங்கள்
பரிகைக்கும்வீணைக்கும்நல்ல விறுக்கிக்கட்டும்விசை வாரிருக்
பாரிருக்குதுபோதுஞ்சிவன் பெருமையைக்கொண்டாடிதினமும்
ருறைகின்றதில்லைப்பதியில் சேருதற்குபாயந்தேட வாரிருக்
ியவனுன்சாதியொன்று மறியாதவனுனேழை-சிவ
பருமானுக்கடியேன்செய்யும் பணிவிடையிது வாரிருக்

சிந்து.

செய்யும் பணிவிடைகள்-ஈசன்-சிந்தைமகிழ்ந்து குளிர்ந்திடவே
மத்தளபேரிகைக்கும்-இசை-வார்கொடுத்துப் புறந்தோல் கொடுத்
மறவாமலேதினமும்-நல்ல-வாசம்பெருகுங் கோரோசனையும்,தேவா
யங்கள்தோறும்-தந்து-சித்தமுருகிய பத்திவெள்ளம், புரண்டோடி
கங்குகரை-என்று-பேதமறியவொண்ணாதுகண்டீர், சாதியில்நீசனவ

வசனம்.

இப்படி பத்திசெய்யாநின்ற நந்தனாருடைய வரலாறேதென்றால்.

இராகம்-துக்கடா-ஆதிதாளம்.

ஆதனூரிலொருவேதியர்க்குள்ளே அடிமைக்காரப்பறையன்
சூதுவாதுமொன்றுதெரியாதவன் பரிசுத்தமானபத்தன்
கோதிலாததங்கள்சாதியர்க்குச் சிவகுணங்களைமிகச்சொல்லி
காதலோடுதிருப்புன்கூரீசனைக் கண்டுவருவோமென்றார்.

வசனம்.

நந்தனார் சிவதரிசனஞ் செய்யவேண்டியதற்காக தங்கள் சா
யாரைக் கூப்பிடுகின்றார்.

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

சிவலோகநாதனைக்கண்டு சேவித்திடுவோம்வாரீர்

அநுபல்லவி.

பவமயங்களைப்போக்கி-அவர்
பரமபதத்தைக்கொடுப்பாரந்த சிவலோ

சரணங்கள்.

அற்பசுகத்தைநினைந்தோம் அரன்திருவடிமறந்தோம்
கற்பிதமானபிரபஞ்சமீது கானல்சலம்போலேயெண்ணி சி
ஆசைக்கடலில்விழுந்தோமினி யறிவுக்கறிவையிழந்தோம்
பாசமகலவழிதேடாமல் பரதவிக்கும்பாவியானோம் சி
மானிடசன்மங்கொடுத்தார் தன்னைவருந்தக்கரங்களளித்தார்
தேனும்பாலும்போலேசென்று தேரடியில்நின்றுக்கொண்டு சி

---

## பெரியபுராணச்செய்யுள்.

விருத்தம்.

திருப்புன்கூர்ச்சிவலோகன் சேவடிகண்மிகநினைந்து
விருப்பினொடுந்தம்பணிகள் வேண்டுவனசெய்வதற்கே
அருத்தியினாலொருபட்டங் காதனூர்தனினின்றும்
வருத்தமுறுங்காதலினால் வந்தவ்வூர்மருங்கணைந்தார்.

வசனம்.

அன்பின் மிகுதியால் சிவலோகநாதனைச் சேவிப்போமென்று
நாளாய்ச்சொல்லி நிச்சயஞ்செய்த நந்தனாருக்கும் பறையர்களு
முண்டான வாக்குவாதம்.

(அவர்கள்) தவஞ்செய்யுஞ் சடங்கிதுவல்லவோ பறையர்கள் செய்தால் பாவமேயென்றார்.

(நந்தன்) தேருந்திருநாளு மிருக்குதுபோவோம் வாரும்வாருமென்று வருந்தியுமழைத்தார்.

(அவர்கள்) பொறும்பொறுமிது புண்ணியமல்ல ஏரிக்குப் போவோமென்றிவரையுமழைத்தார், சேரியைநீங்கிச் சிலதுபேர் வந்தார்.

...ஒருபேர்கள் பண்புடன்வந்தார் நந்தன்மாரிபோல் ஞானமார்க்கம்பொழிந்து, தவமுனிபோலே தானங்கேநின்றார்.

(அவர்கள்) சிவலோகநாதனைச் சேவிப்போமென்றார் நந்தன்வெறுங்கையோடே போகலாகாதென்று

...ருடன்தோலும் வரிசையாய்க்கொண்டார் அவர்கள் சேரியிலுள்ள சீரிதுவென்றார்.

(நந்தன்) வந்தபுலையருக்குப் பத்திபெருகவே நெத்தியில் நீறிட்டார்.

(அவர்கள்) சத்தியந்தானென்று மெத்தவுங் கும்பிட்டார்.

இராகம்-வராளி-சாப்புதாளம்.

இவர்—சிங்காரமான பள்ளுபாடினார்
அவர்—அங்கங்குளிர்ந்துகொண்டாடினார்
இவர்—கோரோசனைப்பையையெடுத்தார்
அவர்—தாராளமாய்வாரிக்கொடுத்தார்
இவர்—சிவமந்திரஞ்சொல்லிச்சேவித்தார்
அவர்—தவமிஃதேயென்றுச்சரித்தார்
இவர்—ஆசைப்பெருங்கடல்தாண்டினார்
அவர்—ஓசைப்படாமலேவேண்டினார்
இவர்—அளவில்லாதானந்தமடைந்தார்
அவர்—அளவில்லாக்காட்சிப்பெற்றிருந்தார்
இவர்—திருப்புன்கூரீசனைப்பாடினார்
அவர்—விருப்பமோடிவரைக்கொண்டாடினார்

வசனம்.

இப்படி எல்லோரும்கூடிச் சிவனை அடிக்கடி வணங்கி அரகரா
...வென்றுரைத்திடுஞ்சத்தம் பரமனேயறிவார், இப்படி நந்தனார் பதி
...னொருபேர் பறையரோடு திருப்புன்கூர் வந்துசேர்ந்தார்.

சவாயி.

நலம்வந்துவீதி வலம்வந்துகண்கள்
சலம்வந்துசோரும் பலம்வந்துதெங்கள்
குலஞ்சுத்தமாச்சு மலம்வெந்துபோச்சு
நலங்கண்டோமென்று நிலங்கொண்டுநின்றார்.

வசனம்.

அந்தத்தலத்திலே நந்தி மிகவும் பெரிதானபடியினாலே சிவலிங்கதரிசனஞ் செய்வதற்கு நந்தி மறைந்திருப்பதால், நந்தனார் துயரமடைந்து சொல்லுகின்றார்.

இராகம்-சங்கராபரணம்-ஏகதாளம்.

கண்ணிகள்.

அரகராதிரிபுராந்தகஜீவாதரவெங்கள்
அம்பிகையொரு பாகா
நிரந்தரமாயெள்ளுளெண்ணெபோலவிருந்து
நினைப்பவர்க்கருள் போகா
வெள்விடைமேல்வரும்விமலநமசிவாய
விளங்கும்வேத முடிவே-நால்வர்க்குத்
தெள்ளுறச்சிவஞானபோதமளிக்கவந்த
சிறந்தமெய்த்தவ வடிவே
மானுமழுவுந்தமருகவாகுவலயமும்
மருவுஞ்சூல பாணி-எளி
யேனுங்காணத்தரிசனைதரவுமையுட
னெழுந்தருள்வீரிங்கு தோணி
மன்னுஞ்சந்நிதிமுனம்மருவுமிடபதேவர்
மறைந்திருக்கநினைக் காணேனே
என்னவினைசெய்தேனோகண்பெற்றபாவந்தானோ
இதயத்தில்மகிட்சி பூணேனே

சவாயி.

சிவலோகநாதன் திருச்சந்நிதானம்
மலையாகிநந்தி மறைத்திடுதிங்கே
பலகாலஞ்செய்த பாழ்வினைகுவிந்து
மலையாகியிப்படி மறைத்ததோவென்றார்.

வசனம்.

என்று சொல்லிய நந்தனார் பின்னுஞ் சொல்லுகின்றார்.

இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வழிமறைத் திருக்குதே-மலைபோலவே
ஒருமாடுபடுத் திருக்குதே

ரவிப்பறையனிந்தவூரில்வந்துமிவன்பாவந்தீரேனோ உந்தன்
ாதத்திற்சேரேனோயேறேனோசிவலோகநாதாமாடு வழி
தாடியில்நின்றுதெரிசித்தாலும்போதும் கோவில்வரமாட்டேனே
யே ஓரடிவிலகினால்போதுமங்கேநின்று
ற்றுப்பார்க்கச்சற்றேவிலகாதோமாடு வழி

வசனம்.

இப்படி நந்தனார் தரிசனங்காண ஓயாமல் மனவருந்தும்போது
வாமி நந்தனார் மீதிரங்கி நந்தியை விலகச்சொன்னார்.

---

## பெரியபுராணச்செய்யுள்.

விருத்தம்

சீரேறுமிசைபாடித் திருத்தொண்டர்திருவாயி
னேரேகும்பிடவேண்டுமென நினைந்தார்க்கதுநேர்வார்
காரேறுமெய்யிற்புன்கூர்க் கண்ணுதலார்திருமுன்பு
போரேற்றைவிலகவருட் புரிந்தருளிப்புலப்படுத்தார்.

இராகம்-துக்கடா-ரூபகதாளம்.

நநாளும்வாராதபத்தன் திருநாளைப்போவாரெனுஞ் சித்தன்
லகெங்கும் பிரதித்தம்கண்டு ஓதுங்காமலிருந்ததுகுற்றம்.

இராகம்-அங்குசதோணி-ரூபகதாளம்.

பல்லவி.

றேவிலகியிரும்பிள்ளாய் சந்நிதானமறைக்குதாம் நீ சற்

அநுபல்லவி.

றவம்புரியுநம்பிட திருநாளைப்போவார்வந்திருக்கிறார் சற்

சரணங்கள்.

கிமுறைமைபேசுகிறான் தன்னையிகழ்ந்துமேசுறான்
திலாதகுணமுடையோன்கோபங்கொண்டால் தாளமாட்டோம்
தகுலத்தைப்போற்றுறான் விரும்பிவிரும்பியேற்றுறான்
லத்திலிவனைப்போலே புண்ணியபுருஷனொருவனில்லை சற்
தியில்கரைகண்டவன் பார்த்துபார்த்துவுண்டவன்
தங்குறையில்லமதுசெல்வம் முற்றுங்குறையுந்தயவுசெய்து சற்

வசனம்.

இப்படி சுவாமிசொல்ல நந்திவிலகினர்.

துக்கடா.

நந்திதூரவிலகிநின்றார் தன்சாமிமனதைக்கண்டார்
இவன் நல்லபக்தனென்றார் அடங்காதவெட்கங்கொண்டார்.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

மற்றதெல்லாம்பொறுப்பேன்
முத்தினலுங்கொடுப்பேன் மற்
பத்தனுக்குக்குற்றஞ்செய்தா
லதைப்பொறுக்கமாட்டேன் மற்
திடுக்கென்றவரை துடிக்கப்பேசி
அடிக்கப்பொறுக்கமாட்டேன் மற்
பசிக்குதென்றுவருகையிலொருவன்
புசிக்கப்பொறுக்கமாட்டேன் மற்

வசனம்.

இப்படி சுவாமி சொல்லும்போது நந்திமனது கலங்கி தூரவி
கிநின்றார்.

நந்தன் சிந்தைகுளிர்ந்து அளவில்லாத ஆனந்தமடைந்து கு
த்தார் கெக்கலித்தார் கொண்டானடித்தார் துதித்தார் திருவடி
ள்ளே பதித்தார் எங்குஞ் சிவமாகப் பாவித்தார்.

கடுக்கா.

குதித்தார்எக்கலித்தார் உள்ளங்களித்தார்
பள்ளுபடித்தார் கண்ணீர்வடித்தார் பற்களைக்கடித்தார்
ஒருதரந்துடித்தார் இருதரம்நடித்தார்
இப்படிதரிசனஞ்செய்தார் நந்தனர் தரிசனஞ்செய்தாரே.

துக்கடா-ஆதிதாளம்.

சட்டமாகசந்நிதானங்கண்டுதுடை தட்டினர்கைகொட்டின
அஷ்டமூர்த்தியொருவர்க்குமென்று கூத்தாடினர்பண்பாடின
கஷ்டமானசமுசாரசாகரந் தாண்டினர்மெய்வேண்டின
இஷ்டதெய்வசிவலோகநாதனை எண்ணினருள்ளநண்ணின
மட்டிலாதசந்தோஷங்கொண்டுதான் பட்டபாடுகளைப்பேசின
சென்மங்கெட்டதென்றுதன்னை யேசின
இஷ்டமானதன் சனங்களோடுஅவர் கட்டிமுத்தமிட்டுலாவின
சிங்கக்குட்டிபோலவே தாவின

இராகம்-கலியாணி-அடதாளம்.

பல்லவி.

தரிசனஞ்செய்தாரே நந்தனர் தெரிசனஞ்செய்தாரே.

அநுபல்லவி.

தரிசனஞ்செய்தார் தேன்மழைசொரிந்து
ரிசையுடன் அவர் வாழிவாழியென்று தெரிசனஞ்

சரணங்கள்.

திதித்துக்குதித்துக்கையைக்கும்பிடுபோட்டுத்
திதித்துதித்துத்தன் துன்பங்கள்தீர தெரிசனஞ்
பாற்றிபோற்றியென்று பொன்னடிவணங்கிப்
ார்த்துப்பார்த்துப் பரமானந்தங்கொண்டு தெரிசனஞ்
ச்சமறந்தவரறிவிலுணர்ந்து
ச்சைமறந்தவரேகாரமாய்நின்று தெரிசனஞ்

இராகம்-அபுரூபம்-ஆதிதாளம்.

பல்லவி.

சம்போ கெங்காதரா சந்திரசேகரா ஹரா.

அநுபல்லவி.

ம்பலவாணரே ஆதிரை நாளரே
டைக்கலமென்றுநம்பிவந்தேன் ஆதரிப்பதுன்பாரம்சொன்னேன்

சரணங்கள்.

ாயுந்தந்தையும்நீ உன்னைத்தவிரவேறேயொருவருமில்லை
ாயன்கோபாலகிருஷ்ணன்பணியும் மலரடிபணிந்தேன் பிறவியைத்
[தீரும் சம்போ

வசனம்.

தெரிசனம் பண்ணியபின்பு கொண்டுவந்த பணிவிடை செலுத்
அவ்வீதியில் மட்டையூறும் குட்டையை குளமாய் வெட்டவே
வுமென்று விசாரமுற்றார், சுவாமி இதையறிந்து நாளைப்போவாரா
ல குளம்வெட்ட தாளப்போகாதென்று தன்பிள்ளையை ஆளாகப்
பாகச்சொன்னார்.

தக்கடா

மாளாப் பிறவிபோக்கும் பிள்ளையார் வந்தார்.
ளைப்போவார் நீயாரப்பா வென்றார்
பிள்ளையார் நானுன்னாளப்பாவந்தே னென்றார்
ளைப்போவார் குட்டையைக்குளமாய்வெட்டுவே னென்றார்
பிள்ளையார் வெட்டினால்மிகுபுண்ணிய மென்றார்

நாளைப்போவார் அதெம்மட்டுமெட்டு மென்று
பிள்ளையார் குளம்வெட்டுவெட்டுவே னென்று
நாளைப்போவார் அற்பமாய்பதக்குநெல்லைக் கொடுத்தா
பிள்ளையார் அப்பனேயிதுபோதும்போதுமென் றுரைத்தா
நாளைப்போவார் களித்துநிருவிகற்பமா யிருந்தா
பிள்ளையார் குளத்தைவெட்டுதற் கிசைந்தா

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

தடாகமொன்றுண்டாக்கினர்-கணநாயகர்
தடாகமொன்றுண்டாக்கினர்.

அநுபல்லவி.

சடாமகுடதரன்-சாம்பவி யுடன்வர
சகலமுனிவர்மனத்-தாமரையு மலர
கடாட்சமாகக்குகன்-கணபதியுடன் மன்ன
காதலாலெவருந்துன்ன-போதயனுசிதமென்ன தடா

சரணங்கள்.

கந்தமுலாவியதாமரைப்பூத்து கதிக்க-மிகுத்திடுஞ்சே
கண்டைவராலுளுவைக்கணமங்து குதிக்க
சுந்தரமிருந்தபறவைகள்முழுதிலுஞ் சூழ
சோமசூரியர்கள்சுகமுடன்வந்து தாழ
விந்தையுடனே பலவேள்வியந்தணர் செய்ய
விளங்குஞ்சங்கின முய்யகளங்கமில்லாமற் றுய்ய தடா
ஓதிடுவானதியானதுதான்மிக நாண-ஆம்பல்மலர்ந்
ஓதிமமுங்குறுகின்குலமும்எதிர் காண
சோதிமருவுந்தே-தாருசிழலுங் கொடுக்க
சுரபிக்கடம்பையானுஞ்சூழ்ந்து அங்கே அடுக்க
மாதர்மலர்க்குழலார்-மகிழ்ந்து அங்கே நீராட
வல்வினைகளும்விட்டோட-வல்லவர்களுங்கொண்டாட தட
வாசனைதங்கியமல்லிகைமுல்லையின் சாலை-சந்தனச்சாலை
வாழைபலாக்கமுகுங்கனமாமலர்ச் சோலை
ஆசையாகமயிலழகுறவே நடிக்க
அருமறைப்பூசுரர்க ளனுதினமும் படிக்க
தேசுலாவுந்திவ்யத் தீர்த்தமாகுமென் றெந்த
திசைதேவர்களுமுந்த இசைநந்தனர்தஞ்சொந்தத் தட

நாளைப்போவார்நிஷ்டைகலைந்துபார்த்தார்
குளம்வெட்டியிருக்கவுளமகிழ்ந்தார்
பிள்ளையாரிருக்கக் கண்களிற்காணூர்.

வசனம்.

இதெல்லாஞ் சிவன்செயலென்று சந்தோஷங்கொண்டு மு
போலவே கோவிலை வலம்வந்து தன்னுடன்வந்த பதினொரு பேர்
ளுடன் ஆதனூர்வந்து சேர்ந்தார்.

---

## பெரியபுராணச்செய்யுள்.

விருத்தம்.

இத்தன்மையீசர்மகிழ் பதிபலவுஞ்சென்றிறைஞ்சி
மெய்த்திருத்தொண்டுசெய்து விரவுவ்ார்மிக்கெழுந்த
சித்தமொடுந்திருத்தில்லைத் திருமன்றுள்சென்றிறைஞ்ச
வுய்த்தபெருங்காதலுணர் வொழியாதுவந்துதிப்ப.

சிந்து.

பேணிச்-சாருந்தொழின்முறையாரும்புகல், திருப்புன்கூர்ச்சி
ன்றனைக்-கண்டு-சேவித்திசைபாடிபாவித்தபின் - தில்லைச்சிதம்பர
தைக்-கண்டு-சேவிக்கவேண்டுமென்றுவலுடன், நாளைப்போவேனெ
ருராம்

வசனம்.

நந்தனர் திருப்புன்கூர்ச் சிவலோகநாதனைத் தரிசனஞ்செய்
ஆதனூர்வந்தநாள்முதல் ஊணுறக்கமுதலானதும்விட்டார், தில்
யம்பலம் திருச்சிற்றம்பலமென்று சொல்லத்தலைப்பட்டார், சேரி
லுள்ள பெரியோர்களைக் கூப்பிட்டார், வணங்கிக் கும்பிட்டுச் சொ
லுவார்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போவேநான்-நாளைச்-சிதம்பரம்போவேநான்.

அநுபல்லவி.

சிதம்பரம்போவேன் தேறித்தெளிவேன்
பதங்களைப்பாடிப் பார்புகழ்தில்லைச் — சிதம்ப

சரணங்கள்.

ஒருதரஞ்சொன்ன லுலகங்களுய்யு
மிருவினைப்பயனில்லை எந்நாளும் — சிதம்ப
பாதிராத்திரியில் பன்மறையோதி
வேதியர்போற்றிவிளங்கியதில்லைச் — சிதம்ப

திறமொன்றறியாத் தீங்குகள் செய்யும்
பறையனாய்ப்பிறந்த பாவங்கள் துலையச் சிதம்பரம்

வசனம்.

நாளைப்போவார் தனக்குத் தெரிசனங் கிடைக்க வேண்டியதற்
க கற்பகப்பிள்ளையாரை வேண்டுதல்.

விருத்தம்.

லனுடல்பூமிபடச்சாய்த்திடுவான் செங்கமலக்காலைத்தூக்கி
காலமுடனடனமிடுந்திருமன்றுள் நாயகனேகுற்றந்தீரப்
விக்கும்படியெனக்குன்னருள் புரிவாயென்றுநற்பழங்கள்வைத்து
லைக்கோபுரவாயிற்கற்பகத்தைச் சிந்தையுள்ளேவேண்டுவாரே.

வசனம்.

நந்தனார் சேரியிலுள்ள புலையர்களை யழைத்துக்கொண்டு சிதம்
ம்போய்த் தரிசனம் பண்ணவேண்டுமென்று ஆசையுற்று பக்தி
ர்க்கங்களைச் சொல்லுகின்றார்.

இராகம்-மாஞ்சை-ரூபகதாளம்.

நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாற்றநரம்புமின்னஞ்சுமப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாறுமுடலைக்கண்டுகளிப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாளைவீணாகக்கழிப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நமனுக்கஞ்சியோடியொளிப் பேனோ-நான்
நாளைப்போகமலிருப் பேனோ-சிவ
ஞானத்தைப்பாராமலிருப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாட்டிலிகழுஞ்சென்மம்படைப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-தில்லை
நாதனைக்காணமல்புசிப் பேனோ-நான் நா

ஆநந்தக்களிப்பு.

காணமலிருக்கலாகாது பாழுங்
கட்டைக்கடைத்தேற வேண்டியிருந்தால் காண
முத்தியளித்திடும் பாதம்-தில்லை
மூவாயிரம்பேர்கள் பூசிக்கும் பாதம்

சத்திக்கிணையான　　பாதம்-வேத
சாஸ்திரங்கள்நாலுந்தேடிய　　பாதம்　காரு
காலனைச்சீறிய　　பாதம்-சன
காதிகளுக்குள்ளேசெலுத்திய　　பாதம்
மாலயன்தேடிய　　பாதம்-எங்கள்
மாணிக்கவாசகர்பிடிகை　　பாதம்　காரு
ஆசையைப்போக்கிய　　பாதம்-பர
மானந்தவெள்ளத்திலாடிய　　பாதம்
வாசம்பொருந்திய　　பாதம்-தில்லை
மாகாளிதாழவேதூக்கிய　　பாதம்　காரு
பாலகிருஷ்ணன்தொழும்　　பாதம்-காட்டி
பாம்பும்புலிக்குக்கூத்தாடிய　　பாதம்
கோலச்சிலம்பணி　　பாதம்-தில்லைக்
கோவிந்தராயர்தெரிசிக்கும்　　பாதம்　காரு

வசனம்.

நந்தனார் சிவனைக்காணமல் காலம் வீணாகப் போக்கலாகாதெ
ன்று தன்னினத்தாரைக் கூப்பிடுகின்றார்.

இராகம்-பியாகு-ரூபகதாளம்.

துக்கடா.

எல்லோருது　　வாருங்கள்
சுகமிருக்குது　　பாருங்கள்-நீங்கள் எல்லோரு
நல்லோர்பணிந்திடுந் தில்லையம்பல
நாதன்பாதம் பணிந்துகொள்வோம்　　எல்லோரு

கண்ணிகள்.

வாருங்கள் பரமானந்த மிருக்குது பாருங்கள்
சடமெடுத்தபின் னேதுமேகண்டிவீர்
விடமெடுத்துண்ட மேனியன்றேர்வர
வடம்பிடித்திட வாருங்கள் தில்லையில்
இடம்பிடித்துநா மெல்லோரும்வாழலாம்　　வாருங்க
சொல்லடா தில்லைச் சிற்றம்பலமென்று
..லடாவாயைச் சந்நிதிநேரவே
..ாயிந்த மாயப்பிறவியைக்
..சிவ லோகங்குடிபுக　　வாருங்க

கள்ளடாகம தில்லறவாழ்க்கையைத்
தள்ளடாநந்தன் சொல்லுறுதியென்று
கொள்ளடா தில்லையம்பலத்தாண்டவன்
பள்ளடாவென்று பாடிக்கூத்தாடியே                                        வாருங்கள்

வசனம்.

இப்படி வாருங்களென்றழைக்கப் புலையர் வராமலிருக்க நந்தனார் நல்லவார்த்தை சொல்லிப் பறையரை சிவநாமத்தைச் சொல்லச் சொன்னார்.

## இருச்சொல்லலங்கார வாக்குவாதம்.

நந்தனார்-தில்லையம்பலமென்றுசொல்லச்சொன்னார்
புலையர்-கள்ளப்பேச்சென்றுமெள்ளச்சொன்னார்
நந்தனார்-சங்கராவென்றுசொல்லச்சொன்னார்
புலையர்-இங்கேவாவென்றுநிற்கச்சொன்னார்
நந்தனார்-சற்றேயாகிலுஞ்சிவனைத்தியானம்பண்ணென்றார்
புலையர்-நத்தையோடுபோலேபானம்பண்ணென்றார்
நந்தனார்-திருச்சிற்றம்பலமென்றுசெபிக்கச்சொன்னார்
புலையர்-வெறுச்சகம்பளமென்றுரைக்கச்சொன்னார்
நந்தனார்-சேரியில்நல்லகாரியமீதென்றார்
புலையர்-ஏரியில்நல்லமாரியீதென்றார்
நந்தனார்-விட்டநாள்நினையாம லெட்டுநாள்மறவாமல்
நிஷ்டைபண்ணுதசென்மம் நஷ்டமென்றார்
புலையர்-விட்டவிரைமுளையாதல் நட்டபயிர்பலியாமல்
கெட்டுதானல்கிராமம் நஷ்டமென்றார்
நந்தனார்-உங்கள்புலைத்தன்மைபோகுமென்றார்
புலையர்-எங்களைக்கெடுத்தாயேபாவியென்றார்
நந்தனார்-தேவாதிதேவனைத்தெரிசிப்பீரென்றார்
புலையர்-பாவாடைராயனைப்பாவிப்பாயென்றார்
நந்தனார்-அனந்தாளுமீசனுக் கன்புசெய்யென்றார்
புலையர்-இனத்தாரைநொந்தவர்க்கின்பமேதென்றார்
நந்தனார்-தினமுஞ்சிவனைப்போற்றிக்களிப்போமென்றார்
புலையர்-பதரைத்தூற்றிநெல்லையளப்போமென்றார்
நந்தனார்-பெண்ணாசைப்பொன்னாசைவிடுதலேநன்றாம்
புலையர்-என்னாளுமுன்னாலேகெடுதலையுண்டாம்
நந்தனார்-அப்பனோடுயிஷ்டமுடனானிருப்பேனென்றார்
புலையர்-கப்பலோட்டியசடன்கொட்டைநூற்றிராதென்றார்

நந்தனர்-பூசத்திருநாளில்போய்வருவோமென்ருர்
புலையர்-பேசத்தெரியாதுபேயாநீபோவென்ருர்
நந்தனர்-அழுதழுறைமயிட்டாலம்பலத்தேகேழ்க்குமென்ருர்
புலையர்-உழுதுபயிரிட்டாலுள்ளபடிவிளையுமென்ருர்
நந்தனர்-சித்தமெல்லாமம்பலத்தேசென்றுதேடுதென்ருர்
புலையர்-பத்தியெல்லாம்வேறுபட்டுபறந்துபோச்சுதென்ருர்
நந்தனர்-குற்ருலத்தீசனைக்கூறுவீரென்ருர்
புலையர்-கைத்தாளம்போட்டுக்கதறுவீரென்ருர்
நந்தனர்-தாண்டவந்தெய்வமேதகுந்தெய்வமென்ருர்
புலையர்-தூண்டிவீரப்பனைதொழுந்தெய்வமென்ருர்
நந்தனர்-இஷ்டப்படிநடக்குமீசனைத்துதியென்ருர்
புலையர்-கஷ்டப்படமாட்டோம்கசக்காதேபோவென்ருர்
நந்தனர்-கொண்டாடித்தெய்வத்தைக்கொள்ளுவீரென்ருர்
புலையர்-பெண்டாட்டித்தெய்வமேபெருந்தெய்வமென்ருர்
நந்தனர்-நலத்தைக்கொடுக்கவந்தநற்குருவென்ருர்
புலையர்-குலத்தைக்கெடுக்கவந்தகோடாலிக்காம்பென்ருர்
நந்தனர்-பலவழக்கம்நானறிவேன்பறையரேயென்ருர்
புலையர்-குலவழக்கமறியாதகுருடாபோவென்ருர்
நந்தனர்-நாக்கறுப்பேன்சிவனைநவிலுவீரென்ருர்
புலையர்-மூக்கறுப்பான்கதையைமொழிந்தீரேயென்ருர்

வசனம்.

நந்தனர் பெரியோருடைய அனுஷ்டானத்தைப் புலையர்களுக்குச் சொல்லுகின்ருர.

வேறு.

நந்தனர்-சிவனேதெய்வம் சிதம்பரமேகயிலாசம்
தவமேபெருமை தான்சம்பிரதாயம்
புலையர்-சேரியேசொர்க்கம் ஏரியேகயிலாசம்
மாரியேதெய்வம் மதசம்பிரதாயம்
நந்தனர்-படிப்பதுஞானம் பார்ப்பதுமூலம்
குடிப்பதுமதிப்பால் குலசம்பிரதாயம்
புலையர்-பிடிப்பதுநண்டு புசிப்பதுஇறைச்சி
குடிப்பதுகள்ளு குலசம்பிரதாயம்
நந்தனர்-பாழைக்கடப்பார் பரவெளிதாண்டி
கோழையறுப்பார் குலசம்பிரதாயம்

புலையர்-ஆழத்திற் குளிப்போம் அருங்கோடைவந்தால்
கூழைக்குடிப்போம் குலசம்பிரதாயம்
நந்தனார்-ஆசையைப்போக்கி ஐம்புலனைச்சுட்டு
மாசற்றவாழ்வு மதசம்பிரதாயம்
புலையர்-பூசைகள்புரிவோம் பொன்னேருழுவோம்
கூசாமல்வாழ்வோம் குலசம்பிரதாயம்
நந்தனார்-மையத்திலாடி மனக்கயிறூட்டி
வையத்திலிருப்பார் மதசம்பிரதாயம்
புலையர்-கையிலேகலயம் காலிலேசேறு
பையிலேபாக்கு பறைசம்பிரதாயம்.

வசனம்.

சிவபத்திபண்ணினால் அணிமாதி சித்திகள் அடையலாமென்று நந்தனார் சொல்லுகின்றார்.

இராகம்-நீலாம்புரி-சம்பைதாளம்.

அஷ்டமாசித்திகளைப்பெறலாந்-தில்லையி
லானந்தத்தாண்டவன்கோவிலைக்கண்டு
இஷ்டமுடன்வீதிவலம்வந்து-ஈசன்
இணையடிதொழுதார்க்கினிப்பிறப்பில்லை
வாருங்கள்வாருங்கள்சொன்னேன்-நீங்கள்
வாயாடாதோடிவருவீரென்முன்னே
கருமணிபிச்சோலைபோதும்-உந்தன்
கள்ளவேஷமெங்களுக்குள்ளேகிடையாது
பருகுவதுகூழ்க்கஞ்சிபோதும்-வாய்
பதறிவார்த்தைகள்பேசிப்பசப்பாதேபோடா.

வசனம்.

நந்தனரைப்பார்த்துப் பறையர் நீ சொன்னபடி கேட்பதில்லை நாங்கள் உண்மையறியாமல் நீ மயங்காதேயென்று சொல்லுகிறார்கள்.

ஏசல்.

புலையர்-பார்ப்பாரதெய்வமது பலிக்காதுபறையரைக்
காப்பாற்றமாட்டாது கைவிடுமென்றார்
நந்தனார்-பார்ப்பார்பறையரென்று பாராதுபரிதிபோல்
காப்பாற்றுமல்லவோ கண்ணுதலேயென்றார்

புலையர்-அடுக்காதவார்த்தையை அல்லும்பகலோதியே
பிடிக்கிறாய்பிடிவாதம் பேசாதேயென்றார்
நந்தனார்-கடுக்காயைத்தின்பாரோ கன்னலதுபோலே
கொடுக்காததானாலும கொள்ளுவீரென்றார்
புலையர்-பித்தனென்றுசொல்லுவார் பேருலகிலெல்லோருஞ்
சத்தியமிதல்லவோ தள்ளுவீரென்றார்
நந்தனார்-பித்தனயிருந்தாலும் பிறவியறுத்தவர்க்கும்
முத்திகொடுக்கும்நல்ல மூர்த்தியவரென்றார்
புலையர்-இத்தனைநாளுமிங்கே யில்லாதவார்த்தையை
கற்றுவந்துமென்ன காரியமோவென்றார்
நந்தனார்-இத்தனைநாட்சென்று ஈசனடித்தாமரை
பத்திசெய்பவரும் பாக்கியமீதென்றார்.

அகவல்.

பாக்கியமீதென்று பரமசிவபத்தி
மார்க்கங்களெல்லாம் வரிசையாய்த்திரட்டி
எடுத்துரைசெய்வார் மீனமாஞ்சாதி
பிடித்தறியாமல் பேசுவாரன்றோ.

விருத்தம்.

வக்கணைக்காராநந்தா வாய்படப்பேசவேண்டாம்
சக்கரைப்போலேபேசிச் சாதித்துக்கண்டாயன்றோ
பக்குவகாலம்வந்தால் பரமனார்திருநாமந்தான்
சக்கரைப்போலேதோன்றுஞ் சாதிப்பார்முத்திதானே.

வசனம்

புலையர்களனேகரானபடியால் பலவிதமாகச் சொல்லுகிறார்கள்

ஏசல்-இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

புலையர்-ஆண்டிப்பரதேசி யரகரவென்றவர்
வேண்டுந்தெய்வமது விளங்காது யென்றா
நந்தனார்-மூன்றுலகுக்கிறை முன்னின்றுகைகூப்பி
ஆண்டவனேயென்று அர்ச்சிக்கு மென்றா
வேறொரு புலையர் } நாத்தைப்பிடுங்கியே நடவுநட்டாலிந்த
சோற்றுக்கவலைவிடுஞ் சுகமிது வென்றா
நந்தனார்-கூற்றுவனார்வந்து கூப்பிடும்வேளையில்
மாத்திரைப்பொழுதில்லை மன்னுயி ரென்றா

வனொருபுலையர். மானொருமக்களும் வாழ்கின்றவிடத்திலே
யானாலுமெப்போது மழுமூஞ்சியென்றார்

ந்தனார். தேனாகவேமெத்த தித்திக்குஞ்சிவத்துதி
யானாலுமுங்களுக் கழுகையோவென்றார்

வனொருபுலையர் மூக்குநுனியைப்பார்த்து முணுமுணுத்தெந்நேரம்
காக்கைபோலவைசும்மா கதறுகிறீரென்றார்

ந்தனார். வாக்கிலேசிவநாமம் வாராதபாவிகள்
நாக்கிலேவூசியை நாட்டுவேனென்றார்

வனொருபுலையர். மடைவாயுன்பறவைபோல் மதியாமலிருக்கிறீர்
துடைகாலிநீயென்று சொல்லுவோமென்றார்

ந்தனார். விடையேறுமீசனை வெட்டவெளியினிலுன்னி
அடையாளங்காணாத ஆடுகளென்றார்

வனொருபுலையர். மறையோதத்தெரியாத மடையராய்ப்பூமியிற்
குறையானபுலைத்தன்மை கொண்டோமேயென்றார்

ந்தனார். பறையனாய்ப்பிறந்தாலும் பரகதிதேடலாம்
உறுதிமாத்திரமவேண்டும் உமக்குண்டோவென்றார்

வனொருபுலையர். தலைசுற்றிபாடுது தங்கச்சிகொழுந்திபார்
அலையையேநானென் றறிகிலேனென்றார்

ந்தனார். நலம்புரியுந்தில்லை நாதாவென்றிருநீற்றைத்
திலகம்போலேயிட்டு தெண்டனிடுமென்றார்

வனொருபுலையர். உலகத்திலாவ்வாத உருவேத்திச்சேரியைக்
கலகமிட்டீர்பலங் கிண்டீரோவென்றார்

ந்தனார். பலகாலஞ்சொன்னாலும் பலியாதுபாழ்வினை
விலகாமலிருக்குது வேடிக்கையென்றார்

வனொருபுலையர். திருப்புன்கூரீசனைச் சேவிக்கலாமென்று
விருப்புடனழைத்தது விந்தைதானென்றார்

ந்தனார். கரும்புதின்னக்கூலி கையிற்கொடுப்பதுண்டோ
இரும்புமனதுக்கு ஏறக் கில்லையேயென்றார்

வனொருபுலையர். புத்தியில்லாதவன் புலம்புறான்சிவனென்று
கத்திநாலுமென்ன காரியமோவென்றார்

ந்தனார். நித்தமுமொருதரம் நினைவுடனேசிவன்
சத்தமிருந்தாலென் றுந் தாழ்வில்லையென்றார்

வனொருபுலையர். சேரியிலிருந்தாலும் செல்வங்குறைந்திடும்
ஊரைவிட்டாகிலும்நீ ரொதுங்குவீரென்றார்

நந்தனார். வாருங்களெல்லாரும் மன்னனைப்போலவே
சேருவோந்தில்லைச் சிதம்பரமென்றார்

வேறொருபுலையர். பாலாறுபெருகவே பண்ணையைப்பயிரிட்டு
ஆளாமலேவீணுக் கலையுறீரென்றார்

நந்தனார் பாலகிருஷ்ணன்தொழும் பாதத்தைநான்கண்டு
நாலாம்பதவியை நாடுவேனென்றார்.

வசனம்.

அவர்களில் ஒரு புலையர் உரைத்ததாவது, எப்போதுஞ் சிவனைக் கொண்டாடினால் நம்முடைய தொழிலுக்குக் கெடுதலுண்டு பண்ணைவிளையாதென்றுசொல்ல, நந்தனார் அதற்குச்சொல்லுகின்றார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

அரசராவென்றொரு குழிநட்டாலங்கலமே விளையும்
பாவம்-தங்காமற் றலையும்

சிவசிவாவென்றொரு தரஞ்சொன்னால் சென்மசபலமாச்சு
புண்ணிய கருமமதுவே யாச்சு

தில்லையம்பலத் தெரிசனங்கண்டால் தேவரும்வருந்தாரோ
அந்த-மூவரும்பொருந் தாரோ

அடிமைக்காரத்தொழில்செய்வது துன்பமானாலுமேச்சே
சென்மம்-போனாலும் போச்சே

வசனம்.

நந்தனார் புலையர்களைப் பார்த்து, அநேக விதமாய்ச் சொல்லி நாளைப்போவேனென்று சொல்லுகின்றார்.

சிந்து.

நாளைப்-போவேனென்றாராம் - அங்கே-நாடும் பறையர்களோடி வந்து, அண்ணே நீ போகாதே-நமக்-காண்டைபொல்லாதவன் வேண்டிக்கொள்ளான், பார்ப்பாரச் சாதியுண்டே.

வசனம்.

இப்படிச் சொல்லிய புலையரைப் பார்த்து நந்தனார் சொல்லுகின்றார்.

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

ஆண்டைக்கடிமைக்காரனல்லவே
யானாண்டைக்கடிமைக்காரனல்லவே.

அநுபல்லவி.

மூன்றுலோகமும் படைத்தளித்திடும்
ஆண்டவர்க்கொத் தடிமைக்காரன் ஆண்டை

சரணங்கள்.

ஆசைக்கயிற்றினிலாடிவரும்பசு
பாசமறுத்தவர்க் கடிமைக்காரன் ஆண்டைக்
தில்லைவெளிகலந் தெல்லைக்கண்டேற்றித்
தேற்றித்தெளிபவற் கடிமைக்காரன் ஆண்டைக்
சீதப்பிறையணிந் தம்பலத்தாடிய
பாதம்பணிபவர்க் கடிமைக்காரன் ஆண்டைக்

வசனம்.

தன்னை யடிமையாகக்கொண்ட வேதியர்சொற் கேளாதவரல்ல அப்படியிருந்தும், பத்திபண்ண வேணுமென்று பத்திநெறியைச் சொல்லிக் காட்டினார்.

விருத்தம்.

நவம்பெறுமுனிவர்மெச்சுஞ் சரித்திரங்கொண்டநந்தன்
பவமயக்கறுக்கவேண்டிப் பகர்ந்திடுஞ்சிவவாக்கியத்தை
அவகுணங்கொண்டபேய ரறிந்திடப்போமோவெல்லாஞ்
சிவன்செயலாருநம்மாற் செய்வதொன்றில்லையென்றார்.

வசனம்.

திருநாளைப்போவார் அனேகவிதஞ் சொல்லப் புலையர் கேளாம லிருந்ததினால் சிவன்செயலென்று நாளைப்போவார் சும்மாயிருந்தார். அந்தச் சேரியில் புலையர் கூட்டங்கூடி மூத்தோனால் நந்தனருக்குப் புத்திசொல்வோ மென்றெண்ணி அந்தச் சேரியிலே வெகு நாளா யிருக்கின்ற ஓர் புலையர் வயதுமிகுந்து உடல் தளர்ந்து பல்லுகளுதிர்ந்து தோலுகள் சுருங்கி நரம்புதெரிந்து முதுகு சரிந்து முழுதும் வளைந்து அங்கம் சொரிபடர்ந்து தினவு மிகுந்து அதனைச் சொரிந்து அந்நீர் வடிந்து அவ்வுடல் நடுங்கி இவ்விதமிருக்கும் பெரிய கிழவனாரையனுப்பக் கோலூணி கூனிக்குறுகி கோணலாய் நடந்துவந்து நந்தனரைப்பார்த்து கட்டியணைத்து தலைகிமிர்ந்து கண்ணீர்சொரிந்து மார்பில் வழிந்து மனங்கனிந்து காதல்மிகுந்து ஒன்றுந் தெரியாதவனொன்று நினைந்து பரிந்து ஞாயமறிந்து சொல்லுவான்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

ஞாயந்தானோ நீர்சொல்லும்-ஓய்-நந்தனரே
நம்ம-சாதிக்கடுக்குமோ. ஞாய

சரணங்கள்.

சேரியிலில்லா வழக்கம்-நீர்
செய்துகொண்டுவந்த பழக்கம்-இந்த
ஊரிலெங்குமது முழக்கம்-வெகு
உறுதியாச்சுது வொழுக்கம் இது ஞாய

சிதம்பரமென்கிற பேச்சு-நாங்கள்
செய்திடுங்காரியம் போச்சு-அது
மதம்பிடித்ததுபோ லாச்சு-இந்த
மண்டலப்பறையருக் கேச்சு-இது ஞாய

பறையருக்கேது வதைப் பூசம்-அதைப்
பார்க்கவேயுனக்கு விஸ்வாசம்-சிறு
பயல்களுக்கேயுப தேசம்-நீர்
பண்ணிவைத்ததெல்லாம் மோசம்-இது ஞாய

வசனம்.

சேரியில் பெரிய கிழவனுனபடியால் சாதிவழக்கங்க ளெல்லாம் அறிந்தவனுதலால் நந்தனருக்கு இன்னமுஞ் சொல்லுகிறுன்.

சிந்து.

பார்ப்பாரச் சாதியுண்டே-என்ன-பாடுபடு முழக்காடுமங்கே நமக்குந்திருநாளோ-அந்த-ஞாயமுண்டோ யென்னமாயமிது, வென் றேதடைசெய்தான்-சிவன்-வேடிக்கைதானென்று நாடிக்கொண்டே அறியாதுபோலிருந்த.

## பெரியகிழவன் சொல்லிய

### விருத்தம்.

கழனியைத்தெய்வமெனச்சுற்றிவந்து தலைவணங்கிக்கரங்குவித்து
உழுதுபரம்படித்துவிரைதெளித்து முளைகொள்ளநீரோடவிட்டுப்
பழுதறநட்டதன்களையைப்பிடுங்கி மடைதிறந்துபுனல்பாயவிட்டுச்[னே
செழுத்திடவேபொங்கலிட்டுக் காத்தவராயனை வேண்டுஞ்செய்கைதா

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சுவாமிதெரிசனம் நமக்குண்டோ-புலைச்
சாதியன்றோவந்த நீதியறியாமல்.

அநுபல்லவி.

பூமிதெரிசனம்போதும்போதும் வெகு
புண்ணியமேசோறுபோடுமின்ன மொரு சுவாமி

சரணங்கள்.

நாத்துகரம்புகளைச்சுமப்பதும் உழுவதும்
நஞ்சைவயலைச்சுற்றி வருவதும்-வளம்பெற
பாத்திகள்கட்டிவிரைதெளிப்பதும்பறிப்பதும்
பாயுமடையைத்திறந்திடுவது மன்றியில் சுவாமி
சேரியிடையில்குடியிருப்பதும் பதறுகள்
சிதறத்தூற்றிநெல்லளப்பதும் பார்ப்பதும்
ஊரைவளைந்துதமுக்கடிப்பதும் மதுக்குடமுண்டுகளித்துநாமுறங்குவ தன்றியில் சுவாமி
ஆண்டைமார்களிடும்பணிவிடைசெய்வதும்
அருகில்நின்றுகையைவிடுவதும் நடுவதுந்
தாண்டிநடந்துநெடுங்கோல்பிடிப்பதுமளப்பதும்
தனித்துச்சுடலைதினங்காப்பது மன்றியில் சுவாமி

விருத்தம்.

சாதியின்முறைமைகாட்டித் தடையிடப்போதுமென்றார்
வேதமாமுனிவராலும் வினவியுங்கண்டாரில்லைப்
பேதையாம்புலையருக்குப் பேரின்பநிஷ்டையேதென்
றுதலாலென்செய்வோமென் றம்பலத்தஞ்சுவாரே.

வசனம்.

பெரியகிழவனைப்பார்த்து நந்தனார் சொல்லுகின்றார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

ம்பரதெரிசனங்காணவிடி லிந்தச்சென்மஞ்சபல மாமோ
செனனமரணசமு சாரம்பெருகவே செய்தவினைகள் போமோ
ணுங்கருத்திருக்கச் சிவனைக்காணமல் காலங்கழிக்க லாமோ
காலபாசநமதருகில்வாராமல் கண்டுபயந்து போமோ
ப்படியெப்போதுமிருப்போமென் றெண்ணியிருக்க லாமோ
இருதயமறிந்திடசெய்திடுங்கன்மங்கள் இகழ்ந்துபிரிந்து போமோ
ன்னுமுன்னுமறியாத மூடர்கள்புத்திகேழ்க்க லாமோ
புலையாவாடியிலிருக்கினுமெய்திடும் புண்ணியங்கள் போமோ
மசிவனைக்கொண்டாடவேணுமென்று பரிந்துபாவி பார்த்தேன்
பாபஞ்செய்பவர்க்குப்பலியாது அதில் பாடுபட்டுப் பார்த்தேன்

வசனம்.

சேரியிலுள்ள புலைபர்கள் கூட்டங்கூடி அனுப்பிவைத்த பெரிய
ழவனைப் பார்த்து நந்தனார் சொல்லுகின்றார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

| | | |
|---|---|---|
| மீசைநரைத்துப்போச்சே | கிழவா | ஆசைநரைக்கலாச்சே |
| பாசம்வருகலாச்சே | கிழவா | பாவம்விலகிப்போச்சே |
| கூனுகுறுகிப்போச்சே | கிழவா | கோபம்விலகிப்போச்சே |
| அங்கம்தளர்ந்துபோச்சே | கிழவா | ஆங்காரமும்போச்சே |
| சேரிமையமறந்தாயே | கிழவா | சிதம்பரமறந்தாயே |
| மானிடசென்மமடா | கிழவா | மாண்டால்வருமோடா |
| அம்பலத்தரசனடா | கிழவா | ஆளுந்தெய்வமடா |
| திருவடிபணியாயோ | கிழவா | தேடித்தெளியாயோ |

வசனம்.

நந்தனர், இவ்விதஞ்சொல்லி சிவகாமிவல்லிபாகனை நினைந்து நீ ள்ளி பெரியகிழவன் முகத்திலேதடவி வாயிலேபோட்டுக் கட்டியணை த்து காதிலே சிவமந்திர முபதேசித்தார். உபதேசமான உடனே பெ ரியகிழவன் சித்தந்தெளிந்து சிவமாய்நிறைந்து உற்றதுணர்ந்து ஒ வனுயிருந்து அத்தனடியா ரருளிதுவென்று பத்திமிகுந்து பரவச கொண்டு பேசத்தெரியாமற்பேசுவான், நான் இன்றைக்குத்தான் பெ ரியகிழவனுனேன் நந்தா எனது பந்தந்தீர்க்கவந்தாய் முத்திதந்த யென்று சுத்தி வலம்வந்து அடிபணிந்து விடைபெற்றுக் கண்டே னென் கலிதீர்ந்தே னனந்தங்கொண்டேன் குறைதீர்ந்தேன் அமிர் முண்டேன் பசிதீர்ந்தேன் பிறவிவென்றேன் வீடுநின்றேனென்று பே சிக்கொண்டு பெரியகிழவனுர் நந்தனராலுபதேசம்பெற்றுவருகின்று

இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பெரியகிழவன் வருகிறுன் போரனந்தக்கடலாடி பெ

சரணங்கள்.

பரவியமாயையிலிருந்து பார்முதல்பூதங்களைந்து
பெரியவரென்றுணர்ந்து பேரின்பலாபத்தையடைந்து பெ
படிபுகழ்நந்தனர்மகிழ்ந்து பரமசிவபக்திபுரிந்து
கொடியவன்பாவங்கள் தீர்ந்து கூனிக்குறுகிநடந்து பெ
நந்தனர்சொன்னதறிந்து நானென்றுரையுமிழந்து
பந்தமயக்கந்தெளிந்துப் பரவெளியாகநினைந்து பெ

வசனம்.

புலையர்களெல்லாங் கூட்டங்கூடி நந்தனருக்குச் சிதம்பரப்பி தர்தெளிய புத்திசொல்லவனுப்பிய பெரியகிழவன் நந்தனர் பித்

ண்டு அவருடைய மகிமையெல்லாம் புலையர்களிடத்திற் சொல் கொண்டாடுவான்.

பெரியகடுக்கா.

திருநாளைப்போவாரிந்தச் சேரிக்குமூருக்கும்
யாருக்கும்பெரியவன் திருநாளைப்போவார்
ஒருதரமாகிலுஞ் சிவசிதம்பரமென்று
உரைத்திடீரென் றுண்மைகூறிய திருநாளைப்

அடாதுசெய்தால் படாதுபடுவீர் விடாதுபாவந் தொடாதே ன்பேரிடாதே தூறுபடாதே கையிடிபடாதே வெம்பகையிடாதே பா திடாங்கண்கோபப்படாது பட்டால்விடாது சலம்படாதவன் ப்படாதவன் இடங்கொடாதவன் அடங்கிடாதவன் நிலைவிடாத மறுபடாதவன் மனம்விடாதவன் அடங்கிடாதவன் விடையவ படான் மாயைக்ககப்படான் சிவனையிடைவிடான் கழனிகளை ன் கலப்பைகளைத் தொடான் நமது வழிப்படான் பொலிகிடாரி லைப் பிடாரி வெல்லப்படாது சொல்லப்படாது கல்லப்படாது ளப்படாது யாரையும் விடாது துன்பந்தொடாது வழியைத்தே து இருவினைப்படாது சென்மங்கெடாது தெய்வங்கெடாது அவன் விடாது வேறுபடாது ஆசைப்படாமல்அருளைக்கொடாது பங்கப் ாததங்கக்கடாரம்பொங்கப்படாதவன் இணையிலாதபுண்ணியதடா செய்தவன் மடாதிபதிபிடிபடாத சிங்கம் அளவுபடாதமகிமை வி தபெரியவனடா தெரிசனப்படாதசந்நிதி விடாதநந்தியசைந்ததே ா ஆண்விலசடாவென்ற சொல்டா அவனைப்பணிபடா தூளை ரியடா அறிந்துபோற்றடா கையெடுத்தேத்தடா மலரைத்தூற்ற மனதைத்தேற்றடா பிறவிமாற்றடா ஆனந்தக்கூத்தடா சொன் ன் திருநாளைப்போவாரிந்தச் சேரிக்கு மூருக்கும் யாருக்கும் பெரி ன்.

வசனம்.

இப்படி பெரியகிழவன் சொல்லக்கேட்டு, நந்தனாராலே கெடுக் பட்ட பதினெறுபேர்களுக்குள்ளே நீயும்பனிரண்டாம்பேராயிருக் தலைப்பட்டு சிவசிவாவென்றுசொல்லிச் சேரியைக்கெடுக்கத் தலைப் டீர்களே கிழவாவென்று மிகவுந்துன்பமடைந்து, புலையர்கள் ஒரு க்கொருவர் சொல்லித் துயரப்படுகின்றார்கள்.

இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

நாம்என்னசெய்வோம் புலையரே-இந்தப்
பூமியிலில்லாதபுதுமையைக்கண்டோம் நாம்

சரணங்கள்.

நந்தனொருவனாலேயிப்படி யாச்சு
நன்மையுந் துன்மையுமில்லாமற் போச்சு
சந்திக்குச்சந்திகூத்தாட லாச்சு
சாமியுமில்லாமலெங்கேயோ போச்சு நாம்

கன்னற்கற்கண்டவ்வார்த்தைகேட் பாரோ
காதிற்பட்டாலதைக்கருத்துட்கொள் வாரோ
மன்னார்சாமிக்குப்பூசைபோட் டாரோ
மாரியாத்தாளங்கேமறைந்திருக்கி றாளோ நாம்

சேரிக்குள்பதினொருபேர்களுங் கெட்டார்
செய்யுந்தொழில்முறையாவையும் விட்டார்
ஊருக்குப்பெரியகிழவனுட் பட்டார்
உண்மையறியாமற்சிதம்பரந் தொட்டார் நாம்

வசனம்.

சேரியில் துன்பமடைந்த புலையர்களைப் பார்த்து உங்கள் தெய்ந்துக்கு வழக்கம்போலே பூசைபோட்டு பலியிட்டு வேண்டினால் ரிக்கு நல்லகாலம் பிறக்குமென்று பெரியகிழவனார் சொல்ல, புலைக்கள் பூசைபோடுந் தெய்வங்களாவன.

கடுக்கா.

வீரன் இருளன் காட்டேரி வெரியன் கொண்டி சாமுண்டி தூந்தூண்டி நல்லண்ணன் தொட்டியச்சின்னான் பெத்தண்ணன் மாமுனியன் சங்கிலியும் மாடன் கறுப்பன் பாவாடை மூறிக்காத் ன் குழிபிரிசி மோகினி சத்த கன்னியையும் சேரிமன்னான் மின் டியான் சிறுக்காட்டுடையான் பனைமரத்தான் மாரியாண்டி வழி த்தான் மலையன் சாத்தான் பக்கிரியும் எரியனுஞ் சிலம்பாயி இ டயன் நல்லான் ஊமையோடு வீறுங்கல்லன் பெத்தாச்சி வீட்டு தய்வமுதலான,

இதுகளைத் தெய்வமென்று வணங்கிக்கொண்டாட ஏனங்கோ ஆடுகளுடனே மதுக்குடம்வைத்து பள்ளயம்போட்டு பம்பை த்துவருந்தச் சன்னதம்வருஞ் சொன்னேன், சேரிக்கு நல்லகா ம் பிறக்கும் சிதம்பரபித்து நந்தனருக்குத் தெளிந்துவிடுமென்று பர்பெருக வாழ்விரென்றும் பெரியகிழவன் சொன்னாரே அப்படி கிழவன் சொல்லை நம்பிக்கைகொண்டு புலையர்க ளெல்லாரும்

பந்தலிட்டு பள்ளயம்போட்டு கொம்பு தம்பட்டமுழங்கி முப்பூசை
யிட்டு வேண்டுவார்கள்.

வருந்திக்கொண்டாடும்-அகவல்.

புலையர்—எல்லைப்பிடாரியே எதிராகவந்தெமை
கொள்ளையுன்காவலாய்க்கொள்ளடி. யென்று
நந்தனர்—சொல்லினுமடங்காதசோதிபரமானந்தத்
தில்லைநாயகரைத்தேவ ரறியாரோ
புலையர்—முண்டாசுகட்டிவரும்மொண்டிவீரப்பனைக்
கொண்டாடிப்பூசைகளைக்கொள்ளுவீ ரென்று
நந்தனர்—அண்டங்கள்பதினாலுக்கப்பாலுமிப்பாலும்
நின்றார்க்குமுண்டரசுநிலையாது யென்று
புலையர்—கச்சையரிவாள்வைத்த கருப்பண்ணசாமியை
இச்சையுடன்வேண்டும் என்றெய்வ மென்று
நந்தனர்—பச்சிலைபிடுங்கியேபாதத்தில்சாற்றினல்
இச்சையானதுமீயுமென்றெய்வ மென்று
புலையர்—நேயமறிகோழியுநிணமூன்றுசாவலும்
தீயகள்ளும்வைத்துத்தெரிசித்து நின்று
நந்தனர்—வாயாலேசிவமென்றுவருந்தினலெப்போதும்
தாயாரைப்போலவேதழுவிவரு மென்று
புலையர்—பிடித்துப்பிடித்திருக்கும்பேயனும்நந்தனுக்கு
சித்தந்தெளிந்திடச்செய்குவீ ரென்று
நந்தனர்—பத்திவெள்ளம்பெருகிப்பாய்ந்தாலுஞ்சேரியில்
நத்தையுறிஞ்சுஞ்சாதிநாடாது என்று

வசனம்.

இவ்வகைப் பூசைப்போட்டுத் தெய்வங்களைக் கொண்டாடும்
புலையர்களைப் பார்த்து நந்தனர் சொல்லுகின்றார்.

இராகம்—தோடி—ஆதிதாளம்.

பல்லவி.

பத்திசெய்குவீரே-நடேசனைப்-பத்திசெய்குவீரே.

அநுபல்லவி.

அத்திமுகனைப்பெற்ற உத்தமனைவிட
நித்தியதேவ னெவர்களுமில்லையென்று பத்திசெய்

சரணங்கள்.

சாமமதர்வணமிருக்குயசுர்வேதஞ்
சாற்றுமுபநிடத்தும்தர்ப்பரன் அரனென்று

ஏமாருமற்சொல்லியின்புறுதலையின்று
எவர்களுமறியவேயிப்புவிதனிலநின்று பத்தி
ஆகமமிருபத்தெட்டாதிபுராணமும்
அயன்கீதைமுதலான அனந்தஸ்மிருதிகளும்
பாகமாகியபிர்ம்மபரமனொருவனென்று
பண்புடனுரைத்திடும்பான்மையதால்நின்று பத்தி
கௌதமர்முதலானயிருடிகளனைவரும்
கேசவன்தொழும்பதங்கெதியென்றனுதினமும்
புவனத்தில்போற்றியேயேத்தினதாலிவர்
புகழும்புண்ணியபதம்பொருந்தினரென்பதால் பத்தி
அரியயனிந்திரன்முதலானதேவரும்
அரனடிதன்னையேயன்பாய்பூசித்ததால்
பரிவுடனவர்செல்வம்பழுதுவராமலே
பாலித்தார்சிவனென்றுபத்தர்சொல்வதினாலே பத்தி
வியாசமுனிவரும்அவரடியார்களும்
விஷ்ணுபரமென்றுவிளம்பினதால்முன்னம்
கயாகாசிக்கங்கைக்கரையிற்கையிழந்ததும்
கல்லாய்த்தானேயவர்சமைந்ததினாலேயும் பத்தி
தில்லையம்பலத்தினில்திருநடமாடிடும்
தேவாதிதேவனைதினம்பணிந்தேத்தியே
அல்லல்சம்சாரக்கடலிலழுந்தாமல்
ஆனந்தக்கூத்துகளாடிக்கொண்டுநீங்கள் பத்தி

விருத்தம்.

இத்தனைநாட் பரமசிவன்றிருமகிமையிரவுபக லெடுத்துச்சொன்னன், பத்திபுரியெந்தனுக்கே யருள்புரிந்த வையன்பதம் பணிவீரன்றேன், அத்தனையுமிழந்திடவே மனவெறுப்பா யெந்தனையுவமானித்தீர், புத்திசொல்வே னென்றவர்கள் முழந்தாளிட்டடிகாண்டு புனைந்திட்டாரே.

வசனம்.

நந்தனார் மகாபலசாலியானபடியால், புலையர்களைச் சிட்சித்துவநாமத்தைச் சொல்லச் சொல்லுவார்.

தண்டகம்.

தத்திப்புலிப்போலேதாண்டிக் குதிப்பார்
முத்தமிடுவதுபோலேமுகத்தைக் கடிப்பார்

வார்கொண்டுகட்டிவளைத்துப் பிடிப்பார்
தூர்க்கல்லெடுத்துத்தடைக்குள் ளெரிப்பார்
பல்லாற்கரண்டியேபரம்படித் திழுப்பார்
கல்லாலெறிந்துமவர்காயப் படுத்துவார்
குப்புறத்தள்ளியேகோபித் துதைப்பார்
செப்பியசிவனைநீர்சேவிப்பி ரென்றார்

வசனம்.

இப்படிசிட்சித்தபின்பு, புலையர்களெல்லோருநந்தனாரடிக்கு பயந்து பத்திசெய்யத் தொடங்கினார்கள்.

கடுக்கா.

அரகரசிவசிவவம்பல வாணா
தில்லையம்பலதேசிக நாதா
புரமூன்றெரித்தபொன்னம்பல வாணா
கரியுரிபோர்த்தகருணா கரனே
அனுதினமன்றுளாடிய பாதா
பிழைபொறுத்தாளும்புண்ணிய மூர்த்தி

வசனம்.

மூடப்புலையர்களுக்குப் புத்திதருவாயென்று நந்தனரிப்படி சொல்ல யாவரும் தொழுதார்கள்.

இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பத்திகள்செய்தாரே-பரசிவ-பத்திகள்செய்தாரே.

சரணங்கள்.

பத்திகள்செய்தார் நற்றவம்புரிநந்தன்
சித்தமகிழ்ந்திடவத்தனைபேர்களும் பத்திகள்
எடுப்பான்சிவகதைபடிப்பான்தடியொன்று
பிடிப்பான்காலுக்கு அடிப்பானென்றே பத்திகள்
கல்லாதவனிங்கே செல்லாதவனன்றி
யில்லாதவன்வெகு பொல்லாதவனென்றே பத்திகள்

வசனம்.

அந்தச்சேரியிலே புலையர்கள்பத்திசெய்ததால், சேரி சிவலோகம்போல விளங்கியது, சிலநாளுக்குப்பின்பு புலையர்களெல்லாங்கூடி நந்தனாரைப்பணிந்து நல்லவார்த்தைசொல்லி நாங்களெல்லோரும் நாளொன்றுக்கு மூன்றுவிசை சிவனேயென்று சொல்லுகிறோம்

ற்றவேளையில் எங்கள் பண்ணைத்தொழிலை செய்வோமென்று கே
க நந்தனார் அல்லது அப்படியே தப்பாமல் செய்யுங்களென்று நந்
னார் சொல்லிவிட்டுச் சேரி பெரியகிழவனுடன் திருப்புன்கூருக்குப்
ராய்வந்த புலையர்களைப் பார்த்து நந்தனார் சொல்லுவார்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கொள்ளையெனும்பிறவிவினைமுளைவீசாமற்
குடிமாறிப்போவதற்கோர்வகையைக்கேட்க
கள்ளமனக்குரங்கதனால்விடையமாச்சு
கட்டியிருந்தாலிருந்தவிருததிபோச்சு
உள்ளங்கைக்குள்ளிருக்குங்கனியைப்போல
வுருவில்லாதான்மாவேரறுத்துவாழ்வீர்
எள்ளளவும்பிசகில்லையென்றஞானம்
ஏற்றுவார்மும்மலத்தைத்தூற்றுவாரே.

இராகம்-எதுகுலகாம்போதி-ரூபகதாளம்.

பல்லவி.

பார்த்துப்பிழையுங்கள்-நீங்கள்-பார்த்துப்பிழையுங்கள்.

சரணங்கள்.

ர்த்துப்பிழையிந்தச்சோற்றுத்துருத்தியை
த்தித்தொழவேண்டாம்காத்துப்போகுமுன்னே பார்த்து
த்திமதிசூடுங்கூத்தனிடமாயச்
க்திரத்தையிந்தக்ஷேத்திரத்துள்ளாடி பார்த்து
ற்றிருப்பீர்காலங்காத்திருப்பான்சிவ
த்திரத்தைஞானநேத்திரத்தாலுற்றுப் பார்த்து
லக்கனல்தாண்டிமேலக்கரைவந்து
லைக்குடியிருந்நாளுக்குள்வாராமல் பார்த்து
லகிருஷ்ணன்றொழுங்கோலப்பதங்களை
னுக்குமேல்நாடிசாலக்கலியற பார்த்து

இராகம்-பழுனகல்யாணி-அல்லது-சாரங்கா-ரூபகதாளம்.

பல்லவி.

தில்லைச்சிதம்பர மென்று-ஒரு
தரஞ்சொன்னால்பாகதி யுண்டுண்டு

அநுபல்லவி.

நல்லச்சுருதிமுடி கண்டு-சபா
நாதன்திருத்தாளைசிந்தையிற் கொண்டு தில்லை

சரணங்கள்.

வேரில்லாமலொருவிருட்சமொன் றிருக்கு
விளையும்வினைகளெல்லாஞ்செய்யுந் திருக்கு
பேரில்லாமல்ஞானத்தீகொண்டு கருக்கு
பேரின்பவாணரைப்பிசகாமல் நெருக்கு தி
தேசம்புகழுந்தில்லைக்கோயில் வளைந்து
தித்திக்குஞ்சிவபஞ்சாட்சரம் புரிந்து
ஆசையுடனேயர்த்தசாமத்தி லிருந்து
அங்கம்புளகிதமாயடிக்கடி பணிந்து தி
மாயன்கோபாலகிருஷ்ணன்தினந் தேடி
வருந்துஞ்செந்தாமரைமலரடி நாடித்
தாயைப்பிரிந்திளங்கன்றுபோல் கூடித்
தனித்திருந்துதாளம்போட்டுக்கொண் டாடி தி

இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

நமக்கினியபயமேது-தில்லை-நடராஜனிருக்கும்போது

அநுபல்லவி.

மார்க்கண்டருக்காகமறலியையுதைத்திட்ட
மான்மழுவேந்தும்மகாதேவனிருக்க நமக்கி

சரணங்கள்.

இம்மைமறுமைமுதலியாவுக்கும்பரமான
சின்மயானந்தரூபச்சிவபெருமானிருக்க நமக்கி
அரியயனமரரும்ஆலங்கண்டஞ்சமுன்
பரிவுடன்வரக்காத்தபரமசிவனிருக்க நமக்கி
திருவிக்கிரமனாய்வருந்திண்மாயன்மமதையை
விரிவுகங்காளனாகிவிலக்கும்பரனிருக்க நமக்கி
ஆதிசேடனுமாலுமலரோனிலக்குமியும்
காதலாய்த்தவஞ்செயக்களித்தபரனிருக்க நமக்கி
இரணியனல்வெறிகொண்டநரசிம்மனை
தரணியில்ரக்ஷித்தசங்கரனிருக்க நமக்கி

இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

சங்கரனைத்துதித்தாடு-இனி-சனனமில்லையென்றுபாடு.

பொங்கரவணிந்திடும் பொன்னம்பலவனை
புத்தியில்நினைவாகப் போற்றுவாய்சிவனை சங்கர

சரணங்கள்.

பாரினிற்பெண்கள்மேற் கருத்து-போய்ப்
பற்றவொட்டாமலே திருத்து
பேரின்பஞானத்தை வருத்து-சுகப்
பெருவெளிநீநெஞ்சி லிருத்து சங்கர
நீர்மேற்குமிழியிக் காயம்-என்றும்
நிலையில்லாவாழ்வீது மாயம்
பேராணமாலயன் நேயம்-பெறப்
பேசுவரீதேயு பாயம் சங்கர
மனிதச்செனனத்தில் தேடு-நல்ல
மாதவத்தோர்களைக் கூடு
தனிவெளியாமொரு வீடு-தன்னைத்
தத்துவத்தால்கண்டு நாடு சங்கர

வசனம்.

இப்படிச்சொல்லிய நந்தனாரைநோக்கி மற்றபுலையர்கள் சொல்லுவார்கள்.

இராகம்-சவாயி-தண்டகம்-சாப்புதாளம்.

அவர்கள்—புண்ணாகியவிந்தப்பிறவிபிணிக்குமருந்
துண்ணாமலிருப்பதுஉண்மையே நந்தா
நந்தனார்—கண்ணாலேபார்த்திடில்காட்டிமறைத்திடும்
மண்ணானபூதங்கள்யாமே மைந்தா
அவர்கள்—இருப்பதுபொய்யென்றிராததுமெய்யென்று
இருத்திப்பேசியவகையென்னடா நந்தா
நந்தனார்—உருத்தெரியுதுநாமரூபமல்லவோ
கருத்திலிருத்திக்கொண்டால்காணலா மைந்தா
அவர்கள்—விஸ்தாரமாமிந்தபிண்டமானமெத்தை
பத்திக்கொண்டிருந்துபகர்ந்திடும் நந்தா
நந்தனார்—வித்துக்குள்விருட்சமடக்கியவாறுபோல்
சத்துக்குள்ளண்டசராசர மைந்தா
அவர்கள்—புத்திக்குளெட்டாதபோதத்தைநாமுண்டு
முத்திபெறும்வழிமொழியுமே நந்தா

நந்தனார்—அத்தனிருக்குமிடமன்னமயாதிகள்
பத்துதலில்லாபரவெளி
அவர்கள்—தத்துவங்கள்தொண்ணூற்றாறுங்கடந்திடும்
வஸ்துவைநாமென்னும்வகையேது
நந்தனார்—நித்திரையொழித்தபின்நினைவுடனேகூடி
உத்தரம்பேசியதுண்மையே
அவர்கள்—பித்தனைவேறொருபேய்பிடித்தாற்போலுஞ்
சித்தவிகாரங்கள்தெளியுமோ
நந்தனார்—பத்திவலைவீசிப்பார்த்திடும்வேளையில்
தத்திக்குதித்திடுந்தாண்டவம்
அவர்கள்—சீலமுள்ளநல்லசேதிசொன்னாயுந்தன்
காலுக்குக்கும்பிடக்கண்டோமே
நந்தனார்—பாலுக்குச்சக்கரைபலித்ததுபோலுங்க
ளாலேயன்றோவீடுநாடாது
அவர்கள்—தூலச்சரீரத்தைச்சுமந்துபிள்ளைப்பூச்சி
போலேயானோமுந்தன்புண்ணியம்
நந்தனார்—பாலகிருஷ்ணன்தொழும்பரமசிவனரு
ளாலேபொங்கிவருமானந்தம்

எண்சீரடியாசிரிய விருத்தம்.

ஓங்காரமென்றுசொல்லுமுரலைப்போட்டங்
குறுதியெனுமிருப்புலக்கைக்கையிலேந்தி
வாங்காரமென்றசட்டுவாகையிட்டு
வடிக்கடியேகண்ணியதைப்புடைத்தெடுத்து
நீங்காதசிவயோகநிஷ்டைகொண்டு
நிர்மலமதானவருஞ்சுற்றிவந்து
பாங்கானநந்தனிருதாளைப்போற்றிப்
பணிந்திட்டார்திருநீற்றைபணிந்திட்டாரே.

வசனம்.

அவர்கள் நந்தனாரைவிட்டு நீங்கிதனித்திருக்க மனம்வராம
சொல்லுவார்கள்.

விருத்தம்.

தில்லையிற்போகவேண்டாந் திரும்பிவந்தாலுமும்மைச்
செல்லாதுபண்ணைப்பார்ப்பான் சினங்கொண்டபடியாலிந்த
எல்லையிலிருந்துதானே யீசனார்திருநாமத்தைச்
சொல்லியநாலாம்வீட்டிற் சேருவோம்வாரீரென்றார்.

வசனம்.

அனல்கண்ட மெழுகதுபோ லுருகிப் பத்திவெள்ளம் பெருகிச் சால்லிய பேர்களை நந்தனார் கரமாலிங்கனம்பண்ணி கண்ணீர் சலம் பருகச் சொல்லுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

ல்லைவெளியிலே கலந்துகொண்டாலவர் திரும்பியும்வருவாரோ
ல்லைகண்டபே ரினிபிறவாரென் றியம்புவதறியாரோ
பண்டுபிள்ளைகள் வெறுங்கூட்டமது பேய்ச்சுரைக்காய்தோட்டம்
ண்டுகொள்வார் பெரியோரறிவில் கனகசபையினாட்டம்
ருவாதிரையில் தெரிசனங்காணத் தேடித்திரியாரோ
ரிதாகியவிந்த மானிடங்கிடைத்தா லானந்தமடையாரோ
ஞ்சிதப்பாதத்தைக் கண்டாலொழிய குறையதுநீங்காதே
ஞ்சிதக்கும ராதிகளுடாடிய சடலமுந்தாங்காதே
சரியிடையிலே குடியிருந்தாலிந்தச் சென்மமுந்தொலையாதே
தம்பரம்போவேன் பதம்பெறுவேன்தடை செய்துமறியாதே
ரவும்பகலு மொழியாக்கவலை யிருப்பதுசுகமோடா
ன்பம்பெருகும்பர மானந்தவெள்ள மிழந்துநீபோடா.

வசனம்.

சிதம்பரம் போவேன் நீங்களிங்கே யிருங்களென்று நந்தனார் சால்லுவார்.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தனைசெய்துக்கொண் டிருந்தாலுங்களுக்
கெந்தவிதமுங் கரையேறலாம்சிவ — சிந்தனை

அந்தணமுனிவரு மிந்திரமரரும்
வந்துபணியுமவர் விந்தைபொற்பாதத்தை — சிந்தனை

மாமனைவதைத்தவன் காமனையெரித்தவன்
மான்மழுதரித்தவன் தாமரைப்பாதத்தை — சிந்தனை

தம்புருவணிந்திடுந் தும்புருநாரத
ரும்பணியும்பொன் னம்பலவாணனை — சிந்தனை

வெம்பியதும்பிக் கருளியபாலகிருஷ்
ணன்பணியுந்திரு வம்பலநாதனை — சிந்தனை

இராகம்-பூரிகல்யாணி-அல்லது-சாமாராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

தில்லைத்தலமென்று சொல்லத்தொடங்கினு
லில்லைப்பிறவிப் பிணியும்பாவமும்

அநுபல்லவி.

சொல்லத்தருமிதுவே சிவலோகம்
எள்ளத்தனையறஞ் செய்யிலமோகந் தில்

சரணங்கள்.

| | | |
|---|---|---|
| ஆகமவேதபுராணங்கள் | சாத்திர | |
| மருந்தவம்புரிவாற்குவருளிய | பாத்திர | |
| மாலயமாயிரத்தெட்டினி | நேத்திர | |
| மானந்தத்தாண்டவமாடிய | க்ஷேத்திர | தில் |
| கணத்திலாடுமணிமாதி | சித்தியுங் | |
| ககனத்திலாரும்விண்ணுடர்கள் | வெற்றியு | |
| மிணையில்லாதகுருசாஸ்திர | பத்தியு | |
| மிகத்திற்றனேவருஞ்சிவபத | முத்தியும் | தில் |
| பரமரகசியமொன்று | பார்க்கலாம் | |
| பாலகிருஷ்ணன்கவிபாடிக் | கேட்கலாம் | |
| கருமவினைகளடங்காமற் | போக்கலாம் | |
| கசடர்கட்குமுத்தியுமுண் | டாக்கலாம் | தில் |

வசனம்.

நந்தனர் ஞான உபதேசஞ்சொல்லக்கேட்டு முன்னே நந்தனு டன் திருப்புன்கூரிற்போய் சிவதரிசனஞ்செய்து வந்தவர்களாகி அறவன், தொந்தி, ஆனையேறி, முத்துமாரி, கழனிகாத்தான், பா சலூரான், ஆண்டிசேவகன், சொறியன், வெறியன், காணியான் எல்லைச்சுற்றியென்கிற பெரியகிழவன் இந்த ஆறிருபேர்களு மா ந்தமடைந்து அவரவர்கள் நிஷ்டையிலிருக்கத் தொடங்கினின்றூர்கள் மற்ற புலையர்கள் கூட்டங்கூடி நந்தனர் நம்மை நாளொன்றுக் மூன்றுதரஞ் சிவநாமத்தைச் சொல்லச்சொன்ன குற்றத்தைப் பார ட்டி நந்தனை யடிமைகொண்ட அந்தணனிடத்தில் சொல்லுவார்கள்

விருத்தம்.

இரவுபகல்பரமசிவ னிணையடியே தொழுதிருக்கு மின்பங்கூறிக்[ரு
கரைபுரளுங்கடலதுபோற்சிவத்தினிடைக்கருத்துணரக்கண்டெல்லே
பரவிவரும் புலையர்களும் பண்புறவே நெறிகாட்டிப் பகரக்கேளீர்
அரியதொரு நந்தனிவ னடிமைபுரி யந்தணர்பா லறிக்கை செய்வார்

நொண்டிச்சிந்து-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

ஐயேவொரு சேதிகேளும்-உங்கள்-அடிமைக்காரப்பறைய ன த்தையெல்லாம், வரவரக் கெட்டுப்போச்சு - சேரியில் - வழக்கமி

தயடி பழக்கமிட்டான், குடியிருக்க மாட்டோம் - எப்போதும்-
க்குரல்போடுகிறு னுக்கமறந்தே, இருப்பானொருவேளை - கொள்
த-ஏக்கமடைந்தவன்போல் நாக்கைவளைத்துச், சிரிப்பானொரு
வளை-தில்லைச்-சிதம்பரமென்றுசொல்லி மதம்பிடித்தே, அழைப்
னொருவேளை-எங்களையும்-அண்ணேன்வா வென்றுசொல்லி கிண்
ரங்கொட்டி, குதிப்பானொருவேளை-திக்குமுக்கல்-கொண்டவன்
ாலெதையோ கண்டவன்போல், களிப்பானொருவேளை - மரம்
ாலே - கையசைக்கல் காலசைக்கல் மெய்யசைக்கலும், இருக்கா
ாருவேளை - தாளம்போட் - டெக்களிகொட்டியே குடிசிக்குட்
ந்து பேசானொருவேளை - கண்டதெல்லாம் - பிரட்டென்று
ால்லுவான் முரட்டுத்தனம், மன்னுறுசாமிபோலே-கிளம்பி-வாய்
ட்டலறுங்குரலூரெட்டுமே, ஐயோ சிவனேயென்பான் - கீழே
ண் டழுவானியாரையுந்தொழுவானே, தூண்டிமீனதுபோலே
ள்ளித்துள்ளித் - துடிப்பான்பற்களைக்கடிப்பானே, சிவனென்று
ன்றுவாட்டி-நாங்களுஞ்-செப்பவேணுமல்லாவிடில் வப்பிலுதைப்
ன், கோவிலிற் போவோமென்பான் - எங்களையும் - கும்பிடச்
ால்லியில்லா வம்புபண்ணுவான், சுற்றிவரச் சொல்லியடிப்பான்
ன்பேரைச் - சொல்லடாசந்நிதியில் நில்லடாவென்பான், சொல்
துலக்கவேணும்-இல்லாவிடில் - சுக்குமாந்தடிகொண்டு நொக்கி
வான், கொம்பேறிமூக்கன்போல-முதுகினில் - குத்துவான் புலி
ாலேதத்துவானே, இதுவென்னகாரணமோ - எங்களுக்கினமா
ந்க்குதுமானமல்லவோ, கறுப்பண்ணசாமிதானும்-இருளன்-கா
டேரிவீரனிவன்வீட்டேரியோ, பாவாடைதுரைதானோ - ரண-
திரகாளியோ வுன்மத்தவீரனோ, பூசைகள் போட்டுப் பார்த்
ாம்-ஒன்றிலும்-போவதில்லைகாரியமாவதில்லையே, எங்கள் வள்
வனரைக் கேட்டோம்-அவர் எடுத்துச்சொன்னரிதை விடுத்துச்
ான்னர், மயான உருத்திரனர்-பிடித்து- வாட்டுதடா இப்படியா
தென்றூர், தெளியாதென்றுசொன்னர்-ஐயே-தெளியாதென்று
ான்னர்.

இராகம்-கன்னடபியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

சேதிசொல்லவந்தோம்-நந்தனர்-சேதிசொல்லவந்தோம்

அநுபல்லவி.

சாதிமுறைமை தெரியாதவனுமக்குத
வாதவனென்றெருமாதமாய்த்தெரிந்த சேதி

சரணங்கள்.

ஏரைப்பிடித்துசற்றே உழுவான்-மண்
தேங்கித்தள்ளாடியே விழுவான்-எங்கள்

சேரியைப்பார்த்தே யழுவான்-சிவ
சிதம்பரமென்றே தொழுவானையே சே

நாத்துமுடியைக்கையி லெடுப்பான்-அதை
நடத்தெரியாமலே விழிப்பான்-இதைப்
பார்த்திடும்பேர்களைப் பழிப்பான்-அடே
பாவியென்றெங்களை அடிப்பானையே சே

உதட்டையசைத்துமுணு முணுப்பான்-அவன்
ஊணுறக்கத்தையுந் துறப்பான்-நாங்கள்
அதட்டிப்பேசினு லடிப்பான்-பொன்
னம்பலவாணனைப் படிப்பானையே சே

இராகம்-கமாசு-ஆதிதாளம்.

பல்லவி.

அடக்கியாளுமையே-இவனை-அடக்கியாளுமையே

அநுபல்லவி.

அடக்கியாளுமிந்தத் துடுக்குக்காரனிவனை
யடித்துப்பிடித்துக் கண்டித்துப்படபடத்து அடக்

சரணங்கள்.

பொன்னம்பலவாண னென்றிவன் பேசி
பொழுதுபோக்குவான் சாம்பலைப் பூசி
சன்னதங்கொண்டவன் போலவே வாசி
சண்டைபிடிக்கவரு வானிவன் தோசி அடக்

பலித்துதையேயொரு மந்திரம் போட்டான்
பழமையானஇனி தங்களைக் கூட்டான்
குலத்தைக்கெடுக்கவந் திவனொரு கோட்டான்
கோபக்காரனெங்கள் வழிப்பட மாட்டான் அடக்

குளத்தைவெட்டச்சொல்லி கூலியைக் கொடுத்தான்
கூட்டிக்கொண்டுபோய்ப் பயல்களைக் கெடுத்தான்
களத்தைச்சீக்கவே யெங்களை விடுத்தான்
காடுமண்டிவருஞ் சுடலையிற் படுத்தான் அடக்

வசனம்.

சேதிசொல்லவந்த புலையர்களைப்பார்த்து வேதியன்சொல்லுவான்

விருத்தம்.

காலமேவந்தானிங்கே கள்ளக்கும்பிடுகள்போட்டு
பாலனைப்போலேபேசிப் பசப்பினன்போடாவென்றேன்

வேலைசூழுலகிலிந்த வீணனைப்போலேகாணேன்
சிலமாஞ்சிதம்பரத்தைச் சேரவேவிடைகொடேனே.

வசனம்.

அந்தணர் சொன்ன மொழியைப் புலையர்கள் கேட்டு மிகவுஞ்
ந்தோஷங்கொண்டு சேரிவந்து சேர்ந்தபின் நந்தனு ரெப்போதும்
போலே அந்தணரிடத்தில் வருகிறார்.

துக்கடா-ஆதிதாளம்.

நந்தனாரும்வந்தார் -வெகு
சொந்தமானதங்க ளையரைக்காண நந்த

ங்கமுழுதிலும்நீறுபூசியே அரகரசிவசிவவென்றுபேசியே
ங்கையாருந்திருக்கைகள்வீசியே சாமிசாமிஎன்றுதன்னையேசியே
தில்லைச்சிதம்பரபள்ளுப்பாடியே தெரிசனங்காணேனென்றுவாடியே
ல்லலறுஞ்சிவலோகந்தேடியே அடையவேணுமென்றிங்கேநாடியே
[நந்தனாரும்வந்தார்

விருத்தம்.

ாதிகுலம்பிறப்பென்னுஞ் சந்தேகந்தெளியாதுதானுய்நிற்கும்
பதகுணம்பற்றறுத்துப் பேரின்பவருட்சித்துப்பேணிக்காக்கும்
திபராபரமென்னுந்திருச்சிற்றம் பலத்தைக்கண்டானந்திக்க [றுர்
வதமொழி விளங்கிவருந்திருவாயால் விடைகொடுத்து விடுவீரென்

இராகம்-உசேனி-ரூபகதாளம்.

தில்லையம்பலத் தலமொன் றிருக்குதாம் கண்டபேர்க்கு
சென்மமான பிணியைக் கருக்குதாம்
யருஞ்சிகரக் கும்பந் தெரியுதாம் பார்த்தபேர்க்கு
ள்ளங்குளிரக் கருணை புரியுதாம்
ண்ணவரயன் மாலும் தேடுமாம் தில்லைக்காட்டில்
ாம்பும்புலிக்கு நிர்த்த மாடுமாம்
ரியபிரம னெழுத்தைத் தள்ளுமாம் ஆரையுமது
ானந்தமுழுக் காட்டிக் கொள்ளுமாம்
பாய்வருபவர் புண்ணிய சாலியாம் தருமராஜன்
றத்தில்பழுது வந்து கேலியாம்
ருவில்லாத குருவொன் றிருக்குதாம் மூலக்கனலை
ூதியெழுப்பிக் காணப் பெறுக்குதாம்
ருவமாகி வெளியே வருகுதாம் நான்மறைக்கு
ணர்வில்லாத காட்சி தருகுதாம்

போய்வருக வுத்தாரந் தாருமே பொன்னடித்தா
போற்றுவேன் கண்ணாலே பாருமே தில்லை

வசனம்.

சிதம்பரம் போவேனே யென்று அந்தணர் கேட்கும்படி நந்
னார் சொல்லுகின்றார்.

இராகம்-சுருட்டி-ஏகதாளம்.

தாதரிகிடதகசந்தரி சனதசநாததிமிதகிடகணந்தரி தீனதத்தி
தகசந்தரி குந்தரிதந்த கணந்த னனந்தனனந்த ணந்தணந்
சனத சதன தத்தின்னகிட தகதோந் தத்தின்னகிட த
தோந் தத்தின்னகிட தகதோம்.

பல்லவி.

ஆடியபாதத்தைக்காணாரே-பிறந்-தானந்தம்பூணாரே

அநுபல்லவி.

நாடுந்தைப்பூரணபூசத்திலே தில்லை
நாயகனார்க்குருவாரத்திலே மன்றுள் ஆடி

சரணங்கள்.

பாசமறுத்துடல் வாசியொடுக்கி
பத்திபண்ணுங்காட்டில் பாம்புபுலிக்கி
ஆசையுடனேநல் லருளைப்பெறுக்கி
அன்பர்களிக்கச் சிலம்புகுலுக்கி ஆடி

கொட்டமடிக்கும் புலன்தொழில்நீக்கி
கோடிகாலஞ்செய்த பாழ்வினைபோக்கி
வெட்டவெளியிலே நெட்டிடத்தூக்கி
வேதம்பணிந்திடத் தென்முகம்நோக்கி ஆடி

சேனுஞ்சடைபுனல் பூமியில்சொட்ட
சேவித்துநாரதர் பாடியேகிட்ட
கோணங்கிழிந்தண்ட கோளமுமுட்ட
கோபாலகிருஷ்ணனு மத்தளங்கொட்ட ஆடி

வசனம்.

ஆனபடியால், நான் சிதம்பரம்போக உத்தரவு தரவேணுமெ
ன்று அந்தணரைத் திருநாளைப்போவார் கேட்கின்றார்.

இராகம்-தேசிக்தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

உத்தாரந்தாருமையே-எனக்
கொருவருமில்லை பரகதியடைய உத்தார

அநுபல்லவி.

வித்தைகள்கற்றது மில்லையாளுரு
பத்தியிற்சென்று பரகதியடைய உத்தாரந்

சரணங்கள்.

குற்றங்களெத்தனைக் கொடியேன்செயதேன்
அத்தனையும்பொறுத் தாதரவாக உத்தாரந்
பெண்டுபிள்ளையென்று பேயனைப்போலவே
கண்டுகளித்துக் காலங்கழித்தேன் உத்தாரந்
தில்லைச்சிதம்பரத்தை தெரிசித்துவந்துங்க
ளெல்லையைக்காத்துக் கொண்டிருக்கிறேனையே உத்தாரந்

வசனம்.

நந்தனர் சிதம்பரம்போக உத்தரவு கேட்டதனல், வேதியர் டிமையைப் பார்த்துச்சொல்லுகின்றார்.

விருத்தம்.

படிபுகழ்த்தில்லைநாதன் பத்தியேயுருவாய்வந்து
கடிநகராதனூரில் களித்திடும்நந்தனென்று
சிடுசிடுமூஞ்சிகாட்டிச் சிலவிடம்போலேநெஞ்சந்
துடிதுடித்திடவேஞாயந் தோசியும்பேசுவாரே.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

சேரிமுற்றுஞ்சிவபத்திபண்ணும்படி
விட்டையாமடியிட்டையாம்
சேதிசொல்லவேணுமென்றிங்கேநீ
வந்தையோஅகமகிழ்ந்தையோ
காலைமாலையில்வந்துதெரிசனங்
காட்டுகிறாய்நிலைநாட்டுறாய்
கதறினுலுமூர்க்குருவிகருடன்போ
லாகுமோவதிவேகமோ
அடிமைவேலைசெய்யுமுனக்கிந்தக்கொண்
டாட்டமோசெனக்கூட்டமோ
அடக்கியாளமாட்டேனேசிங்கக்குட்டி
யல்லவோஅதைச்சொல்லவோ
காளிபூசையவர்போடும்போதுநீ
கண்டித்தையவரைத்தெண்டித்தையாம்
கபடமெல்லாம்வெளிப்படுவதாகவழி
காட்டுறேனிதைநாட்டுறேன்.

வசனம்.

நந்தனர் சிதம்பரம் போகிறேனென்று சொல்வதால் அந்தணர் ண்டிக்கிறார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி.

பறையாநீசிதம்பரமென்றுசொல்லப்
படுமோடா போகப்படுமோடா-அடா பல

அநுபல்லவி.

அறியாத்தனமினி சொன்னலினிமே
லடிப்பேன்கூலியைப் பிடிப்பேன்பாவிப் பல

சரணங்கள்.

சிதம்பரமென்பதை விடு-கொல்லைச்
சேரடியிலேவந்து படு-நாத்தைப்
பதத்திற்பிடுங்கி நடு-கறுப்
பண்ணனுக்கேபலி கொடு-அடா பறை

எப்போதுமொருதடி பிடி-கையி
லெடுத்துக்கொண்டேதமுக் கடி-உள்ளங்
கற்பனையாய்ப்பள்ளு படி-கால்
நோகாமலேகாடியைக் குடி-அடா பறை

கள்ளந்திருதற்குப் பாரு-உன்
கால்படும்பண்ணையில்வீற் றிரு-இது
சொன்னதுமில்லையோஉன் குரு-நீ
சுகமுடன்வாழ்ந்துக்கொண் டிரு-அடா பறை

விருத்தம்.

ஒதிபடிவீராயென்று உக்கிரமாடாவென்றும்
பதிபெறுங்கறுப்பாவென்றும் பாவாடைராயாவென்றுந்
துதிபெறுமிருளாவென்றுந் தொட்டியச்சின்னனென்று
மதுவொடுபிசிதம்வைத்து வருந்தியேவணங்குவாயே.

வசனம்.

அந்தணர் நந்தனரைக் கண்டித்து மறுபடியும் நல்ல வார்த்
அந்தணர் சொல்லுகின்றார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தா-வொருசேதிசொல்லுகிறேன்கே
ளிந்த-பங்குதோன்றியநாள்முதல்
சொந்த-முறியெழுதிக்கொடுத்துநீ
வந்த-பறையனல்லவோமறந்தாய் நந்

பாரு-இந்தவயல்வரப்பைவெட்டிப்
பேரு-அந்தக்கண்ணியைவெட்டிப்பனை
சேரு-பொறுப்புள்ளவனுனையன்றி
யாரு-இதுவல்லவோகாரியம். நந்தா

வாடா-வுன்கூலியைமுழுதுந்தர
வோடா-பண்ணைப்பறைச்சிகளுடனே
கூடா-பழனங்கடோறும்நடப்
போடா-இதுவல்லவோபுண்ணியம். நந்தா

பாடு-உன்கறுப்புதெய்வத்தைக்கொண்
டாடு-கள்ளுசுள்ளுடன்பூசைகள்
போடு-நெல்விளையும்படிக்குவழி
தேடு-புத்திசொன்னேனிதுதான். நந்தா

வசனம்.

வேதியர் நந்தனைச் சிதம்பரம் போகாதேயென்று கண்டித்
துச் சொல்லுகின்றார்.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம் போகாதே-சொன்னேன்-சிதம்பரம் போகாதே.

அநுபல்லவி.

சிதம்பரம்போனால் ஹிதம்பெறலாமென்று
சேதிசொல்லவுமுன் சாதிக்கடுக்குமோ சிதம்

சரணங்கள்.

...ள்ளக்கும்பிடுதனைப் போடாதே-உன்
கபடமெல்லாமிங்கே காட்டாதே
...மள்ளச்சொல்லடாமுழுமூடாகீழே
தள்ளிவிட்டுவுன்னைத்தகும்படி செய்வேன். சிதம்

...த்தைப்பிடுங்கிகண்ணி நடவேணும்-அந்த
நஞ்சைவயலைச்சற்றே யுழவேணும்
...ார்த்துப்பரம்படித்துப் பழுதுவராமல்
பாயுஞ்சலம்விட்டுப் பார்த்திடுவாய்நீ. சிதம்

...டிக்கடிமறுத்துநான் சொல்லவோ-நீ
அடிமைக்காரப்பய லல்லவோ
...டுத்துக்காட்டுவேனிருக்குதுசாதனம்
தடுத்துப்பேசினால் தாடையிலடிப்பேன். சிதம்

வசனம்.

அந்தணர் கண்டித்துச் சொன்னதால் நந்தனார் துயரமடைந்து சேரியில் வந்து சிவனை நினைத்து பத்திபுரிந்து கொண்டாடுகிறார்.

இராகம்-தெண்டகம்-ரூபகதாளம்.

பல்லவி.

பத்திபண்ணிக்கொண்டிருந்தால்-முத்திபெறலாமே.

அநுபல்லவி.

எத்திசையுமெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்நிறைந்திருக்கும்
வஸ்துவென்றுஅம்பலவன் மலரடிதினந்தோறும் பத்

சரணங்கள்.

கட்டழகிச்சாரனிடங்காதலது போலே
கடிகிவருங்கன்றருகில்கபிலையது போலே
கண்டவரைத்துணியுமில்லாப்பேதையொருக் காலே
காவலனார்பதம்வருகில்களிப்பதனைப் போலே
கண்டுமுறைகிழலகக்கண்டறியார்மதுமயக்கங்
கற்பனையாமிப்பிரபஞ்சஞ்சொற்பனம்போலொப்பிமிகும் பத்

தாயடிக்கிற்பால்குடிக்கத்தழுவுதல்திருஷ் டாந்தம்
சடலம்பொறுக்காமல்துயர்தருகிலு மேகாந்தம்
ஆயிருந்துவழுத்தியிந்தமாயையுப சாந்தம்
ஆகுமென்றுசாதனங்கள்வழங்குது வேதாந்தம்
காயஞ்சனிக்காதிருக்கக்கண்டுகொள்ளவேணுமென்றால்
காசுபணம்பாசமதுமாசறவே நேசமுடன் பத்

பச்சைமரத்தாணிபோலேபரிந்துமனம் நாடி
பாலகிருஷ்ணன்பணியும்பொன்னம்பலவனைக்கொண்டாடி
இச்சையொழியும்புலன்களைந்துமிக வாடி
ஏகாந்தமானபரிபூரணத்தைத் தேடி
அச்சமறந்திருவிழியிலானந்தநீர்கரை புரள
அரனேதிரிபுரனேகங்காதரனேபராபரனே யென்று பத்

வசனம்.

சேரியில் சிவபத்தி பண்ணிக்கொண்டிருக்கின்ற பன்னிருபேர்களுடன் நந்தனாருமிருந்து பத்திபண்ணும் நாளையில் ஒருநாள் நந்தனார் பன்னிருவருடைய பத்தி திடப்பட்டதோ இல்லையோவென்று அறியப் பரிட்சைபார்த்தார்.

இருச்சொல் அலங்காரம்.

நந்தனர்-சிவதலத்தில் சிதம்பரமேகாட்சி யென்றார்
அவர்கள்-அவித்தைகளைத் தூண்டிநிற்றலேகாட்சி யென்றார்
நந்தனர்-சிற்சபையின்மகிமையென்னசெப்புவீ ரென்றார்
அவர்கள்-அச்சுதனுங்காணுதவானந்த மென்றார்
நந்தனர்-ஆக்கையினுலென்ன பலனுகு மென்றார்
அவர்கள்-நாக்கதினுலே சிவநாமம்நவிலு மென்றார்
நந்தனர்-கற்றதனுலென்ன பலன்கண்டா ரென்றார்
அவர்கள்-கொற்றடிமைக்கார பலன்கொண்டா ரென்றார்
நந்தனர்-அம்பலத்தை திரைபோடத் தொடங்கினுரே
அவர்கள்-பம்புவித்தை மாயைக்கு ளடங்கினுரே
நந்தனர்-மனந்திருத்திக்கொண்டார்க்குவாரதொன்றில்லை யென்றார்
அவர்கள்-கனவருத்தமுண்டார்க்குக் காராதுதொல்லை யென்றார்
நந்தனர்-சாதியிலேயெளியவன் தானறிவேனே வென்றார்
அவர்கள்-ஆதியிலேபேதமில்லை அறிவீரே யென்றார்
நந்தனர்-ஞானமில்லாதவன் முத்திநாடா ரென்றார்
அவர்கள்-ஊனமில்லாச்சிவபத்தி தேடா ரென்றார்
நந்தனர்-பதியில்லாதவர்களுக்கெல்லாம் விதியே தென்றார்
அவர்கள்-துதியில்லாதவர்க்கெல்லாங் கதியே தென்றார்
நந்தனர்-பவக்கடலைக்குளப்படிபோல் பகுப்பா ரென்றார்
அவர்கள்-சுகக்கடலிலிளைப்பாறி சுகிப்பாரே யென்றார்
நந்தனர்-பார்ப்பானுத்தரங்கொடுப்பானே வென்றார்
அவர்கள்-காப்பாற்றுங்கடவுளுக் கைப்பார மென்றார்
நந்தனர்-படித்தபடிகாட்டிவிட்டேன் பலமாச்சு தென்றார்
அவர்கள்-அடித்துப்பால்போட்டுவிட்டீ ராராலே யென்றார்
நந்தனர்-அங்கேயேன்நீங்கள் வல்லையோ வென்றார்
அவர்கள்-இங்கையேனது இல்லையோ வென்றார்
நந்தனர்-எங்கும்நிறைந்த பூரணங்க ளென்றார்
அவர்கள்-இங்குமிருந்து வியற்றுங்கா ணென்றார்

வசனம்.

இப்படியிருக்குநாளில் ஒருநாள் நந்தனர் தனக்குத்தானே ப[illegible]
வசமாய் ஆநந்தக்கண்ணீர் பெருகிப் பாடுவார்.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

பாடுவாய்மனமே-சிவனைக்கொண்-டாடுவாய்தினமே.

அநுபல்லவி.

ந்திரன்முதலிய இமையவர்க்கதிகார
தியின்தேறும் நம்பன்பதம்போற்றி பாடுவாய்
லந்தனையுண் டமரரைக்காத்ததிரு
கண்டன்கழல்பெற நெறியுடன்போற்றி பாடுவாய்
மாதவர் சித்தத்தினின்றுடுஞ்
லபாணியனெனுஞ் சுயம்புதாள்போற்றி பாடுவாய்
ாகமாந்துன்பத்தில் மூழ்கிக்கெடாமல்
கமமுறையிடும அந்திவண்ணனைப்போற்றி பாடுவாய்
ந்சாக்ஷாந்தன்னைப் பத்தியாயுருவேற்றி
ஞ்ஞானம்பெற்றுய்ய வேலோனைநீபோற்றி பாடுவாய்

இராகம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

சிதம்பரமேநினை மனமே-முத்தி-பதம்பெறலாகும்முனமே.

அநுபல்லவி.

நம்சதமெனும்பொருள் பதம்பதம்மய மருள்
ரசநடம்புரிசாமிசிதம்பரநிமலன் திருவுருநீகொள்ளரகர சிதம்

சரணங்கள்.

ஒழியாக்கவலைகொண்டு விழலானாய்-யானாய்
உண்மையில்லாவீட்டை நிழலானாய்
தழுவாதிருந்ததில்லைசலனமில்மேல் வீட்டை
சார்ந்தாலல்லோநல்லசாபல்யமாம் பாட்டை
சந்ததமும்பெற பந்தமுதேயற
எந்தவினைத்திர மூந்தூரம்முற சிதம்

தேகமெடுத்தவருமை யறியாய்-மோசத்
தெரிவையர்வலைச்சிக்கி முறியாய்
சாகமட்டுஞ்சம்சாரமே மேலிட்டு
சலியாமலேயுழைத்துச்சண்டாளமாந் துட்டு
சம்பாத்தியமது வம்பாகும்விதி
நம்பாதித்ததி தெம்பாயதிபதி சிதம்

உனக்குள்ளேயுணர்வாய்நீமோனம்-உண்மை
ஓம்வழிகாட்டுமே ஞானம்
தனக்குச்சிதம்பரம்சார்ந்தாலே தன்மயம்
சத்தியமாய்க்கூட்டும் சாம்பிராச்சிய சின்மயம்

சரிவரசிவகுரு பரமயமாய்வரு
முருவெளியெனுமொரு பொருளதுவாந்திரு சி

துக்கடா.

ஹர ஹர ஹர மகாதேவா
அம்பிகைமகிழ் பொன்னம்பலவா.

வசனம்.

நந்தனர் சிலநாளானபின்பு அடிமைகொண்ட அந்தணரிடத்தி வந்து சிதம்பரம்போக மிகவும் வருந்தி வுத்தரவுகேட்கின்றார்.

இது-அறுசீரடிவிருத்தம்.

வேதியரே பெரியவரே நல்லவரே நான்கடையன் விண்ணே மெச்சும், சாதியரே பலகலையுங் கற்றுணர்ந்து புரையில்லாத்தவ செய்யும், போதியரே பத்தியில்லா தான்புலைய னேதறிவேன் புண் யமூர்த்தி, ஆதிகுரு சிதம்பரத்தைக் காணவென்றே யாசைகொ டே னனுப்புவீரே.

இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

தில்லைச்சிதம்பரத்தை யொருதரமாகிலுந்
தெரிசித்துவாவென் றுத்தாரந்தாருமையே

அநுபல்லவி.

தில்லைச்சிதம்பரத்தைக் கண்டால்பிறவிப்பிணி
இல்லையென்றுபெரியோர் சொல்லக்கேட்டிருக்கிறேன் தி
அல்லலறுக்குந்திரு வம்பலநாயகன்
அல்லும்பகலுமாடு மானந்தம்பெருகிய தி
ஆதிமுதலாயென்னை யடிமைகொண்டதல்லவோ
வேதகுலமேயெந்தன் மீதில்தயவுசெய்து தி

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

தெரிசிக்கவேணுஞ் சிதம்பரத்தைத் தெரிசிக்கவேணும்.

அநுபல்லவி.

தெரிசித்தவுடனுடல் கரிசைப்பிணிகளறும்
பரிசுத்தமாகுமுன் மறுசுத்தமாறவே தெரிசி

சரணங்கள்.

பாத்தன்பணியுந்திருக் கூத்தன்சந்நிதிதொழு
தேத்திப்பிறவியிலய ராத்திரியெப்போதும் தெரிசி

வேதனையடியவர் போதனைமுனிவர்கள்
நாதனைக்கரங்குவித் தாதரவாக தெரிசிக்க
ஈசனைபுலியூரில் வாசனைகனகச
பேசனென்றுநட ராஜனைப்போற்றி தெரிசிக்க
காமத்தையகல்பவர் வாமத்தினின்றுசிவ
நாமத்தைச்சொல்லியர்த்த சாமத்தில்வந்து தெரிசிக்
ஞாலம்புகழுமவன் மாலையணியுங்கோ
பாலகிருஷ்ணன்தொழுஞ் சீலபொற்பாதத்தைத் தெரிசிக்க

வசனம்.

நந்தனார் தெரிசனஞ்செய்ய உத்தாரங்கேட்க அந்தணர் சொல்கின்றார்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

புத்திசொல்லிக் கேளாத மூடா வுந்தன்
 புரட்டெல்லாம் நானறிவேன் போடா போடா
பத்தியென்றுஞ் சித்தியென்றும் பறையர்க் கேது
 பார்ப்பார தெய்வமது பாலிக் காது
குற்றமுண்டுன் சாதியிலே வழக்க மில்லாக்
 கொள்கையது சேரியிலே கூடா தப்பா
பித்தமது கொண்டவன்போ லிங்கே வந்து
 பேசாதே போபோவென் றேசு வானே.

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரதெரிசனமா-நீயதைச்-சிந்திக்கலாமாபறையா.

அநுபல்லவி.

சிதம்பரதெரிசனஞ்-சதுர்மறையோர்கள்
 செய்வதுஞாயமடீ-சொல்லதுமாயம்
சொல்லாதே-இங்கே-நில்லாதே
 சேரிக்குப்போடா-நாளைக்குவாடா சிதம்

சரணங்கள்.

கனகமகாமுனி-யோகிகள்தேடிய
 கனகசபேசனைக்-கண்டறிவாயோ
பேசாதே-கை-வீசாதே
 வீரனைத்தொழடா-ஏரியைஉழடா சிதம்

தவமுடையோர்கள்-தரிக்குமந்திரஞ்
சிவபதமென்று-சேவிக்கலாமா
ஆகாது-வினை-போகாது
விரைதெளியன்றோ-அறுதலிமகனே சித

வசனம்.

உழுது சேறுபண்ணி பரம்படித்து விரைதெளித்து நாத்துப்ப
த்து நடவுநட்டு மடைதிறந்து மடைகோலி களைபிடுங்கிக்காத்திருந்
பதத்திலறுத்து கட்டியடித்து நிரம்பிய பட்டையைக் காப்பதுமில்
இராக்காலங்களில் பந்தம் பிடித்து தடி எடுத்து கொம்புதம்பட்
முழங்கிகோலாகலமாகி நாலுபறையரோடுங்கூடி வரப்பைவிட்டேரை
சுற்றிவந்துகாக்கும்படி கிராமத்தாரிட்டகாவல்காப்பதுமில்லை,உனக்
வேண்டிய ஊணுறக்கம் முதலாகிய தேசதரும மறந்து எப்போது
தில்லையம்பலம் திருச்சிற்றம்பலம் சிதம்பரமென்று பித்துப்பிடித்து
தாயைவிட்ட குழந்தைபோல வாய்விட்டலறிப் பேய்பிடித்தவ
போல மதிமயங்கி உடல்கலங்கி எல்லோரும் பழிக்கக்கீழேபுரண்ட
து தத்துபித்தென்று தள்ளாடிய காரணமென்னவென்று அந்தண
நந்தனாரைக்கேட்கின்றார்.

இராகம்-சூரியகாந்தம்-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தாவுனக்கிந்தபிர்மை வந்தகாரணம்-நானறிந்திடச்சொல்லும்

அநுபல்லவி.

அந்தரங்கமுள்ள சொந்தப்பறையனு
யன்றிருப்பதுபோய் சண்டைபிடிக்கவந்தாய் நந்

சரணங்கள்.

சாதிமுறைமைதுறந்தாய்-தில்லை
சபாபதியைநினைந்தாய்
சூதுக்காரபறையருடன்கூடிச்
சும்மாவிருப்பது-எம்மாத்திரம்நான் நந்

குலத்திலில்லாதவழக்கம்-நீயதைக்
கொண்டாடுகிறமுழக்கம்
வெளுத்ததினாலென்ன எருமைச்சாணியது
மேனியிலணிவாரோ-வையகந்தனில் நந்

திருட்டுப்புரட்டுமறியாய்-பொல்லாத்
தீங்குவார்த்தையுரையாய்

முரட்டுத்தனத்தையென்முன்னேகாட்டி
விரட்டிப்பேசுறாய்வெறிமயக்கமோ அடா நந்தா

வசனம்.

வேதியர் நந்தனாரைப் பார்த்துச் சிதம்பரப்பிரமை வந்தகாரண மென்னவென்று கேட்டபின் நந்தனார் வேதியருக்குச் சொல்லுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மனங்கண்டவிடமெல்லாம் போகாமலாணையிட்டு மறித்துவாங்கி னல்கண்டமெழுகதுபோ லெனதுள்ளந் தனதாகவுருகிச்சாய்க்கும் னல்கொண்ட வேணியனைப் புண்ணியனைப் புராந்தகனைப் போற்றி சய்யக், கனங்கொண்ட தில்லைநகர் போய்வருவேன் கருணைவழி ட்டுவீரே.

வசனம்.

நந்தனார் வேதியரைப் பார்த்து உத்தாரங்கேட்க அந்தணர்சொ லுகின்றார்.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

ட்டநடவுவிளையும்பொட்டவெளியைத்தொட்டபோதிலும் நட்
கட்டமதியைவிட்டுவிட்டுகேளடாபண்ணையாளடா நட்
ட்டநெருங்கும்பண்ணையுன்கால்பட்டதினல்பசுமைகொண்டு நட்

விருத்தம்.

கதிரொருமுழமேநீளுங் கட்டுமுக்கலமேகாணும்
துதிபெருநந்தாவுனைகை தொட்டதேதங்கமாகும்
பதிதனிற்பெருமைசொல்லும பறையனாயிருந்துந்தில்லைச்
சிதம்பரப்பித்தேன்கொண்டாய் செய்தொழிலேதென்றாரே.

வசனம்.

நந்தனாருக்குச் சிதம்பரப்பித்து தெளியாமையால் வேதியர் என் செய்யப் போகிறேனென்று துயரமுற்று நந்தனாரைப் பார்த்துப் லம்புவார்.

இராகம்-தனாசரி-ஆதிதாளம்.

பல்லவி.

பித்தனாய்ப்போனதென்ன-நந்தா பித்த

அநுபல்லவி.

எத்தனையோபுத்திகளெடுத்துப்படித்தும் பித்த

சரணங்கள்.

சித்தமிப்படி செய்ததாரோ
பத்துதலில்லாமலே பண்ணியபோராரோ

பத்தியென்றுபே ரிட்டதாரோ
சித்தமுமிப்படியே நிலையிட்டதாரோ பித்த

எத்திசையும்புகழ் பெற்றிருந்தும்
வித்தைகளனேகம் விளம்பத்தெரிந்தும்
பத்தியோடுசால மறிந்தும்
கத்தனென்றுபேரிட்டு நானுனக்கிருந்தும் பித்த

வசனம்.

மன்திற்றுபராமுற்ற வேதியரை நந்தனார் மிகவும் வணங்கிச் செ
ல்லுகின்றார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பித்தமதுதெளிந்துவிடமருந்துண்டு தில்லைவனம்பேணிச்சென்று
சத்திசிவகாமிப்பெண்சந்நிதியி னேராகித்தலைவணங்கி
தித்தியென்றுநடனமிடுந்திருக்கோலங் கண்குளிரத்தெரிசித்தானல்
பித்தமதுதெளிந்துவிடும்வேதாந்த மழைசொரியும்பெரியகோவே.

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

பித்தந்தெளியமருந்தொன்றிருக்குது-பேரின்பமன்றுள்ளே

அநுபல்லவி.

மற்றமருந்துகள் தின்றாலுமுள்ளுக்குவல்லேவல்லே-ஐயே அடுமை பி
தந்தெளிய

சரணங்கள்.

பாம்புபுலியுமெய்ப்பாடுபட்டுத்தேடி பார்த்துப்பயிரிட்டது
பாரளந்ததிருமாயனும்வேதனும்பார்த்துக்களித்ததுண்டு
பார்ப்பதியென்றொருசீமாட்டியதில்பாதியைத்தின்றதுண்டு-இன்ன
பாதியிருக்குதுபறையாநீயும்போய்ப்-பாரென்றுத் தாரந்தாருந்தாரு
பித்தந்தெளிய

பத்துத்திசையும்பரவிப்படர்ந்தாலும் பார்த்துப்பிடியாரே
தத்திக்குதிக்குந்தாளங்கள்போடுந் தண்டைச்சிலம்புகொஞ்சுந்
தித்திக்குந்தேனேசெங்கரும்போநல்லசித்தமுடையார்க்கே-என்
சித்தத்தைக்கட்டியிழுக்குது அங்கே-சென்றால் போதுங்கண்டால்
தீரும் பித்தந்தெளிய

ஊரைச்சொன்னாலுமிப்பாவந்தொலையு மூழ்வினையூடறுக்கும்
பேரைக்கொண்டாடிப்புலம்புகிறார்வெகுபேர்களுக்குப்பிழைப்பு

ருநகரை திரைதிருமருந்துச் சாதியைப்பாராது-இன்னந்
ாதநோய்கள்படைத்தவெனக்குத் தீருந்திருமையே அடிமைபித்தந்
[தெளிய

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போகாம விருப்பேனே
சென்மத்தைவீணுக்கி கெடுப்பேனே சிதம்பரம்

பத்தியுமனமும் பொருந்தினதங்கே
சத்தியஞ்சொன்னேன் சடலமுமிங்கே சிதம்பரம்

ஆசையுநேசமு மானந்தமங்கே
பேசலும்பாசமும் பிதற்றலுமங்கே சிதம்பரம்

வசனம்.

இப்படி நந்தனர்சொல்ல வேதியர் மூர்ச்சையடைந்து விழுந்து
தளிந்து எழுந்து சொல்லுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நாற்பதுவேலிபூமி நடவுநட்டாகவில்லை
பார்ப்பதுமில்லைசேலப் பழமதுதின்ருப்பண்ணே
கார்ப்பதுமில்லையுன்னைக் கைவிடமனதுவல்லே
சேர்ப்பதாலாவதில்லைச் சேரியிற்ருலேந்துபோடா.

வசனம்

என்று வேதியர் சொல்லிய உத்தாரப்படி சேரியில் நந்தனர்
ந்து பத்திபுரியும் பன்னிரண்டுபேர்களைப் பார்த்துச் சொல்லுவார்.

இராகம்-மாஞ்சை-ஆதிதாளம்.

கண்ணிகள்.

ஆசைநேசராகுந் தோழரேகேளுங்கள்
பேசுந்தெய்வங்களுண்டோ யீசனல்லால்நமக்கு ஆசை

ஆயன்மாயன் அன்றடிமுடிகாணுத
நேயனழலுருவாய் நின்றநின்மலனல்லால் ஆசை

மண்ணுய்விண்ணுய் மற்றுளப்பொருள்களாய்
எண்ணுமுள்ளெண்ணெய்போ லிருக்குமீசனல்லால் ஆசை

அருவாயுருவா யண்டபகிரண்டமெங்கும்
பரமாய்நின்றதெந்தப் பராபரத்தையல்லாமல் ஆசை

வசனம்.

என்று நந்தனர் சொல்லிப் பின்னும் ஆனந்தக் கூத்தாடுவார்.

இராகம்-தந்நியாசி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஆநந்தக்கூத்தாடினர்-ஆநந்தநந்தன்
ஆநந்தக்கூத்தாடினர்.

அநுபல்லவி.

வானுந்துதிதேவர் முனிவர்ஜயஜயவென்று
வாழ்த்தும்பிரானடிகள் வாய்ப்பதெப்போதோவென்று ஆ

சரணங்கள்.

மாயவலைக்குட் பட்டு-அதிலெப்போது
மாளாத்துயரப் பட்டு
மாயுமுன்னாகவந்து வலியவாண்டருண்மூர்த்தி
நாயேன்களிக்கவென்முன் னுடுவரென்றேசாத்தி ஆ

கவலைப்படாதே நெஞ்சமே-காலன்கைப்பாசம்
கண்முன்வராதே அஞ்சுமே
தவநிலையையுணர்ந்த சன்மார்க்கர்தமக்கென்று
தற்பதத்தைக்காட்டினேன் தனைக்காணுவேனனென்று ஆ

காயமிதுவுஞ் சதமா-அன்றியுற்பவங்
காண்பதொவ்வொரு விதமா
ஆயுமெழுபிறப்பா யவதரித்தாலுண்டென்றும்
தூயபதத்தாலந்தத் துகளற்றிருப்பேனென்றும் ஆ

வசனம்.

இவ்விதமாகப் பன்னிரண்டுபேர்களையும் வேலை செய்யவொ டாமல், தன் சமீபத்தில் நிற்க வைத்துக்கொண்டு போதித்திருப் தை வேதியன் கேள்வியுற்று நந்தனைச்சீறிக் கடுங்கோபஞ் செய் நந்தனர் வேதியருக்குச் சொல்லுகின்றார்.

ஸ்ரீராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுக்கென்மீது இத்தனைபேதகம்
எண்ணுவனே தோதகம்

அநுபல்லவி.

காதகராம்மணக் கசடர்சொன்ன சொல்லை
சாதனைசெய்து சாதித்தீர்பிழையொன் றில்லை ஏ

சரணங்கள்.

நான்உனக்குப் பண்டு-சாசனஞ்செய்து
நலமாய்த்தந்த துண்டு

தான்றலைநீசொல்லுஞ் சொற்படிச் செய்கிறேன்
ான்மையாகநித்தம் பத்தியாய் உய்கிறேன் ஏது
காசளவு நன்மை-செய்தோரை யொரு
காலும்மறவாத் தன்மை
ாசனுக்கெப்போது முண்டுதாமே கண்டு
யாசிக்கப்போகிறீர் இனிமேல் நான்செய்தொண்டு ஏது
ஏழைநான் தானே-சூதும்வாதும்
ஏதொன்றறி யேனே
மழியுடனேயொரு மேதிகாளைக ளெங்கே
ாழியனுக்கும் உழுகயிறுங்கொடுப்பீ ரிங்கே ஏது

---

## நந்தனார் ஏருழுதல்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வணக்கமாய்ச்சொல்லும் வார்த்தையையுணர்ந்து
வஞ்சனையிலாதவேதியன்றன்
கணக்கிலாத்தனது பண்ணையாள்வசத்திற்
கைப்பிடியாகவேதந்து
பிணக்கிலானிவன்சொற் படியெலாஞ்செய்வான்
பின்னிடான் அழைத்துப்போவென்ன
இணக்கமாய்க்கொண்டு போயினர்நந்தன்
ஏர்த்தொழில்மிகப்புரிந்தனனே.

இராகம்-சஹானா-ரூபகசாப்புதாளம்.

பல்லவி.

த்தியாக ஆண்டைசொற்படி செய்தானந்தன் பலருடன்கூடிமிகப்

அநுபல்லவி.

கர்த்தனைசித்தங்களித்துக் கதித்தவன்
கமலபாதத்தை நாடி-மெத்தக்
காதலாகவேகொண் டாடி
மனம் நீடி பத்தி

சரணங்கள்.

நீருள்ள ஆதனூர்நஞ்சை புஞ்சைகளை
நித்தமுமேர்கொண்டு பழுது-அறச்
சுத்தமதாகவே யுழுது
காலைப் பொழுது பத்தி

கறுப்பு வெளுப்பு சிவப்பு நிறமுள்ளக்
காளைகளைக்கட்டிப் பூட்டி-பொற்
காறுவொன்றதிலே மாட்டி
ஏ ரோட்டி பத்

கந்தன்கறுப்பன்கடம்ப னிடும்பன்
கரியனவன் தம்பி பெரியன்-சின்னக்
காத்தானவன்மகன் சொரியன்
குள்ள நரியன் பத்

சீரகச்சம்பா சிறுகருடன் சம்பா
சிறந்தமணக்கத்தை நட்டு-கம்பு
சேரத்துவரையு மிட்டு
பயி ரிட்டு பத்

வசனம்.

இவ்விதமாய் ஏர்த்தொழில் புரிந்துகொண்டிருந்த நந்தனா
இனிமேல் சிதம்பரம் போவேன் போகாவிடில் பிராணனை விடுவேன்
அன்றியும், சேரியில் வரமாட்டேனென்று சொல்லிக்கொண்டு வே
தியர்பால் சென்று தலைவணங்கிக் கரங்குவித்து மனந்துடித்து
கண்டித்துச் சிதம்பரப்போக உத்தாரங் கேட்கின்றார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொய்ச்சடலம் புழுக்கூடொன் பதுவாசற்றோற்பையைப்பே
ற்றிசெய்யும், துச்சனிவனென்றெண்ணித் தள்ளாமனன்னெறிவை
ச்சொல்லவேணும், பச்சைமிருந்தொடியழகி சிவகாமிமாதுபங்கல
பாதங்காண, இச்சைமிகுந்திருக்குதையே அம்பலத்தைக்கண்டுகள
த்திறைஞ்சுவேனே.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

பொன்னம்பலவாணனடிதொழுவா-ரொருவரன்றிப்
பிறவிக்கடலிடையில் கிடந்தழுவார்

அநுபல்லவி.

இன்னும்பலதெய்வங்களுமிருக்கு-தெனக்கிவர்
போலவேஇல்லைதயவில்லைஏழையிடத்திலிருந்தருள்செய்திடும் பொ

சரணங்கள்.

வேதமொருநான்குமறியாதபழம்பொருளாகிலும்
வேண்டும்பதஞ்சலிக்காகவேதில்லைப்பதிவந்து

தச்சிலம்பசையமணிகுலுங்கப்பிறையிலங்க
பணிபடமாடவேசடையாடவேபரமானந்தக்கூத்தாடிய பொ
லகந்தனில்ககனமதுபோலெங்கினும்பரிபூரண
முருவற்றதுமருவற்றதுகுறையற்றிடுஞ்செல்வம்
யற்றவர்மதமற்றவர்விடையத்திலுருவற்றிட
கலைபற்றவர்வலயக்கவரிதயத்தினில்நடனமாடிய பொ
ரவுபகல்கருமங்களிலிழுக்கும்பொறிகணங்களதை
இழுத்துவசப்படுத்துவகையெனக்குத்தெரியாது
விவரும்ராகாதிற்சரமடங்கிமனதொடுங்கிவழி
பார்க்குமிடமார்க்குமரிதாக்கும்பாலகிருஷ்ணன்தொழும் பொ

வசனம்.

இவ்வகையாய்ச் சொல்லும் நந்தனரைப் பார்த்து வேதியர்சொ
லுகின்றார்.

சுலோகம்.

ள்ளப்பசிமெழுகிறாயனுதினமூடாவுனக்கித்தனை
ள்ளக்குப்பிடாலாவதென்னபலனேகாட்டுப்பசாசல்லவோ
ள்ளித்துள்ளித்துடிக்கிறாய்சிவபதஞ்செல்லாதுன்சாதியில்
ள்ளுக்கொல்லையில்மாடுவந்தொடாதேகும்புடிச்செல்லடா.

வசனம்.

இப்படிசொல்லிய வேதியருடனே நந்தனர் தனக்குத் தெரி
நவித்தைகளை அத்தருணத்தில் சொல்லிக்காட்டுவார்.

முன்நந்தனர், பின்வேதியர் இருவருமாகச் சொல்லிக்கொள்ளும்
ஏட்டிக்குப் போட்டியான இருச்சொல் அலங்காரம்.

தனர்-தில்லையைப்பார்க்கவல்லையோ வென்றார்
வதியர்-கொல்லையில்மளகாயில்லையோ வென்றார்
தனர்-ள்ளம்போனுலுள்ளதுகாணு மென்றார்
வதியர்-வெள்ளம்போனுலுள்ளதுவிளையு மென்றார்
தனர்-திருச்சிற்றம்பலங்கண்டால்தேகங்களிக்கு மென்றார்
வதியர்-பொரிச்சக்குழம்புகொண்டால்தேகப்பெருக்கு மென்றார்
தனர்-அரகராவென்றல்பாவம்போ மென்றார்
வதியர்-பறையனைக்கண்டால்பாவமா மென்றார்
தனர்-வெட்டவெளியிலேமனமுட்டிப்பாரு மென்றார்
வதியர்-பொட்டவெளியிலேகுழிவெட்டிப்பாரு மென்றார்
தனர்-எனக்குஊறியஞானமாரியேமதி யென்றார்
வதியர்-உனக்குறியபறையர்சேரியேகதி யென்றார்

நந்தனார்-கத்தாவேயென்னுள்ளம்பெற்றா ரென்று
வேதியர்-கத்தாழையக்கினியில்பற்றா தென்று
நந்தனார்-மறையோருக்கெப்போதும்வாயிலேதர்க்க மென்று
வேதியர்-பறையோருக்கெப்போதுஞ்சேரியேசொர்க்க மென்று
நந்தனார்-கொள்ளித்தேள்போலென்னைக்கொட்டாதே யென்று
வேதியர்-அள்ளித்தந்தேனென்னைத்திட்டாதே யென்று
நந்தனார்-கடுமையாய்வந்துகவலைப்படுத்துவதே னென்று
வேதியர்-அடிமையாய்வந்துஅவலப்படுத்துவதே னென்று
நந்தனார்-தில்லையோடென்னைச்சேரேனோ வென்று
வேதியர்-எல்லையோடென்னைப்பாரேனோ வென்று
நந்தனார்-திருவாதிரைவருகுதுபோவேனே யென்று
வேதியர்-மறவாதிருபறையாபோகாதே யென்று
நந்தனார்-தெரியாதேமெள்ளப்போவேனே யென்று
வேதியர்-மரியாதையல்லப்போகாதே யென்று
நந்தனார்-ஆணைவிட்டுவழிகாட்டும்பெரியோரே யென்று
வேதியர்-பிராணியைவெட்டும்பழிகாட்டும்புலையரே யென்று
நந்தனார்-ஆடிப்பாடிப்படிப்பே னென்று
வேதியர்-தேடித்தேடிப்பிடிப்பே னென்று
நந்தனார்-தில்லையிலேகலங்காமல்நாடுவே னென்று
வேதியர்-கொல்லையிலேவிலங்காகப்போடுவே னென்று
நந்தனார்-சிந்தைநொந்துதவிப்பேனே யென்று
வேதியர்-வந்துவந்துஅலப்பாதே யென்று
நந்தனார்-கெஞ்சினால்நெஞ்சமுருகாதோ வென்று
வேதியர்-அஞ்சினால்பஞ்சம்வருகாதோ வென்று
நந்தனார்-சிதம்பரம்போகவுத்தாரந்தாரு மென்று
வேதியர்-இதம்பெறலாமோகத்தாதேபோது மென்று
நந்தனார்-சீக்கிரமாய்ப்போவே னென்று
வேதியர்-போக்கிரியாய்ப்போவா யென்று
நந்தனார்-அன்னீதஞ்செய்யே னென்று
வேதியர்-சொன்னதுதவறே னென்று
நந்தனார்-எங்கள்சாதிக்குயென்னவழி யென்று
வேதியர்-உங்கள்சாதிக்குஇந்தவழி யென்று
நந்தனார்-உற்றதுஓது மென்று
வேதியர்-பெற்றதுபோது மென்று
நந்தனார்-பறையனாய்ப்பிறந்ததேன்தலையெழுத்திது வென்று

வேதியர்—மறையராய்ப்பிறந்துங்கள் வருத்தமது வென்று
நந்தனர்—வாய்க்காதவெனக்குவழிசொல்லு வீரே
வேதியர்—காய்க்காதமரத்தில்கல்லெறி யாரே
நந்தனர்—எப்போதுமிப்படிச்செய்வதே னென்று
வேதியர்—அப்போதுமிப்படிச்செய்ததே னென்று
நந்தனர்—உலகமனைத்துங்கடவுளாய்நிறைந்ததே னென்று
வேதியர்—பலகலைபற்றும்பறையனாய்ப்பிறந்ததே னென்று
நந்தனர்—பழுதானஜென்மம்படைத்தேனே யென்று
வேதியர்—அழுதாலுங்கன்மமடுக்காதோ வென்று
நந்தனர்—காப்பதுன்பாரம்கட்டுவிடு மென்று
வேதியர்—நாற்பதுவேலியைநட்டுவிடு மென்று
நந்தனர்—அப்பன்கருணையிப்படியோ வென்று
வேதியர்—தப்பினேனதுவுமொப்பிலே னென்று

வசனம்.

நந்தனர் மெத்தவும் ஐயரை வணங்கி உத்தாரங் கேட்கின்றார்.

விருத்தம்.

அல்லெனுங்குழலாள்மோக மண்டாதுவொருக்காற்றொண்டர்
பல்லூழிகாலஞ்செய்த பழவினைத்தொடக்கறுத்துச்
சொல்லினுமடங்கொணுதச் சுகக்கடலாட்டிவைக்குந்
தில்லைநாயகனைக்கண்டு தெரிசனஞ்செய்வேனென்றார்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்-கண்ணிகள்.

மார்கழிமாதத்திருவாதிரை வரப்போகுதையே [லையே
மனதைப்புண்ணுகப்பண்ணுமலொருதரம் போய்வாவென் றுசொ
கட்டையிருக்கையிற்சிதம்பரம்போய்நான் காணவேணுமை
கசடனுகினுமாசைவிளையுதுன் காலுக்கும்பிடை
காலில்நகமுளைத்தநாள்முதலாயுமக் கடுமைக்காரனே
காலபாசத்தில்காட்டிக்கொடாமற் காப்பாற்றிடுமை
உள்ளங்காலில்வெள்ளெலும்பாட வோடியுழைத்தேனே
உண்டதுமுறங்கினதன் றியில்வேறே யொன்றுங்காணிலே
எட்டுமிரண்டுமறியாதபேதை னெளியேனை
இன்னந்தாய்வயிற்றிடையனுகாம லிடங்காட்டிடுவை
வெள்ளைவெளுத்திடுந்தண்ணீர்குடித்திடும் வெறியேனை
மேதினியதனில்நாயினுங்கடையேன் வழிவிடவேணுமை
தானந்தவங்களொன்றுங்காணு தடியேனை

ளரவிடவேண்டாமொருகோடி தருமமுண்டுமையே
அல்லும்பகலுங்களாதரவாலே ஆளாகினேனையே
வுன்புடனேநல்லகதிபெறுவாயென் றனுப்பவேணுமையே

விருத்தம்.

ிலையணிந்திடும்வேளரிந்திடச் செய்திடுந்திருமேனியைக்
லந்தணைந்திடவேண்டுங்காதலைக் கண்டிலராயகிலமதனைத்
லைசுமந்திடுஞ்சேடனார்த் தன்வைகொளும்நந்தனாரை
ிலைக்குவாங்கியபெருமையாலிவர் வேணதெல்லாம்பேசுவான்.

வசனம்.

இப்படி சிதம்பரம்போக உத்தாரங்கேட்ட நந்தனாருடைய சிவ
பத்திபிரதாபத்தை ஆதிசேடனாலுஞ் சொல்லவொண்ணாத மகிமை
கொண்ட மகானுபாவனை, அடிமைக்காரனென்று வேணபடிபேசுவார்.

இராகம்-முகாரி-ஆதிதாளம்.

ாடுதின்னும்புலையாவுனக்கு மார்கழித்திருநாளோ
தடியெடுத்தாயாரிடத்தேபோய்த் தீண்டாதேபோடா
ஆடுதின்னும்புலையாவுனக்கு ஆனித்தெரிசனமோ
ாடுசிரிக்கும்வார்த்தைகளன்றோ நாடாதேபோடா
ண்டுக்குக்கலியாணம்மூளை நரிக்குச்சங்கராந்தி
பண்டிக்குப்பூசத்திருநாளுண்டோ பறையாநீபோடா
பூசைகள்செய்வாயோ ஆண்டவன் பொன்னடிதொழுவாயோ
ூசல்போடாதேபோடா கூழைக்கும்பிடலாகாதே
ங்கையிலாடுவையோவங்கே காணிக்கைப்போடுவையோ
இங்கிதமறிவேனடிக்கடிவந்து யிரையாதேபோடா
அஞ்செழுத்தோதுவையோவுனக்கு மானந்தத்திருக்கூத்தோ
வஞ்சகவார்த்தைநாளைத்தெரியும் வாராதேபோடா

வசனம்.

அடாநந்தா சபாசு நன்றாயிருக்கின்றது நீ சிதம்பரம்போகவே
ண்டுமென்று கேட்பதை ஆலோசித்தால் மிகுந்த ஆச்சரியமாயிருக்கி
ன்றதென்று வேதியர் பின்னுஞ் சொல்லுகின்றார்.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

அடடாநந்தனே தில்லைக்-கனுப்புமென்றெனைக்கேட்ப
தாச்சரியமிக வாச்சர்யம்.

அநுபல்லவி.

அடடாகட்டுக்கதைகளனைத்துமிங் குதவாது
நடடாவயலைத்தேடி நடவுநட விப்போது அ

சரணங்கள்.

ஈனசாதியிற்பிறந்தோ னுனக்கவிடத்தி
லென்ன அலுவ லுண்டு-அல்லவென்
போனபோதிலுமூவா யிரவரிருக்கும்வீதி
புகுந்துநீகடந்துக் கொண்டு
மானுமழுவுஞ்சிர மாலையணிந்த வரு
மாற்றலர்திரிபுர மதனையெரித்த பெரு
மானுக்கிய லுந்திரு மஞ்சனோற்சவந் திரு
வாதிரைப்பலன்பெறமாட்டாய்சொற்படி யிரு அடடா

வேள்விகளொருபுறம் வேதியர்களியற்றும்
மேன்மைகள் மிகத் தங்கும்-அந்தத்
தாழ்மையிலாததிவ்யத்தலம்போய் வருவதற்குத்
தடையில்லையெனப் பொங்கும்
தன்மையிதெல்லாங் கனவாகமுடிய வரும்
சாதியிழிவை யோசித்தாலேதெரிய வரும்
பன்னிப்பன்னிப்படித்தேன்பரவாயற்றுயெ வரும்
பட்டால்தெரியும்பறையனுக்கென்பதுபோல்வரும் அடடா

அல்லும்பகலுஞ்சோ றளித்துக்காத்திடுந் தெய்வ
மானவம்பல வாணன்-இங்கிருக்க
தொல்லைப்படவோவேண்டாமென் றுரைத்திடுமென்
சொல்மறந்தநீ வீணன்
தில்லுந்திரியாவரப் பேச்சேதுக்கடா பிடித்
திருக்குமெனவாபிடி திரும்பாதடா பகடி
பல்லையொடித்து விடுகிறேன்பாரடா தகடி
பஞ்சைநீயாசமர்த்துப்பார்ப்போனெடடா தடி அடடா

வசனம்.

வேதியர்சொல்லியசொற்களைக்கேட்ட நந்தனர் நீங்களென்னை தடியாலடித்தாலும் பிராணனைமடித்தாலும் கழுத்தையொடித்தாலும் சிதம்பரத்தில் நடித்தானைக்காணாம லிருக்கேனென்று கடுத்துச் சொல்ல வேதியருக்குக் கோபம்பிறந்து வாய்திறந்து சொல்லுவார்.

இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

இனியுன்குற்றத்தைப் பொறுப்பேனோ-அணுவள
வேணுஞ்சம்மதிப் பேனோ

அநுபல்லவி.

தனியாம்வேதசாஸ்திரந் தனையுணர்ந்தாலுஞ் சாதி
தன்புத்திபோகாதென்ற சரித்திரம்பொய்யல்ல நீதி

சரணங்கள்.

பலகாலமும்பழமும்பாலூட்டினாலும் பாம்பு
பழகாததற்குவொப்பாய்ப்பகரலாகுமே வேம்பு
தலம்விட்டப்புறம்போநீதான்செய்யாதடா வீம்பு
தரையிற்கறந்தபாலுந் தாவுமோமுலைக் காம்பு இனி

இடையிலிருக்குமிந்த இடும்பன்கடம்பன் சரி
இவர்களல்லாமலிதோ இருப்போர்கள்சிறு நரி
நடையிலிருப்பேன்மஹா நல்லவனாகுந் தெரி
நானுனைச்சேர்ப்பேனென்று நம்பாதேபரி கரி இனி

வசனம்

என்று சொல்லிய வேதியருக்கு, நந்தனர் மிகுந்த தாழ்மையோ
ம் எழ்மையோடுஞ்சொல்ல, வேதியருக்குகோபம்வந்து திருட்டுவே
ங்கொண்ட முரட்டுப்பயலேயென்று மறுபடியுஞ் சொல்லுகின்றார்.

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

திருட்டுத்தனமாத்திரம் வேண்டாம்-நந்தா-அடாவுனக்கு
திருட்டுத்தனமாத்திரம் வேண்டாம் நந்தா

அநுபல்லவி.

ரட்டுத்தனமாய்ப்பேசாதேகிர் மூடா
முன்னும்பின்னுமறியாக் குடிகேடா
ரட்டுதவளைபோல் வாயாடாதே யேடா
வயலைமுழுதுஞ் சீர்படுத்திடப் போடா திருட்

சரணங்கள்.

த்தியுள்ளவனைகப் பாரு-ஏர்கொண்டுழுது
புன்செய்நிலமுழுதுஞ் சீரு-செய்துவிதைத்து
வத்திடினம்போற்குடி யாரு-இருப்பார்களுன்
னைத்துதிப்பார்சகல பேரும்
த்தியமாகக்குண்டைகளைநீ கூட்டி
சார்ந்ததற்குவாயாரநீர் ஊட்டி
த்தியுள்ளமட்டுக்குமே ரோட்டி
தக்கவுன்றன்றிறமதுமிகக் காட்டி

மற்றுமற்றனைத்தனைத்துமுடிவுற
மெத்தமெத்தசித்தமொத்துசெய்குவாய் திருப்
பட்டாங்குனக்கேதடா
பழனங்களுமீடேறத்
பொட்டெனப்பதம்பணிந்து
போக்குவேனேயுன்னிட
சட்டமாகவுன்சமர்த்தைக்
சரணமென்றுகண்ணீரை
தட்டுவனேகைமிஞ்சி
சலசலப்புக்கஞ்சிநரியோட
விட்டுவிட்டுவிட்டுவிட்டு
கெட்டுகெட்டுகெட்டுகெட்டு
பாயுஞ்சலமுழுதுங்
பழையவெருவெடுத்துக்
தோயும்நடமுதலோ
சொன்னலனுப்புவேனே
காயமுள்ளபோதேநீதா
கத்தன்றன்னைக்காணப்போவா
ஏய்த்துவிட்டுப்போகப்போரா
யேய்த்தவாதிரைக்கனுப்பேனே
ராயன்ராயன்ராயன்ராயன்
தியன்தியன்தியன்தியன்

பாவி-என்சொந்தமா
தேவி-பூசைபுரிந்
சேவி-இதைமறந்த
ஆவி
காட்டாதே
யோட்டாதே
நீட்டாதே
மாட்டாதே
விடுவிடு
போகாதே திருப்
கட்டி-பதனமாகட்
கொட்டி-சேறுபோலாட்
ரட்டி-வாராமற்செய்
மட்டி
னடா
னடா
யடா
நடா
சாட்சியாய்
உனைவிடேன் திருப

வசனம்.

இதுவும், வேதியர் சொல்லுகின்ருர்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வானிருந்தவிடந்தேடிக்காணமல் மாதவத்தோர்மதிமயங்கத்
தேனிருந்தசெந்தாளைச்சிந்திப்பார் புந்தியுறத்தெளிந்தாரில்லை
ஊனருந்தும்புலையாநீசிதம்பரத்தே சென்ருலுமுண்டோமுத்தித்
தானிருந்தவிடம்விட்டுப்போகாமல் சஞ்சலத்தைத்தள்ளுவாயே.

வசனம்

அடா, வாடா, மூடா, கேளடா, என்னைப்போலொத்த பெ வர்களாலே கூடத்தேடி அறியப்படாத செகதீசனுடைய திவ் நாமத்தை நத்தை யுரிஞ்சும் பறையா நீ கத்திக் குலைக்கலாமா, இ படி தத்திக் குதிக்கலாமா, வித்தையொன்றும் அறியாதவன் இ

பத்தியெண்ணலாமா, நத்திமுத்தி தேடலாமா, சுத்தமான பெரி
ார்களிடத்தே சத்தம்போடலாமா, இங்கே நித்தம் நாடலாமா,
ர்த்தமான இந்த ஜென்மமெடுத்துஞ் சித்திதேடலாமா, இங்கே
திசொல்லலாமா, அடடா,இதுவெல்லாம் விட்டுவிடடா,நாத்தைப்
ங்கி நடடா, உன்தொழிலைத் தொடடா, தோல்கட்டிய தடியை
டடா, யாருந் திருடாமல் பார்த்திருடா, களத்தில் படுடா, கா
கொடுடா, புல்லறுடா, முரடா, வழிதெரியாக் குருடா, நான்
ால்வது நேரடா, இதடா, உன் செய்கையென்று கல்லாலெறிந்து,
யாலடித்து, வாயால்திட்டி, தேள்போலே கொட்டி, இவனொரு
ர்போலே நின்றான், அவர் நாள் போகுதேயென்றார்.

வசனம்.

நந்தனர், வேதியரைப் பார்த்து நீங்களென்னை யடிக்கலாம் நா
ம் அடிபடலாம்; தங்களுக்குக் கைநோகுமேயென்று வணங்கிச்
ால்லுகின்றார்.

இராகம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி

அடித்ததுபோதுமையே-என்னை-அடித்ததுபோதுமையே

த்தாலுமுங்கள்கைவலி யாதோ
அடிமைவேலைசெய்யுமென்னுடன் வாதோ
த்ததெல்லாமென்மனதிற் படாதோ
பாவியெனக்குமினிமேற்றெரி யாதோ அடித்

லவரேயுங்கள்மனதுப்பிர காரம்
டக்காமலிருந்தது வப சாரம்
ால்லத்தெரியுமோவெனக்குப சாரம்
கிர்தசாலியுங்களாலேயிந் நேரம் அடித்

வசனம்.

நந்தனர் ஐயருக்குத் தலைவணங்கிச் சொல்லுவார்.

மோகனராகம்-ரூபகதாளம்.

கண்ணிகள்.

இலவுகாத்தகிள்ளை யாச்சே-நான்
எடுத்துச்சொன்னதெல்லாம் போச்சே
பறையன்சொல்லுபழு தாச்சே-நீங்கள்
பார்ப்பாரென்பதுமே லாச்சே
ஏழைச்சொல்லம்பல மாச்சே-தெய்வ
மில்லாமலெங்கையோ போச்சே

சேரியேசொர்க்கமென் றுச்சே-தில்லைச்
சிதம்பரமென்பது போச்சே
விழலுக்கிறைத்தாப்போ லாச்சே-எந்தன்
வேண்டுதல்வீணுகிப் போச்சே
கண்டதைக்கண்டிட லாச்சே-நல்ல
காலம்பிறக்காமற் போச்சே

வசனம்.

நந்தனர் பெரியோர்கள் கோபத்தை இனி எளியேன் தாங்கே
னென்று சொல்லுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பெரியோர்சினமடையா ரடைந்தாற் பெருங்கடல்தீபாதோ
பேயன்தாங்குவேனோ இம்மாத்திரம் பிழைபொறுத்தாளுமையே
அல்லும்பகலும்நா னறிந்துமேதோ வறியாமலேபோனேன்
ஆசைகொண்டேன்திரு வம்பலத்தெய்வம் மோசஞ்செய்யுதையே
பாவியெனைத்தொடர்ந் தடித்தாலுமெந்தன் பாழ்வினைதீராதோ
பார்தனில்பேர்சொல் லாதவனென்றே படைத்ததுபோதாதோ
சிங்கம்புசித்திடு மிறைச்சியைச்செந்நாய் செந்நாய்தொடலாமோ
சிதம்பரநாண்தொடலாமோசாதியில் சின்னவனன்றே
இன்னமும்சிதம்பரம போவேனென்று மிங்ஙனேவருவேனே
இமட்டுமேபோது மையேயுங்கள்தய விருந்தாலதும்பாது

இஃது ஐஞ்சீரடியான் வந்த

விருத்தம்.

சேரிவந்தவர்செவ்விய வேதியன்சினத்தால்
காருகளடர்ந்திடுஞ் சோலையினின்றவன்கருத்தை
ஏருலாவியபரமனற் றுண்மலரிறுக்கி
தீரனுகியநந்தனு மிப்படிசெய்தான்.

வசனம்.

நந்தனர் தங்களையருக்குத் தலைவணங்கி பெரிய கும்பிடுபோட்
ஒரு சோலையிலிருந்து சமாதிபண்ணுவார், தன்னுடைய சரீரத்தை
தில்லைவெளியிலே கலந்துகொள்வேனென்று வீரவைராக்யத்துடனே
சேரியில் வராமல்தானே யிருந்தா தன்னுடைய துயரங்களையெல்
லாம் அம்பலவாணருக்கே ஒப்புவித்து சலுகைகொண்டாடுவார்.

விருத்தம்.

வேதியரிப்படிசொல்லவெந்துமனம் நேவருகிவினையோவென்று
சாதியிலேபாவமிதுநீயன்றோ பிறப்பித்தாய்சுவாமியென்னை .

சாதனையோசெய்கின்றாயெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்த்தோய்ந்திருக்
திகுருவலவோநீபார்ப்பானுக்குள்ளிருந்துமனுப்புவீரே. [கும்

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாவுன்னடைக்கலம் பொய்யாகிய தேகமடைக்கலம் ஐயா

அநுபல்லவி.

த்தானுன்வருவேனோ அம்பலத்தைப்பாரவேனோ
ற்றேயாகிலுங்காண்பேனோ சந்நிதியைநானென்செய்வேன் ஐயா

விருத்தம்.

தாறில்லாதவிப்பிறவியைத் தானெடுத்ததஞ்சி
தூறுபட்டனற்கீழ்க்குல மாகியித்துன்பம்
நீறுபட்டிடுமல்லவோ தில்லையினின்றால்
பேறுபெற்றிடுவேனதற் கும்மொருபிசகோ.

இராகம்-எதுகுலகாம்போதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஐயோதெய்வமேயிந்தவையர்க்கடிமையானேன்
செய்யாவினைகள் செய்தல்லவோ
உள்ளங்கரைந்துருகியுய்யும்படியாய்க்கேட்கில்
கள்ளக்குமரனல்லவோ
ஆலைக்கரும்பதுபோலாச்சுதங்கமுழுதும்
வேலைக்கிடமுமில்லையே
பாவியெனக்கோவந்தபார்ப்பான்மனதிரங்கான்
ஆவிதவிக்குதல்லவோ
கோவில்கும்பத்தைக்கண்டால்கோடிவினைகள்தீரும்
பாவிக்குக்கிடையாதுகாண்
தில்லையம்பலவாணதெய்வம்புலையர்க்காக
கல்லாச்சமையலாச்சுதே
பொன்னம்பலவாயுன்னைப்போற்றும்வகையில்லாமல்
இன்னம்பிறவியேறுமோ
அன்னைதந்தையும்நீயென்னாவிபொருளும்நீ
யுன்சந்நிதிவரச்செய்வையோ.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடிமுடியொன்றுமில்லா தம்பலத்தரசேயுன்பால்
கொடியனான்வந்தாலென்ன குறையுமோவதனால்நீதி
நடலைசெய்பார்ப்பான்கையில் நடுங்கவோவிடுத்தாயென்றும்
படிமிசைவீழ்ந்தானடிப் பதறுவான்கதறுவானே.

இராகம்-லாவணி-யமுனகல்யாணி.

பல்லவி.

செய்யுமுபாயமறியேனறியேன்
அரகரசிவனே தில்லைச்சிவனே.

பத்துவருடகாலமாகவந்துபார்ப்பானைக்கேட்டேன்
சித்தமிரங்கிபோல்வாயென்றொருநல்ல சேதிசொல்லக்காணேனையோ
[செய்யு

பாவிபுலையனாய்ப்பிறப்பேனோவிந்தபாரினிலிருப்பேனோ
ஆவிதவிக்குதேபொன்னம்பலவாவுன் னடிக்கமலங்காணேனையோ
[செய்யு

பல்லுமுளைத்தநாள்முதலாகயிந்தப்பாடுபடுவேனோ
தில்லைநாயகாகனகாவென்றனைத்தேடும்வகைகாணேனையோ செ

நாற்பதுவேலிநிலமிருக்கிறதைநடுகவேணுமென்றார்
காப்பதாருகளைபிடுங்குவதாரென்றுகடுத்தபேச்சுகடியேன் செ

ஆற்றிலேகுளத்திலேவிழுவேனென்றவதைப்பிடித்திடுவேன்
பார்த்தினிக்கிருபைசெய்யாவிடிற்பறையன்பழிவீண்போகாதுசொன்
[னேன் செய்யு

தில்லைச்சிதம்பரத்தைக்காணவிடிலென்தேகந்தரியாது
சொல்லிவிட்டேன்பொன்னம்பலவாவுன்சொர்னசபைக்குவருவே
[னோநான் செய்யு

விருத்தம்.

கடுகவருந்தியும்பணிகல னாகவுங்கற்றைச்
சடிலமேவியபிறைபுனற் றரிக்கவுந்தருமோ
விடுவதில்லையுன்னருகினிற் றொருவேங்கைக்
கொடியன்வந்ததினாலென்ன தில்லையிற்குறையோ.

இதுவுமது-விருத்தங்கள்.

மாவளர்தில்லைமாநகர் வீதியுமதிலும்
கோவிலுந்திருக்கூட்டமுங் கண்டுகண்குளிரப்
பாவியாகினேன்காயத்தை யேதுக்குப்படைத்தே
னாவிதானிருந்தும்பரகதி யடைந்திலனே.

ஆதிநாண்முதற்றவம் பெறுமாமுனிக்காக
நாதமோங்கவேநாடகம் புரிந்திடுநாதன்
பாதம்போற்றியெந்நேரமும் பணிந்திடுநந்தன்
ஏதந்தீரவேகனவிலு மீசனும்வந்தார்.

வசனம்.

நந்தனார், தில்லைத் தலத்தைக் காணாத ஜென்மமிருந்தாலென்ன போனாலென்னவென்று நிச்சயம்பண்ணி மனதுருகி வாடும்வேளையில் கொஞ்சம் நித்திரைபோற் கண்டு அந்நித்திரையில் அம்பலத்தேவன், வந்து சொல்லுவார்.

இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கனவினில்கண்டாரே-நந்தனார்-கனவினில்கண்டாரே.

மனதிலெப்போதும் வருந்தியடிபணியுங்
கனகசபேசனைக் கண்ணினாற்காணாமல் கனவி

நீநடுங்கழனிகள் நானடச்சொன்னேன்
ஊனமில்லாமலுன் றுடையவன்களிக்க
மானிடப்பிறவியி லுனக்கிணையார்பத்தி
மானில்லையெனத்தில்லை நாதன்வந்துரைக்க கனவி

கங்குல்பகலாய்க் களித்தநின்னருளாற்
சங்கரனேயென்று சாருநன்னிலையால்
அங்கம்புளகித மாச்சுது அதனா
லிங்கேவந்தேனென்று யீசனும்புகல கனவி

விருத்தம்.

அறிவுமிகுந்தாற்றலுடன் சிவபெருமான் பெயர்சொல்லி யாற்று நாளில், கறைமருவு மிடறழகன் றனதடிமை வெறியகலக்கனவில்வந்து, குறையறவே கழனிகளை நடச்சொன்னே முனக்குவிடை கொடுக்கே னென்ற, மறையோது மவர்க்குரைத்து நீவிரைந்து வாவென்று மன தட்சென்றார்.

---

## நந்தனார் கனவில் நடேசமூர்த்திசொன்ன

வசனம்.

நம்முடைய நந்தனாரே உன்னிட கழனிகளை நமது பூதகணங்க ளாலே நடச்சொன்னோம் வேதியருக்குக் காட்டினால் உத்தாரங் கொடுப்பாரென்று சொல்லித் தானம்பலத்தே சென்றார்.

நந்தனார்-நித்திரை நீங்கி வயல்களைக்கண்டு சந்தோஷமடைதல்.

கண்ணிகள்.

களையெடாமல்சலம்விடாமல் கதிரொருமுழங்காணுமாம்
விளக்குதுபயிரிருக்குதுஅதைக் கட்டுகட்டவேதோணுமாம்

பழுதிலாமலேரிகுளங்கள் பள்ளமேடுதண்ணியாம்
பரமசிவனைப்பணியும்நந்தன் பயிரிடுந்திருப்பண்ணையாம்
கனவில்வந்துவுருவமாகி கருணைமாரிகண்டகண்டவன்
கடுகிநடந்துவேதியரிடங் காணவென்றுசென்றனன்

விருத்தம்.

அய்யரே வாருமென்று அழைத்திடும் நந்தனைத்
துய்யவே தியருங்கண்டு தொல்புவித் தெய்வமெல்லாம்
பொய்யிது வென்றுதள்ளிப் புலையனும் வந்தானென்று
செய்யவேண் டியதுசெய்யச் செப்புவா னெப்புவானே.

---

## வேதியர் சொல்லுதல்.

பலவித-இராகம்-வராளி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தாவுனக்கிந்தமதி வந்ததென்ன தந்ததாரு

அநுபல்லவி.

அந்தரங்கஞ்சொந்தமா யிருந்ததுமறந்துபோய்
விந்தையாய்நினைந்தன்றோ அந்தவேளைபுந்தியில்லை-நந்தா

சரணங்கள்-தோடி.

கொல்லைக்காட்டுநரிபோலே பல்லைக்காட்டிபேசுவாய்
கல்லைக்காட்டிகோபங்கொண்டு சொல்லைக்காட்டியேசுவான்
தில்லையென்றுசொன்னதெல்லா மில்லையென்றுபோச்சுதா
கல்லையென்றுஐயர்சொன்ன சொல்லேநிசமாச்சுதா

சித்தமுந்தெளிந்துதா உற்றதுவுணர்ந்துதா
பத்தியுந்துலைந்துதா சுத்தலும்பறந்துதா
சட்டம்-சட்டம்-நல்லது-நல்லது மெத்த-மெத்த-சந்தோஷம்

மத்தியமாவதி.

இப்படிஅப்படிசொல்லாதே தப்பெடுத்தடிப்பையா
சொற்படியொப்புதலாகநீ மெய்ப்படிநடப்பையா

கள்ளக்கும்பிடுதள்ளடா காரியங்கைக்கொள்ளடா
எள்ளுகொல்லைக்காரடா யெங்குஞ்சுற்றிப்பாரடா

தெய்வமென்பதுகுற்றம் தெளிந்துபாருசுற்றம்
கையைக்கொட்டுசத்தம் கண்டுகொள்ளுநித்தம்

ஊணுறக்கமேயின்பம் ஊனிழந்தாலேதுன்பம்
சாண்வயிற்றுக்குஅன்பு சாதிமுறைமைவம்பு
ஓகோ-பலே-பலே சபாசு-கண்டுகொண்டாய்

### கேதாரகௌளம்.

தாடிதோற்றவன்போல் — வாதாடிநிற்பதற்கு
வேதாந்தசாஸ்திரங்கள் — காதாலேகேட்டிருந்தும்
வின்னகாரியம் அதிலென்ன — வீரியம்-தள்ளு-தள்ளு,

### புன்னாகவராளி.

லிலையென்பதுகாட்டினுண்டு — கேட்டதில்லையா
தேகம்பட்டால்புண்ணாகும் — பார்த்ததில்லையா
அம்பலமாவது ஆகாச — முற்றும்பாரு
அருளில்லைபொருளில்லை — கண்டுசேரு

திபென்றுஞ்சித்தியென்றும் — வெத்தியென்றும்முத்தியென்றும்
இத்தனைநாள்கற்றகலை — அத்தனையும்பித்தமாச்சு
மாறுபாட்டுக்காரன்வார்த்தை — கூறுபடுமோ
தாறுமாறுபேசினதால் — சோறுபோடுமோ

### நாதநாமக்கிரியை.

எல்லாம்முழுப்புரட்டு — வல்லான்வகுத்தவழி
சொல்லாதேசும்மா — நில்லாதே
காரியத்தைப்பாரடா — உனக்கிணையாரடா
காசுபணஞ்சேரடா — இதுநல்லவூரடா

### மாஞ்சை.

கஞ்சிகூழுகுடித்தாலும் — பஞ்சமில்லையே
கொஞ்சமிருந்தாலும்போதும் — சஞ்சலமென்ன

### மத்தியமாவதி.

சம்பாநெல்லிருக்குனக்குத்தாரேன் — ஒற்றைச்
சல்லாகிழித்துனக்குத்தாரேன் — ஒற்றைக்
கண்டாங்கிச்சேலையொன்று — துண்டாய்கிடக்குதுந்தன்
பெண்டாட்டிக்குக்கொடுத்து — நன்றாகவாழ்ந்திரு

### புன்னாகவராளி.

ண்டுவெட்டிப்பாக்குதின்று — அண்டைவெட்டிப்போர்த்தையா
டனடிக்கட்டளையில் — முண்டிருக்குபார்த்தையா

### மோகனம்.

காணியிலாதவனொருவ — மாணியில்லாதவன்போலே
தோணினுலுந்தோணாது — கோணிநடந்தாலுமென்ன
பெண்டாட்டியில்லாச் — சுகமல்லவோமனங்
கொண்டாட்டங்கொள்ளா — ததைச்சொல்லவோ

ஆரபி.

எருவிட்டுழுதவயல் மறுவிட்டுத்தேவையில்
எதுவெட்டினுலுந்தாங்குந் துருவிட்டுப்பார்க்கவேணுந்துரை
நிலம்பாராதபேர்கட்குப் புரையேயிதுவல்லாம
வேறேயுண்டாயிறையே இந்தவூருக்குளிதுநல்லவிரை

அசாவேரி.

மூலைக்கால்விளைந்ததானல் சேலைக்குக்கா
உனதுகூலிக்குக்காணும் குழந்தைபாலுக்குக்காணுமல்லவே
ஊருக்குளிந்தநிலஞ்சப்பையே நீவாரிவிடவேணுமிந்தக்குப்பை

சாவேரி.

வாரிகாலைச்சுற்றிப்பாரு கோரையைப்பிடுங்கிநம
தேரியையுழுகச்சொல்லு வீரியைநடுகச்சொல்லு
செட்டியார்குளத்தருகே முட்டிருக்கப்பேர்த்தையா
வெட்டியானகத்தருகே திட்டிருக்கப்பார்த்தையா

புன்னுகவராளி.

எல்லாமுனதுபொறுப் பெல்லாமுனதுசுக
மல்லாமல்வேறேகதியில்லை இல்லை

கட்டியடிக்கட்டளையில் விட்டதுமுளைத்துதா
பொட்டைத்திடல்குட்டையிலே நட்டதுபலித்துதா

காடுவெட்டிநஞ்சைபண்ணு மாடுகட்டிவைக்கோல்போடு
பாடுபட்டுழைத்தாலன்றோ வீடுகட்டிவாழலாம்-நந்தா

வசனம்.

இப்படிச்சொல்லும் வேதியரை பண்ணையைப் பார்க்கவாருமெ
ன்று நந்தனர் கூப்பிடுவார்.

விருத்தம்.

பண்ணையாவையும்பாருமென் றழைத்திடப்பரிந்து
கண்ணுலாவியவேதியன் களிப்புறநந்தன்
பண்ணுலாவும்பொன்னம் பலக்கூத்தனைப்பரவி
யெண்ணிலாவருங்காதல்கொண் டிருந்தனர்தாமே.

வசனம்.

கேவலமாகிய் நீசன் சிவகணங்களாலே ஒரு இராத்திரியில் ந
வுநட்டு அறுப்பறுக்கும்வயலை வேதியர்கண்டு ஒன்றுந் தோன்று
ராகி யுலகவாசனையற்று நின்றார்.

வசனம்.

நந்தனார் அம்பலவாணனைக் கொண்டாடிக் கூத்தாடுவார்.

கடுக்கா.

நந்தனானந்தபரிதமானார்நந்தனாரும்ஆனந்தமாகினார்
சொந்தமானவயல்வந்துபார்க்கையில்
விந்தையாச்சுபலபந்தம்போச்சுது
சிந்தைதீரவேயந்தரங்கத்தில் நந்தனா

நீசச்சாதியென் றயேசிப்பேசுமிந்த
தோசிவேதியனுமாசையாகவே
தேசமற்றுந்தில்லைவாசமாகுநட
ராஜமூர்த்திக்குதாசனென் றுவரும் நந்தனா

வாரும்வாருமிதைப்பாரும்பாருஞ்சிவ
ஞானரவந்துசெய்யுங்காரியங்களிது
பாரின்மீதுளிணையாருமில்லையென்
றாரினுள்ளபெரியோருஞ்சொல்லச்சொல்ல நந்தனா

சித்தமீதிலொருகுற்றமேதுமில்லை
சுத்தமானவிதயத்திலுள்ளசிவ
பத்திபண்ணிவெகுசித்தியாகிவர
முத்திதேடிவருபத்தனென் றுசொலும் நந்தனா

வசனம்.

வேதியர் நந்தனாரைப்பார்த்து சிவபத்தரை அபசாரம்பண்ணி
னென்று மிகவும குழைந்து சொல்லுவார்.

இராகம்-பியாகடை-அடதாளச்சாப்பு.

பல்லவி.

நந்தனாரேயுன்றன் பெருமையின்றுகண்டேன்
நானென்வினையை விண்டேன்

அநுபல்லவி.

விந்தையைக்குறியாமல் விழலனறியாமல்
வீம்புக்குக்கச்சுகட்டி வீசினேனென்னையாளும் நந்

சரணங்கள்.

யொமன த்தினலேயேதோபேசியுந்தன்
அருமையைத்தெளியாமற்போனேனே மெத்த

சிறியோர்செய்தபிழைபெரியோர்பொறுப்ப ரென்று
செப்பும்வார்த்தையுமக்கேகன்வானே இந்த
முறையுணர்ந்தோர்க்கென்னதான்சொல்லத் தோணும்
மூடன்மேற்கிருபைவைத்துமுழுதுங் காத்திடவேணும்
நிறைவுற்றவருட்பெற்றோர்க்கேதுநிகராங் காணும்
நினைக்குமுன்னடிவணங்காதோன்வந்துய சேணும் ந

நேற்றுப்பொழுதளவுஞ்சும்மாவிருந்ததிந்த
நிலங்கள்முற்றும்பயிர்கள்முளைத்துக் கதிக்கச்
சாற்றுங்கதிர்கள்முத்திச்சாய்ந்து அறுவடைக்கும்
தக்கதாயிருக்குதேமிகக்கிளைத்து உமது
ஆற்றல்தனக்குநிகராவாரோ யாவரும்
அய்யாவுனதுநல்லவருளால்நலமே பெரும்
நாற்றிசையோர்களும்நாடிப்பணிய வரும்
நாயேன்களிக்கமனம்நயந்துக்கிருபை தரும் ந

குண்டைகளுங்கலப்பைக்கோலுங்காரும்விதையுங்
கொட்டத்திலிருக்கநீர்செய்தீரோ அந்த
அண்டர்பணியுந்தில்லையாண்டவனே யுமக்கு
அடிமையாளாகிவந்துசெய் தாரோ
துண்டம்தனத்தாலென்றெண்டுக்கும்மைக் கொண்டேன்
தொல்லுலகத்துள்ளோர்யாருமேசக் கண்டேன்
தொண்டனேனுமக்குத்தோதங்களை விண்டேன்
சொல்லும்பணிகள்செய்துசுகப்படத்துணி வுண்டேன் ந

வசனம்.

என்று வேதியர் நந்தனரைப் பார்த்துச் சொல்லிப் பின்னு
சொல்லுவார்.

இதுவும்-வேதியர்சொல்-விருத்தம்.

கறைபடுங்கண்டன்றாளைக் கருத்ததுபெறவேநோக்கி
குறையறும்நந்தனரைக் குலமதுகீழென்றெண்ணி
மறைபுகல்பெருமையாலேவருத்தினேன்கொடியனென்று
இறைபடுமனம்போலஞ்சி யேங்கியேயாற்றுவானே.

இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

சுத்தமெத்தனைசெய்தபோதிலுமூந்தன்சித்தத்தில்நினையாதே-சிவ
பத்தனென்றறியாமல்பதறிவார்த்தைகள்சொன்னபாவந்துலையாதே

லயர்களபரகதிதேடும்படியவர் புண்ணியஞ்செய்வாரோ-உன்னை
ரித்திரக்கண்ணாரக்கண்டபேர்க ளெல்லாங்காட்சிபெறுவாரோ
நுவமண தறியவொருவனுலாகாதென் றுலகம்மொழியாதோ-அது
மாச்சுதினியுந்தன்ஜென்மசபலமாச்சு தெய்வமுமிரங்காதோ
தியிலிழிகுலஞ்சாஸ்திரங்கிடையாது சந்தேகப்படலானேன்-இப்
ா, ஆதிசிதம்பரரகசியம்பாரென்று யனுப்பிவிடலானேன்.

வசனம்.

இப்படி வேதியர் மிகவும் பரவசமடைந்து நடந்த வரலாற்றைக்
ட்க, நாளைப்போவார் கனவிலே ஈசன்வந்து கருணைசெய்தாரென்
ர் அதற்கு நாளைப்போவாரைப் பார்த்து வேதியர் சொல்லுகின்றார்.

இராகம்-யமுனகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தாவுன்கனவினிலெப்படிவந்தார்
வரந்தந்தாரெந்தாய் நந்தா

சந்ததமுஞ்சனகாதிமுனிவர்தொழுஞ்
சச்சிதானந்தமூர்த்தியல்லவோ நந்தா

ஆதிமுடிவுகிடையாதபராபரஞ்
சோதியல்லவோநீசசாதியென்றறிந்தும் நந்தா

அண்டரண்டநிறைகின்றசபாபதிக்
கொன்றும்பேதமில்லையென்றுதெளிந்தது நந்தா

வசனம்.

வேதியர் நான்செய்த பிழையெல்லாம் பொறுத்துக்கொள்ளுவீ
ரன்று சொல்ல, நந்தனார் மறுவுத்தரங் கூறுகின்றார்.

இராகம்-தெண்டகம்-எதுகுலகாம்போதி.

பல்லவி.

வதியர்-ஏழைப்பார்ப்பான்செய்திடும்பிழையை
யேற்றுக்கொள்ளாதே நான்

இனமறியாதவன்முன்புத்திக்காரனென்பதுவும்பொய்யோ
தனார்-பொய்யாகியவிந்தவுலகத்தைப்பார்க்கும்
புண்ணியவானே நான்

புலையனுங்களடிமையல்லவோ புத்திசொல்லுமையே
வதியர்-புத்தியுண்டுவித்தையுண்டு
பத்திகிடையாது வாயால்

புலம்பினதாலென்னமனமடங்காது போதங்கிடையாது
தனார்-கிடைக்குஞ்சிதம்பரதெரிசனமென்று
கிருபைசெய்யு மையே

கீழ்க்குலமல்லவோநாயினுங்கடையேன்கீர்த்திசெய்விப்பீரே.

வசனம்.

பரமபத்தனாகிய நீயே எனக்கு அடிமைவேலை செய்பவன்போல்
ந்தபடியினாலே என் பிறவிப்பிணி யொழிந்ததென்று வேதியர்
சால்லுகின்றார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வப்பொழுதுபோனதன்றி மறைமுடிவையுளங்கனிய
வறிவிலுன்னித்
வப்பொழுதுங்கணப்பொழுதுங்கண்டறியாப்பாவியெனைச்
சார்ந்தாரன்றோ
பக்கொழுந்தினடிமையென்று பெயரிட்டுவேலைகளைச்
செய்ததாக
வக்கடலைக்குளப்படிபோல் தாண்டிவரச்செய்ததுந்தன்
பத்திதானே.

இராகம்-ஆநந்தக்களிப்பு.

நந்தாநீசிவ பத்தன்-உன்னை
நம்பாமலேமோசமானேனான் பித்தன் நந்தா

பூமிக்குள்நீயொரு சித்தன்-இந்தப்
பூமிக்குநாளொருசாஸ்திரப்பிர சித்தன்
காமிக்குள்ளேவெகு மத்தன்-உன்னைக்
கண்டுதெரிசித்தபேர்களே முத்தன் நந்தா

படித்துமென்னவெங்கள் வேதம்-அதில்
பார்த்ததில்லையிந்தபகவனற் கீதம்
எடுத்துச்சொன்னாய்சிவ போதம்-அது
ஏற்காமற்போச்சுதுயென்பிடி வாதம் நந்தா

தெவிட்டாதசோகம பானி-உந்தன்
தேகமுழுதிலுஞ்சிவன்றிரு மேனி
பகையாகியவொரு கூனி-போலே
பழுத்தேனனுலுமீயாத்தும ஞானி நந்தா

பவசாகரந்தாண்டிச் சென்றாய்-உள்ளே
பார்த்துணர்ந்துப்பரமானந்தங் கொண்டாய்
தவமாமுனிபோலே நின்றாய்-தில்லைத்
தாண்டவராயனைக்கண்ணால்நீ கண்டாய் நந்தா

வசனம்.

இப்படி வேதியர் சொல்லும்போது, நந்தனர் மனம் நொந்து கைகால் நடுங்கி ஐயரைச் சுற்றிவந்து தலைவணங்கி எனக்கு அன்னங் கொடுத்து ஆடையளித்து இத்தனைநாளுங் காப்பாற்றின பெரியவரே உங்களுக்கடிமைவேலை செய்யுமென்னை இப்படிப் பெருமையாய்ச் சொல்லவேண்டாமென்று சொல்லுகின்றார்.

இராகம்-கலியாணம்-ரூபகதாளம்.

பல்லவி.

ஐயாசொல்லு வேனே-உம
தடிமைப்பறையன் தானே

அநுபல்லவி.

மெய்யாகவேயிந்தமேதினிவாழ் வோர்கள்
வேலைசெய்யூழியர்தம்மையோதாழ் வார்கள் ஐயா

சரணங்கள்.

வேம்புக்குயர்ந்தமதுரங்கள் பூட்டினும்
வீறுமதன்குணம்மாறுதெந் நாட்டினும்
ஆம்புத்திக்காரனென்னாலேயாவ துண்டோ
அய்யனருளையல்லாமலும்வே றுண்டோ ஐயா

மேவுங்கீரைத்தண்டுமேருவைத் தாங்குமா
வீசுங்கதிர்முன்மின்னும்பூச்சி யோங்குமா
ஆவதழிவதல்லாமையன் றன்னாலே
ஆச்சுதென்றாலென்னவாச்சுது யென்னாலே ஐயா

முன்னமேசெய்தவினையின்வ சத்தாலே
மூடப்புலையனாய்மேவி யதனாலே

இன்னல்படுவதுடனின்னமும் ஏண்டா
ஏந்திக்கொள்ளுமென்றெனைக்கெடுக்க வேண்டாம் ஐயா

வசனம்.

நந்தனார், தனது ஆண்டையாகிய வேதியரைப் பார்த்து தங்க
டைய திருவாக்கினால் என்னையு மிப்படிப் புகழலாமா வென்று
வும் வணக்கமாய்ச் சொல்லுகின்றார்.

இராகம்-அமிர்தகலியாணி.

பல்லவி.

னசாதியல்லவோசிதம்பரம்போய்வருகிறேனான் சின்ன
ன்னை தந்தையொருவரில்லையடைக்கலமென்னையாளவேணும் சின்
இல்லாதநெஞ்சமாகியிறைச்சிதின்றுவுடல்பெருத்த சின்ன
லும்பகலுமதுவையுண்டுயறிவுமயங்கியாட்டங்கொள்ளும் சின்

வசனம்.

படிச்சொல்லிய நந்தனாரைப்பார்த்து வேதியர் சொல்லுகின்றார்.

* இராகம்-தேவமனோகரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆருக்குத்தான்தெரியும் அவர்மகிமை
அம்பலநாடக மாடியபெருமை ஆரு

அநுபல்லவி.

பாருக்குள்மாந்தர்கள் காண்பதுதொல்லை
பதஞ்சலிபண்ணிய புண்ணியமில்லை-ஆருக்கு

சரணங்கள்.

தேவர்கள்பூமழைகொண்டு சொரிந்தார்
சித்தவித்தியாதரர்கண்டு மகிழ்ந்தார்
பாவலர்நாவலர்உள்ளங் குளிர்ந்தார்
பார்வதியம்மனுங்கூட யிருந்தாள்-ஆருக்கு

காதில்குழையதுவிழுந்தது காட்டார்
கண்டிடும்அன்பரைவிண்டிட மாட்டார்
பாதாளம்நடுங்கவேதாண்டவம் போட்டார்
பத்தியில்லாதவர்தங்களைக் கூட்டார்-ஆருக்கு

பாலகிருஷ்ணன்பணிந்தேற்றும் பிரதாபம்
பார்த்திடும்பேர்க்கில்லைபுண்ணிய பாவம்

சிலகுணமருவும் ஞானப்பிர தீபம்
தேவமனோகரமாகிய ரூபம்-ஆருக்கு

இராகம்-பைரவி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஆருக்குப்பொன்னம்பலங் கிருபையிருக்குதோ
அவனே பெரியவனும்

அநுபல்லவி.

பாருக்குள்வீடுகள் மாடுகளாடுகள்
பணமிருந்தாலவன் பெரியவனவனே ஆ

சரணங்கள்.

வேதபுராணங்க ளோதினதாலென்ன
வேலைசூழ்பணை மாதராலென்னகாரியம்
சாதனையாக வாராதொருநாளும்
மண்ணாசைபெண்ணாசை பொன்னாசைபொல்லாது ஆ

பாணன்மதங்களடங்கவே செய்தகோ
பாலகிருஷ்ணன் தினந்தொழும்பொன்னம்பல
வாணனென்றுதர வாய்விரும்பாதவன்
வானவராகிலுந் தானவன்சின்னவன் ஆ

வசனம்.

சிவபத்தியுள்ளவன் பெரியசாதி, சிவபத்தியில்லாதவன் பார்ப்பானாயிருந்தாலுஞ் சின்னசாதி, ஆனபடியினாலே, திருப்புன்கூரிலு...க்காகப் பரமசிவன் நந்தியைவிலக்கி தெரிசனங்கொடுத்ததும், நீ கு...ம்வெட்டினதும், ஒரு ராத்திரிகாலத்திலே நாற்பதுவேலி நிலமும் ந...ராஜமூர்த்தியேவந்து நடவு நட்டதும், பார்க்கும்போது நீயே மக...புண்ணியபுருஷனென்று சொல்லவேணுமேயல்லாது வேறில்லை. இதுவரையி லெனதுவார்த்தையைத் தட்டினதுமில்லை, ஆகையால் எனக்கு குருவாகிநின்று உபதேசம்பண்ணென்று பின்னுஞ் சொல்...கின்றார்.

இராகம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தா நீ-குருவுபதேசம்-நவிலிடவேணும்-நான்கடைத்தேற

அநுபல்லவி.

நொந்தானுன்கதிபெறமாட்டேன்
நோயினும்பிறவிக்கடலிடைவீழ்வேன் நந்த

சரணங்கள்.

ந்தாரப்பூவெடுத்தானர் மலரடிசாத்திவாழவென்னறிவு
ந்தாமல்வரந்தரவேணும் சிதம்பரரகசியந்தெரிசித்திடவே நந்
வத்தார் கருணைக்கடலுன் மனதிற்சென்றுநீநிர்த்தம் புரிந்து
த்தாசைபூதகணங்க ளுரிமையுடன்வந் தூழியஞ்செய்ய நந்
பற்றுநீபெரியவனுந்தன் பெருமையையைநானறிவேனே-மூடன்
ந்தாமல்மோசமதானே னம்பிக்கைசொன்னேனற்கதிபெறவே நந்

விருத்தம்.

வேதமோடறஞ்செய்திடும் நூற்களைவிதித்தும்
ஆதனுகினேனடியவர்க் கஞ்சினமடையும்
பாதகம்புரிந்தேனென்று நந்தனைப்பரவி
ஏதந்தீரவேவேதிய ருபசரித்திருந்தார்.

வசனம்.

இப்படிச் சொல்லிய வேதியர்வார்த்தையைத் தள்ளப்படாமை
ல், சுற்றிவந்து தலைவணங்கி ஒருமூலையைநோக்கி நந்தனர்சொல்லு
ன்றுப்போல சொல்லுகின்றார்.

இராகம்-புன்னுகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயேமெத்தகடினம்-உனக்கடிமை-ஐயேமெத்தகடினம்.

அநுபல்லவி.

பொய்யாதபொன்னம்பலத்தையாயிருக்குமிடம்
நையாதமனிதர்க்குவுய்யாதுகண்டுகொள்ளும் ஐயே

சரணங்கள்.

பாலகிருஷ்ணன்பணிந்திடுஞ் சீலகுருசிதம்பரம்
மேலேவைத்தவாசையாலே காலனத்துப்போவானென்று [ஐயே
த்திரம்-நல்லக்ஷேத்திரம் - கிற்பாத்திரம் - ஞானநேத்திரங்கொண்டு

வாசியாலேமூலக்கனல் வீசிமேயகுழன்றுவாப்
பூசைபண்ணிப்பணிந்திடு மாசறக்குண்டலியைவிட்
ட்டுமே-மனமூட்டுமே-மேலோட்டுமே-வழிகாட்டுமே-இந்த

மானுபிமானம்விட்டுத்-தானுகின்றவர்க்குச்
சேனுதிபதிபோல-ஞானதிபதியுண்டு
ருமே-கட்டிக்காருமே-உள்ளேசேருமே-அதுபோதுமே-அங்கே

சங்கையறவேநின்று பொங்கிவரும்பாலுண்டு
அங்கமிளைப்பாற்றிக்கொண்டு தங்கப்பொம்மைப்போலவே
நில்லுமே-ஏதுஞ்சொல்லுமே-ஞானஞ்செல்லுமே - யாதும்வெல்லுமே
[இந்

அட்டாங்கம்பண்ணினும் நெட்டாங்குபண்ணியது
கிட்டாதுகிட்டவர வொட்டாதுமுட்டியது
பாயுமே-மூனை-தேயுமே-அது-வோயுமே-உள்ளே-தோயுமே-வேத
மந்தரத்திலேபோட்டு யெந்தரத்திலேபார்க்குந்
தந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலே-அவ
தானமே-அது-தானமே-மவசீனமே-பேசா-மோனமே-அந்த
முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலேநின்றவர்க்கு
இப்பார்வைகிடையாது அப்பாதிருநடனம்
ஆடுவார்-தாளம்-போடுவார்-அன்பர்-கூடுவார்-இசைபாடுவார்-இசை
கண்டாருங்கிடையாது விண்டாருஞ்சொன்னதில்லை
அண்டரண்டகோடியெல்லா மொன்றாய்ச்சமைத்திருக்கு [வே
மல்லவோ-பறையன்சொல்லவோ- அங்கேசெல்லவோ-கோமாருதல்

விருத்தம்.

வானமேவியவும்பர்கள் வாழ்த்தியுமறையைக்
கானமேசெயும்வேதியரேயுமக்கடிமை
யீனமாயிழிகுலத்தினி லெய்தியநந்தன்
ஞானமாரிகொண்டே யவருளுறநினைந்தார்.

வசனம்.

இப்படி நந்தனர்சொல்ல, வேதியர்கேட்டு திவ்வியஞானமடை
து நந்தனரைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போய்நீ வாருமையா நான்
செய்ததெல்லாமப சாரமையா சித

அநுபல்லவி.

சிதம்பரம்போவீர் பதம்பெறுவீர்வேறே
சிந்தனைவேண்டாம் நந்தனேயினிமேல் சித

சரணங்கள்.

எத்திசையிலுமுமக் கிணைசொல்லவும்போமோ
பத்திமேமுதலென்று பழகியபெரியவர் சித

சித்தமுந்தெளிந்ததுதெய்வமேநீரென்று
புத்தியும்வந்ததுசத்தியமல்லவோ சிதம்

வசனம்.

இப்படிச்சொல்லிய வேதியரைச் சுற்றிவந்து நந்தனார் தலைவண
கி தூரவிலகிநின்று வேதியரை ஆசீர்வதிக்கச் சொல்லுவார்.

இராகம்-ஒரடியிலிரண்டுவார்த்தை-துக்கடா.

| நந்தனார். | வேதியர். |
|---|---|
| சிதம்பரதெரிசனங்கிடைக்குமோ | கிடைக்கும் |
| சென்மசாபல்லியமாமோ | ஆகும் |
| பதம்பெறுந்தவநெறியறிகிலேன் | அறிவீர் |
| பரமசிவனருள்செய்வாரோ | செய்வார் |
| சாதியில்தாழ்ந்தவனல்லவோ | அல்ல |
| சாத்திரமுறைமைக்குஞாயமோ | ஞாயம் |
| ஆதியம்பலத்தெய்வம்நாடுமோ | நாடும் |
| ஆனந்தமடைவேனோவையரே | அடைவீர் |

வசனம்.

வேதியர் நந்தனருக்கு ஆசீர்வாதம்பண்ணி யனுப்பிய பின்பு
ந்தனருடைய குணாதிசயங்களைக் கொண்டாடுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

டியவர்கள்மனமிடியப் பேசினதுண்டபராத மனந்தங்கோடி
நிரகில்வீழ்வாரென் றெனவுரைக்கும்பாவமது பலித்ததென்று[து
டிதுடித்துத்தொடைநடுங்கி நீர்வடித்துசிதம்பரத்தேதுதிகள்செய்
டிபுகழுந்திருத்தொண்டர் குணமெல்லாமுலகறியப் பகருவாரே.

இதுவுமது.

சாத்திரக்குப்பையெல்லாந் தள்ளினேன்பதறுபோலே
காத்திரஞ்சுத்தமாச்சு கனிந்திடுமுள்ளம்பத்தி
மாத்திரமிருந்தாற்போது மற்றொன்றுமில்லைசைவ
க்ஷேத்திரமுழுதுஞ்சுற்றிச் சேருவேன்றில்லையென்றார்.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

எந்தநேரமும்நந்தனை சிந்தித்தா
னந்தமாகியிருந்தனரந்தணர் எந்
பந்தந்தீரவேயிந்தவுருவாகி
வந்துதோவரந்தந்துதோசிவனென்று எந்

வசனம்.

விட்டுதோ இந்தவீட்டுக் கவலைகள்பட்டுதோ பவசாகரச்சேரழ
த்திட்டுதோ முத்தி வெள்ளம் கரைபுரண்டிட்டுதோவென்று எத்தித
தொழுது எந்நேரமும் வேதியர் இப்படியே சிவபத்தி பண்ணிக்கொ
ண்டு ஆனந்தமடைந்திருந்தார். அப்படியிருக்க நந்தனர் ஆதனூரை
விட்டுச் சிதம்பரத்தை நோக்கி வருகின்றார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

நந்தன்சிதம்பரம்வருகின்றார்ஆதனூரைவிட்டுக்
கொள்ளிடந்தாண்டியப்பால்வருகையிலே
தொண்டரங்கம்பரவசமாய் எங்கும்பொங்கிச்சிவமயமாய் நந்த

அந்தக்கரணவிருத்தியழிந்து
அனேகசென்மவாசனையை
அனல்கொண்டுதகித்தாரே-சஞ்சித-விதையென்றுவெறுத்தாரே நந்

குண்டலிசத்தியைக்கொண்டு
கிளம்பிமண்டலம்புகுந்து
சஞ்சரித்துக்கொண்டார்-குறையா-வமிர்தமுண்டார்கிளையார் நந்த

அநாதிமாயகற்பிதமிந்த
நாமரூபாதிப்ரபஞ்சமெல்லா
மழிந்துபோமென்பார்-குறைகட-லெழுந்தநுரையென்பார் நந்த

சைவத்தலங்களிற்றெய்வமிதுவே
சத்தியம்பண்ணுவேன்நான்பறையன்
சதுர்மறைகேட்டிலையோ-மிக்க-ஷண்மதங்கேட்டிலையோ நந்த

எப்போதுநடராஜமூர்த்தியின்
இணையடிதொழுதார்க்கிடுரையே
னிந்திரபதமிகரோ-திரும்பியும்-வந்தவர்காண்கிலரோ நந்

ஈசன் கருணைநேசமிலாதவ
னெத்தனைவேதங்கற்றாலு
மட்டாப்பெருங்கொம்பு-நெருங்கித்-தொட்டால்செங்கரும்பு நந்த

ஆதனூரிலொருபுலையனுக்காக
அம்பலநாடகமாடுவாரோ
ருந்தவம்புரிந்தேனோ-கனவினில்-வருந்தியுமிருந்தேனோ நந்தா

அரகரசாம்பசதாசிவனேபொன்
னம்பலத்தாடியதேசிகனே
யேயுன்னடிமை-மனது-நையேனுன்னுடமை நந்தா

செழித்துவியனுலகெட்டிச்சிகரங்க
ளேந்துந்தெரியுதுகாணையே
ல்லைத்தலமென்பார்-அன்புடன்-சொல்லப்பலமென்பார் நந்தா

குதிப்பாரொருதரங்களிப்பார்கண்ணீ
ருதிர்ப்பாரானந்தலாகிரியால்
காண்டானடிப்பாரே-குரவை-நன்றாய்ப்படிப்பாரே நந்தா

பாரளந்தகோபாலகிருஷ்ணன்துதி
பாடுந்திருவடிபணிவேனோ
ரகதியடைவேனோ-பூமியில்-மறுபடிவருவேனோ நந்தா

வசனம்.

நந்தனார் ஆதனூரைவிட்டுக் கொள்ளடத்தருகில் வரும்போது
சால்லுகின்றார்.

இராகம்-முகாரி-அடதாளம்.

பல்லவி.

கொள்ளடக்கரைபோனான்-நந்தன்
கோபுரங்களைக்கண்டான்

அநுபல்லவி.

பள்ளச்சாதியிலும் பறைச்சாதிநானென்று
உள்ளமுருகியவர் வெள்ளங்கரைபுரள கொள்

சரணங்கள்.

ஓடத்தின்மேலேறி-நந்தன்-ஓங்குமகிழ்ச்சிமீறி
நாடயெவரும்நல்லநடனக்கூத்தாடியே
நண்புடன்கதிபெறலாமென்றுறுதிகொண்டு கொள்

அக்கரைபோனேனே-நந்தன்-ஆனந்தங்கொண்டானே
சிக்கெனவேசிவசிதம்பரேசனைக்காண
சிந்தைமகிழ்ந்துசிவத்தியானஞ்செய்துகொண்டு கொ

திருவாதிரைத்திருநாள்-செய்யுந்-தினமல்லவோயிந்தநாள்
திருநடராஜமூர்த்திதிருமுகந்தனைக்காணச்
சித்தங்களிப்பேனென்றுறுதிகொண்டு கொ

வசனம்.

நந்தனர் இந்தப்பிரகாரம் தோத்திரஞ்செய்துகொண்டு கொ
ளடக்கரையைத் தாண்டிவரும்போது தில்லைக்கோபுரத்தைக் கண்
தரிசனம்பண்ணுவார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

கோபுரதெரிசனமே-எந்தன்-பாபவிமோசனமே

அநுபல்லவி.

தாபங்கள்மூன்றுந் தணிந்துவிடும்நல்ல
சோபனமுண்டாஞ் சோதிவிளங்கிய கோப

சரணங்கள்.

விண்ணணைந்துமே லோங்கியேகண்டுநற்
கண்ணுளார்க்கெல்லாங் காட்சியளித்திடும் கோப

அல்லும்பகலும் அமரர்துதித்திடும்
தில்லைக்கிறையோன் றினமுமகிழ்ந்திடும் கோ

வசனம்.

நந்தனர் தில்லைத்தலம் இப்படியிருக்குதென்று சொல்லுகின்று

இராகம்-நவரோஸ்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

மாங்குயில்கூவியசோலைகளும் வாபீட்சகூபதடாகங்களுந்
தூங்கதிர்மண்டலமெத்தையுஞ் சொர்ன்னசபேசன்துஜமரமும்
நாலுபுரத்திலுங்கோபுரமும் நவமணிச்சித்திரமண்டபமும்
சீலமுறுந்திருவீதிகளுந் தில்லைவேதியர்மாளிகையும்

பல்லவி.

கண்டேன்கலிதீர்ந்தேன் என்கவலையெல்லாமொழிந்தேன்

அநுபல்லவி.

மண்டலம்புகழுஞ்சபேசன்சந்நிதி வாழ்த்திப்பணிந்துநின்றேன் த

சரணங்கள்.

தஞ்சமென்றடைந்தே னிந்தச்சடலத்தால் நொந்தேனினியென்னை
அஞ்சவேண்டாமென்றொருதரஞ் சொல்லியழைத்தாலாகாதோ த

அப்பாவுன்சரணந்தில்லைக்கரசேயுன்சரணம்
ஒப்பாரில்லாநாடகம்பயிலுமொளியேநின்சரணம்

கோபுரதெரிசனமே என்கிற கீர்த்தனமுதற்கொண்டு

## சிதம்பரவிலாசமெனப்படும்.

சிந்து.

சிவன் - வேடிக்கைதானென்று நாடிக்கொண்டே, அறியாது
பாலிருந்த-செம்பொன்-னம்பலத்தாடியைக்கும்பிடவே, ஆதனூர்
ணிலிருந்து-விடும்-அம்புபோலப்பறந்தையமின்றித், தில்லையருகில்
ந்தார்-மனந்-தேறிக்கொண்டார் குறையாறிக்கொண்டார், கெண்
ாமணியோசை.

## திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

நாளைப்போவேனென்று நாங்கள்சொல்லத்தெரியாது
பூளைப்பூவாம்பிறவிப் பிணிப்பொழியப்போவாராய்ப்
பாளைப்பூங்கமுகுதிர்க்கும் பழம்பதியினின்றுபோய்
வாளைப்போற்றெழும்பழனஞ் சூழ்தில்லைமருங்கணைந்தார்.

வசனம்

நாளைப்போவேனென்று சொல்லி அனேகநாள் கழியச் சபா
தரைத் தரிசனம்பண்ணவேண்டுமென்னும் பேராசையை அடக்
க் கூடாதவராய்ப் பூளைப்பூவை யொத்த நிலையாமையை யுடைய
றப்புகளால் உண்டாகிய சம்பந்தம் நீங்கும்பொருட்டுப் போகின்
வராய்ப் பாளையையுடைய பொலிவாகிய கமுகுமரங்கள் சூழ்ந்தி
க்கும் பழைமையுற்ற தம்முடைய ஊரில்நின்றும் புறப்பட்டு ஆண்
ாளைமீனனது எழுப்பி விளையாடும் வயல்களையுடைய சிதம்பரத்
ன் எல்லையை அடைந்தார்.

இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

கெண்டாமணியாடுது-கண்டுபிணிவாடுது

முத்திமணிதேடுது நாடுதுகூடுது கெண்
பரவசமாகுது பாவங்கள்போகுது கெண்
செனனமரணதிகள் மோகமுந்தீர்ந்தது கெண்

சிந்து.

கெண்டாமணியோசை-காதில்-கேட்குதென்று ரதைப் பார்க்
வென்றே, கொண்டாட்டமாகிவந்தார் - கையைக் - கும்பிட்டே
நமக்கம்பிட்டதே, வென்றேமனமகிழ்ந்தார் - திரு - வீதியிலேவ
துகாதலுடன், கண்டார்களையாறி-இரு - கண்களிலானந்தம் பொ
கிட்வே, நின்றார்மதிற்புறத்தே-வெகு - நேர்த்தியென்றாரிதைப் பா
த்ததில்லை, பணிந்தார்பரவசமாய்-நல்ல-பாக்கியசாலிக ளாக்குமெ
ன்றார்-இதுதானோதில்லைப்பதி.

வசனம்.

நந்தனர் தில்லையைக்கண்ட ஆனந்தானுபூதியைச் சொல்லுகிறார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

தில்லைத்தலத்தைக் கண்டார்-அதுசித்துவிலாசமென்றார்-அந்
எல்லையிலே நின்றார்-மனதேகமாக்கிக்கொண்டார்
இருகண்கள்நீர் வடித்தார்-கொடுங்காமவலையையறுத்தார்
இருகையை தூக்கிக்குவித்தார் - தன்காலைக்கோணிக்குதித்தார்-இந்
ஐம்புலன்களை மறந்தார்-பரமானந்தக்கடலுறைந்தார்
தன்தேகபாவ மறந்தார்-தில்லைச்சிவனேயென்றிருந்தார்

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

இதுதானோதில்லைத்தலம்-இத்தனைநாளுமறியேன்
இதுதானோதில்லைத்தலம்

அநுபல்லவி.

அதுவோயிதுவோவென்றலைந்திடும்பேயனைக்
கதிதருவேனென்றுகைகாட்டியழைத்திடும் இ

சரணங்கள்.

காசினியிலிதைக்கயிலையென்றெல்லோரும்
பேசக்கேட்டதேயன்றிபேணிப்பார்த்தறிகிலேன் இ

*இராகம்-அசாவேரி-திசரமதாளம்.

பல்லவி.

ஆடியபாதத்தைதாரும்-உம்மைத்
தேடிவந்தேன்-இதோபாரும்பாரும் ஆடி

அநுபல்லவி.

நாடிபுகழ்ந்துதொழும் சிவகாமிமனோகரரே
தில்லைநடராஜரே யுமதுகையைவிடமாட்டேன் ஆடி

சரணங்கள்.

க்திரமல்லவோ பாலகிருஷ்ணன்பணிபரனே
ம்பரக்ஷேத்திரதெரிசனம் வீடுசேர்க்குமென்றறியேனோ
க்திரப்பொழுதும்மை மறக்கவென்மன துவராதென்றுமருவி
ாத்திரம்பண்ணமாட்டேன்சுவாமி அதிலென்னசுகம் அம்பலந்த
[னில் ஆடிய*

வசனம்.

நந்தனர் தில்லையைக்கண்டு ஆனந்தங்கொண்டாடுவார்.

இந்துஸ்தான்-காபிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

தில்லைத்தில்லையென்றால்பிறவி
இல்லையில்லையென்றுமறைமொழியும் தில்லை

அநுபல்லவி.

தொல்லைத்தொல்லையென்றகொடுவினை
வல்லைவல்லையென்றகலுந்திருத் தில்லை

சரணங்கள்.

கற்றோங்கற்றோங்களங்கமறிந்திட
பெற்றோம்பெற்றோம்பேசாப்பெருமையி
லுற்றோமுற்றோம்பொன்னம்பலந்தனில்
தத்தோந்தத்தோமென்றுநடனமிடும் தில்லை

வாடிவாடியேமாலயனிருவரும்
கூடிக்கூடிக்கொண்டல்லும்பகலுந்தான்
தேடித்தேடித்திருவடிமுடிகளைப்
பாடிப்பாடிக்கோபாலகிருஷ்ணன்தொழும் தில்லை

துக்கடா-இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

இதுவோதில்லைசிதம்பரக்ஷேத்திரமீசனிருப்பிடமோ

அநுபல்லவி.

மதுரம்பொழிந்திடும் மறையோரிருப்பிடம்
மாமுனிவர்தவம் வாழும்பெருமிடம்
பதவிபெருந்தொண்டர் பணிந்துவருமிடம்
பலதெய்வமுந்தொழும் பரகதிதருமிடம் இது

இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

ஆடுஞ்சிதம்பரமோ-வையன்கூத்-தாடுஞ்சிதம்பரமோ

அநுபல்லவி.

ஆடுஞ்சிதம்பர மன்பர்களிக்கவே
நாடுஞ்சிதம்பரம் நமச்சிவாயப்பொருள் ஆடு

சரணங்கள்.

ஆருமறியாமல் அம்பலவாணனார்
சீரடியார்பார்க்கச் சேவடிதூக்கியே ஆடு

பாலகிருஷ்ணன்போற்றும் பணிமதிசடையினார்
தாளமத்தளம்போட தாதெய்தாதெய்யென்று ஆடு

* இராகம்-தன்னியாசி-திசரஜாதிதாளம்.

பல்லவி.

திருவாதிரைதெரிசனத்திற்குவந்தேன்-உந்தன்
திருவாதிரைதெரிசனத்திற்குவந்தேன்

அநுபல்லவி

திருவாய்திறந்துறவாயினிபிறவாவரந்தருவாயென்று தி

சரணங்கள.

கங்குகறையேதுபவக் கறைதாண்டவேயுனதுசிவ
கங்கைதனில்மூழ்கிபவக் கடலுங்குளப்படியாகவே தி

அல்லும்பகலுனதுசபை அருகில்நின்றுகூத்தாடினால்
கல்லாமனமுருகும் பரகதியுங்கைசவமாகுமே தி

ஆலந்தனைக்கண்டோடிய வமரர்துயர்கெடக்காத்தவன்
பாலகிருஷ்ணன்பணியுந் திருப்பாதங்கனகசபாபதி தி

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தில்லையைக்கண்டபோதே தெளிந்ததென்னுள்ளமெல்லாம்
பல்லூழிகாலஞ்செய்த பாழ்வினைதொலைந்துபோச்சு
நல்லருணடனங்காட்டும் நாயனார்சிற்சபைக்குள்
செல்லுவார்மகிமைசெப்ப சேடனாலாகாதென்றே.

வசனம்.

இப்படியே தில்லையைக்கொண்டாடி இதைப்பாராதவரே ப
யென்பார்.

இராகம்-சவாபி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

ர்கழிமாதத்திலாதிரைநாளையில் வந்துசிதம்பரதேசிகனை
ராதபாவிகட்கேதுமில்லையிந்தப் பாரில்வந்துபிறவாதவரே
ணிற்றெருடுந்திருமாளிகை மண்டபமாமதிலுந்தில்லைமாநகரம் [துவே
ணக்கிடைக்காதப்பாயிந்தபாக்கியங் காதிற்கேட்டவண்ணங்கண்ட
திபராபரமாகியதில்லைப் பொன்னம்பலவன்வளர்சந்நிதியில்
தமுங்கிதமுங்சேட்குதுவானந்த நாடகவேலையைநானறியேன்.

வசனம்.

நந்தனர் சிதம்பரங்காணுததாற் சிவலோகங்காணேனென்பார்.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

ம்பரம்வந்துதெரிசியாதசென்மம்வீணென்றுபேசி
திலெண்ணினர்பாதகமலத்தியானம்பண்ணினர்
றையனுக்குமிந்தத்தலத்தைப்பார்த்தபின்புமோட்சபதவி
த்துதல்லவோபாவிசெனனமறுத்துதல்லவோ
ாண்டுகொண்டதங்களையர் பெருமையெல்லாஞ்சொல்லிசொல்லித்
ள்ளித்தாவினர்ஞானவிரையையள்ளித்தூவினர்
லத்தினிலிதுவேதெய்வமென்றுநந்தனானந்தக்கடலில்
ாங்கிப்பாடினர்புண்ணியத்தலமென்றுதேடினர்.

இராகம்-தண்டகம்-சாப்புதாளம்.

அரகரசங்கரவண்ணாமலையம்பலத்தானே
நானுந்தனடைக்கலமென்று
உருகித் துதியாரோ-ஆநந்தம்
பெருகிப் பதியாரோ
முத்தியளிக்குந்திருமூலத்தானரைக்கண்டு
பத்திபண்ணுதவன்பாமரனல்லவோ
பாருக்குச்சுமையாச்சு-அவனிருந்து
மாருக்குச் சுகமாச்சு
மங்கையர்மோகமாய்மயங்கித்தினந்தோறு
மங்கம்புளகிதமாயவரிடுமேவல்கொண்

டாழிக்குழைத்தாரே-அனியாயமாய்
நாளையுங் கழித்தாரே
வீசிநடைநடந்தமெய்யும்பொய்யாகவே
ஓசையடங்கும்போதொருவருமங்கில்லைத்
தூசியும்போகாதே-காதறுந்த
ஊசியும் வாராதே
சிவசிதம்பரமென்றுதில்லைவெளியினின்று
பவசாகரம்வென்றுபரமபதமடையுந்
தவநெறிபொருந்தாரே-பொருந்தின
மவரையும் வருந்தாரே
சாத்திரங்கற்றாலுஞ்சதுர்மறையுணர்ந்தாலுஞ்
சூத்திரம்பெற்றாலுஞ் சொன்னேனகங்கார
மாத்திரம்போகாதே-கருணைக்குப்
பாத்திர மாகாதே
சரணாகதமென்றுசார்ந்தடிபணியாமல்
வருணாச்சிரமவிதிவழுவாதிருக்கினுஞ்
செனனாதிகள்விடுமோ-சிரவண
மனனாதிகள் படுமோ
அட்டசித்திகள்பெற்றுவாண்டாயிரங்கால
மட்டிருந்தாலுமென் மரணபயமெய்திடும்
நஷ்டஜென்ம மாச்சே-மனிதஜென்ம
மெட்டி வீணாய்ப்போச்சே
மூப்பாழுந்தாண்டி மூலத்தீமூட்டிக்கொண்
டப்பாலேநின்றா லானந்தங்காணலா
மொப்பாரில்லையடா-ஊடுருவி
நிற்பா ரில்லையடா
ஆலமிடறடக்கியம்பலக்கூத்தன்கோ
பாலகிருஷ்ணன்தொழும் பரமசிவனேயென்று
பாடிப்படி யாரோ-பருவத்தில்
தேடிப்பிடியாரோ.

வசனம்.

நந்தனார் சிவபத்திபண்ணுதவனை நிந்தனைசெய்து இன்னமு[illegible]
சொல்லுகின்றார்.

இராகம்-சுருட்டி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

வானோர்புகழ்தில்லைவனநாதர்வாழும்
ஞானசபையைப்போற்றி நமச்சிவாயவென்று
சொல்லாதவன்-கல்வி-கல்லாதவன்-வெகுபொல்லாதவன்

காசினிபுகழ்சிவகாமவல்லியைக்கண்டு
பாசமகலும்நெறிபாராதவன்சுத்தப்
பதராச்சு-ஆட்டினதராச்சு-கிருமிக்கெதிராச்சு

ஆட்டுக்காலைச்சற்றேகேட்டுவாங்கியுள்ளே
நாட்டிக்கொள்ளாதவன்மாட்டுக்குவமையென்று
நாடாரே-கண்டுகூடாரே-என்றுந்தேடாரே

அம்பலவாணனாருகில்வந்துகையால்
கும்பிட்டிறைஞ்சாதகுருடர்களுக்குத்திற
மதியேது-பாகதியேது-பண்ணும்விதியேது

நாக்கிருந்துஞ்சிவநாமத்தைநவிலாமல்
சாக்குப்போக்குப்பேசுஞ்சண்டியவனைக்கால
னடியானோ-கட்டிப்பிடியானோ-கையாலிடியானோ

வேதாந்தநூற்களைவிவரித்துணர்ந்தாலு
மேகாந்தபத்தியொன்றில்லாதவனுள்ள
முருகாது-கள்ளங்கருகாது-வெள்ளம்பெருகாது

ஆத்திமதியஞ்சடையழகனுடியகூத்தைப்
பார்த்துக்களிக்காதபாவிமனிதர்க்கொன்றும்
பலியாது-வினைசலியாது-சீலம்பொலியாது

பாலகிருஷ்ணன்தேடும்பாதாசத்தைக்கண்டு
சீலமுடனேயுண்டுசெபிக்காதவன்துன்பம்
துலையாது-இன்பம்நிலையாது-கன்மங்கலையாது.

வசனம்.

நந்தனார், சிதம்பரம் பாராத கண்படைத்தாரை முகத்தைக் கெ டுக்கவந்த புண்படைத்தாரென்று சொல்லுவார்.

இராகம்-ஆநந்தக்களிப்பிலே-ஒருபேதம்.

காணாதகண்ணென்ன கண்ணே
வீணானகண்மயிர்கண்ணதுபுண்ணே காண

சொல்லும்பொருளிறந்ததுரியவடிவமாகி
யல்லும்பகலுமற்றவானந்தப்பேரொளி காண

பசியாமலிருந்தளிக்கும் பரமரகசியபத்தி
லசையாமலேயாடு மம்பலநாதனைக் காணாத

ஊராருமறியாம லொளிகண்டுபிசகாமல்
ஈராருகாற்கொண்டு லெழும்பியமண்டபம் காணாத

அண்டத்துளடங்காத வாசைவலையைப்பூட்டி
பிண்டத்துளடங்கிய பேரின்பதெப்பத்தைக் காணாத

நாசிநடுவிருந்து நாதனே தானென்று
பேசாமற்பேசிய பெருமையையொருநாளும் காணாத

என்னையானறியேனென் றிகழ்ந்திடும்பேயனை
தன்னந்தனியனாக்கித் தருவனென்றழைத்தாரைக் காணாத

சோற்றுத்துருத்தியிதைச் சுமந்ததினாலென்ன
ஆத்திமதியஞ்சடை யழகன்மருங்கோயில் காணாத

சீலக்கமலமுகச் சிவகாமிமனமகிழ்
கோலக்கனகன்றில்லைக் குழகனாடியகூத்தைக் காணாத

பாலகிருஷ்ணன்றொழும் பாதத்தைப்பணிந்தொரு
நாளிலும்பிறவாத நலமிக்கவழிதேடிக் காணாத

வசனம்.

நந்தனார், பத்திபண்ணுதவன் முத்திபெறுவனென்று சொல்லு
ன்றார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

வதம்படித்ததும்சாத்திரங்கற்றதும் மெய்யினில்நீறுபூசுவதும்
திசிதம்பரதேசிகன் றிருவடிக்காளானாலன்றானந்தம்
டனே துலையும்பவபந்தஞ் சொன்னேன்சொன்னேன்சொன்னேன்

னுறக்கமுதலாகியநான்கு முண்டேயுலகில்யாவருக்கும்
ணவமலநீத்தர்களறிவாரகத்தைச் சுருக்கிக்கொள்ளுவாரே [னேன்
கத்தைப்பொய்யாத்தள்ளுவாரே சொன்னேன்சொன்னேன்சொன்

ருந்தவமாமுனியாகினும் நல்லராசைபொல்லாரறியாரோ
ருத்தப்படுத்திமனதைமயக்கி வைத்திடுமன்னமயக்கோசம்
ற்றுப்பார்த்தாலதுநேசம் சொன்னேன்சொன்னேன்சொன்னேன்

ரலனைகோபாலகிருஷ்ண னல்லும்பகலும்பணிந்தேற்றும்
ருவடிசரணாகதமென்றெண்ணித் தெளிந்தார்க்கன்றேபரபத்தி
றிந்தார்க்கன்றேவரமுத்தி சொன்னேன்சொன்னேன்சொன்னேன்

# திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

இப்பரிசாயிருக்கவெனக் கெய்தலரிதென்றஞ்சி
யப்பதியின்மதிற்புறத்தி னாராதபெருங்காத
லொப்பரிதாய்வளர்ந்தோங்க வுள்ளுருகிக்கைதொழுதே
செப்பரியதிருவெல்லை வலங்கொண்டுசெல்கின்றார்.

வசனம்.

இந்தப் பிராமணர்களுடைய வீடுகள் இத்தன்மையாயிருக்க எனக்கு அவ்விடத்திற்குப் போகுத லரிதென்றுபயந்து அந்தஸ்தலத்தின் மதிலின் புறத்தில் அளவற்ற பேரன்பு சமானமில்லாமல் ளரமனமுருகிக் கும்பிட்டுக்கொண்டு சொல்லுதற்கரிய எல்லையை வலஞ்செய்துக்கொண்டு போவார்.

விருத்தம்.

அம்மையாந்தில்லைமாநகர் மருங்கிடையணைந்து
சும்மையிட்டிருவிழிகளில் நீரறச்சொரிந்து
விம்மியேசிவனார்சரி தங்களைவிரித்து
கொம்மைவிட்டவர்பாடியு மானந்தங்கொண்டார்.

வசனம்.

நந்தனர், தனக்கிந்த பாக்கியங்கிடைத்ததென்று கொண்டானடிக்கின்றார்.

இராகம்-உசேனி-ரூபகதாளம்.

பல்லவி.

கொண்டானடிக்கின்றார் தில்லைக் கோயிலைக்கண்டு தாவிதாவி.

அநுபல்லவி.

அண்டரண்டந்தொழு மம்பலநாதனைக்
கண்டாரைக்கண்டுகொண் டோமென்றுநன்றாய்க் கொ

சரணங்கள்.

அஞ்சலிகொண்டுகளித்து அரகரவென்றுசெபித்து
குஞ்சிதபதத்தைத்துதித்துக் குரவைகள்பாடிக்குதித்து கொ
அங்கம்பரவசமடைந்து ஆனந்தக்கடலில்விழுந்து
பொங்கிச்சிவமென்றறிந்து புவியதிர்ந்துபணிமிகுந்து கொ
இருகண்களில்நீர்பெருக பிறைஞ்சிமனதுருக
அருமைச்சிவகதிதருக அம்பலவாணன்வருக கொ

இதுவுமது.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

கொண்டாடினடித்தாரே-நந்தனர் கோவிலைக்கண்டுதாவித்தாவி
கொண்டாடினடித்தாரே.

அநுபல்லவி.

ண்டர்மகிழ்ச்சியாலே-அரனேயென்றுமென்மேலே கொ

சரணங்கள்

பண்டுநான்செய்ததே யோகம்-அதனாலுருக்
கொண்டுவந்தேன்மானிட தேகம்-ஆகவேயிந்த
புண்டரீகப்பதவை போகம்-கண்டேனென்போல
மண்ணிலெவர்க்குண்டு யோகம்-என்றுதுதித்துக்
கொண்டாடுமிவர்புகழைக்
கூறவருமேயுற் சாகம் கொண்

வஞ்சமனதைபொரு மித்து-நினைத்தொழாத
பஞ்சபாதகப்பேரெ டுத்து-உழுத்தர்களைக்
கெஞ்சியவர்களைய டுத்து-உழலாமே
கஞ்சமலர்ப்பதங்கொ டுத்து-ஆண்டருளென்று
வஞ்சிசிவகாமிதொழும்
மணவாளனைத் துதித்துக் கொண்

ஒருநாற்புறமதில் சொலிக்க-ஊரெல்லைச்சுற்றி
வருவார்திரும்புவார் களிக்க-சிரசின்மேலே
இருகைகுவித்துவாழ் வளிக்க-வேண்டுவாரிந்தத்
திருநாளைப்போவார் மிகுக்க-ஆகையாலிந்தப்
பெருவாழ்வடைவாரிவர்
பேதமில்லையே யுரைக்க கொண்

வசனம்.

இப்படி நந்தனர் வீதியைச்சுற்றி சந்நிதி முன்வந்து தண்டாகா
ாய் விழுந்து பணிந்து புழுதிபடப்புரண்டு ஆனந்த மடைந்து நிரு
நசபைதெரிந்து தெரிசனம்பண்ணுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

சபாதெரிசனங்கண்டான் நந்தனுஞ் சுபாவமுடனேநின்றான்
சபாதெரிசனங்கண்டான் கணிதப்பிரபாவமாகிய சபாபதியிருக்கு
சதாகாலமும்வேதங்கள்மொழிந்திடுஞ் சிவர்காரமாய் செழித்துவள
ந்திடும் தில்லைமூவாயிரமுனிவர்கள்கூடுமல்லும்பகலுமவரவர்நாடும்சப

வசனம்.

நந்தனார், தெற்கு கோபுரவாயினின்று சபாபதியைநோக்கித்
திபண்ணுவார்.

இராகம்-செங்கலா-ஆதிதாளம்.

பல்லவி.

ஜெயஜெகதீசா-அதிசுந்தரகுஞ்சிதபாதா-ஓ-ஜெயஜெகதீசா.

அநுபல்லவி.

தில்லையைக்கண்டேன் தேறித்தெளிந்தேன்
எல்லையில்நின்றே னினிப்பிறவேன்காண்
எனக்கினியாரீடு-கரும்புபோ-லினிக்குதுபார்வீடு
ஆசாபாசத்தைவேரறவெட்டி யானந்தத்தின்முழுக்காட்டி
வைக்குமிதுயாருக்குங்கிடையாது-இந்தச்சுகம்-பாருக்குளிணையேது
சரணந்தமென்றிங்கே வந்தேன்சாமிபராக்கு
உமையடைந்தேன் ஜெனனதிகளான்மிகநொந்தேன்
வேறொருதெய்வங்களை வருந்தேன் ஜெ

சரணங்கள்.

தென்றிசைக்கோன்வந்தழைத்திடும்வேளையில்
பெண்டுபிள்ளைகள்பேயோட்டம்
ஓடத்திலேறியபெருங்கூட்டம்
நானும்நமனுந்திண்டாட்டம் ஒருநம்பிக்கைதாரும்
நானுனக்கருள் புரிந்தாளுவேனென்று
கனவிலாகிலும்வாருந்தட்டி யெழுப்பிக்கவலைகளைத்தீரும்
அடிமையென்று மனதுமகிழ்ந்துபாரும்
தில்லைவெளியில் வாடாவென்றுசேரும்-ஓ ஜெ

அரகரசங்கரனே பொன்னம்பலத்தாண்டவனே
பரமதயாபரமூர்த்தியென் றடிபணிந்தேன்மனங்களிந்தேன்
சாதியில்சின்னவனானால் முன்வீதியில்வந்தேனாகாதோ
பாதகஞ்செய்யினுஞ் சிதம்பரமென்று

கர்ந்தால்பழைவினைபோகாதோ
நீதிலாபெருந்தவத்தார்வந்தால்
தரிசனஞ்செய்வேன்போதாதோ
ஆதிபராபரமாகியவுனைக்கொண்டாடுவேன்
ாடுவேன்தேடுவேன்நாடுவேன் ஜெய

பாரமாகியசமுசாரம்சதாவிஷயகரமதிகோரம்
பாயமறிந்து கரையேறப்படாதுஜெகதீசுரமாய
லாசகரபிதமிந்தஜெகம்அனேகசஞ்சிதவாசனைகள்
வோகமென்கிறபாவனையால்நிவாரணம்பண்ணும்பெரியோர்கள்[வார்
ண்ணியதொழிலின்பயனறிவார் பாலகிருஷ்ணன்தொழுங் கழலணி
ண்ணியபடியேதவமுறுவார் எனதுனதென்றுமுறையிடுவார்
மாதிபண்ணியகமாதிக்கிருந்தியறுபடாதபேதைகைவிடாதேயும்-நீர்
பாபதிவெகுகிருபாநிதியுன்பிரதாபமறியேன்சுபாவம்பறையன் ஜெ

விருத்தம்.

வாட்டுவாருடல்வேர்பட தழலிடைவருத்தி
மூட்டுவார்மூலக்கனல் மதிமண்டலமுகட்டில்
மாட்டிறைச்சியையருந்திய புலையன்றன்மனத்து
ளாட்டுக்கால்சற்றேதந்திடு மம்பலத்தரசே.

இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

ாதாதாநீயாடியபாதம்தத்தித் தெய்தத்தித்தெய்யென்றாடியபாதம்
ூதரவாகபதஞ்சலிமாமுனிக் கானந்தநாடகமாடுந்திருவடி தா
ூகமவேதபுராணங்களோதிய யோகிகளாலேதேடுந்திருவடி தா
ந்தைமகிழ்ந்துகுவிந்திடவே யதிசுந்தரரஞ்சிதகுஞ்சிதபாதம் தா
ாரளந்திடுங்கோபாலகிருஷ்ணன்துதி பாடிப்பரவிப்பணியும்பாதம்

* இராகம்-ரீதிகௌளை-ஜம்பைதாளம்.

பல்லவி.

ாண்டவதரிசனந்தாரும் - தாமதம்பண்ணவேண்டாம் - இதுசமயம்
ாண்டவதரிசனந்தாரும்.

அநுபல்லவி.

ஆண்டவனேயுன்பெருமையை யாரறிந்துரைசெய்வார்
நம்பியிருக்கிறேன்பேதை யெந்தனுக்கொருதரம் தாண்

சரணங்கள்.

ஆசைவலைக்குள் தங்கிபொங்கி மயங்கித்தடுமாறிமும்மதங்கள்மீறி
யானெனதென்றுரைக்கும் பாசமகலநெறிநிறுத்திட
மாயவன்கோபாலகிருஷ்ணன் பணிந்திடுமுன்திருவடி [ன்றாடிய த
தாரிதகுகுஜெம்தரிககணந்தரி திரிகுதிரிகுதீம்தீம்தக்கிடத்தகதோமெ

வசனம்.

நந்தனார், பிறவிப்பிணிக்கஞ்சித் துதிபண்ணுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

அம்பலவாணாவுன் சரணமடைந்தேனுனை
ஆகரித்தாளுவதுன்பார மல்லவோசொல்லவோ
எடுத்திடுஞ்செனனங் கணக்கெழுதத்தலையாதென்பாடு
இன்னமும்பிறந்திடுவேனோ நடேசனேயீசனே
ஆசையெனும்பெருங்காட்டி லேயரற்றும்முழுமூடன்
அகலவிடாதேயும்நம்பினே னுன்னையையனேமெய்யனே
பாரளந்தகோபாலகிருஷ்ணன் பணியுமலர்ப்பாதம்
பாவியென்னுள்ளுறவே கருணைபாருமேவாருமே.

வசனம்

அம்பலத்திலாடும் நடனத்தைவருணித்துச் சொல்லுவார்.

இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

ஆடியபாதா-இருவர்கள்-நாடும்விநோதா ஆடி

அநுபல்லவி.

ஆடியபாதாவயனுமாலுந்தினம்
தேடியுங்காணுமற்றிரைமறைவாக
தித்தித் தித்தித்தித் தித்தியென் றாடி

சரணங்கள்.

வீரவெண்டையஞ் சிலம்பசைந்திட
மேவுஞ்சடையும் புலியசைந்திட
சாருந்தொண்டர்கள் மனங்குவிந்திடச்
சாலோகாதிபதவியுந்
தந்தோந் தந்தோந் தந்தோந் தாமென்று ஆடி

வேதமுனிவர்கள் பாடவுஞ்-சன
காதியோகிகள் கூடவும்-வெகு
நாதமெங்கினுமூடவுந்-திரு
நந்திமத்தளம்போடவுந்
தகுந்தகுந் தகுந்தகுந் தகுந்தகுந் தகுமென்று ஆடிய

பாலகிருஷ்ணன் துதிகள்செய்திடப்
பண்ணவர்கள்பூ மாரிபெய்திடச்
சீலமுள்ளசிவகாமி மகிழ்ந்திடத்
திருச்சிற்றம்பலத்தரசனுந்
தாந்தாந் தாந்தாந் தாந்தாந் தாமென்று ஆடிய

வசனம்.

நந்தனார், அடிமைத்திறங்காட்டிச் சொல்லுகின்றார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

அறிந்தறியாமலேசெய்ததபராதமையா-என்னை
ஆண்டவனே தில்லைத்தாண்டவராயா அடிமையுன்சரணம்
அருகியவண்டபகிரண்டங்கள்கடந்திடுமத்தாவுன்சரணம்
பதஞ்சலிக்காகநடம்புரியுந்திருவம்பலக்கூத்தாவுன்சரணம்
நடுவுமாதியுமந்தமுமொன்றுமிராதநிராமயனேசரணம்
பரமானந்தக்கடலேவொளியேயறிவின்னறிவேவுன்சரணம்
ஒன்றுமற்றநித்தநிரஞ்சனநிட்களநிற்குணரூபாவுன்சரணம்
அருதியின்மகிமைகண்டோரறியாதநடையேயுன்சரணம்
உள்ளுக்குளெண்ணேபோலெங்குநிறைந்தயீசாவுன்சரணம்
இட்டிரண்டுமறியாதவன்கனகசபேசாவுன்சரணம்.

வசனம்.

நந்தனார், இப்படியனேகவிதமாய்க் கொண்டாடி உட்புகுந்து
தாண்டவம்பாராத மனக்குறைவுகொண்டு சுவாமியை நானுள்ளே
வரலாமோவென்று கேட்கின்றார்.

இராகம்-மாஞ்சை-ரூபகதாளம்.

பல்லவி.

வருகலாமோவையா-உந்தனருகில்நின்றுகொண்டாடவும்பாடவும் வ

அநுபல்லவி.

பரமகிருபாநிதியல்லவோயிந்தபறையனுபசாரஞ்சொல்லவோ-உந்தன்
பரமாநந்தத்தாண்டவம்பார்க்கவேநானிங்கே வருகலா

சரணம்.

பூமியில்புலையனாகப் பிறந்தேனே-நான்
புண்ணியஞ்செய்யாம லிருந்தேனே
சாமியுன்சந்நிதி வந்தேனே-பவ
சாகரத்தையு மிழந்தேனே-கரை
கடந்தேனே சரண மடைந்தேனே-தில்லை
வரதாப்ரதாபமும் பாபமுந்தீரவே வரு

வசனம்.

இப்படி நந்தனார் தில்லையில்வந்து கொண்டாடிப் பின்பு பத்திம ர்க்கத்தையெடுத்துப் பேசுகின்றார்.

சிந்து.

இதுதானேதில்லைப்பதி-என்று-எக்கலித்தாராடிக்கொக்கலித்தார்
ஐயாவுன்சந்நிதியைக்-காண-வாசைகொண்டுவந்தேனேசமுடன்
தெருவில்பொடித்தூளை-அள்ளித்-தேகமுழுதிலுந் தாகமுடன்
தரித்தார்திருநீறாய்-நாலு-சாஸ்திரவேதங்கள் பார்த்துணரும்
பெரியோரிருக்குமிடம்.

வசனம்.

நந்தனார், தில்லைத்தலம் இப்படியிருக்குதென்று சொல்லுகின்றார்

இராகம்-செந்தகடுக்கா-தண்டகம்-ஆதிதாளம்.

ஆகமங்கள்பலவேதியர்கள்சிவனடியார்கள் கூட்டம்-மல
தேகமாகியெப்போதும்விளைகின்றயோகிமுனிக ளுட்டம்-பூ
லோகமிதுகைலாசமென்றுமிதைப்போற்றுவார்க ளாட்டம்-அ
வேகமாகவெங்கேயாகினும்வெளியேபோகவேணு மையே
இங்கிருக்கலாகாதையேஇங்கிருக்கலாகா தையே
பாவிப்பறையனிங்கேவரலாமோசுவாமிதரிசனந் தர்லாமோ
பாதகமலங்களைத்தொடப் போமோ
பாவமெனைப்பிரிந்துதொலை போமோ
இங்கேஆகாதாகா தையே

வேள்விசெய்யும்புகைமேலுலகெழும்பிப்போகு தையே
புண்ணியவான்கள்புரியுந்தவமுடன்
அரகரசிவனென்றுஆடிப்பாடிக்கொண்டு
பரிவுடன்றனைப்பிரதட்சணம்வருமிடம்ஆகாதாகா தையே
மணியாடுதுவெகுசெனக்கூடுது வீதிவலமாகுதுதிருப்பதம்பாடு
உள்ளேநடமாடுதுபணிவிடைபோகுதுபரவசமாகுது மெத்தப்ப
மாகுது இங்கே ஆகாதாகா தையே
தீண்டாதேஇங்கேவேண்டாதே சும்மாயிறையாதேஇங்கேதரியாதே

ன்னைப்பாராதே படியேறாதே உள்ளேபோகாதே வரலாகாதே
பன்பார் ஆகாதாகா ரையே

சிந்து.

பரியோரிருக்குமிடம்-இந்தப்-பேயனிருப்பதுஞாயமல்ல
ஞைபறைச்சாதி-தில்லை-நந்தன்றெரிசனமாதரவாய்ப்
ண்ணுப்படுபாவி-இந்தப்-பாரிலிருப்பதுசீரலவே
ன்றேகுளத்தோரம்-புக்கி-ஏங்கிநின்றார்துயர்நீங்கிநின்றார்
ாப்பெருங்கவலை-கொண்டு-உள்ளங்குழைந்திடவெள்ளமெனக்
ண்ணீர்கரைபுரள-இரு-கைதொழுதாரவர்மெய்தொழுதார்
ழெபுரண்டழுதார்.

---

# திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

செல்கின்றபோழ்தந்தத் திருவெல்லைபணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்த்தபயில் வேள்வியெழும்புகையு
மல்குபெருங்கிடைபோதுமடங்க ணெருங்கினவுங்கண்
டல்குந்தங்குலநினைந்தே யஞ்சிபணைந்திலர்நின்றார்.

வசனம்.

திருநாளைப்போவார் சிதம்பரத்துக்குப் போனபொழுது அத
எல்லையைக்கண்டு நமஸ்கரித்து எழுந்து விருத்தியாகச் சிவந்த
க்கினியை வளர்த்து ஆகுதிசெய்கின்ற யாகத்தால் உண்டாகிய
கையும் மிகுந்த பிராமணர்களின் கூட்டம் வேதமோதுகின்ற திரு
ங்கலையுங் கண்டு குறைவாகிய தம்முடைய குலத்தை நினைந்து
ர்ளே போவதற்குப் பயந்து நின்றார்.

இதுவுமது-விருத்தம்.

நின்றவரங்கெய்தரியபெருமையினை நினைப்பார்முன்
சென்றினையுங்கடந்தூர்சூழெயிற் றிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைகடோறுங் குலவும்வேதிகைக
ளொண்டியமூவாயிரமங் குளவென்பாராகுதிகள்.

வசனம்.

சிதம்பரத்தெல்லையில் நின்றுக்கொண்டிருந்த திருநாளைப்போ
ர் தாம் உள்ளே யடையக்கூடாத அக்கோயிலின் பெருமையை

நினைப்பாராகில் முதலில் அந்த எல்லையைக் கடந்து ஊரைச் சுற்
யிருக்கும் மதிலின் திருவாயிலை யடைந்தார். அங்கே திண்ணைக
பொருந்திய மலைகள்போ லுயர்ந்த மூவாயிரம் வீடுகள்தோறும் ஓம
கள் செய்யப்படுகின்றனவென்று சொல்லிக்கொள்ளுவார். சுவா
யைப் பூசிக்கின்ற தில்லைமூவாயிரவருடைய மாளிகைகள் மூவாயி
மென்றார். வேதவிதிப்படி ஆகுதி செய்யும் பிராமணர்களுடை
வீதியில் தாம் போகக்கூடாதபடியால், அதை நினைந்து தன் குல
தையிகழ்ந்து இங்கிருக்கலாகாதென்று அவ்விடம்விட்டு ஒரு குள
தருகில் வந்து சுவாமி உன்னைப் பாராத ஜென்மத்தை யேன்படை
தாயென்று தாழப் புரண்டழுவார்.

இராகம்-சரசாங்கி-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தச்சடலம் வந்தவாறேதென்றறிகிலேன்
நானேதென்றறிகிலேன்.

அநுபல்லவி.

சந்ததமுந்தில்லையம்பலத்தானை
சிந்தித்துமாயச்சிக்கறுக்காமல் இந்

சரணங்கள்.

அங்கமலங்களைப்போக்கிடுஞ்சிவ
கங்கையிலாடிக்களங்கமறாமல் இந்

ஆடும்நடனங்கண்டானந்தமாகி
பாடிப்படித்துப்பணிந்துகொள்ளாமல் இந்

அஞ்சக்கரத்தையெடுத்துருவேற்றி
வஞ்சப்பிறவியின்மயக்கறுக்காமல் இந்

பாலகிருஷ்ணன்றொழும்பாதத்தைக்கும்பிட்டு
சீலமுள்ளமுத்திசித்திபெறாமல் இந்

* இராகம்-கமாஸ்-திசரமதாளம்.

பல்லவி.

கனகசபேசன்சேவடி நான்கண்டதில்லை-தில்லைக்
கனகசபேசன்சேவடி

அநுபல்லவி.

கனகசபாபதியைக் கண்டபேரைக் கண்டால்போதும்
ஜெனனமரண மோகந்தீர்ந்து சிவனைச்சேரவே

ணகசெம்தரி நம்தரி தோங்தோம்தரிகிடதாதா
மிதகிடஜெணு கிடதகததிகணத் தோமென்றுடியதில்லைக் கனக

ம் லும்பகலுமிந்த விஷையானந்தத்தில்மூழ்கி
றிவுகெட்டமாடதுபோல் ஆனதுபொய்யோ
லுயிரிலும்நிறைந்த பரமசிவஞானிகளே
த்ததில்லைக்கேட்டதில்லை கோபாலகிருஷ்ணன்கவி
னிடசாதியில்பிறந்து மங்கையர்மோகத்தில்வீழ்ந்து
னுந்தவமுறையிழந்து தன்னரசுநாடாய்த்திரிந்து கனக

இராகம்-தந்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கனகசபாபதி-தரிசனம் ஒருநாள்-கண்டால் கலிதீரும்.

அநுபல்லவி.

ஜனகமகாமுனிகைதொழுதேத்திய
தினகரகோடிதேசோன்மயமாகிய கனக

சரணங்கள்.

மனதிலொடுங்கியகல்மிஷம் போக்கும்
மாயப்பிணியதனைமறுவடி வாக்கும்
செனனமரணசமுசாரத்தை நீக்கும்
திருவடிநிழலிலேகூட்டியே காக்கும் கனக

சுருதிமுடிகளிலுஞ்சொல்லிக்கொண் டாடும்
தூயவெளியையொளியாகவே கூடும்
தருமநெறியுந்தவறுதுள நாடும்
ததிங்கணத்தோமென்றுதாண்டவ மாடும் கனக

பற்பலயோசனைசெய்வதுந் தொல்லை
பரகதியடையவுபாயமு மில்லை
அற்புதமாகவேதானொரு சொல்லை
அணியுங்கோபாலகிருஷ்ணன்பணியுந் தில்லைக் கனக

இராகம்-கரகரப்பிரியை—சாப்புதாளம்.

பல்லவி.

டைக்கடைத்தேறவேணுமே-கனகசபாபதிநடனங்
டுகளிக்கவந்தநந்தனார் கட்டை

கட்டைக்கடைத்தேறட்டுமோசென்மம்
கெட்டதல்லவோயிட்டமறியேன் கட்

முத்தியளிக்கும்பத்தியிலேயென்
சிற்றம்பலவன்சித்தமறியேனே கட்

வசனம்.

தேகம் படைத்தால் சிவபத்தி பண்ணவேண்டுமென்று நந்த
சொல்லுகின்றார்.

இராகம்-தண்டகம்-ரூபகதாளம்.

தேகம்வந்தவாறு சொல்லவோ-சிதம்பரேசனடியைத்
தினமுந்தொழுதிருப்பதல்லவோ
இந்தவிஷயசுகத்தை நாடுமோ-பாவி
மனக்குரங்குமிருப்பிடங்காணும லோடுமோ
தில்லைத்தலத்தைக்கண்டு மாச்சுதே-உள்ளே
சென்றுநடனதெரிசனம்பண்ணுமற் போச்சுதே
பறையனென்றசென்மம் போகுமோ-பாழ்
வினையாலின்னம்பாரில்வந்துபிறக்க லாகுமோ
அடிமையென்றுவந்தே னுய்யுமோ-ஒன்றை
நானறியேனம்பலத்தெய்வமென்ன செய்யுமோ
பார்த்ததெல்லாமழிந்து தோணுமோ-கோ
பாலகிருஷ்ணன்பணியும்பரமன்கருணை வேணுமோ

வசனம்.

சிதம்பரதெரிசனங் கண்டபேர்க்குச் சென்மமில்லையென்பார்.

இராகம்-மோகனம்-ரூபகதாளம்.

பல்லவி.

தெரிசனங்கண்டார்க்குமறுசென்ம மில்லை
வரிசையுடனம்பலவன்வாழ்கின்ற தில்லை

அநுபல்லவி.

இரவுபகலிடைவிடாதேகரச பத்தி
இன்பமுறுமானந்தம்பொங்கிவரும் நத்தி
பரவிவருமவனருகிலணிமாதி சித்தி
பணிந்துவந்துசிற்றம்பலத்தைவலஞ் சுற்றி

சரணங்கள்

சொர்ப்பனமென்றிவ்வுலகம்தோன்றிவரும் வேதம்
சொன்னததுநீயென்றபடியாகும் போதம்
அற்புதமிர்தங்கமொடுதாளவகை கீதம்
அனவரதந்திருநடனமாடிவரும் பாதம் தெரி
அல்லும்பகலோயாதுவடியார்கள் கோஷ்டி
அரகராவென்றமிர்தபானமதைப் போட்டி
தில்லைவாழந்தணர்கள்கைபிடித்துக் கூட்டி
சிக்கெனவேதிரைதிறந்துபரவெளியைக் காட்டி தெரி
நஞ்சுண்டகண்டனுக்குக்கொன்றைமலர் சாற்றி
நல்லதிருச்சாந்தணியுமம்பிகையைப் போற்றி
குஞ்சிதபதந்தனதுமனதிலுற வேத்திக்
கோபாலகிருஷ்ணன்றொழும்நடராஜ மூர்த்தி தெரி

வசனம்.

நந்தனார், தனக்கு தெரிசனங்கொடுக்க அம்பலவாணர் எப்போ வருவாரோ வென்று விசாரப்படுவார்.

* இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

எப்போதுவருவாரோ-எந்தன்கலிதீர
எப்போதுவருவாரோ.

அநுபல்லவி.

எப்போதுவருவாரோ எந்தன்கலிதீரச்
செப்பியதில்லைச் சிதம்பரதேவன் எப்போ

சரணங்கள்.

நற்பருவம்வந்து நாதனைத்தேடும்
கற்பனைகள்முற்ற காட்சிதந்தாள எப்போ
அற்பசுகவாழ்வி லானந்தங்கொண்டேன்
பொற்பதத்தைக்காணேன் பொன்னம்பலவாணன் எப்போ
பாலகிருஷ்ணன்போற்றிப் பணிந்திடுமீசன்
மேலேகாதல்கொண்டேன் வெளிப்படக்காணேன் எப்போ

இராகம்-துக்கடா-ஆதிதாளம்.

வருவாரோ அருள்புரிவாரோ-எந்தன்
மனதுசலிக்குது நானென்னசெய்வேன்
அரகரசங்கரவம்பலவாணன்
ஆதரிக்காதிருப்பாரோ ஒருக்கால்வருவாரோ

வசனம்.

நந்தனர், தான் சின்னசாதியானதால் வருவாரோ வாராரோவெ ன்று சஞ்சலப்படுவார்.

இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

வாராமலிருப்பாரோ-ஒருக்கால்-வருவாரோவறியேன்.

அநுபல்லவி.

பாராமலிருப்பாரோ பதஞ்சலிமுனிக்குப்பொற்
பாதங்கொடுத்தபர மேஸ்வரநானென்று வாரா

சரணங்கள்.

கனவினில்வந்து கழனிமுழுதும்நட்டு
மனதுமகிழ்ந்துயென்னை வாவென்றுசொன்னவர் வாரா

கலக்கமறவேயவர் காலுக்குக்கும்பிட்டு
குளத்தங்கரையில்நின்று கூப்பிடும்வேளையில் வாரா

அல்லலறுத்துப்பர மானந்தமேதருந்
தில்லைத்தலத்தைக்கண்டு தெரிசனம்பண்ணியும் வாரா

வசனம்.

நந்தனர், இதுவரையில் வாராதபடியால் இனிமேல் தில்லைத்தல த்தை விடாமற் சுற்றிவந்து தேகத்தைத் தள்ளுவோமென்று நிச் யம்பண்ணுவார்.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்வரக்காணிலேன் என்னசெய்குவேனவர்

அநுபல்லவி.

இன்னம்வரக்காணிலேன்-தில்லைபொன்னம்பலவாணன்பண்ணையும்ந
டென்னையுமிங்கேவாவென்று சொன்னவர்மறந்தாரே இன்

சரணங்கள்.

சொல்லும்பொருளுகந்த சோதியேமகிழ்ந்துவாழுந்
தில்லையைவிடாமற்சுற்றித்தேகத்தை மாற்றிக்கொள்வது நன்று
பாலகிருஷ்ணன்போற்றும் பாதச்சிலம்புகுலுங்ககோலமுடநடனங்
கண்டேன்குறைகள்தீர்ந்து தென்றுசொல்லவுந்தான் இன்

வசனம்.

நந்தனர், இப்படிச்சொல்லிக்கொண்டு கண்ணீர்சொரிந்து புரண் டழுவார்.

சிந்து.

ழேபுரண்டழுவார்-ஒன்றுங்-கேள்விமுறையில்லையோநாதா
வன்றேதலைகுனிந்தார்-எந்தன்-வேதனையைக்கண்டு யாதரிக்குந்
தய்வங்கிடையாதோ-பாவி-சித்தந்தெளியவி-ரக்திதந்து
ாவென்றழையாரோ-விண்ணில்-வானவர்கள்போற்று மூனமிலா
னகசபை நடனங்-கண்டு-காயங்களித்திட நானடியேன்
ருந்திந்துதியேனோ-எந்தன்-வாளுளுருகுது வீணனையே
டா இதென்னசென்மம்.

விருத்தம்.

சாதிபேதமுங்குணங்குறி யாவையுந்தள்ளி
ஆதியாகநான்கூவினேன் றிசைதனிலணைந்தும்
மாதவம்புரிதொண்டர்கள் பணிதிரண்மறைக்கக்
கோதிலாதொருதொண்டுமிப் பாவிக்குக்குறையோ.

வசனம்.

நந்தனர், சுவாமி உன்னை சரணாகதமென்று நம்பிவந்து துன்பப்
டலாமா சிவனே சிவனேயென்று பெருங்குரலிட்டு தனக்கு சென்
ம் போதும்போதுமென்று சொல்லுகின்றார்.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

போதும்போதுமையா-எடுத்தஜென்மம்
போதும்போதுமையா.

அநுபல்லவி.

மாதவமுனிவர்கள் வந்திச்சுந்தில்லை
வனத்திலனுதினமும் வளருமம்பலவா — போது

சரணங்கள்.

கோத்துநெளியும்புழு வூத்தைநரம்புகளும்
நாத்தமலங்களூறு மூத்திரக்கும்பியும் — போது
சந்ததமுமடியேன் யெந்திரம்போலே தான்
வந்தெழும்வகையிலும் நொந்துமிருந்தேன் — போது
கொழுத்தவாணிகள்போலே யுறுத்துமிரும்புமன்னை
வயிற்றிலிருந்துபடும் வருத்தமென் சொல்வேன் — போது
மாதர்கள்மீதினில் மையல்கொண்டேங்கினுள்
வேதனைகொண்டு வெறும்பயலானேன் — போது
அண்ணல்கோபால கிருஷ்ணன் பணியுந்திரு
வம்பலமேவும்பொன் னம்பலவாணா — போது

வசனம்.

ஜென்மமே கஷ்டம் அதிலும் புலையனாய்ப் பிறப்பது மிகவும் கஷ்டம் என்று நந்தனார் சொல்லுகின்றார்.

இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தஜென்மம்வேண்டாம்-இனி
எந்தஜென்மம்வந்தாலும்வரட்டும். இந்த

அநுபல்லவி.

நந்திநடுவினில் மந்திரங்கள்சொல்லி
வந்தனங்கள்செய்து சிந்தைமகிழாத இந்த

சரணங்கள்.

வேதமறிந்தவர் பாதம்பணிந்தவர்
போதமடைந்திடாத் தீதடைந்தேன்பாவி இந்த

பாவிப்பறையாநீ தூரவிலகென்று
ஆவிதவித்திடப் பாரிலுரைத்திடும் இந்த

* இராகம்-கௌரிமனோ ரி-சாப்புதாளம்.

பல்லவி.

எப்போதுலையுமிந்த துன்பம் ஜெகதீசன்
கருணையிருந்தாலன்றோ இன்பம் எப்

அநுபல்லவி.

கற்பவாசதுக்கம் ஆனாலும் கேடு
கௌரிமனோகரனை தினம் நாடு எப்

சரணங்கள்.

ஆசையுடனலையாதவிடங்களுமுண்டோ
அனவரதமுபகிலேசமுமில்லைதெரியாமலேபோனதன்றோ
பாலகிருஷ்ணதாசன்தொழும்நடராஜமூர்த்தியை
பூசைகள்செய்யாமற்போனதுபாசமறவழியில்லை
பஞ்சகோசங்களைநானென்றுநம்பினது எப் *

இராகம்-ஆகிரி-ரூபகதாளம்.

பல்லவி.

தில்லைவலஞ்சுற்றினார்-சிதம்பரத்
தெல்லைவலஞ்சுற்றினார்

அநுபல்லவி.

தில்லைவலஞ்சுற்றினுர் தேவருமறியாத
எல்லைவாசல்கடந் திருளறவேண்டி தில்

சரணங்கள்.

சாதிக்குறையைத்தானே சந்ததமுநினைந்து
வேதனைகொண்டுள்ளம் வெதும்பியேவாடி
பாதிப்பிறையணியும் பரமசிவனைக்கண்டு
போதமடைந்துபரி பூரணமாகத் தில்

மோகவலைக்குட்சிக்கி முழுமூடனுகவே
போகமேநில்லையென்று புத்திகெடாமலுமை
பாகனைவேண்டிநற் பரவசமாகியே
ஏகரசத்திற்றன்னை யிருத்திச்சுகிக்கவே தில்

ஓராறுதாண்டியே யுண்மணிக்கோட்டைகள்
சீராறுங்காணுத சிதம்பரரகசியம்
ஈராறுகால்கொண்டு யிருத்திப்புலனைந்து
போராறுபெருகியே பெருவெளியான தில்

வசனம்.

இப்படித் தில்லைத்தலத்தைவிடாமல் சுற்றிவந்தால் தன்னிட
சுவாமிவருவாரென்று மனதைப்பார்த்துச் சொல்லுகின்றூர்.

இராகம்-யமுனுகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

வருவார்வருவார்மனமே நீமயங்கா
திருசொன்னேன் சொன்னேன்.

அநுபல்லவி.

வேண்டுதருவார்கருணைபுரிவார் தில்லைத்திருவம்பலவன்
பரகதியுந்தருவார்சாதியில் பறையனென்றுபாரார்நீயதை
உறுதிகொள்ளவேணும் மெய்யன்புடனே
அரகரவென்றொருதரஞ் சொன்னுலும்போதும் வ

வசனம்.

நந்தனுர், தன்னை இரட்சிக்கும் சமயம் இதுதானென்று செ
லுகின்றூர்.

இராகம்-தனசரி-ஆதிதாளம்.

பல்லவி.

இதுநல்லசமயமையா-இரட்சிக்க
இதுநல்லசமயமையா.

அநுபல்லவி.

இதுநல்லசமயமையா என்னைரட்சித்தாளும்
ஈசமகேச நடேசசபேசா இது

சரணம்.

பாலகிருஷ்ணன்போற்றும் பதங்களைக்காட்டி
சீலமுள்ளமுத்தி சேருவதற்காக இது

வசனம்.

நந்தனார். இவ்வளவு சொல்லியும் சுவாமி இரங்காமல் போக
ண்டியதென்னவென்று சொல்லுகின்றார்.

இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இரக்கம்வராமற் போனதென்ன காரணம்சுவாமி
இரக்கம்வராமற் போனதென்ன.

அநுபல்லவி.

ணைக்கடலென் றுமெந்தன் காதில்கேட்டுநம்பிவந்தேன் இர

சரணங்கள்.

லமருந்தியண்டருயிரையாதரித்தவுனதுகீர்த்தி
லகிருஷ்ணன்பாடித்தினமும்பணிந்திடும்நடராஜமூர்த்தி
பியெத்தனைநான்செய்கினும்பாவித்திடுஞ்சிதம்பரமென்று
ாழிகற்றவர்வழிபெற்றவர்கனகசபாபதியின்னும் இரக்க

கலிநிலைத்துறை.

அண்டமானதியாவையும் வேள்விகளனைத்தும்
குன்றிலாத்தவம்புண்ணிய மாமலைகுவித்தும்
வின்றிடாமலேயீசனுட் களித்தவிவேகம்
மன்றுளாடியபாதத்தி லேமனம்வருமே.

வசனம்.

நந்தனார், மகா புண்ணியசாலிகளுக்கு முத்திவருமே யன்றி
ர்க்கு வாராதென்று சொல்லுகின்றார்.

இராகம்-தனுசரி-ஆதிதாளம்.

சாதியில்தாழ்ந்திடும்புலையனுக்குபர கதியோ-வேத
சாஸ்திரநான்கினுமோதறியாதது விதியோ
நண்டுநத்தைகளைவதைசெய்தருந்திய தேகம்-மன்றுள்
நடனதெரிசனங்காணவென்றலதி மோகம்
எந்தவழியைக்கண்டீடேறுவது ஞாயம்-செக
தீசனுக்கன்றேதெரியுமந்தவு பாயம்
சிதம்பரம்போவேனென்றுரையாத பாவி-இந்த
சென்மமெடுத்துவீணாகத்தவிக்குதென் னுவி

வசனம்.

நந்தனார், இப்படி நான் ஈனசாதியாயிருந்தாலும், உம்முடை சரணாரவிந்த பத்தியை மறந்தவனல்லவென்று சொல்லுகின்றார்.

இராகம்-மணிரெங்கு-ரூபகதாளம்.

கண்ணிகள்.

எப்படிக்கெட்டாலுமுந்தன் பொற்பதமறவேன்காணும்
எப்படிக்கெட்டாலுமுந்தன்
அற்புதமாகியதில்லையம்பலவாணரேயென்
சொர்ப்பனத்திலுமையன்றிமெய்ப்பொருளாகவும்வேண்டே
தப்பிதமெத்தனைசெய்கினும்
கைப்பிடித்துவாண்டுகொள்ளும் எப்ப

---

## திருநாளைப்போவார் புராணம்.

கொச்சகக்கலிப்பா.

இவ்வண்ணமிரவுபகல்வலஞ் செய்தங்கெய்தரிய
வவ்வண்ணம்நினைந்தழிந்த வடித்தொண்டரயர்வெய்தி
மவ்வண்ணத்திருமிடற்றார் மன்றுள்நடங்கும்பிடுவ
தெவ்வண்ணமெனநினைந்தே யேசறவினொடுந்துயிலார்.

வசனம்.

இந்தப்பிரகாரம் இராப்பகலாக வலம்வந்துகொண்டு உள்ளே போகக்கூடாத தன்மையை நினைந்து வருத்தப்பட்டயர்வு பொரு திய அடியவர் வேசாரி கரியநிறமுள்ள கழுத்தினையுடைய சுவா கனகசபையில் ஆடுகின்ற நடனத்தை எப்படி தரிசிக்கலாமென் விசனத்தோடும் நித்திரைசெய்வார். சற்றுநேரம் நித்திரை செய் பிறகு மறுபடியும் எழுந்து சொல்லுகின்றார்.

இராகம்-கன்னடபியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

விருதாச்சென்மமாச்சே-வந்தும்-விருதாச்சென்மமாச்சே.

அநுபல்லவி.

காலமுமைபன் சந்நிதான த்திலிருந்துநிதானம்பெருமல் விரு

சரணங்கள்.

முத்தியளித்திடும்மூர்த்தியைக்கண்டு
பத்தியைப்பண்ணிபதமடையாமல் விரு

பொற்கழலசையப்பொதுவிலிருந்து
தக்கவராடுந்தன்மையைப்பாராமல் விரு

தில்லைக்கதிபதிதெரிசனங்கொடுத்து
எல்லையில்வாவென்றிரங்கியழைத்தும் விரு

* இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னேரமுமுந்தன்-சந்நிதியிலேநா-னிருக்கவேணுமையா

அநுபல்லவி.

ன்னஞ்சோலைதழைக்கும் தென்புலியூர்பொன்னம்பலத்தரசே
[யென்னரசே என்

சரணங்கள்.

சையெங்கினும் புகழுஞ்சிவகங்கையுந் தேவசபையுஞ் சிவகாமிதெரி
முழம், பசிகொடாதுபார்த்தபேர்க்குக்கலக்கங்கள்பறந்திட மகிழ்ந்
ன்னைப்பாடிக்கொண்டு என்

சாக்ஷரப்படியுங் கொடிக்கம்பமும் கோவிலழகும் அரிதானரகசி
ம், அஞ்சல்கூறும் வீரமணிகளோசையும் அந்தக்கரணமயக்கந்
ந்துபாடிக்கொண்டு என்

மருவும்தெருவுந்திருக்கூட்டமும் தேவருலகில்கிடையாத வதிச
ம், பாலகிருஷ்ணன் பணியும்பாதம் பவமெனும் பயங்கள்தீர்ந்து
ர்கள்தூவிதொழுதுக்கொண்டு என் *

வசனம்

நந்தனர், தனதுபதவிக்கு யோக்கியமல்லவென்று தள்ளுவாரோ
ாள்ளுவாரோ அப்படித் தள்ளினாலும் தில்லையிலேதானே என்

தேகத்தை விடுவதேயன்றி திரும்பிப் போகமாட்டேனென்று சொ
லிப் புலம்புவார்.

இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

தள்ளுவாரோ எந்தனைக்கைக் கொள்ளுவாரோ.

அநுபல்லவி.

தள்ளிவிட்டால்நான்போகேன் தனித்திருக்குஞ்சமயமல்ல
அள்ளிவிட்டேனன்பையே யம்பலவாணனெருக்கால் த

எனதுனதென்றபிமான மிச்சையறும்நிஷ்டைபண்ணி
மனமிறந்ததூவெளியில் மருவாதபாவியென்று த

நாறுமிந்தபொய்யுடலை நாளையெண்ணிநான்சுமந்து
தூறுபட்டதுன்பமெல்லாந் தொலைந்துதென்றுயிங்கேவந்தும் த

பாலகிருஷ்ணன்தேடிவரும் பாதமலர்நான்காணேன்
வேல்விழியார்மோகங்கொண்டு விவேகமற்றமூடனென்று த

சிந்து.

அடடா இதென்னசென்மம்-என்று- அத்தனுறுமெல்லைசுற்றிவந்தார்
இரவும்பகலோயா-இதை ஈசன்கண்டுவிசு வாசமுடன்
பாலகிருஷ்ணன்பணியும்-திருப்-பாதமுள்ள தில்லைநாதனிவன்
கனவிலுருவாகி.

---

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

இன்னறருமிழிப்பிறவி யிதுதடையென்றேதுயில்வா
ரன்னிலைமையம்பலத்து ளாடுவாரறிந்தருளி
மன்னுதிருத்தொண்டரவர் வருத்தமெலாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண் முறுவலொடுமெருள்செய்வார்.

வசனம்.

இப்படி நந்தனர், இரவுபகலோயாமல் தில்லைத்தலத்தைச் சு
றிவருவதால் தேக வருத்தமடைந்து வருத்தத்தினல் மயங்கிச்சா
ந்து நித்திரையடைந்தார். அந்த நித்திரையிலே நடராஜமூர்த்தி
து காட்சிதந்து சொல்லுவார். எமதன்பிற்சிறந்த நந்தனரே உம்
டத்தில் நமது பத்தர்களாகிய வேதியர்களை வரச்சொல்லுவோ
அவர்கள் முன்பாக நீர் அக்கினிப்பிரவேசமாகி யெழுந்து வேதி

டனே சபாப்பிரவேசம் பண்ணுமென்றுரைபகர்ந்து ஐயன் அந்
த்தானமானார். நந்தனார் கனவில் காட்சியானதைக் கண்டு களித்து
த்தெழுந்து அளவில்லாத சந்தோஷங்கொண்டு நன்றியறிந்து
ாமியைத் தோத்திரம்புரிந்து சொல்லுகின்றார்.

* இராகம்-அரிகாம்போதி-திசாம்புதாளம்.

பல்லவி.

பார்க்கப்பார்க்கத்திகட்டுமோ-உன்பாததெரிசனம்
பார்க்கப்பார்க்கத்திகட்டுமோ

அநுபல்லவி.

ஆர்க்குமானந்தம்பொழியுந்தில்லைத்தாண்டவராயா பார்

சரணங்கள்.

தில்லைமூவாயிரமுனிவர்கள்தினமும் பூசித்திடும்பதம்
சிற்சபையில்திந்திமிதிமிதோ மென்றாடியபாதம்
எல்லையில்லாதாயின்பம் எந்தனுக்கருள்செய்திடும்பதம்
இரவும்பகலுமாயன் கோபாலகிருஷ்ணனேத்தும்பாதம் பா *

இராகம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

சந்நிதிவரலாமோ சுவாமி-தெரிசனந்தரலாமோ சந்

அநுபல்லவி.

இல்லறவாழ்வாம் பனிமூடி
இருந்தேனன்றோ மிகவாடி
அல்லும்பகலும் கொண்டாடி
அடியேன்கனக சபைநாடி சந்

சரணங்கள்.

வீதியிலேசற்றே வந்திருந்தேன்
வேடிக்கைப்பார்த்துக்கொண் டங்கிருந்தேன்
சாதியிற்றாழ்ந்தவனென் றறிந்தேன்
தனித்திருப்போமென்றிங்கே வந்தேன் சந்

காலால்வீசினக்கனல் மூட்டி
கலைமதிமண்டபமே லோட்டி
பாலாறுபெருகவேயெனைக் கூட்டி
பார்த்ததுமில்லைநான் தோட்டி சந்

வசனம்.

நந்தனார், தான்கண்டசொர்ப்பனத்தைக் கொண்டாடுவார்.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சொற்பனங்கண்டுகொண்டேன்-அதிசயச்
சொற்பனங்கண்டுகொண்டேன்.

அநுபல்லவி.

சொற்பனங்கண்டுகொண்டேன்-எல்லாங்
கற்பனையென்றறிந்தேன்-வேத
தற்பதவாக்கியமேயுருவாகிய
வற்புதநடனம்புரிய-இன்று சொ

அம்பிகைமணவாளன்-மான்மழு
வணிந்திடுஞ்செங்கோளன்-செம்
பொன்னம்பலந்தனிலாட-மத்தளம்
போட-மறைகள்பாட-கொண்டாட சொ

மண்டலத்தோராசை-தீர்ந்து
மண்டபமணியோசை-நேர்ந்து
மனதுகனிந்துருகமறலி
கருக வரந்தருக வருக சொ

மங்கையர்மோகநில்லா-தாரையும்
வருந்தியழைக்கும்பொல்லா-தாகிய
மாயப்பிணியையும்-வெல்ல
மருந்துசொல்ல-வழியிற்செல்ல-நல்ல சொ

பண்ணவர்முரசடிக்க-பதஞ்
சலிவியாக்கிரமவர்பதந்துதிக்க-மாயன்
கோபாலகிஷ்ணன்களிக்க
உடுக்கையெடுக்க உலகந்துறக்க சிறக்க சொ

வசனம்.

நந்தனர், தான் கண்டகனவு நிசமோ பொய்யோவென்று ச
தேகப்படுவார்.

இராகம்-சூரியகாந்தம்-சாப்புதாளம்.

பல்லவி.

கனவோநினைவோ கண்டதுவீணே

அநுபல்லவி.

மனதிலுறுதிகொள்ளவழியொன்றுங்காணேன் க

சரணங்கள்.

நித்திரைதனிலொருசித்தனுருவாய்வந்து
முத்திதருவேனென்றுகத்திப்பேசினதுண்டு க

ஆருமிகழ்ந்துதள்ளும்நாறும்புலையனென்னை
வாரும்பரமபதஞ்சேருமென்றழைத்தது க

கிட்டநெருங்கிவந்துதட்டியெழுப்பியொரு
வெட்டவெளியைக்காட்டிகட்டளையிட்டது க

வசனம்.

நந்தனர், தான் கனவில் கண்டதுபோலே சுவாமி வருவாரோ வாராரோ வென்று சஞ்சலப்படுவார்.

சாமராகம்-ஆதிதாளம்.

பல்லவி

வருவாரோ வரந்தருவாரோ-எந்தன்
மனதுசஞ்சலிக்குதையோ யிப்போது வரு

அநுபல்லவி.

திருவாருந்தென்புலியூர் திருச்சிற்றம்பலவாணர்
குருநாதனாகவந்து குறைதீர்க்கக் கனவுகண்டேன்
இருவினைப்பிணிகளைக் கருவறுத்திடுகிறேன்
பயப்படாதே யென்றுசொல்ல வரு

மறையாலும்வழுத்தறியா மகிமைபெறுநடராஜன்
நறையூறுஞ்சேவடியை நம்பினவனானல்லவோ
அநுதினஞ்சிவ சிதம்பரமென்ற
வடுமையென்றருள் புரிந்திடயிங்கே வரு

பணிமார்புஞ்செஞ்சடையும் பார்க்கமனமுவந்து
பணியுங்கோபாலகிருஷ்ணன் துதிபரமதயாநிதி
பவக்கடலடிக்கடி பெருகுது நிலைக்குமோ
மலைக்குதுகரையேற்ற வரு

வசனம்.

நந்தனர், இப்படி அநேகவிதமாய் வருவாரோ வாராரோ வென்று பலவிதமாய்க் கொண்டாடுகின்றார்.

---

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

இப்பிறவிபோய்நீங்க வெரியினிடைநீமூழ்கி
முப்புரிநூன்மார்பருடன் முன்னணைவாயென்னமொழிந்
தப்பரிசேதில்லைவா ழந்தணர்க்குமெரியமைக்க
மெய்ப்பொருளானாருளி யம்பலத்தேமேவினர்.

வசனம்.

நந்தனர், கனவிலே வந்து சொல்லிய நடராஜமூர்த்தி தில்லை வாயிரம்பேர்கள் கனவிலே சொல்லுவார், பத்தர்களே! எனக்கு

மிகவும் பிரியமுள்ள திருநாளைப்போவாரென்னும் நாமத்தைக்கொண்டு யென்னைக் காணவேண்டுமென்று தன்னை காணிக்கைக்கொண்டு சாதியிற்றாழ்ந்தவனென்று பயந்துகொண்டு யென்னைத்தவிர மற்றதெல்லாம் அநித்தியமென்று பத்தி பண்ணிக்கொண்டு முத்தியடைய வேண்டுமென்று தில்லையைச் சுற்றிக்கொண்டு தெற்கு குளத்தங்கரையில் நின்றுக்கொண்டு இருக்கிறார். அவரை அக்கினியில் மூழ்கச்செய்து அழைத்துவாருங்க ளென்றுசொல்லி சுவாமி மறைந்தார். இப்படிக் கண்ட கனவை மூவாயிரம்பேர்களும் பேரம்பலவாசலில் வந்து ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுகின்றார்கள்.

இராகம்-சங்கராபரணம்-அடதாளம்.

கண்ணிகள்.

அதிசயமொன்றுகேளப்பாதீட்சதரே
யர்த்தராத்திரிப்போதி லென்னே-என்றன்
மதிபரவசமாகத்துதிமருவுமம்பல
வாணன்கனவில்வந்தா ருன்னே
வாஸ்தவமெனக்குமிந்தவண்ணமாகக்கனவில்
வந்துரைத்தாரறிந்தேன் நாடி-உத
யாஸ்தமயமாகுமுன்னமருட்படிக்கு
வமைப்பதுத்தமமென்றே ரோடி
அப்போதங்குவந்த அப்பண்ணதீட்சதர்
ஆமாமிதுவும்நிச் சயந்தான்-என்கோன்
செப்பியசொற்படிச்செந்தீவளர்த்திடச்
செய்யவேண்டுமவ சியந்தான்
அவசியமென்கிறீர்காரியந்தெரியாமல்
ஆருக்கடுக்குமோர் புலையன்-சிறந்த
தவசிரேஷ்டர்சூழுந்தலத்தின்வருவதற்குத்
தலைப்பத்தோவவன்வந்தா லிலைவன்
பத்தியுள்ளவனேபரமனுக்குயிர்த்தோழன்
பதஞ்சலிபுலிப்பாதர் சாட்சி-சிவன்
சித்தத்தின்படிசெய்துசெனனக்கரைகடப்போம்
தெளிவீர்நீங்களிந்த சூட்சி
என்றாரங்குசிவசங்கரதீட்சதர்
இன்னமுந்தாமச மேதோ-நீச்சன்

ஒன்றுந்திருச்சந்நிதிக்குவருவதற்கு
வொருக்காலுங்கட்குத் தகாதோ
சொல்லுமென்றாரவராமென்றாருங்கட்குச்
சித்தத்திலுள்ளசந் தேகம்—தெளிய
அல்லும்பகலுமோயாமலேசாஸ்திர
மாராய்பவற்குமனோற் சாகம்
தரும்படிப்பேசிச்சந்தேகந்தெளிவது
தக்கதென்றுரைத்த மொழியே-நம்பி
பெருங்கூட்டமாகவேகூடிச்சென்றாரவர்
பேதமறத்தக்க வழியே

வசனம்.

தில்லை மூவாயிரவர்கள் சாஸ்திரிமார்க ளிடத்திற் சந்தேகந் தளிதல்.

விருத்தம்.

மறைக்கிழவரிவ்விதஞ்சென் றார்களாங்கே
மனுவிக்கிபாணிகளாசீர் வாதஞ்செய்து
வந்தகாரியமேதோ வுரைப்பீரென்ன
மன்றுளானவர்தங்கள் கனவிற்றோன்றி

குறைந்தமதிப்புலைச்சாதி வந்துதித்தோன்
கோதிலானந்தனென்போ னவனல்லன்பன்
கூறுமிவ்வூரெல்லைவலம் வருவரன்னாளை
கொணர்ந்தவனைத்தீமூழ்கச் செய்தேயப்பால்

முறைமையொடுசந்நிதியில் நம்முன்பாக
விடுங்களென்றுவருளிச்செய் தவர்மறைந்தார்
மூதுணர்ந்தோர்க்கிதுதெரியச் சொல்லவந்தோம்
மொழியுமாறுத்தரம்யா தென்றார்நீதி

அறிந்தவன்னோராமந்தப் படிக்கேசெய்வ
தழகாகுமென்றனர்பின் மகிழ்ச்சியாலே
அந்ததில்லைமாநகரத் தெல்லைசுற்றி
யாடுவார்நந்தனரைத் தேடுவாரே.

---

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

தம்பெருமான்பணி கேட்ட தவமறையோரெல்லாரு
மம்பலவர்திருவாயின்முன் பட்சமுடனெய்தி

யெம்பெருமானருள்செய்த பணிசெய்வோமென்றேத்தி
தம்பரிவுபெருகவருந்திருத் தொண்டர்பாற்சார்ந்தார்.

வசனம்.

தமது பிராணுகிய, சபாநாதரிட்ட கட்டளையைக் கேட்ட தவப
பொருந்திய பிராமணர்களெல்லோரும், அம்பலவாணரது கோயி
திருவாயிலின் முன்புகூடிப் பயத்தோடு நம்முடைய ஆண்டவரருள்
செய்த ஊழியத்தைச் செய்வோமென்று வணங்கி திருநாளைப்போ
வாரைத் தில்லை மூவாயிரவர்கள் தேடவருகின்றார்கள்.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

தொண்டரைக்காண்கிலனே-தில்லையில்வந்த
தொண்டரைக்காண்கிலனே.

அநுபல்லவி.

அண்டசராசரமெங்கும்படியளந்து
மன்றுளாடியமன்னவர்க்கடிமைத் தொண்

சரணங்கள்.

சொல்லும்பொருளுமற்றுச்சோதிமயங்கொண்
டல்லும்பகலுமற்றவம்பலவாணன் தொண்

அஷ்டதிசையும்பரிபூரணமாகவே
மட்டிலாதுவளர்ந்தோங்கியநாதன் தொண்

வாசியடங்கிநடுவணைவழிகண்டால்
தேசிகவடிவுடன்தெரிசனந்தந்திடும் தொண்

பாலகிருஷ்ணன்பணிந்தேத்தியபாதன்
கோலச்சிலம்பணியுங்குண்டலநாதன் தொண்

இராகம்-இந்துஸ்தான்-காபி-ரூபகதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவார்தெரிசனங்காணத்
தில்லைமூவாயிரமுனிவர்கள்வருகிறார் திருநா

அநுபல்லவி

பத்திவெள்ளமதுகரைபுரண்டோடும்
பரமானந்தக்கடல்முழுக்காட்டும் திருநா

சரணங்கள்.

அரகரசங்கரசிவனென்றுசொல்லும்
அநித்தியசடதுக்கமாயத்தைவெல்லும் திருநா

அடியவரேமெத்தப்பெரியவரென்று
அம்பலவாணரருள்விடைகொண்டு திருநா

இதுவுமது சிந்து

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி

தேடித்தேடித்திரிந்தார் பாரும்-நந்தனார்தம்மைத்
தில்லைமூவாயிரவர் யாரும்

அநுபல்லவி.

நாடுஞ்சதுர்வேதப்பிர காசனை
நங்கைசிவகாமிப்பிரா ணேசனை
ஆடும்பதநடன சபேசனை
ஆவலாகத்தொழுவோர்க்கருள் நேசனைத்தேடி

சரணங்கள்.

தண்டாமரைமலர்த் தடமும்-யாதர்களாடி
கொண்டானடித்திடு மிடமும்-அன்னமளிக்க
உண்டானந்தங்கூறு மடமும்-சோரர்பரவுஞ்
சண்டாளர்வாழுங்கா டிடமும்-அன்றிச்சூத்திர
சாதிமுதலானபல வாடை-பல்லாண்டு
ஓதியுலாவிவரு மேடை-மனுவிக்கியான
நீதியுணர்ந்தோர்தெரு மாடை-இன்னமும்பல
மாதிரிகளாகுந்திண்ணை மேடை-உன்னதமாகக்
[...]ாங்குமிகுத்ததருசெங்குமணத்திடுஞ் சோலை கருப்பஞ்சோலை
[...]குமுயர்ந்துகதித்திடும்வாழையின் சோலை-தாழையின்சோலை
[...]ங்குமிலுப்பையுமொன்றுபொருந்திய சோலை-மாவினச்சோலை
[...]ங்கமதானபலாக்கமுகோங்கிய சோலை-மற்றுள்ளசோலை
[...]குஞ்சுற்றிப்பார்த்துமறையோர்கள்தங்கள்தங்க ளங்கமேங்க
நதிதவமும்
[...]ாங்கரவணிந்தசிவசங்கரன்கிருபையிதென்றே யோங்க
கூக்குரலிட்டுச்
[...]கையறச்சென்னியிற்கரங்களைக்குவித்தெங்களைத் தாங்க
மனமுவந்து
[...]ங்கேயெங்கள்பங்கினிலிருந்துமேழைகள்வருத்தம் நீங்க
கிருபைசெய்வதற்கு
உன்னதேகடனென்றுவுவந்துக்கொண் டாடி
உரியவேதமந்திராதிகள் பாடி
முன்னஞ்சொன்னநந்தனார்வரவை நாடி
மூளுங்கோடைக்காற்றெனவிரைந் தோடி
தேடித்தேடித்திரிந்தார்

வசனம்.

இந்தப் பிரகாரம் தில்லை மூவாயிரவர்களுந் தேடி அலுத்து ஓ
டத்தில் யாவருங்கூடி சுவாமியைத் துதிசெய்வதாக நிச்சயஞ்செய்
தோத்திரஞ் செய்கின்றார்கள்.

இராகம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி.

உனதுமகிமையை யொருவரறிவார்களோ
உலகிலுள்ளோரையனே

அநுபல்லவி.

பன்னகசயனனும்பதுமாசனவேதனும்
பார்க்கவவர்க்குமெட்டாத யோகனே
பகரரியமலைமகளோர் பாகனே உ

சரணங்கள்.

கனவினிலேவந்தெங்களுக்குச்சொன்ன அந்த
காரணமறிந்ததிகாலையிலே யெழுந்த
இனத்தார்நாங்கள்யாருமிசைந்தொருமித் திந்த
எல்லைமுழுதுந்தேடியிளைத்தோமெங்களுக் கந்த
இணையில்லாதநந்தனரு மகப்பட
இல்லையென்னசெய்வோம் ஸ்திரப்பட உ

அடையலர்திரிபுரமனலாகவே முடித்த
அன்பாகமான்மழுவங்கைபிலே பிடித்த
விடைப்பாகனே சாளிவெட்கும்படி நடித்த
மெய்யாதுயர்தவிர்த்தாளையாவென்றே படித்த
வாறுநீயறிந்தருள்செய் யையனே
வனசநிகர்பதசரணத் துய்யனே உ

அன்னைசிவகாமியனுதினம்வளர் தில்லை
யம்பொன்னகர்வருவோர்க்சாங்கொருதுய ரில்லை
உன்னையன்றியுலகத்துக்குப்பொரு ளில்லை
யுத்தமனேயெங்கட்குரியதுணையு மில்லை
ஓதுநந்தனார்தம்மைவரச் செய்யும்
ஊழின்வினைதவிர்த்தவர்க்கு அருட் செய்யும் உ

வசனம்.

இவ்விதமாகச் சுவாமியைத் துதித்துத் தில்லை மூவாயிரவர்களனைவரும் நந்தனரைத்தேடி யனுத்துவரு மார்க்கத்தில், ஒதுப்புறமாக நின்றுக்கொண்டிருந்த நந்தனர் வேதியர்களைக் கண்டு தூர விலகி நின்று தலைவணங்கிச் சொல்லுகின்றார்.

விருத்தம்.

திட்டமுடனடிபணிந்துமனமொடுங்கித் தவம்புரியுந்தில்லைமன்றுள்
நட்டமிடுநடராஜன்கனவின்கண் சொன்னமொழிநம்பிக்கொண்டு
இட்டமுடன்றிருநாளைப்போவரிடம் வேதியர்களேகும்போது
கிட்டநெருங்காதேயுமென்றேவிலகி யோர்வார்த்தைக்கேளீரென்றார்.

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

கிட்டநெருங்கிவரவேண்டாஞ்சுவாமிகாள் -காதில்
கேட்டபேர்க்குப்பாவம்வருமெனதுசென்மம் கிட்

அநுபல்லவி.

சிட்டர்புகழுந்தில்லைதன்னில்செழித்துவாழும்வேதியர்கள்
இஷ்டமிதுவல்லவேயென்றுசொல்லவேணுமோ புலையன் கிட்

சரணங்கள்.

உலகினில்கடைச்சாதியெந்தனுக்குவமையாருமில்லையே
பலவிததுஷ்கருமஞ்செய்துபாரில்வந்த புலையனே கிட்ட
வேலைசெய்துவுடம்புவளர்க்கவேணுமிந்தநாயடியேன்
தோலுமெலும்புமுதுகில்சுமந்துவலையும் புலையனே கிட்
செத்தமாடிழுப்பதெனதுசேவகம்பாம்படித்துமெல்லை
சுற்றிவந்துதமுக்கடித்துச்சுடலைகாக்கும் புலையனேயே கிட்

வசனம்.

இப்படி வணங்கிச் சொல்லிய திருநாளைப்போவாராகிய நந்தனரைப் பார்த்து வேதியர்கள் சொல்லுகின்றார்கள்.

இராகம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

சாதியிலுயர்ந்தாலென்ன-இந்தப்-பேரும்பெருமையுமில்லையே

அநுபல்லவி.

சாதிப்பெருமைகொண்டதாலே சங்கரனருகில்வந்து
ஆதரவுடன்வரங்களீய்ந்து அழைப்பாரோ சேர்ப்பாரோ
அளிபெருகவேயீசன்கழலையறிவிலுன்னி யடிபணிந்து
தெளிந்திடாதபேரைமுத்திதேடுமோ நாடுமோகூடுமோ சாதி

வசனம்.

இப்படிச்சொல்லிய வேதியர்கள் தாங்கள் வந்தகாரியம் பேசுவார்.

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

ஐயரேயம்பலவரருளாலிப் பொழுதணைந்தோம்
வெய்யவழலமைத்துமக்குத் தரவேண்டியெனவிளம்ப
நையுமனத்திருத்தொண்டர் நானுய்ந்தேனெனத்தொழுதார்
தெய்வமறைமுனிவர்களுந் தீயமைத்தபடிமொழிந்தார்.

வசனம்.

ஐயரே, நடேசருடைய கட்டளையால் இப்போதுவெவ்விதாகிய அக்கினியை மூட்டி உம்மை அதில் மூழ்கும்படிக்குச் சொல்ல வ தோமென்று சொல்ல, இளகியமனதையுடைய திருநாளைப்போவா அடியேன் கடைத்தேறினேனென்றும் அவர்களைத் தொழுது ந னின்றைக்குத்தான் முத்தனானேனென்றும் வேதியர்களைப் பார்த் துச் சொல்லுகின்றார்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

கண்டேன்கலிதீர்ந்தேன்-பவக்-கடற்கரையேறிவந்தேன்

அநுபல்லவி.

சோதிமறைமுடியுஞ்சொல்லிறந்திடுமீசன்
பாதம்பணிவிடைசெய்பாக்கியவானும்மைக் கண்

சரணங்கள்.

எல்லையைக்காணுமுன்னேயிருள்விலகுமுங்கள்
சொல்லைக்கேட்குமுன்னே துன்பங்கள் தீர்ந்திடும் கண்
கள்ளங்கருகச்செய்யுங்கண்ணுதலேயுங்கள்
உள்ளங்குடியாய்க்கொண்டாருங்கள்தெரிசனம் கண்

வசனம்.

நந்தனர், தான் சின்னசாதியாயிருந்தபோதிலும் தெய்வமிரங் கிற்றேவென்று சந்தோஷங்கொண்டு சொல்லுகின்றார்.

இராகம்-தனுசரி-ஆதிதாளம்

பல்லவி.

எனக்குமிரங்கிற்றே-நான்மெத்த-ஏழைச்சாதியல்லவோ

அநுபல்லவி.

தனக்குள் தானயிருந்தகிலப்பிரபஞ்சமுந்
தன்னுள்ளடக்கியபொன்னம்பலவன்கிருபை எனக்

சரணம்.

அல்லும்பகலுமருந்தவஞ்செய்கினு
மறியாரொருவருமம்பலத்தெய்வம் எனக்
நான்மறைமுடிவும்நானறியேனென்று
வோதியவுண்மையையுலகமறிய எனக்

வசனம்.

நந்தனார், என்னதவம் செய்தேனோ இவ்வுலகின்கண் யாருக்
ம் கிடைக்காதபாக்கியம்தனக்குக்கிடைத்ததென்று சொல்லுவார்.

இராகம்- ஆகிரி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

ம்பலவாணனைத் தெம்புலியூரானை நம்பிப்பணிந் தேனோ
ர்ச்சனைசெய்து கும்பிட்டிருந் தேனோ
ல்லைப்பதியில்வந்து யெல்லைக்கடந்தேனென்று
ல்லலறுத்தேனோ சஞ்சிதவிரையெல்லாம்வறுத் தேனோ
ண்டவமாடின ஆண்டவன்சேவடி
வண்டித்துதித்தேனோ முக்குணங்களைத்தாண்டிக்கதித் தேனோ
ந்தனெனதெனதென் றெந்தவேளையுமாயுஞ்
ந்தைநழுவிற்றோ சேர்ந்தவனென்று தந்தைதழு விற்றோ
கள்ளுதமிழ்ப்பாடியுள்ளமுருகியுள்ளில்
ள்ளங்கருகிற்றோ கருக்கிலெட்டா வெள்ளம்பெரு கிற்றோ
சைவலையைப்போட்டு மோசப்படுத்துஞ்சீவ
சங்குலைத்தாரோ அளவிடாத கிலேசந்தொலைத் தாரோ
பண்ணரிடமாலுக் கொண்ணுதெனச்சடைத்
ண்ணுத்தனைத்தாரோ கருணைபொங்குங்கண்ணலணைத் தாரோ
டுத்துவந்தவனென்று பிடித்தபேய்களையோட்டி
டுத்தாளக்கொண்டாரோ பரமபதங்கொடுத்தாளக்கொண் டாரோ

## திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

றையவர்கண்மொழிந்ததற்பின் றென்றிசையின்மதிற்புறத்துப்
றைபுரிஞ்சுந்திருவாயின் முன்னுகப்பிஞ்ஞகர்தன்
றையருளான்மறையவர்க ணெருப்பமைத்தகுழியெய்தி
றையவர்தாண்மனங்கொண்டே யெரிசூழவலங்கொண்டார்.

வசனம்

நந்தனார், இப்படி பிராமணர்கள் சொல்லியபின்பு தென்திசை
ுள்ள மதிலின்புறத்திலே சந்திரனனது தவழ்ந்து போகும்படி

உயர்ந்திருக்குந் திருக்கோபுரவாயிலுக்குமுன்னே சுவாமியின் நி
ந்த கிருபையோடுகூடிய கட்டளையால் வளர்ந்திருக்கின்ற நெருப்பி
குழியை அடைந்து நடேசருடைய திருப்பாதத்தை மனதில் திய
னித்து அக்கினியைச்சுற்றி வலமாகவந்தார்.

இதுவுமது-விருத்தம்.

கைதொழுதுநடமாடுங் கழலுன்னியழல்புக்கார்
எய்தியவப்பொழுதின் கண் ணெரியின்கணிம்மாயப்
பொய்த்தகையுருவொழித்துப் புண்ணியமாமுனிவடிவாய்
மெய்திகழ்வெண் ணூல்விளங்க வேணிமுடிகொண்டெழுந்தார்.

வசனம்.

நந்தனர் கையினற்கும்பிட்டு, நடனஞ்செய்கின்ற நடேசா
திருப்பாதங்களை மனதில் உறுதியாகநினைத்து அக்கினியிற்புகுந்
அந்த நெருப்பிலிருந்து இந்தவுலகசம்பந்தமாகிய நிலையில்லாத ச
லத்தையொழித்துப் புண்ணியஞ்செய்கின்ற பெருமைபொருந்தி
பிராமணமுனி வடிவமாய்த் தேகத்தில் பூணூல்விளங்கச் சடைமு
யோடும் வெளியில்வந்தார்.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி.

யாரோற்பவமானர்-நந்தனர்-அரனருளால்
யாரோற்பவமானர்

அநுபல்லவி.

யோகமாதவரும் போகவாழ்வினரும்
வேகமாய்ச்சுக மாகவந்துதொழ யா

சரணங்கள்.

சிவனுருரைத்த வாக்கியம்-சித்தத்திலெண்
சிறந்ததேசிக சிலாக்கியம்
தவருதநேக பாக்கியம்-பொருந்தவேடங்
தன்னைக்கொண்டதே யோக்கியம்
தபனனேடுவுயர் கவனமேவிவரு
மெவரும்காந்தருவ ரெவருங்கண்டுதொழ யா
கையைச்சிரமேற் பதித்து-சிவனேயென்று
கனகசபையைத் துதித்து
செய்யகுண்டலத்தை வெடித்து-கதிரவன்போற்
செனித்தாரதிலே நடித்து

சித்தியாகியபத முற்றும்பாம்புபுலி
பத்தியாய்த்தொழும் பதத்தைக்கண்டுதொழ யாகோ
காதிற்குண்டல மிலங்க-முப்புரிநூலும்
கதித்துமார்பிட மலங்க
ஓதுஞ்சடைகள் துலங்க-அவரைவிட்டு
ஓடியேவினை கலங்க
ஏதமற்றசதுர் வேதமோதிவரும்
நீதவேதியர்கள் பேதமின்றித்தொழ யாகோ

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

செந்தீமேலெழும்போது செம்மலர்மேல்வந்தெழுந்த
அந்தணன்போற்றோன்றின ரந்தரதுந்துபிநாதம்
வந்தெழுந்ததிருவிசும்பில் வானவர்கண்மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந்தாரத்தின் பனிமலர்மாரிகள்பொழிந்தார்.

வசனம்.

சிவந்தநெருப்பில் நின்று எழுந்தபொழுது செந்தாமரைப் புட்பத்தின்மேல் உதயமாயெழுந்தருளும் பிர்மாவைப்போல் பிரகாசித்தார். பெருமைபொருந்திய ஆகாசத்தில் அந்தர துந்துபியின் கோஷமானது உண்டாயிற்று, தேவர்கள் சந்தோஷமாய் ஆரவாரித்து அழகாயிருக்கின்ற கற்பகவிருட்சத்தின் குளிர்ச்சி பொருந்திய மலர்களை வருஷமாகச் சொரிந்தார்கள்.

விருத்தம்.

திருவுடையதில்லைவா ழந்தணர்கள்கைதொழுதார்
பரவரியதொண்டர்களும் பணிந்துமனங்களிபயின்றார்
அருமறைசூழ்திருமன்று ளாடுகின்றகழல்வணங்க
வருகின்றார்திருநாளைப் போவாராம்மறைமுனிவர்.

வசனம்.

ஞானசம்பத்தையுடைய தில்லையில்வாழும் பிராமணர்கள் கைகூப்பினார்கள், பரவுதற்கரிய மற்றைச் சிவபத்தர்களுந் தொழுது மனதில் களிப்படைந்தார்கள், வேதங்கள் முழங்குகின்ற கனகசபையில் ஆடுகின்ற பாதத்தை வணங்கும்பொருட்டுத் திருநாளைப்போவாராகிய ஒருவேதமுனிவர் தான்கண்ட ஆனந்தத் தாண்டவத்தை வருணித்துச் சொல்லுகின்றார்.

இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

தாதெய்தெய்யென்றுடுவார்-அவர்-தத்தித்தெய்தெய்யென்றுடுவார்

அநுபல்லவி.

ஆதிபராபரமாகியசித்து
ஆனந்தங்கொண்டொருகாலையெடுத்துத் தாதெ

சரணங்கள்.

அண்டசராசரமெங்கும்நடுங்க
ஆதிசேடனூர்முடிகணெருங்க தாதெ
சிலம்பெருகியமுனிவர்கொண்டாட
திங்களுஞ்சூடியசெஞ்சடையாட தாதெ
பார்புகழுந்தில்லைச்சிதம்பரநாதன்
பாலகிருஷ்ணன்பணிந்தேத்தியபாதன் தாதெ

இராகம்-பந்துவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

குஞ்சிதபாதத்தைத்தாரும்-சஞ்சலபாவத்தைத்தீரும்

அநுபல்லவி.

செஞ்சிலம்பசையக்கனகசபைதனில்
ஜெணுதத்தகஜெணு-தத்திமிதிமித்-தோமென்றுடிய கு

சரணங்கள்.

நெஞ்சினிற்கவலையை யாற்றும்-இந்த
வஞ்சப்பிறவியை மாற்றும்-நாளும்
வஞ்சிசிவகாமிவல்லி மகிழ்ந்திடும்
தஜ்ஜெம்தக-ஜெம்தரிகடதக்கிட-தோமென்றுடிய கு
சரணமென்றிங்கேநான் வந்தேன்-ஜனன
மரணத்திலுல்மிக நொந்தேன்-அந்தக்
கரணக்கல்மிஷங்கள்போக்கியே காத்திடும்
இந்திரர்வானவர்-மாமுனிவந்து-ஸ்தந்துதிசெய்திடும் கு
பாலகிருஷ்ணன்றொழும் பாதா-முத்தி
நால்வர்க்குதவிய நாதா-எந்தன்
மேலேகிருபைசெய்துவெற்றி யளித்திடும்
அத்தனேகர்த்தனே-சுத்தனேயித்தனே-நிர்த்தனஞ்செய்திடும் கு

* இராகம்-மாயாமாளவகௌளை-திசரமதாளம்.

பல்லவி.

நடனமாடினூர்-ஐயர்-நடனமாடினூர்

அநுபல்லவி.

நடனமாடினூர்தில்லை நாயகம்பொன் னம்பலந்தனில் நட

சரணங்கள்.

முத்திமடந்தை சித்திக்க சித்திக்க
மோகவலேகள் பத்திக்க பத்திக்க
பத்தர்கள்மனது திகதிக்க தித்திக்கப்
பாதச்சிலம்பு சத்திக்க சத்திக்கப்
ரிமாமதிசடையாட பதஞ்சலிமா முனிமறைபாட
ண்ணவர்கள்கொண்டாட பாலகிருஷ்ணன் மத்தளம்போட நட *

இராகம்-யமுனகலியாணி-அடதாளம்.

பல்லவி.

னந்தக்கூத்தாடினர்-அம்பலந்தனிலே-பொன்னம்பலந்தனிலே

அநுபல்லவி.

ஆனந்தக்கூத்தாடினர்-அயனும்மாலும்பாடினர்
அந்தரங்கமாக சிந்தித்தபேர்க்கருள்
தோந்தந்தோமென்றும்-தொந்தோந்தொந்தோமென்றும் ஆன

சரணங்கள்

பதஞ்சலிமாமுனியை நோக்கிப்
பார்த்தபேர்கள்குறையைப் போக்கி
இதமகிதமென்றறிவை நீக்கி
ஏகமாகக்காலைத் தூக்கி ஆன
மத்தளதாளமதிர முழங்க
வளரும்பிரமதகணங்க ளிலங்க
தத்திமிதக்கிடதோமென் றிலங்க
சபையுந்துலங்கச்சதங்கை குலுங்க ஆன
பாலகிருஷ்ணன் பணியும் பாதன்
பார்த்தபேர்கள்வரப்பிர சாதன்
ஞாலம்புகழுஞ்சீவ போதன்
சுந்தரர்தூதன் அம்பிகை நாதன் ஆன

வசனம்.

இப்படி ஆடிய தாண்டவதெரிசனங்கொடுக்க இன்றைக்குத்
ன் சித்தமிரங்கிற்றோ வென்று சொல்லுவார்.

இராகம்-யமுனகலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சித்தமிரங்கிற்றோயான்முன்செய்தவமுத்திற்றோ

அநுபல்லவி.

த்தாபரிசுத்தாவுன்னுடல்காணவந்தேன்
ன்னையாண்டுகொள்ளிதுவேசமயமுன்னுடல்காணவந்தேன்

சரணங்கள்.

சாதிமுறைமைபோக்கும்என்னைச்சதுர்மறையவராக்கும்
போதாதில்லைநாதாவுன்றுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள்ளிதுவேசமயமுன்றுடல்காணவந்தேன்
பாலகிருஷ்ணன்போற்றும்பாதாபதஞ்சலியாரேத்துஞ்
சீலாதிரிசூலாவுன்றுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள்ளிதுவேசமயமுன்றுடல்காணவந்தேன்

சிந்து.

கனவிலுருவாகி-வந்து-காட்சிக்கொடுத்துக்கடாட்சித்தபின்
எரியினிடைமூழ்கி-வெகு-இன்பம்பெருகியவன்பருடன்
வேதமுனிவடிவாய்த்-தில்லை-வேதியர்கைதொழுதாதரவாய்
அங்கம்புளகிதமாய்ச்-செம்பொன்.

வசனம்.

திருநாளைப்போவாராகிய முனிவர் அக்கினியில் குளித்தெழுந்
கனகசபையில்வந்து மனமுருகி ஆனந்தம்பெருகி நமது ஆண்டவ
கிய நடேசமூர்த்தியைத் தோத்திரம் செய்கின்றார்.

* இராகம்-சரசாங்கி-ஆதிதாளம்.

பல்லவி.

உனதுதிருவடிநம்பிவந்தேன்-எனக்
கொருவருமில்லைநானேழை உன

அநுபல்லவி.

அனுதினமும் பொன்னம்பலந்தனிலே
ஆடியபாதரே யென்சுவாமி உன

சரணங்கள்.

இரவும்பகலும்விஷயாதிகளென்னையிழுக்குநானதை
மரித்துமிப்படிபாதவித்திடலானேன்
பார்க்கலாமோபாலகிருஷ்ணன்போற்றும்பரனே
பரமதயாநிதியேநின்பக்தியைத்தந்து
சித்தமகிழ்ந்திடகரையேற்றிடுவதுன்பாரஞ்
சொன்னேன்கைவிடவேண்டாம்சரணம்சரணம் உன

இராகம்-சக்கரவாகம்-மிசுரஜாதி-ஜம்பைதாளம்.

பல்லவி.

அறிவுடையோர்பணிந்தேத்துந்தில்லைக்
கனகசபாபதியே என்னைவந்தாளும் அ

அநுபல்லவி.

மறைமுடியுந்தேடியறியாதவுன்றன்
திருவடியைமாணிக்கவாசகரறிந்ததெப்படி அ

சரணங்கள்.

கனவிலும்நினைவிலும்விஷயாதிசம்சாரக்கடலி
லழுந்தினேன்கரையேறவும்வழிகாணேன்
மனமிறங்கிகிருபைசெய்திடவேணும்-மாயன்கோபால
கிருஷ்ணன்தொழுதேத்தும்-அம்பலவாணா
உனைமறந்திடப்போமோ-உன்னடியார்களைப்
பணிவீரென்றுரைத்திடுமுண்மையையின்னமுமறியேன்
மனைவிமக்கள்தனதானியமென்றிந்த-மாயவலைக்குள்
சிக்கிமயங்கினேன் தயங்கினேன்

இராகம்-நவரோஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

தில்லைநடராஜரைப்போலே வேறேதெய்வங்கிடைக்குமோ

அநுபல்லவி.

பதஞ்சலிவியாக்கிரபாதருக்கன்றுபாதமெடுத்தாடவே
பாதமெடுத்தாடவே-அவாள்-பரமபதத்தைச்சேரவே தில்

சரணங்கள்.

ாளியுடன்வாதுமாடியே கனகசபையில்நின்றநீ
னகசபைதனில்நின்று-ஒற்றைக்-காலைத்தூக்கிக்கொண்டாடிய தில்
பாங்கவேபரமானந்தரூபம் பூரணகும்பத்தில்வருகவே
ூரணகும்பத்தில்வருகவே-ஐயன்-பொன்னம்பலத்தைச்சேரவே தில்
நடத்தில்கெங்காதீர்த்தமெடுத்துக் கும்பாபிஷேகம்பண்ணவே
நம்பாபிஷேகம்பண்ணவே-அப்பன்-குளிர்ந்தமனதுஆகவே தில்
அத்தர்புனுகுவாசனையுடன் ஆகுதிஹோமம்பண்ணவே
ஆகுதிஹோமம்பண்ணவே-ஜகதீசன-சிற்சபைதனைச்சேரவே தில்

இராகம்-சுருட்டி-ஜம்பைதாளம்.

பல்லவி.

கனகசபைதிருநடனம்கண்டுகளித்தானந்தமடைந்தேன்

அநுபல்லவி.

ஜெனகஜெனந்தன முனிவர்கள்பாட
சதுர்முகதேவனும் தாளங்கள்போட
தினமுமூவாயிரம் பேர்களுங்கூட
தக்கிடத்தைய்தை தத்தோமென்று கன

சரணங்கள்.

நந்திபிருங்கிசிவகணங்கள் கொண்டாட
நாரதர்தும்புருசங்கீதம் பாட

பந்திபந்தியாயந்தணர் மறைபாட
பாலகிருஷ்ணனும்மத்தளம் போட கல

இராகம்-பூரணசந்திரிகை-ஆதிதாளம்.

பல்லவி.

பாதமேதுணை ஐயனே-நின்
பாதமேதுணை ஐயனே

அநுபல்லவி.

பாதமேதுணையல்லால் வேறொரு
சேதிகளுநானறிந் திலேன் பா

சரணங்கள்.

பாலனுக்கருள் செய்தபராபரன்
பாலகிருஷ்ணன் கவிக்குதயாகரன்
சீலமுள்ளசிவ காமிமனோகரன்
கோலநடம்புரி ரஞ்சிதகுஞ்சித பா

இராகம்-பெலஹம்ஸா-ஆதிதாளம்.

பல்லவி.

வந்தாலும் வரட்டும்-ஜெனனம்
தந்தாலும் தரட்டும்-சாமி

அநுபல்லவி.

செந்தாமரைப்பதமே கதிநம்பினேன்
சிதம்பரநாதன் சிவசாயுச்சியம் வ

சரணங்கள்.

சிவன்செயலன்றி வேறொருசெயலும்
சிந்தையிலறியேன் பாலகிருஷ்ணன்தொழும்
அவனுருவன்றி வேறுருவுண்டோ
ஆகமமறியாதோ
தவமேவுந்தன் புலியூர்வாழும்
தாண்டவனேயென் னாண்டவனே-இந்த
பவக்கடல்தாண்டி விடுவாயதுவொரு
பாரமல்லவெகுதூரமல்லமுத்தி வ

இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

பிறவாத வரந்தாரும்-என்னையா
பிறவாத வரந்தாரும்

அநுபல்லவி.

றிவுடையோர்தொழு தேத்தியதில்லைப்பொன்
ம்பலவாயின் னம்பலயோனியில் பிற

சரணங்கள்.

எண்பத்துநாலுலட்சம் ராசிகளில்
எடுத்தெடுத்துப்பிறந்திறந்ததோ
பண்பட்டதுபோதும்போதும்-இனிமேல்
புத்திதெரிந்ததையே. பிற

நண்பற்றிடுமனை விமக்கள்வாழ்வினில்
நாள்கடோறும்மனவிலாசம்கழிந்ததும்
இன்பத்துடனேகோபாலகிருஷ்ணன்தொழு
தேத்திய ஜெகதீசனை நடராஜனே. பிற

தேவாரம்.

பாளையுடைக்கமுகோங்கிப்பன்மாடநெருங்கியெங்கும்
ாளையுடைப்புனல்வந்தெறிவாழ்வயற்றில்லைதன்னுள்
ளையுடைக்கழற்சிற்றம்பலத்தானாடல்கண்டாற்
ளையுடைக்கண்களாற்பின்னைப்பேய்த்தொண்டர்காண்பதென்னே.

பொருவிடையொன்றுடைப்புண்ணியமூர்த்திபுலியதள
ருவுயம்மலைமங்கைமணாள னுலகுக்கெல்லாந்
ருவிடையந்தணர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
ருவடியைக்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

தொடுத்தமலரொடுதூபமுஞ்சாந்துங்கொண்டெப்பொழுதும்
டுத்துவணங்குமயனொடுமாலுக்குங்காண்பரியான்
பாடிக்கொண்டணிந்துபொன்னாகியதில்லைச்சிற்றம்பலவ
டுத்ததில்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

வைச்சபொருணமக்காகுமென்றெண்ணிநமச்சிவாய
ச்சமொழிந்தேனணிதில்லையம்பலத்தாடுகின்ற
ச்சன்பிறப்பிலிபேர்நந்தியுந்தியின்மேலசைத்த
ச்சினமுருகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே.

செய்ஞ்ஞின்றநீலமலர்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
ஞ்ஞின்றவொண்கண்மலைமகள்கண்டுமகிழ்ந்துநின்ற
நஞ்ஞின்றெரியும்விளக்கொற்றநீலமணிமிடற்றான்
யஞ்ஞின்றவாடல்கண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே.

ஊனத்தைநீக்கியுலகறியவென்னையாட்கொண்டவன்
தேனொத்தெனக்கினியான்றில்லைச்சிற்றம்பலவனெங்கோன்
வானத்தவருய்யவன்னஞ்சையுண்டகண்டத்திலங்கு
மேனத்தெயிறுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே.

தெரித்தகணையாற்றிரிபுரமூன்றுஞ்செந்தீயின்மூழ்க
வெரித்தவிறைவனிமையவர்கோமானிணையடிக
டரித்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
சிரித்தமுகங்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

தருக்குமிகுத்துத்தன்றோள்வலியுன்னித்தடவரையை
வரைக்கைகளாலெடுத்தார்ப்பமலைமகள்கோன்சிரித்து
வரக்கன்மணிமுடிபத்துமணிதில்லையம்பலவ
னெருக்கிமிதித்தவிரல்கண்டகண்கொண்டுகாண்பதென்னே.

சுற்றுமமரர்சுரர்பதிநின்றிருப்பாதமல்லாற்
பற்றொன்றிலோமென்றழைப்பப்பரவையுணஞ்சையுண்டாற்
செற்றங்கனங்களைத்தீவிழித்தான்றில்லையம்பலவன்
நெற்றியிற்கண்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

சித்தத்தெழுந்தசெழுங்கமலத்தன்னசேவடிகள்
வைத்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
முத்தும்வயிரமுமாணிக்கந்தன்னுள்ளடங்கியதூ
மத்தமலர்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றி மீளாமேயாளென்னைக்கொண்டாய்போற்றி, ஊற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றி யோவாதசத்தத்தொலியேபோற்றி, யாற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றி யாறங்கநால்வேதமானாய்போற்றி காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றி கைலைமலையானேபோற்றிபோற்றி.

பிச்சாடல்பேயோ டுகந்தாய்போற்றி பிறவியறுக்கும் பிரானேபோற்றி, வைச்சாடனன்று முகந்தாய்போற்றி மருவியென் சிந்தைபுகுந்தாய்போற்றி, பொச்சார் புரமூன்று மெய்தாய்போற்றி போகதென்சிந்தை புகுந்தாய்போற்றி, கச்சாகநாக மசைத்தாய்போற்றி கைலைமலையானே போற்றிபோற்றி.

மருவார் புரமூன்று மெய்தாய்போற்றி மருவியென் சிந்தைபுகுந்தாய்போற்றி, யுருவாகி யென்னைப் படைத்தாய்போற்றி யுள்ளாவி வாங்கி யொளித்தாய்போற்றி, திருவாகிநின்ற திறமேபோற்றி தே

ம்பாவப்படுவாய்போற்றி, கருவாகியோடும்முகிலேபோற்றி கைலை
லையானேபோற்றிபோற்றி

வானத்தார்போற்று மருந்தேபோற்றி வந்தென்றன் சிந்தைபுகுந்
ாய்போற்றி, யூனத்தைநீக்கு முடலேபோற்றி யோங்கியழலாய்,
மிர்ந்தாய்போற்றி, தேனத்தைவார்த்த தெளிவேபோற்றி தேவர்க்
நுந் தேவனுப் நின்ருய்போற்றி, கானத்தீயாட லுகந்தாய்போற்றி
கைலைமலையானே போற்றிபோற்றி.

ஊராகின்ற வுலகேபோற்றி யோங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி
பேராகியெங்கும் பரந்தாய்போற்றி பேராதென்சிந்தை புகுந்தாய்
போற்றி, நீராவியான நிழலேபோற்றி நேர்வாரொருவரையு மில்லாய்
போற்றி, காராகின்ற முகிலேபோற்றி கைலைமலையானே போற்றி
போற்றி.

சில்லுருவாய்ச்சென்று திரண்டாய்போற்றி தேவாறியாத தேவே
போற்றி, புல்லுயிர்க்கும் பூக்ஷிபுணர்ந்தாய்போற்றி போகாதென்
சிந்தை புகுந்தாய்போற்றி, பல்லுயிராய்ப் பார்த்தோரும் நின்ருய்
போற்றி பற்றியுலகை விடாதாய்போற்றி, கல்லுயிராய்நின்ற கனலே
போற்றி கைலைமலையானே போற்றிபோற்றி.

பண்ணினிசையாகி நின்ருய்போற்றி பாவிப்பார் பாவமறுப்பாய்
போற்றி, யெண்ணுமெழுத்துஞ் சொல்லானுப்போற்றி யென்சிந்தை
நீங்கா விறைவாபோற்றி, விண்ணுநிலனுந் தீயானுய்போற்றி மேலவ
ர்க்குமேலாகி நின்ருய்போற்றி, கண்ணின்மணியாகி நின்ருய்போற்றி
கைலைமலையானே போற்றிபோற்றி.

இமையாதுயிரா யிருந்தாய்போற்றி யென்சிந்தைநீங்கா விறைவா
போற்றி, யுமைபாகமாகத் தணைந்தாய்போற்றி யூழியேழானவொரு
வாபோற்றி, யமையாவருநெஞ்சமமர்ந்தாய்போற்றி யாதிபுராணனுய்
நின்ருய்போற்றி, கமையாகின்ற கனலேபோற்றி கைலைமலையானே
போற்றிபோற்றி.

மூவாப்பிறவா யிறைவாய்போற்றி முன்னமேதோன்றி முளைத்
தாய்போற்றி, தேவாதிதேவர்தொழுந் தேவேபோற்றி சென்றேறி
யெங்கும் பரந்தாய்போற்றி, யாவாயடியேனுக் கெல்லாம்போற்றி
யல்லல்நலிய வலைந்தேன்போற்றி, காவாய்கனகத் திரளேபோற்றி
கைலைமலையானே போற்றிபோற்றி.

நெடியவிசும்பொடுகண்ணேபோற்றி நீளவகல முடையாய்போற்றி,
அடியுமுடியு மிகலிபோற்றி யங்கொன்றறியாமை நின்ருய்போற்றி,

கொடியவன்கூற்ற முதைத்தாய்போற்றி கோயிலாவென் சிந்தை
கொண்டாய்போற்றி, கடியவுருவமொடு மின்னேபோற்றி கைலைமலை
யானே போற்றிபோற்றி.

உண்ணாதுறங்கா திருந்தாய்போற்றி யோதாதேவேத முணர்ந்தாய்
போற்றி, எண்ணாவிலங்கைக்கோன் றன்னைப்போற்றி யிறைவிரலால்
வைத்துகந்த வீசாபோற்றி, பண்ணாரிசையின்சொற் கேட்டாய்
போற்றி பண்டேயென் சிந்தைபுகுந்தாய்போற்றி, கண்ணாயுலகுக்கு
நின்றாய்போற்றி கைலைமலையானே போற்றிபோற்றி.

சிந்து.

அம்பலமேவிய சம்பிரமத்தைக்-கண்டாரறிந்திலரால்

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

தில்லைவாழந்தணரு முடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான்மறிக்கரத்தார் கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி
ஒல்லைபோயுட்புக்கா ருலகுய்யநடமாடும்
எல்லையினைத்தலைப்பட்டார் யாவர்களுங்கண்டிலரால்.

வசனம்.

திருநாளைப்போவார் நாயனாரென்றும், இடையில் நந்தா ம
முனியென்றும் வழங்குகின்ற நாளைப்போவார் தில்லைமூவாயிர முனி
வர்களோடு பொன்னம்பலத்துக்கு வந்தார். அதற்கப்பா லவரை
கண்டபேர்களில்லையென்று பெரியபுராணம்பாடியருளிய சேக்கிழார்
சுவாமிகள் சொல்லியிருப்பது. அந்தத் திருநாளைப்போவாரென்னு
முனியானவர், புரட்டாசிமாதம் உரோகணி நட்சத்திரத்தில் கன
சபையில் வந்து கற்பூரசோதியைப்போற் றோன்றிய சிவசாரூப்
யத்தை யடைந்தாரென்று உபமன்னிய மகாரிஷிபண்ணிய பக்த
விலாசத்திலேயும் சொல்லப்பட்டிருக்கின்றது.

இதுவுமது-விருத்தம்.

அந்தணர்களதிசயித்தா ரருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்ததிருத்தொண்டர் தம்மைவினைமாசறுத்து
சுந்தரத்தாமரைபுரையுந் துணையடிகடொழுதிருக்க
வந்தமிலாவானந்தப்பெருங் கூத்தருள்புரிந்தார்.

வசனம்.

மறையோர்கள் ஆச்சரியப்பட்டார்கள், அரிய முனிவர்கள் தாத்திரஞ்செய்தார்கள். முடிவில்லாத ஆனந்தத் தாண்டவஞ் செய் நளுகின்ற சபாநாதர் தமது கட்டளையால் வந்தடைந்த திருநா ாப்போவாருக்குத் தீவினையாகிய களங்கத்தை நீக்கி அழகாகிய சந்தாமரை மலரை யொத்த இரண்டு பாதங்களையுந் தொழுதிருக் ம்படியாகத் திருவருள் புரிந்தார்.

விருத்தம்.

மாசுடம்புவிடத்தீயின் மஞ்சனஞ்செய்தருளியெழுந்
தாசின்மறைமுனியாகி யம்பலவர்தாளடைந்தார்
தேசுடையகழல்வாய்த்துத் திருநாளைப்போவாரும்
மாசகலமுயன்றுதிரு நடங்கண்டுமகிழ்வுற்றார்.

வசனம்.

தமக்கு முன்னிருந்த உடலமாகிய மாசு தீரும்பொருட்டு அக் னியாகிய திருமஞ்சனமாடி யெழுந்து குற்றமற்ற பிராமண முனி டிவமாகி ஸ்ரீநடேசப்பெருமானுடைய திருவடியை அடைந்தவரா ப திருநாளைப்போவாருடைய பாதத்தைப் புகழ்ந்து தீவினையாகிய பிறு அறும்படி தில்லை மூவாயிரவர்கள் போற்றி செய்துக் காண்டிருந்தார்கள்.

வாழி - விருத்தம்.

பங்கயமாதர்வாழி பார்மகளுமையாள்வாழி
செங்கண்மாலயனும்வாழி தேவர்கந்தருவர்வாழி
தங்குநான்மறைகள்வாழி தாரணியரசர்வாழி
பொங்குநூல்வல்லார்வாழி புண்ணியரென்றும்வாழி.

மங்களம்.

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவாருக்கு ஜெயமங்களம்-எங்கள்
தில்லைமூவாயிரவர்க்குச் சுபமங்களம்

அநுபல்லவி.

இருடிகளிதுவரி தரிததிசயமென
விருகரமுடிமிசை மருவத்துதிசெய்கன
பரவும்பர்சம்பிரமங்கள் துதித்திடும்
பரமனுடுமம்பலத்தில் கதித்திடும் தி

சரணங்கள்.

திருவாசகமுந்திருக் கோவைபாடி னவற்கும்
சீர்காழியிலுதித்த சிறந்தசம்பந் தருக்கும்
ஒருமாதிடத்திற்றாதுக் குவந்துவிடுத் தவற்கும்
ஒருவரொப்பில்லாத் திருநாவுக்கர சருக்கும்
உரியமறைக்கு-முயர்கலைகட்கும்-உரகர்பதிக்கு-முவணபதிக்கு
ஓதுசந்திரசூரியர் முனிவர்களுக்கும்
தீதிலாதபாவலர்முத லினைவர்க்கும் தி

திருநாளைப்போவாரென்னும்

நந்தனார்சரித்திரக்கீர்த்தனை

முற்றிற்று.

உ

சிவமயம்.



# சிதம்பரக்கும்மி.



## விநாயகர் துதி.

சீர்மேவுந்தில்லையம்பலத்தில்அன்பு
  சேரக்கும்மித்தமிழ்பாடக்
கார்மேவுமேலைக்கோபுரவாசல்
  கற்பகப்பிள்ளையார்காப்பாமே. க

## முக்குறுணிவிநாயகர் துதி.

சர்க்கரைமோதகந்தேங்காயுங்கொண்டு
  சந்நிதிமுன்பாகத்தான்படைத்து
முக்குறுணிப்பிள்ளையாரைவேண்டி
  முழங்கிக்கும்மியடியுங்கடி. உ

## சுப்பிரமணியர் துதி.

கோலமயிலின்முதுகேறிவந்து
  கும்பமுனிக்குவருட்செய்யும்
பாலசுப்பிரமணியன்பீஜாக்ஷரத்தைப்
  பாடிக்கும்மியடியுங்கடி. ௩

கங்காதேவிக்குக்கைகூப்பியாரும்
  கையிலெடுத்துள்ளேபானம்பண்ணி
தங்காமற்சிவகாமிசந்நிதி
  சார்ந்துகும்மியடியுங்கடி. ௪

கருதுஞ்சுருதிக்கெட்டாதசிவ
காமசுந்தரிவாசலிலே
விருதுபேசியேசிறுகுழந்தைகள்
வேதம்படிக்குதுபாருங்கடி.

நாலுபுறத்திலுங்கோபுரமாமதி
னடுவிலெங்கினுமாளிகையாம்
காலோராயிரங்கொண்டொருமண்டபம்
கட்டியிருக்குதுபாருங்கடி.

தூயமறைமுதலாராய்ந்துமிங்கே
துலங்கியமூவாயிரவர்
ஞாயம்பொருந்தியதேவசபைவந்து
நாடிக்கும்மியடியுங்கடி.

சாந்துபொட்டுதளதளென்னநல்ல
சந்தனவாடைகுமுகுமெனக்
கூந்தலழகிக்காரியெல்லாங்காலைக்
குவித்துக்கும்மியடியுங்கடி.

அஸ்தகடகம்பளபளென்னசொல்லும்
அரைஞான்மாலைதளதளென்ன
விஸ்தாரமாகநின்றுக்கொண்டுகையை
வீசிக்கும்மியடியுங்கடி.

கைதனில்விபூதிப்பையுங்கொண்டுஅவர்
கண்டத்தில்ருத்திராட்சமாலைபூண்டு
வைதீகபூசைகள்செய்கின்றதீட்சதர்
வாழக்கும்மியடியுங்கடி.

கோவிலுக்குநாலுபேர்களுண்டாம்அவர்
குறித்தமுறையாய்ப்பூசைசெய்ய
பாவித்தபின்பவர்வேறொருவர்வசப்
படுத்துவாரென்றேகும்மியடி.

ஆண்டுக்குள்ளாரபிஷேகமுண்டாம்பின்னும்
அதிலேரெண்டுதிருநாளாம்
வேண்டிவந்தார்கள்கலிதீருமென்று
விரைந்துகும்மியடியுங்கடி.

பூமிபுகழ்ந்திடுந்தில்லைப்பதிஅது
பூலோகக்கயிலாசமென்று
தாமரைப்பூவினில்வாழ்கின்றலட்சுமி
தாயார்சந்நிதிபாருங்கடி.

மூலஸ்தானத்தைக்கண்டாயேநல்ல
முத்தியிதுவென்றுகொண்டாயே
காலெடுத்தாடியகிர்த்தசபேசரைக்
கண்டுதரிசிப்போம்வாருங்கடி. கசு

தில்லைமாகாளியோடாடிவரஅவள்
சித்தங்கலங்கித்தலைகுனிந்தாள்
வெல்லுவதெப்படியென்றொருகாலை
விண்ணிலெடுத்தார்பாருங்கடி. கரு

நெற்றியில்வேர்வைமுத்துதிர்ந்துமெத்த
நேர்த்தியதாய்ப்பரந்தோடிவர
பத்தியுடன்பொன்னம்பலவாணனைப்
பணிந்துகும்மியடியுங்கடி. கசு

தித்தியென்றீசனடம்புரியமெய்த்
தேவர்கள்பூமழைதான்சொரிய
மத்தளங்கொட்டியகோபாலகிருஷ்ணனை
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. கஎ

சிதம்பரமென்றுசொல்லாமல்விச்
சித்திரக்கூடமென்றுசொல்லி
நிதங்கொண்டாடுமையங்கார்கள்வந்து
நின்றிருக்கின்றார்கள்பாருங்கடி. கஅ

காணிக்கைகொண்டுவாருங்கடியிந்தக்
கனகசபையைப்பாருங்கடி
மாணிக்கவாசகர்புகுந்தவாசலை
மதித்துக்கும்மியடியுங்கடி. ககூ

அன்னமுடன்பால்தேங்கனியும்செய்யும்
அபிஷேகமுண்டென்னூரும்
பொன்னம்பலந்தனில்சந்திரமௌலியைப்
போற்றிக்கும்மியடியுங்கடி. உ0

முத்தியளித்திடுஞ்சந்நிதிக்குச்சொல்லும்
மேளமுந்தாளமுமேதுக்கடி
சத்தம்பெருகியகண்டாமணியோசை
சந்நிதிக்கோர்வையாம்பாருங்கடி. உக

புட்டுவடையுந்தேன்குழலும்மணப்
புத்துருக்குநெய்ச்சம்பாவும்
சட்டப்படிதவராமலையன்
சந்நிதிக்கோர்வையாம்பாருங்கடி. உஉ

சுற்றிவந்துச்சியைப்பாருங்கடிசெகச்
சோதிமயக்கம்பமொன்பதடி.

மலையாளச்சின்னானும் மன்னவன்நீதானே
அடா-தொட்டியுத்துச்சின்னானும் துரைமகனும்நீதானே
அப்போதுசின்னானும் அம்மனுக்கேதுசொல்வான்
நான்தான்சின்னானென்று நலமாகதான்பணிந்தான்
பணிந்தவொருசின்னானை பாவையருந்தான்பார்த்து
எழுந்திருடாசின்னானென் றீஸ்வரியுந்தானுரைத்தாள்
கைகட்டிவாய்புதைத்து கட்டழகன்நிற்கலுற்றான்
அப்போதபயாஸ்தம் எல்லாருந்தான்கொடுத்தார்
அபயாஸ்தந்தான்கொடுத்து அஞ்சாதேயென்றுசொன்னாள்
அனைவரையும்போகவென்று அன்பாய்விடைகொடுத்தாள்
சின்னானைத்தானிறுத்தி யெல்லோரையும்போகச்சொன்னாள்
அப்போதுசின்னானும் ஆச்சிமுகந்தான்பார்த்து
இளைப்பாயிருக்கிறே னேந்திழையேயெந்தனுக்கு
பசியிளைப்பைத்தீர்த்துவிடும் பாவையரேயெந்தனுக்கு

## சின்னானுக்கு அம்மன் அன்னமிடுதல்.

அப்போதுயீஸ்வரியும் ஆரணங்கேதுசெய்தாள்
சடையைக்குலுக்கினளே தையலந்தகாமாட்சி
எழுபேர்பெண்கள் அம்மனுக்குத்தான்பணிந்தார்
எங்களையுண்டுபண்ண தேதுக்கென்றுகேட்கலுற்றார்
அப்போதுயீஸ்பரியாள் அவர்களுக்கேதுசெய்தாள்
மலையாளசின்னானுக்கு வகையுடனேசாதமதை
சமையல்செய்யுமென்றுசொல்லி தையலருந்தானுரைத்தாள்
எழுகுலைவண்டியரிசி யின்பமுடன்பிண்ணாக்கு
எட்டுதோட்டக்கிரை யின்பமுடன்பிண்ணாக்கு
இதமாகத்தான்சமைத்து யின்பமுடன்வைத்தார்கள்

## அம்மன் சின்னானைசாப்பிடச்சொல்ல சின்னான்வருதல்.

சின்னானைத்தான்பாத்து தேன்மொழியாளென்னசொல்வாள்
சர்வதீர்த்தப்பொய்கையிலே தந்தசுத்திசெய்துக்கொண்டு
தந்தசுத்திசெய்துக்கொண்டு தனஞ்சயரேவாருமென்றாள்
சாணமூலைச்சவுக்கை நலமாகத்தான்கொடுத்து
தட்டையைத்தானெடுத்து கொற்றவனுமேதுசெய்தார்
சமைத்தவொருசாதமெல்லாந் தையலரேகொட்டுமென்றார்
அப்படியேகொட்டினார்கள் அங்கிருந்தசாதமெல்லாம
அந்தானைத்தான்பிடித்து மெதுவெனவேவாறார்கள்
கண்டுவிட்டாள்காமாட்சி கட்டழகியப்போது
சின்னான்சமர்த்தை தேன்மொழிமெச்சிக்கொண்டாள்
சர்வதீர்த்தப்பொய்கையிலே தனஞ்செயரேநீர்போயி
சாதமுண்டுவாருமென்று தையலருஞ்சொன்னாளே
அப்போதுசின்னானும் அன்பாகவோடிவந்து

கொண்டுவந்தசர்தமதை விசரிவிட்டான்செங்கையிலே
அப்போதுசின்னானும் அங்கெனவேயேதுசெய்தான்
மண்டியிட்டுஉட்கார்ந்தான்வங்கணத்துசின்னானும்
வாய்வைத்துறிஞ்சுகின்றார் வகையானகெங்கைதனை
ஒருமுணறுக்குள்ளாக ஒருசுற்றுசலம்வடியும்
மூன்றுமுணறுக்குள் முழுதும்வடியுதுபார்
ஆரால்உளுவைமீனும் அக்குளத்துமச்சமெல்லாம்
வாளைவிராலுளுவை வகையானமீன்களெல்லாம்
வங்கணத்துசின்னானவன் வயிற்றில்நிறைந்ததுகாண்
மூன்றுமுழுக்குள்ளே முட்டவடிந்ததுபார்
அத்தனையுந்தான்குடித்து கரைமேற்படுத்திருந்தான்
பாம்பாய்ப்புரளுகிறான் பாங்கானசின்னானும்

ஈஸ்பரி சின்னானைத்தேடிப்பிடித்தல்.

சின்னானைகாணேமென்று எழுந்தாளேஈஸ்பரியாள்
சடைகுலுங்கமுடிகுலுங்க தையலெழுந்திருந்தாள்
சலைத்தோல்புலித்தோலும் மான்தோலுமதானசைய
பொற்பிரம்புகைபிடித்து பொற்கொடியும்வாராளே
சர்வதீர்த்தப்பொய்கைதேடி தையலரும்வாராளே
வங்கணத்துசின்னானை கண்டுவிட்டாள்காமாட்சி
குளத்திற்சலமுமில்லை கொடியிடையாள்காமாட்சி
குளத்திற்சலமுமில்லை கொடியிடையாள்கண்டுவிட்டாள்
அப்போதுசின்னானும் அன்பாகயேப்பமிட்டான்
ஏப்பமிடும்போது யெழுந்துமச்சமெல்லாம்
வாளைவிராலும் வகையுடனேமீன்களெல்லாம்
வாயிலிருந்துமல்லோ வந்துவிழுந்ததுபார்
துள்ளிவிழுகுதுபார் சீரானவக்குளததில்
இவனுடையதன்சமர்த்தைக் கண்டாளேஈஸ்பரியும்
இவனைச்செயிக்கவல்லோ ஒருவனாற்கூடாது
எப்படிசெயிப்பானென்று ஈஸ்வரியுமனதிலெண்ணி
கறுப்பாயிதருமத்தாலே கட்டழகன்பிழைத்தானே
இவனைச்செயிக்கவலலோ ஒருவரால்முடியாது
என்றுமனதிலெண்ணி யின்பமுடன்காமாட்சி
பொற்பிறப்பங்கோலாலே பொற்கொடியும்தட்டிவிட்டாள்
துடித்துயெழுந்தானே தொட்டியத்துச்சின்னானும்
அம்மன்முகம்பார்த் தவனுமேயேதுசொல்வான்
எனக்கென்னகெதியெனவே யீஸ்வரியைக்கேட்கலுற்றான்
அப்போதுகாமாட்சி யவனுகருயேதுசொல்வாள்
காத்தவனுஞ்சின்னானுங் கலந்துமிகப்பட்சமுடன்
அண்ணனுக்தம்பியுமாய் அன்பாயிருங்களென்றாள்
சின்னானதுகேட்டு சிந்தைமிகமகிழ்ந்து
ஆண்டவர்க்கடிமையென்றான் ஆணழகன்சின்னானும்

சின்னானுஞ்சுவாமியுமாய் சீராகத்தானிருந்தார்
அன்றுபோய்மற்றுநாள் ஆண்டவனுமென்னசெய்தார்
தாயாரைவணங்கியந்த சுவாமியவர்கேட்கலுற்றார்
வேட்டைக்குப்போய்வாரேன் மெல்லியரேவிடைகொடென்றார்
சின்னானுமாய்த் தேன்மொழியேபோய்வாரோம்
அப்போது அம்மனவள் ஆண்டவருக்கேதுசொல்வாள்

அப்படியேபோமென்று அனுப்பிவிடைபெற்று

வேட்டைக்கு வருதல்.

காத்தானும்சின்னானும் கடுகெனவேவாரார்கள்
புல்லங்கிமாமலையில் புலிவேட்டையாடுதற்கு
வாரார்களிருவருமாய் மண்ணதிரவிண்குலுங்க
மானிலத்திலுள்ளதொரு மாற்றான்குலைநடுங்க
சில்லென்றகாடுவிட்டு செடியும்வனந்தாண்டி
கரடியுறங்குவனம் காட்டானைதூங்குவனம்
சிங்கமுறங்குவனம் சிறுபுலிகள் தூங்குவனம்
ஒருநாரைக்கிருநாரை யுயர்ந்தகொம்பில்கூண்டுகட்டும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனந்தாண்டி
எட்டடிவேங்கை யிருக்கும்வனந்தாண்டி
வனமாய்வனந்தாண்டி வாரார்கள்வெகுதூரம்
புல்லங்கிமாமலையின் புண்ணியர்கள்வந்துநின்றார்

காத்தவராரசுவாமியும் சின்னானும் வேட்டையாடுதல்.

மானுக்குக்கன்னிகுத்தி மலையோரம்போயிருந்தார்
சிட்டுக்குக்கன்னிகுத்தி செடியோரம்வந்துநின்றார்
மான்படுங்கன்னியிலே மயிலணையாள்பட்டாள்காண்
சிட்டுபடுங்கன்னியிலே தேன்மொழியாள்பட்டாள்காண்
இப்படியாக விருக்கின்றவேளையிலே
ஆரியமாலை அவள்குளிக்குமேடையிலே
கொச்சிமஞ்சல்குடகுமஞ்சள் கொல்லாத்தரக்குமஞ்சள்
எழுமஞ்சள் தான்குளித்தாள் யிளங்கொடியாள்மாதுகன்னி
அவள்குளித்தமஞ்சளோடை ஆறாய்ப்பெருகுதுபார்
வாளைகண்டமடுக்கரைகள் வையாறுபெருகுதுபார்
தாளிப்பனஞ்சோலை கூந்தற்மனஞ்சோலையது
அதிலேபெருகிவரும் அவள்குளிக்குமோடையது
மஞ்சளோடைகண்டாராம் மாரிபிள்ளைபஞ்சவர்னம்
அடா-தொட்டியத்துச்சின்னானே துரைமகனேஊழியனே
வங்கணத்துச்சின்னானே மதகளிறேஊழியனே
மஞ்சள்மணக்குதடா மருவாடைகொள்ளுதுபார்
தாழம்பூவாடை தனிவாடைகொள்ளுதுபார்

ஆர்குளிக்குமஞ்சளோடை ஆணழகர்சொல்லுமென்றார்
தொட்டியத்துச்சின்னானும் துரைமகனேதுசொல்வான்
ஆச்சான்மகள்பெண்ணும் ஐயன்மகள்மாலைபெண்ணும்
அவள்குளிக்குமஞ்சளோடை என்றாராம்சின்னானும
மஞ்சள்கமகமென்ன மதிவர்டைகொள்ளுதுபார்
ஆர்பெற்றசீர்மகளோ ஆரியமாலையவள்
வங்கணத்துச்சின்னானும் மன்னவனுஞ்சொல்லுகிறார்
ஆச்சாளழகுபெண்ணு ஐயன்பெண்காளையிவள்
ஆறாயிரம்வேதியர்க்கு அருமைதிருமகளாம்
அப்பாபட்டனீன்ற ஆரியப்பூமாலையவள்
அவள்குளிக்குமஞ்சளோடை ஆறுப்பெருகுதென்றான்
கண்டறிந்துவாரேனென்று கடுகெனவேபஞ்சவர்னம்

காத்தவராயசுவாமி மச்சவடிவால் ஆரியமாலையைக்காணுதல்.

ஓட்டம்பெருநடையாய் ஓடிவந்தார்பஞ்சவர்னம்
ஒருசேற்கண்டைபோல சுமாமிவடிவெடுத்தார்
சிவுக்கென்றுதான்குதித்தார் வாளைகண்டமடுவிலே
அமமைமடுவில்மாரிபிள்ளை அன்பாகவாராரே
ஆரியமாலைகெண்டை ஆடுமேபெண்கண்டை
ஆண்டவனைத்தான்பார்த்து அங்கெனவருகுதுபார்
ஆண்கெண்டைவருகுதென்று ஆக்கரித்துவருகுதங்கே
பங்குகள்போடுகுது பார்ப்பாரக்கெண்டையது
இதைக்-கண்டுவிட்டாராண்டவனார் கட்டழகர்வேல்முருகர்

காத்தவராயசுவாமியாவரையுந்தொழுது வெண்ணீரிரைத்தல்.

மோசங்கள்வருகுதென்று விமலபிள்ளைபஞ்சவர்னம்
ஆரைநினைக்கின்றா ரளவற்றசிந்தைதனிலே
தாயைமனதிலெண்ணி தகப்பனையுமனதிலெண்ணி
அண்ணன்கணபதிவய அன்பாய்மனதிலெண்ணி
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்தார்
கொல்லிமலைக்கன்னிகளைக் கொப்பெனவேதானினைந்து
வெண்ணீறுவூதிவிட்டார் விமலபிள்ளைபஞ்சவர்னம்
ஆயிரங்கெண்டையர்கள் மதிமயங்கிக்கொள்ளுதுபார்
அத்தைமகனே யன்புள்ளமைத்துனனே
மாமிமகனேயென்று மருங்குள்ளமைத்துனரே
எங்களைநீர்மருவி யிருந்தாசைதீருமென்று
காதல்விடாய்கொண்டு கட்டழகுபெண்கெண்டைகள்
மோகவிடாய்கொண்டு மெத்தெனவேயேதுசொலலும்
எங்களைச்சேருமென்று எந்தனுடன்கேட்குதுபார்

அப்போதுஆண்டவனு ராறைநினைக்கலுற்றார்
நயனாரின்பூதத்தை நாதரவர்தானழைததார்
அக்குரல்தான்கேட்டு அங்குவந்தபூதமது
ஆண்டவனார்முன்னேவந்து அப்பூதமேதுசொல்லும்
என்னையழைத்தவகை யேதுவகைசொல்லுமென்று
பூதமதுகேட்கையிலே புண்ணியனாரேதுசொல்வார்
எமனார் தன்பூதமது யின்பமுடன்நீயுமாக
ஆண்கெண்டைவடிவெடுத்து அங்கனமேநீங்களுமே
பெண்கெண்டையாகிரத்தை புகழாகமருவுமென்றார்
அப்போதுபூதங்கள் ஆண்டவனார்சொற்கேட்டு
ஆண்கெண்டைபோலாக ஆச்சுதுபூதங்கள்தான்
ஆயிரங்கெண்டைகளை யன்பாய்மருவுதுபார்
அந்தப்பெண்கெண்டைக்கு ஆசைகள்தீர்ந்துதப்போ
வாளைகண்டமடுவைவிட்டு வருகுதுபெண்கெண்டையெல்லாம்
மதுவங்கரைதேடி வருகுதுகெண்டைகள்தான்
ஆரியமாலைகெண்டை அன்பாகத்தாமிருக்கும்
ஆண்டவனார்கெண்டைரெண்டும் அன்பாகயேதுசெய்யும்
ஆண்டவனார்செலவுபெற்று அதனிடத்திற்போய்சேரும்

ஆரியமாலைகூந்தல் காத்தவராயசுவாமியைக்கட்டுவது.

பூதங்கள்போனபின்பு புண்ணியனார்கொல்லிமலை
மச்சவடிவுகொண்டு மடுவில்வரும்பொழுது
அப்போது ஆயிரம்வேதியற்கு அழகுபெண்ணாள்மாலைகன்னி
மாலைகன்னிகூந்தலது மட்டுமிதங்களில்லை
எல்லார்தலைகூந்தல் ஐந்துபாகம்மாறுபாகம்
ஆரியமாலைகூந்தல் அறுபத்துநான்குபாகம
அவ்வலவாய்நீண்டதொரு அழகுள்ளகூந்தளது
தங்கக்கம்பிபோலாந் தலைகூந்தல்தானிகளாம்
அப்படியாய்க்கொற்றதொரு அழகுள்ளகூந்தலிலே
அதிலேயொருகூந்தல் அருந்துவருகுதுபார்
அவள்குளிக்கிறவோடையிலே கூந்தல்தனித்துவந்து
கொல்லிமலையாண்டவரை கொடுதலையாய்சுற்றுதுபார்
ஆண்டவரைகட்டுதுபார் அருவையிடகூந்தலது
முன்கட்டும்பின்கட்டுமாய் மூன்றுகட்டுக்கட்டுதுபார்
கட்டினகட்டுடனே கெங்கையிலேமுன்கழன்று
அடித்துக்கொண்டுவருகுதுபார் ஆறுதனிலாண்டவரை
எல்லாக்காய்படுத்துவிட்டார் மாரிபிள்ளைபஞ்சவர்ணம
காத்தவராயர் தனக்கபாயம்வருகுதென்று சின்னானைநினைக்க

சின்னான்கெருடனாய்வருதல்.

ஆரைநினைக்கலுற்றார் ஆண்டவனார்கொல்லிமலை
அவரைநினைக்கலுறறார் யெங்கள்துரைபஞ்சவர்ணம்

வங்கணத்துசின்னுனே மதகளிறேயூழியனே
தொட்டியத்துசின்னுனே துள்ளிபுலிவீரியனே
என்னுயிர்போகுதடா யிளஞ்சியனேவாருமென்றார்
தனித்துவுயிர்போகுதடா தனஞ்செயனேவாருமென்றார்
ஆண்டவனாகூப்பிடவே யறிந்தாளேசின்னுனும்
காத்தவராயருக்கு கனமோசம்வந்ததென்று
மலையாளவித்தைகளால் என்னவடிவெடுத்தான்
செங்கருடன்போலாக சீக்கிரமாய்வடிவெடுத்து
செட்டைதட்டிசிறகொதிக்கி சிவ்வென்றுதான்பறந்து
மடுவின்கரையோரம் வான்கெருடன்வந்துநின்று
கட்டுண்டகாத்தவரைக் கரையிலொதுக்கக்கண்டு
மல்லாக்காய்குண்டுகட்டா யிருக்கக்கண்டுசெங்கருடன்
அக்கரையிலவேலமரம் ஆற்றங்கரையோரம்
வெம்பரமணல்தனிலே போட்டிவர்கட்டுவிப்பார்
குத்திகுத்தியவிழ்ப்பாரே குணமுள்ளசின்னுனும்
சிக்குபட்டகூந்தல்தனை சீக்கிரமாயவிழ்த்துவிட்டார்
கட்டவிழ்த்தபிற்பாடு காத்தவனார்தானெழுந்தார்
அப்போ-நிலைரூபங்கொண்டாரே நிமலிபிள்ளைபஞ்சவர்னம்
கட்டுண்டகூந்தல்தனை காத்தவனார்தான்பார்த்து
ஆரியமாலைகூந்தல் ஆண்டவனார்தானெடுத்து
அதை-அளவிடபார்த்தாரே அறுபத்துநான்குபாகம்
கதிர்கம்பிபோலாகக் கண்டுவிட்டார்பஞ்சவர்னம்
கூந்தள்படைத்தவள்காண் கொடியிடையாளெவ்வழகோ
அவள்கூந்தலிவ்வழகு கொடியிடையாளெவ்வழகோ
முடிகூந்தலிவ்வழகு மொய்குழலாளெவ்வழகோ
அழகுடையமாலைதன்னை யவளைசிறையெடுக்கவேண்டும்
வடிவுடையமாலைதன்னை மன்னன்சிறையெடுக்கவேண்டும்
அவளைசிறையெடுக்க அன்பாய்மனதிலெண்ணி
கன்னியரைசிறையெடுக்க கட்டழகர்மனதிலெண்ணி

## காத்தவராயசுவாமி தாயாரிடம்வருதல்.

அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனெங்கேவாரார்
தாயாரைதேடியல்லோ சுவாமிதுரைவாரார்
மாதாதவநிலைக்கு மன்னவனார்வாராரே
ஆறுசுனைதாண்டி அடர்ந்தவனந்தாண்டி
ஆலமரங்கம்பாநதி ஆண்டவனார்தேடிவந்தார்
தாயார்தவநிலையில் சுவாமிவந்துதெண்டனிட்டார்
மாதாவின்முன்னேவந்து மலர்தூவிதெண்டனிட்டார்
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
வந்துபணிந்தவனை மகனென்றுதானறிந்து

கண்ணைத்திறந்தப்போ காமாட்சிதான்பார்த்து
வாழ்த்திவிடைகொடுத்து மைந்தனுக்கேதுசொல்வாள்
என்னைப்பணிந்தவகை யேதுவகைசொல்லுமென்றாள்
எவ்விடம்போய்வந்தா யெனக்குறியச்சொல்லுமென்றாள்
போய்வந்தவிடத்தை புண்ணியரேசொல்லுமென்றாள்

காத்தவராயசுவாமி தாயாரிடத்தில் ஆரியமாலையின் வரலாறு கூறுதல்

அப்போதுகாத்தவனார் அம்மனுக்கேதுசொல்வார்
நான்-புல்லங்கிமலையின்மேலே புலிவேட்டையாடிருந்தேன்
மானுக்குக்கன்னிகுத்தி மலையோரம்போயிருந்தேன்
சிட்டுபடுங்கன்னியிலே தேன்மொழியாள்பட்டாள்காண்
மான்படுங்கன்னியிலே தேன்மொழியாள்பட்டாள்காண்
கண்டுவந்தமாலையரைக் கொண்டுவரவேணுமம்மா
பாத்துவந்தமாலையரை பாரிபண்ணவேணுமம்மா
பாத்துவந்தமாலையரை பரிபண்ணவேணுமம்மா
கூந்தல்படைத்தவள்காண் கொடியிடையாள்மாலகன்னி
கூந்தலைப்பாருமென்று கொற்றவனார்முன்னேவந்தார்
அப்போதுகாமாட்சி அங்கனவேயேதுசெய்தாள்
அளவிட்டுப்பார்த்தாளே அளவுடையகூந்தல்தன்னை
அறுபத்துநான்குபாகம் அளவுபடகூந்தலது
அப்போதுகாத்தவனா ராண்டவனாரேதுசொல்வார்
ஆச்சாளழகுபெண்ணை ஐயன்மகள்மாலைதன்னை
அவளைச்சிறையெடுக்க அன்பாய்விடைகொடேன்றார்
அவள்-கூந்தலோயிவ்வழகு கொடியிடையாளெவ்வழகோ
தலைச்சிறையோயிவ்வழகு தையலாளெவ்வழகோ

காத்தவராயர் ஆரியமாலையை சிறையெடுக்க மாதாவைகேட்கல்.

அழகுடையமாலைதன்னை சிறையெடுக்கவேண்டுமம்மா
கன்னியந்தமாலைதன்னை கண்டுசிறையெடுக்க
போகவிடைதாருமென்ன போய்வாறேனமாலைவனம்
கண்டுவந்தமாலையைநான் கொண்டுவரவேணுமம்மா
பார்த்துவந்தமாலையைநான் சேர்த்துவரவேணுமம்மா
பாயிற்படுத்தாலும் பாம்பாய்புறட்டுதம்மா
தரையிற்படுத்தாலும் செந்தேளாய்கொட்டுதல்லோ
உண்டாலுஞ்சாதயது உடலிற்றரிக்கவில்லை
தின்றாலுமிலையடைக்காய் செவ்வாய்சிவக்கவில்லை
கட்டையெல்லாமுன்னிடத்தே கருததெல்லாமாலையிடம்
செத்தைகட்டையுன்னிடத்தே சீவனெல்லாமாலையிடம்
மாண்டகட்டையுன்னிடத்தே வல்லுயிர்காள்மாலையிடம்
கன்னிதனைசிறையெடுக்க கடுகவிடைகொடம்மா

காமாட்சி காத்தவருக்கு வெண்ணீறுகொடுத்து தடைசொல்லல்.

அப்போதுகாமாட்சி ஆண்டவருக்கேதுசொல்வாள்

வென்றுவாமகனே விபூதியையள்ளியிட்டாள்
தாயையிவர்கேட்கையிலே தந்துவிட்டாள்விபூதி
விபூதியள்ளியிட்டு மெல்லியவளே துசொல்வாள்
ஆர்குடியைநீகெடுக்க ஆண்டிவேடங்கொண்டாயடா
எவர்குடியைநீகெடுக்க யிவ்வேடங்கொண்டாயடா
அவளாருஐயன்மகள் நீயாரு ஆண்டிமகன்
ஆண்டிமகனுர்க்கு ஐயன்மகளாமோ
சாதிக்கெல்லாமுயர்ந்ததடா தையலிளங்கொடியாள்
நாலானசாதியிலே மேலானசாதியவள்
ஐயன்மகளாரை ஆசரிக்கவெண்ணுது
பிர்மகுலப்பெண்ணல்லோ பிர்மஹத்திசுற்றுமடா
பாவம்வந்துநேருமடா பழிகாராயுந்தனுக்கு
தோஷம்வந்துநேருமடா பஞ்சவர்னமுந்தனுக்கு
வினைகள்வந்துநேருமடா வேதியர்கள்பெண்ணாலே
நாலானசாதியிலே மேலானசாதியடா
பாலானமேனியவள் சேலானகன்னியடா
பிர்மகுலமாலையடா வேதியர்மகளாலே
வினைகள்வந்துசேருமடா வேதியர்மகளாலே
பழிகள்வந்துநேருமடா பட்டர்மகளாலே
தாயிலும்பத்தினியை தாரமென்றுயெண்ணுதே
என்னிலும்பத்தினியா னிடைகூறுசொல்லாதே
மாதாவிலும்பத்தினியாள் மனையாளென்றெண்ணுதே

காத்தவராயர் தாயாருடன் மறுமொழிகூறல்.

என்றுஅம்மன்சொல்லையிலேயேதுசொல்வாராண்டவனுர்
ஆச்சிமுகம்பார்த்து ஆண்டவனுர்கூறலுற்றுர்
அம்மா-தோஷம்வந்துசேர்ந்தாலும் தோகையாள்நான்படுவேன்
பாவம்வந்துநேர்ந்துதென்றல் பச்சிலையாலோட்டிடுவேன்
வினைகள்வந்துநேர்ந்ததானல் வெண்ணீரால்போக்கிடுவேன்
மாற்றுன்பிடித்தாலே மருந்துண்டுவையகத்தில்
கூற்றுவன்பிடித்தாலே குண்டுமுண்டுவையவத்தில்
காத்தான்பிடித்தாக்கால் கட்டைக்கிரையாக்கிடுவேன்
போகவிடைகொடம்மா போய்வாரேனமாலைவனம்
மாலைதனைக்கொண்டுவர வரங்கொடம்மாபெற்றவளே

காத்தவராயசுவாமிக்கு காமாட்சிமொழிகூறல்

காமாட்சிதான்கேட்க காத்தவருக்கேதுசொல்வாள்
என்றிவர்கேட்கையிலே யீஸ்வரனுர்பத்தினியும்
கம்பாநதிகாமாட்சி காத்தவருக்கேதுசொல்வாள்
அப்பாமகனேயடா அழகுளகண்மணியே
மாலைதனைச்சிறையெடுக்க மனந்தனிலேயெண்ணங்கொண்டாய்
கன்னியரைசிறையெடுக்க கருத்தில்நினைவானுய்

மாலைதனைக்காணுதற்கு மைந்தாவுன்னாலாகுமோடா
அவளுக்கு-கட்டென்னகாவலென்ன காவலதிகாரமென்ன;
சுற்றுஞ்சுரங்கமென்ன துரைமக்கள்காவலென்ன
கீழேழுசுரங்கமுண்டு மேலேழுசுரங்கமுண்டு
இருபத்தேழுசுரங்கத்துள்ளே இருக்கின்றாள்மாலையவள்
அவளுடையகோட்டைதனில் அதிகாரமெத்தவுண்டு
வலையன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
முத்துடையான்சுத்துடையான் முடிபொறுத்தசிவப்புடையான்
அவளுக்கு-காணிகளத்தூரு காமுருவல்நன்னாடு
முத்திரிசப்பேட்டையப்பா முதல்வரிசைகிராமமுண்டு
வம்பனுக்குஞ்சோழனுக்கும் வம்புலிக்காலாண்டிச்சி
மாவண்டமறக்காண மகிழ்ந்திருக்குஞ்செய்யூராம்
மங்களபங்காள மாமஞ்சள்உரையூராம்
சேவூர்உரையூராஞ் செல்லப்பன்பாளையமாம்
கோவூர்உரைவூராங் கெண்டையன்பாளையமாம்
ஆவூராம்சோவூராம் அசலூராம்பேட்டைகளாம்
காவேரிவடகிழக்கு நேர்கிழககுதென்மேற்கு
பாம்படிப்பட்டூராம் பத்துசுற்றுபாளையமாம்
பாய்ச்சலூர்ஓமாந்தூராம் பத்துலட்சமானியமாம்
கோட்டைக்குநேர்கிழக்கே கோடிசுற்றுமுல்லைவனம்
நாலுபக்கங்காவல்களாம் நலமானகோவில்களாம்
பிச்சாண்டியீசர்தேவர் பிரபலமுள்ளஆலயமாம்
அந்தவொருஆலயத்துக் கப்பாலேவூர்களுண்டு
புத்தூரகரமது புதுகுடிசைஓமாந்தூர்
ஐந்நூற்றெட்டுகிராமமது ஆரியர்க்குசொந்தமுண்டு
மாலைகன்னியாளவட்கு மாளாததகாவலுண்டு
முப்பதுபேராசாக்கள் முந்நூறுமந்திரிகள்
ஐம்பதுபேராசாக்கள் ஆயிரம்பேர்மந்திரிகள்
இத்தனைபேர்காவலுக்கு பலமானகாவலுண்டு
சிவப்புடையான்காவலிலே சிட்டும்பறவாது
சிட்டுபறவாது சிறுகுருவிநாடாது
வக்காபறவாது வனக்குறுவிநாடாது
பட்சிபறவாது பலகுருவிநாடாது
காகம்பறவாது கருங்குருவிநாடாது
அள்ளப்பழுத்தாலும் அணிகள்வந்துசேராது
கிள்ளப்பழுத்தாலுங் கிளிகள்வந்துசேராது
ஆரியமாலைகன்னி அவளுடையகோட்டையிலே
இன்னமுண்டுகாவலர்களெத்தனையோகோடிமன்னர்
இட்டசட்டைவாங்காதயேழுலட்சம்கிங்கிலியர்
போட்டசட்டைவாங்காதபொல்லாதகாவல்களாம்
உருவினகத்திகையில் ஒருலட்சங்காவலுண்டு

இப்பெரியசாவலிலே யெப்படிநீபோய்வருவாய்
மானென்றசொல்வசன மறந்துவிடுயென்மகனே
கன்னியென்றசொல்வசனங் கடுகமறந்துவிடு
மாலைபிறக்கையிலே கூடப்பிறந்தகோடா
கன்னிபிறக்கையிலே கழுமரந்தானுண்டாச்சு
தச்சனுளிநாடாமல் தானாய்வருகுதுபார்
சித்துளிநாடாமல் சிலைபோலவளருதுபார்
கழுவோகழுப்பெருமை கழுமரத்தின்சிங்காரம்
தூண்டில்துடைப்பெருமன் தூண்டிமுள்கைபெருமன்
தொண்டைக்குதூண்டிமுள்ளு துடைபெருமன்வளருதுபார்
மண்டைக்குக்கோடாலி மார்புக்கிருப்புலக்கை
மண்டையிலேபாய்ந்தமுள்ளு மார்புருகிப்போகுதடா
தொண்டையிலேபாய்ந்தமுள்ளு தோளுருகப்பாயுதுபார்
நாவிலேபாய்ந்தமுள்ளு நாசியிலுருகுதுபார்
கழுவிலிருக்கணுமா காய்ந்துலர்ந்துபோகணுமா
தூண்டிலிருக்கணுமா துடிதுடித்துமாளணுமா
காமாட்சிபிள்ளையென்று-கண்டவர்களேசணுமா
வேண்டாமடாயென்மகனே மாலையென்றசொல்வசனம்
மாலையென்றசொல்வசன மறந்துவிடுயென்மகனே
என்னிலும்பத்தினிதா னிடையூறுசொல்லாதே
தாயிலும்பத்தினிதான் தாரமென்றுகூறாதே
மாதாவிலும்பத்தினிதான் மனையாளென்றெண்ணாதே
அவள்-கோதையென்றுசொல்லாதே ரோஷம்வருமெந்தனுக்கு
பார்ப்பாரபெண்ணல்லவோ பாவம்வரும்தோஷம்வரும்
தொட்டாலும்தோஷமடா தோகையென்றுசொல்லாதே
வேண்டாமடாயென்மகனே வெண்மலரைச்சொல்லாதே

காத்தவராயர் தாயைமறுபடியும் விடைகேட்பது

அப்போதுகாத்தவனார் ஆச்சிமுகம்பார்த்து
கொல்லிமலைசுவாமிதுரை சொற்றவனாரேதுசொல்வார்
கழுவந்தாற்பாரமில்லை கன்னிவந்தாற்போதுமம்மா
தூண்டிவந்தால்பாரமில்லை தோகைவந்தாற்போதுமம்மா
வாதனையும்வேதனையும் வந்தாலும்யான்படுவேன்
ஆசையென்றாலாசையது அளவற்றபேராசை
பெண்ணாசைகொண்டல்லோ பிராணனையுமூட்டுதம்மா
என்றிவன்சொல்லையிலே யீஸ்வரியாளேதுசொல்வாள்
அரிவைதனைக்காண்பதற்கு ஆணழகர்சொல்லுவேன்கேள்
அவளுடையவடிவழகையுனை அருங்கையாலெழுதிவந்தால்
அவனைச்சிறையெடுக்க அப்போவிடைதாரேனென்றாள்

இதுவரையில் காத்தவராயர் ஆறுபிறப்பும்
முற்றுப்பெற்றது.





# காத்தவராய சுவாமிகதை.

## முதலாவது,

## கிண்ணாரவனம்.

---

இனிமுதல் காத்தவராயர்ஏழாவது பிறப்பில்
கஉ-வனங்கடோறும் ஆரியமாலையின்வரலாறு கூறுகின்றோம்

விநாயகர்துதி.

தும்பிமுகமுடைய தொப்பைக்கணபதியே
நம்பிக்கைவைத்துயெந்தன் நாவில்குடியிருந்து
காத்தவராயன்கதை களிப்பாய்மிகப்பாட
ஏற்றவரமருள்வா ரீஸ்வரனார்புத்திரனே.

சரஸ்வதிதுதி.

அச்சுதன்மருமகளே அரியகலைமகளே
மெச்சியேயாவர்களும் விரும்பிமிகப்படிக்க
அடியேன்சிறுவன்வாயி லன்பாய்மிக வந்து
படிறுகள்யாவும் பாவையேயில்லாமல்
வணங்காத்தசுவாமியை வணக்கமாயான்பாட
மனதுவைத்திக்கதையை மறையவளேநடத்துமம்மா.

சுப்பிரமணியர்துதி.

திருத்தணிவேலவரே திருமாலுக்குமைத்துனரே
பொருத்தமாயிக்கதையை பூவுலகில்யான்பாட
அன்புமிகவைத்து அடியேனைதுவாக்கில்
முன்புநீர்குடியிருந்து முழுதுங்கதைநடத்த
வேலவரேசீலவரே வெய்யவினைவாராமல்
காலனணுகாமல் கர்த்தாவேகாத்தருளும்

ஈஸ்வரனார்துதி.

தும்பைமலர்தரித்த தூய்யச்சுடரொளியே
அம்மாளிடபாதம் அன்புடன்பெற்றவரே

கின்னரவோசைதன்னைக் கிளிமொழியாள்தான்கேட்டு
தாதிமுகம்நோக்கி தையலருமேதுசொல்வாள்
கேளுங்கள்தாதிகளே கின்னரவோசைதன்னை
தாதிகளேகேளுங்கள் தம்பூருவோசைதன்னை
கின்னரமெவ்வோசை கீர்த்திமன்னனெவ்வழகோ
தம்பூருதானிவ்வோசை சாமியவரெவ்வழகோ
தம்பூருகாரர்வந்தால் கிளிமொழியேநான்பிழைப்பேன்
கின்னரக்காரர்வந்தால் கிளிமொழியேநான்பிழைப்பேன்
தம்பூருக்காரர்தனை தையலரேகூப்பிடென்றார்
கின்னரக்காரர்தனை கீர்த்தியுடனழையுமென்றார்

தாதிகள் கின்னரக்காரரைத் தேடிவருதல்.

அப்போதுதாதியர்கள் ஆயிரம்பேர்தானெழுந்து
ஆயிரம்தாதியர்கள் அவள்விடைபெற்றுக்கொண்டு
அந்தநல்லதாதியர்கள் லட்சணமேதேடிவாரூர்
கின்னரக்காரன்தன்னை கிளிமொழிமார்தேடிவாரூர்
தம்பூருக்காரன்தன்னை தையலர்கள்தேடிவாரூர்
எங்கெங்கும்பார்த்தார்கள் இனியவிடமாராய்ந்தார்
கின்னரக்காரன்தன்னை கிளிமொழிமார்கேட்கலுற்றார்
தம்பூருக்காரன்தன்னை தையலர்கள்கேட்கலுற்றார்
சந்தனபொன்கொறட்டின்மேலே தையலர்கள்வுட்கார்ந்து
அன்னம்போலேநடந்து அமிதம்போல்வந்தார்கள்
நாகதாளிபுன்னைமரம் ஆண்டவனைத்தேடிவந்தார்
பகலேவழிநடந்து பாங்கியர்கள்தேடிவந்தார்
காத்தவராயசுவாமி ஆரியமாலையின் தாதிகளை சின்னப்படுத்துதல்.
ஆயிரம்பேர்தாதிகளை ஆண்டவனார்கண்டுவிட்டார்
இரத்தினகின்னரியை நடுக்கிளையில்மாட்டிவிட்டார்
கையிலிருந்தசிற்றுடுக்கை ஒருகிளையில்மாட்டிவிட்டார்
ஒருகிளையில்சாய்ந்துகொண்டார் ஒருகிளையிலுதைத்துகொண்டார்
உல்லாசமாகவேதான் வுத்தமனாதாமிருந்தார்
வாயைகட்டிக்கொண்டார் மாரிபிள்ளைபஞ்சவர்ணம்
அந்தசமயத்தில் அரிவயர்கள்வந்தார்கள்
சந்தனப்பொன்மேடையிலே தையலர்கள்வந்தமர்ந்தார்
இளைப்பாயிருந்தார்கள் இத்தண்டதாதிகளும்
அன்னேரவேளையிலே ஆண்டவனாரேதுசெய்தார்
நாகதாளிபுன்னைமரம் நடுக்கிளையின்மேலிருந்து
சந்தனப்பொன்மேடையெல்லாஞ் சாமியவரேதுசெய்தார்
தாம்பூலந்தின்றுமவர் சாமியுமிழ்துவைத்தார்
இரத்தம்போல்தோற்றவேண்டும் நாயகிமார்கண்களுக்கு
இப்படிக்குவாயைகட்டி யிருந்தாரேபஞ்சவர்ணம்

ஆயிரந்தாதியர்கள் யிளைப்போடே அங்கிருந்தார்
மல்லாக்காய்படுந்துக்கொண்டு வானத்தைபார்க்கலுற்றார்
அதிலேயொருதாதியவள் ஆண்டவரைக்கண்டுவிட்டாள்
விண்ணாரந்தோற்றுவதுஞ் சுவாமிதுலங்குவதும்
கம்புருதோற்றுவதுந் தானேதுலங்குவதும்
இவருடையதன்னழகை யேந்திழைமார்கண்டுவிட்டார்
கண்டேண்டியென்றாளே கட்டழகிதாதியவள்
கிண்ணாரந்தன்னைக் கிளிமொழியேகண்டேனென்றாள்
கண்டேனென்றுசொன்னவளைக் கண்ணைத்தெரித்துவிட்டார்
மற்றுஞ்சிலதாதியர்கள் மங்கையருக்கேதுசொல்வார்
கண்டேனென்றுசொன்னாயே கண்டவிடமெங்கேயடி
பார்த்தேனென்றுசொன்னாயே பார்த்தவிடஞ்சொல்லுமென்றார்
கண்கெட்டதாதியவள் கன்னியுடனேதுசொல்வாள்
கண்டதைச்சொல்வேனென்று கைநீட்டிகாட்டலுற்றார்
கைநீட்டிக்காட்டுவாளாங் கட்டழகிதாதியவள்
கைநீட்டுஞ்சாடைதன்னைக் கண்டுவிட்டார்தாதியர்கள்
ஆயிரம்பேர்தாதியர்கள் ஆகாயப்பார்க்கலுற்றார்
கண்டோமேயென்றுசொல்லி கன்னியர்கள்கூறலுற்றார்
அப்போதுஆண்டவனார் அஞ்சனமேயேதுசெய்தார்
ஆயிரம்பேர்தாதிகட்கும் அவித்துவிட்டார்கண்கள்ரெண்டும்
கண்டேனென்றுசொன்னவர்கள் கண்ணையவிழ்த்துவிட்டார்
பார்த்தேனென்றுசொன்னவர்கள் பார்வையவிழ்த்துவிட்டார்
அப்போதுதாதியர்கள் அலண்டுபுரண்டவர்கள்
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்பலுற்றார்
துய்யோமுறையோவென்று கூவிபுலம்புகறார்
எப்படிக்குப்போய்ச்சேர்வோம் யிளங்கொடியாள்மாலையுண்டை
என்றுவிசனப்பட்டார் யெழிலானதாதியர்கள்
அத்தண்டதாதியர்கள் அதிலொருத்தியேதுசொல்வாள்
கண்கட்டுவித்தையினால் கன்னியவளொருத்தி
மாயவித்தைகற்றவளாம் மந்திரங்கள்பெற்றவளாம்
அத்தண்டதாதிகட்கும் அருங்கிளியாளேதுசொல்வாள்
எல்லவருமென்பின்னாலே யிடுப்பைப்பிடித்துக்கொண்டு
என்பிறகேநீங்களெல்லாம் யினிதாகவாருமென்றாள்
அப்படியேநல்லதென்று அனைவரும்வந்தார்கள்
முன்னேயவள்நடக்கப் பின்தொடர்ந்துவாராரே

## காத்தவராயர் சின்னானைக்கண்டு வசனித்தல்.

கொல்லிமலைசுவாமி குமரேசர்கண்டுவிட்டார்
தொட்டியத்துச்சின்னானை துருசாய்நினைக்கலுற்றார்
வங்கனத்துசின்னானை வாவென்றழைக்கலுற்றார்
ஆண்டவனார்தானினைக்க அறிந்தானேசின்னானும்

காத்தவரைக்காணவென்று கடுகிவழிநடந்து
எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியும்ஓரடியாய் பறந்துவழிநடந்து
ஆண்டவனார்முன்னேவந்து அழகுசின்னானேது சொல்வான்
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றான்
அப்போதுசுவாமியவர் ஆணழகரேது சொல்வார்
என்னவென்றுசொல்லுகிறேன் எங்கள் துரைபஞ்சவர்னம்
ஆயிரந்தாதியர்கள் அழகாயெனைக்காணவந்தார்
கண்ணைக்கெடுத்துவிட்டேன் கட்டழகாசின்னானே
பார்வைகெடுத்துவிட்டேன் பார்க்கவந்ததாதிகளை
அவர்போறவழியிலொரு படுகுழிதானுண்டுபண்ணி
படுகுழியையுண்டுபண்ணி பாங்கியரைத்தள்ளுமென்றார்
அந்தவுரைகேட்டு அழகுசின்னானேதுசொல்வான்
உந்தன் மனதின்படியுத்தமனேசெய்வேனென்றார்
அப்போதுசின்னானும் ஆணழகனேதுசொல்வான்
ஆயிரந்தாதியர்கள் இவர்கள்வரும்வழியிலே
ஆனையமரும்பள்ளம் குதிரைகுளிக்கும்பள்ளம்
ஆனைப்படுகுழியை அங்ஙனமேவெட்டிவிட்டார்
குதிரைமுழுகும்பள்ளம் கொற்றவனார்வெட்டிவிட்டார்
மாட்டெருவுகண்ணெருவு மன்னவனார்வாரிவந்து
பள்ளத்தில்கொட்டியவர் சலம்வார்த்துஊறவைத்தார்

சின்னான்வெட்டினபள்ளததில் ஆரியமாலைதாதிகள்விழுதல்.

ஆண்டவனார்சொற்படியே அழகுபள்ளம்வெட்டிவைத்தார்
இப்படியாகயிருக்குமந்தவேளையிலே
அப்போதுதாதியர்கள் அந்தவழிவாறார்கள்
வெட்டுப்பள்ளம்வழியாக வாறார்கள்தாதியர்கள்
தட்டுகெட்டுவாறார்கள் தையலந்ததாதியர்கள்
திட்டுதிட்டுவென்றுவந்து பொட்டென்றுகீழ்விழுந்தார்
பள்ளத்தில்விழுந்தார்கள் பாங்கியர்களெல்லோரும்
ஒருத்தியவள்கீழேவிழ உடன்வந்தார்மேலேவிழ
அருங்கிளியாள்கீழேவிழ ஆயிரம்பேர்மேலேவிழ
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்பலுற்றார்
குய்யோமுறையோவென்று கூவிபுலம்புகிறார்
விழுந்தவர்களெழுந்திராமல் அழுந்திட்டார்பள்ளத்திலே
இவர்கூவியழுதசத்தம் குவலயங்கள்தானதிரும்
வாய்விட்டழுதசத்தம் மண்டலங்கள்தானதிரும்
இப்படியாகவே யிவர்களிருக்கையிலே

சின்னான் பள்ளத்திலிருக்குந் தாதிகளை யெடுத்தல்.

அப்போதுசின்னானு மங்ஙனமேயேதுசெய்தான்
தோட்டக்காரனைப்போல் தொட்டியததான்வேஷங்கொண்டு
வங்கணத்துச்சின்னானும் மாறுவேஷங்கொண்டுவந்து

ஆரடிநீங்களென்று அதட்டிமிரட்டலுற்றான்
ஓட்டம்பெருநடையா யோடிவந்துகேட்கலுற்றான்
அப்போதுதாதியர்கள் அரிவையவளேதுசொல்வாள்
தோட்டகாரஐயாவே தூரிதமுடன்சொல்லுகின்றோம்
ஆரியமாலைகன்னி அவளுடையதாதிமாங்கள்
கிண்ணாரக்காரன்தன்னை அழையுமென்றாள்கிளிமொழியாள்
அவனையழைப்பதற்கு ஆயிரம்பேர்தேடிவந்தோம்
நாகதாளைபுன்னைமரம் நல்மரத்தின்சோலைபண்டை
சந்தணபொன்மேடையண்டை தையலர்கள்தாம்படுத்தோம்
மல்லாக்காய்த்தான்படுத்து வானத்தைப்பார்த்திருந்தோம்
கிண்ணாரக்காரன்தன்னை கிளிதனிலேகண்டுவிட்டோம்
பார்த்தவுடனேயெங்கள் பார்வைமழுங்கினது
வழிகள்தெரியாமல் வந்துவிழுந்துவிட்டோம்
இதுதான்வரலாறு யென்றுரைத்தார்தாதியர்கள்
அந்தவுரைகேட்டு அழகுசின்னானேதுசொல்வான்
தொட்டியத்துச்சின்னானுந் துறவுபள்ளந்தானிறங்கி
கைகொடுத்துதூக்கிவிட்டு கட்டழகனேதுசொல்வான்
ஆயிரம்பேர்தாதிகளே அரிவைகளேசொல்லுறேன்கேள்
கண்ணவிந்துபோனதொரு கர்மத்தைச்சொல்லுறேன்கேள்
தெய்வத்தைகைதொழுது தெண்டனிட்டுபூசைசெய்து
அஞ்சனத்தைதான்போட்டு ஆராய்ந்துபார்த்துரைப்பேன்
வேண்டுமென்றால்கேட்டிருங்கள் வேண்டாமென்றால்போய்விடுங்கள்
அந்தவுரைகேட்டு அருங்கிளிமாரேதுசொல்வார்
சொல்லுமையாவெனறுசொல்லி தெண்டனிட்டுகைதொழுதார்

சின்னான் தாதிகளுக்கு அவிந்தகண் தெரியச்செய்தல்

அப்போதுசின்னானும் அப்படியேசொல்வேனென்று
பூமிமெழுகியவர் பிள்ளையாருண்டுபண்ணி
அபிஷேகந்தான்செய்து அருகுபுஷ்பஞ்சூடியே
தூபதீபங்கொடுத்து சொல்லலுற்றான்சின்னானும்
கேளுங்கள்தாதிகளே யென்றுமவருரைப்பார்
நந்தவனங்காத்தவர்தான் நல்விழியைக்கொண்டுசென்றார்
வனங்காத்தசுவாமியவர் மான்விழியைக்கொண்டுசென்றார்
காத்தமுடிசாமியடி கண்ணைபரித்தவர்கள்
விக்கினர்க்கிளைத்தவண்டி விழியைக்கொண்டுபோனவர்தான்
அவிந்தகண்தான்தெரிய அதற்கோருபாயஞ்சொல்வேன்
ஆளுக்கோராயிரம்பொன் அன்பாகத்தந்தாலே
கண்ணைத்தெரியவைப்பார் காத்தமுனிசாமியென்றார்
அந்தவுரைகேட்டு ஆயிரம்பேர்தாதியர்கள்
ஆளுக்கோராயிரம்பொன் அப்படியேதான்கொடுத்தார்
கொடுத்ததொருபொன்னைவாங்கி குணமுள்ளசின்னானும்
பொன்னைமுடிந்துகொண்டு பொட்டெனவேயோடிவந்து

பச்சிலையைத்தான்கசக்கி பாவையர்கள்கண்ணில்விட்டார்
பச்சிலைச்சார்விட்டவுடன் பார்வைதெரிந்துதங்கே
கண்கள்தெரிந்தது கட்டழகுமாதுகட்கு
காத்தமுனிசாமியவர் கண்கொடுத்தாரப்போது
அப்படியேபாருமென்றான் ஆணழகன்சின்னானும்
கண்ணெடுத்துபார்த்தார்கள் காத்தமுனிசாமிதன்னை

காத்தவராயர் மாலையற்கு ஓலையெழுதியனுப்புதல்.

அப்போதுகாத்தவனா ரரிவையர்க்கேதுசொல்வார்
தாதிமுகம்நோக்கி சுவாமியவரேதுசொல்வார்
மாலைகன்னிமார்தினுக்கு வக்கணையுமொப்பனையும்
ஓலையெழுதிதாரேன் உத்தமியாள்கன்னியற்கு
கொண்டுபோய்மாலையற்கு கொடுங்களென்றார்பஞ்சவர்னம்
அந்தவுரைகேட்டு அரிவையர்கள்சம்மதித்தார்
அப்போதுபஞ்சவர்னம் அண்ணனைத்தானினைந்து
விக்கினரைத்தானினைந்து யெழுத்தாணிகைபிடித்து
முத்துபதித்ததுபோல் மூன்றுவரிதானெழுதி
பவளம்பதித்ததுபோல் பத்துவரிதானெழுதி
ஆச்சாளழகுபெண்ணே ஐபன்மகள்மாலைகண்டேன்
கோட்டையிலேநீயிருக்க கொத்தளத்தில்நானிருக்க
மாளிகையில்நீயிருக்க மரத்தினமேல்நானிருந்தால்
இருவர்நமக்குமல்லோ யேகாந்தமெங்கேயடி
கல்லோடியுன்மனது கரையிலையோயிந்தமட்டும்
ஆசையெல்லாமுன்மேலே அலையுதடியென்மனது
சீவனெல்லாமுன்மேலே சிதறுதடியென்னசெய்வேன்
ஓலைகண்டநாழிகைக்கு வுத்தமியேயிங்கேவாடி
கைனாட்டகண்டவுடன் கட்டழகியிங்கேவாடி
நிருபங்கண்டநாழிகைக்கு நில்லாமலிங்கேவாடி
தாதிகையிலோலையது தானனுப்பிவைத்தேனடி
ஓலைகண்டநாழிகைக்கு வுததமியேவரவேண்டும்
என்றுமிவர்சொல்லி யெழுதினாரோலையிலே
செந்தரிகந்தான்போட்டு தாதிகையிலேகொடுத்தார்

காத்தவராயர் கொடுத்த ஓலையை தாதிகள் மறைத்துவிட்டது.

அப்போதுதாதியர்கள் அரிவையர்களேதுசெய்தார்
அந்தச்சுருள்வாங்கி அரிவையர்கள்வாரார்கள்
ஆரியவள்கோட்டைதேடி அன்பாகவாரார்கள்
வாழைமரச்சோலையண்டை வந்துநின்றார்தாதியர்கள்
ஓலையைத்தான்விரித்து வுடனேயிவர்வாசித்தார்கள்
அதிலுள்ளமர்மமெல்லாம் அறிந்தார்கள்தாதியர்கள்
ஒருத்திக்கொருத்தியவள் வுண்ணமையிட்டுபேசலுற்றார்
கன்னியவள்கண்டாலே கடுகநடந்திடுவாள்

ஓலைதனைக்கண்டாலே வுத்தமியாள்போய்விடுவாள்
காத்தமுனிசாமியுடன் கலந்துமிகபோய்விடுவாள்
என்றவர்கள்யோசனையாய் யேதுசெய்தார்தாதியர்கள்
ஓலைச்சுருளெடுத்து வுத்தமியாள்கைபிடித்து
வாழைச்சருகாலே கொளுத்திவிட்டார்மங்கையர்கள்

தாதிகள் ஓலையைக்கொளுத்திவிட்டு ஆரியமாலையைக் காணுதல்.

அப்போதுதாதியர்கள் அனைவோருமொன்றாகி
மாலைகன்னிகோட்டைதேடி வாறார்கள்தாதியர்கள்
கிண்ணாரக்காரன்தன்னை கொண்டுவரச்சொன்னேனே
தம்புருக்காரன்றன்னை தானழைத்துவாருமென்றேன்
அவனையழையாமல் நீங்கள்வந்தகாரியமேன்
அந்தவுரைகேட்டு அரிவையர்களேதுசொல்வார்
கிண்ணாரக்காரன்றன்னை கிளிமொழிமார்தேடிப்போனோம்
வனங்களெல்லாம்தேடிப்போனோ மன்னவனைக்காணோமம்மா
தோப்பெல்லாந்தேடிப்போனோம் சுவாமிதனைக்காணோமம்மா
அந்தவுரைகேட்டு மாலைகன்னியேதுசெய்தாள்
முழுகிக்குளித்துமல்லோ மெல்லியிளங்கொடியாள்
போசனமண்டபத்தில் பொற்கொடியும்போய்புகுந்தாள்
அங்கிருந்ததாதியர்கள் அனைவரும்வந்தார்கள்
ஆசனங்கள்போட்டார்கள் அரிவைபந்தமாலையற்கு
வாழையிலைபோட்டு மணிச்சொம்புநீர்தெளித்தார்
தும்பைமலர்போலே போசனமுந்தான்சொரிந்தார்
பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
எட்டுவிதக்கறியு மிருபத்தோர்பச்சடியும்
சுற்றிகறியைவைத்து புத்துருக்குநெய்வார்த்தார்
அந்தஅடிசில் அமுதுண்டபிற்பாடு
அக்கதியைமாற்றியொரு பொற்றளிகைமுன்னேசெய்தார்
காய்ச்சியபாலுந் திருத்தியமுப்பழமும்
வாழைப்பழமு மதுரையின்மாம்பழமும்
வேரிலபுரத்தில் வெடித்தபலாச்சுளையும்
கொம்பிலசிறுதேனுங் கோதுபடாசர்க்கரையும்
மலையில்சிறுதேனும் பாங்கானசர்க்கரையும்
அந்தஅடிசில் அமுதுண்டபிற்பாடு
பாலடிசலுண்டு பனினீரால்கையலம்பி
உருவுகொண்டுவாய்துடைத்து வுத்தமியாள்வீற்றிருந்தாள்
வாசமகொடுக்க மயிலனையாளோடிவந்து
வாசகலம்பழையது வலுகுலுக்குதாள்திறந்து
வாடாயிலைச்சுருளும் வண்ணத்துவர்பாக்கும்
கோவையிலைச்சுருளும் கொச்சைகளிப்பாக்கும்
ஆரங்கப்பாக்குகளும அதுக்கேற்றவெற்றிலையும்
லம்லவுங்கங்களும் யிசைந்தபரிமளமும்

சுருளைச்சுருள் மாத்தி சுண்ணும்பைகூட்டமிட்டு
வைத்துகொடுத்தாளே மதிக்குமந்தவாசகத்தை
வந்தமுகவாசர் தின்றுமவள்குந்திருந்தாள்
இப்படியாக இவளிருக்கும்வேளையிலே

காத்தவராயர் மறுபடியும் கிண்ணரம்வாசித்தல்.

அப்போதுகாத்தலிங்கம் ஆண்டவனுரேதுசெய்தார்
அவர்-உள்ளங்கைஅஞ்சனத்தை உற்றுற்றுப்பார்க்கலுற்றார்
அஞ்சனத்தைதான்போட்டு ஆராய்ந்துபார்க்கலுற்றார்
ஓலைகொளுத்திவிட்டு உத்தமரைகாணுமென்று
பொய்வசனந்தானுரைத்து போசனங்களுண்ணுரென்று
அஞ்சனத்தில்தோற்றுவதால் ஆண்டவனுரேதுசெய்தார்
கிண்ணரங்கைபிடித்து வாசித்தாருத்தமரும்
என்னவென்றுபேசுதுபார் அண்ணனவர்கிண்ணரிதான்
ஆச்சாலழகுபெண்ணே ஐயன்மகன்மாலைகண்ணே
உனக்குஓலையெழுதி கொடுத்தேண்டிதாதிகையில்
வாழைச்சரகால் கொளுத்திவிட்டுமங்கையர்கள்
இல்லையென்றுசொன்னர்களேந்திழைமாருன்னிடத்தில்
என்னையவர்காணுமென்று யெடுத்துரைத்தார்தாதியர்கள்
நாகதாளிபுன்னைமரம் நடுக்கிளையிலுட்கார்ந்து
என்னேரமட்டாக யிரக்கங்கள்பேசுவண்டி
கல்லோடியுன்மனது கரையிலையோகன்னியரே
இரும்போடியுன்மனது யிதங்கிலையோயிந்தமட்டும்

ஆரியமாலை கிண்ணரசத்தங்கேட்டு தாதிகளை ஆக்கினைசெய்தல்.

அப்போதுமாலைகன்னி அட்சணமேயேதுசெய்தாள்
கிண்ணரசத்தமதை கிளிமொழியாள்கேட்டுவிட்டாள்
அன்னமென்றதாதிகளை யழைத்தாளேகன்னியவள்
மாலையவளழைக்க வாருர்கள்தாதியர்கள்
ஆயிரத்தாதிகளும் அட்சணமேயோடிவந்தார்
நாவிதபெண்கள்தனை நலமாகத்தானழைத்து
ஆயிரந்தாதிகட்கு அழகுமொட்டைசெய்யுமென்ருள்
மாலைகன்னிசொற்படிக்கு மழுங்கமொட்டைசெய்தார்கள்
வார்க்காதநீர்வார்த்து மழுங்கமொட்டைசெய்தார்கள்
ஐந்துகுடுமிவைத்து அழுந்திதலைசிரைத்தார்
கரும்புள்ளிசெம்புள்ளி கலந்தழகாய்பொட்டுமிட்டார்
காடைவிளக்கேற்றி கன்னியர்கள்தலையில்வைத்தார்
கழுதையினமேலேற்றி எருக்கமாலைசூட்டிவிட்டார்
தபபட்டைகழுத்தில்மாட்டி தாதிகளைப்போங்களென்ருள்
வடகோடிகானகத்தில் மங்கையரேபோங்களென்ருள்

தாதியர்கள்வேதியரிடத்தில் சிபாரிசுசொல்லுதல்.

அப்போதுதாதியர்கள் அனைவருமொன்ருகி
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்புகையில்

குய்யோமுறையோவென்று கூவிப்புலம்புகையில்
புத்துரகந்தேடிப் பெண்களெல்லாம்வாறார்கள்
ஐயமாரைத்தேடி அழுதுகொண்டுவாறார்கள்
அபயமபயமென்று அழுதுகொண்டுவாரார்கள்
ஸ்நானங்கள்செய்திருந்தார் தனஞ்சயர்களப்பொழுது
குய்யோமுறையோவென்ற கூக்குரலைகேட்டார்கள்
இராக்காலமானதினால் வெகுண்டந்தவேதியர்கள்
பேயோபிசாசோவென்று பினத்திக்கொண்டுவேதியர்கள்
கொள்ளிவாய்பிசாசோவென்று கொப்பெனவேஅடிக்கலுற்றார்
கல்லுகளைவாரிக்கொண்டு கடுகஅடிக்கலுற்றார்
சேறுகளைவாரிக்கொண்டு சிதறஅடிக்கலுற்றார்
அப்போதுதாதியர்கள் அங்ஙனமேயேதுசெய்தார்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் ஐயமாருக்கேதுசொல்வார்
பேயும்பிசாசுமல்ல பெண்கொடியாள்தாதியென்றார்
கொள்ளிவாய்பேய்களல்ல கொம்பனையாள்தாதியென்றாள்
கிண்ணரக்காரனாலே கிளிமொழிமார்கெட்டோமென்றார்
தம்புருக்காரனாலே தாதியருங்கெட்டோமென்றார்
ஆரியமாலைதன்னை யவனெடுத்துப்போனானையா
என்றுமேதாதியர்கள் யெல்லோருஞ்சொல்லலுற்றார்

## வேதியர்மகளுடைய வரலாறறிந்து கிண்ணரக்காரனை துரத்தல்.

அப்போதுஅப்பாபட்டர் அனைவருந்தாமறிந்து
தாதிமுகம்பார்த்து தாமங்கெடுத்துரைப்பார்
என்னவயணமென்று யின்பமுடன்கேட்கலுற்றார்
அப்போதுதாதியர்களையமாருக்கேதுசொல்வார்
நாகதாளிபுன்னைமரம் நடுமரத்தின்சோலையிலே
கிண்ணரமீட்டிக்கொண்டு தேவனவனங்கிருந்தார்
அவனையழையுமென்று யனுப்பினாளெங்களையும்
ஆள்தேடப்போனிடத்தில் ஆயிரம்பேர்கண்ணவிந்தோம்
மற்றுமொருவனாலே வழிகள்பெற்றெங்கேவந்தோம்
எங்களைக்கண்டவுட னெழுதினானோலையொன்று
ஆரியமாலைக்கென்று யவன்கொடுத்தானோலைதன்னை
வாங்கிவரும்போது வாசித்துப்பார்த்தோமையா
மாலையின்மேல்மோகங்கொண்டு மன்னனெழுதிவிட்டான்
கண்டாளேகன்னியவள் கடுகநடப்பாளென்று
ஓலைதனைக்காட்டாமல் வழியில்கொளுத்திவிட்டோம்
கட்டழகிமாதினுக்கு காணவில்லையென்றுரைத்தோம்
அவன்பேரில்மையல்கொண்டு ஆரியமாலையவள்
எங்களையிப்படிக்கு யிழிவானகோலஞ்செய்தாள்
தாதிகள்சொல்லையிலே தான்கேட்டுவேதியர்கள்
வேர்த்துவிருவிருத்து வெங்கண்சிவப்பேறி

சிற்றுடம்புவேர்த்திவர் யிருகண்சிவப்பேறி
இதுவென்னமோசமென்று யெழுந்திருந்தார்வேதியர்கள்
ஆயிரம்வேதியர்க ளவசரமாய்த்தானெழுந்து
கல்லுகளைவாரிக்கொண்டு கடுகெனவேமடியில்கட்டி
செங்கல்கருங்கல்லும் சேர்த்துமடியில்கட்டி
ஆளுக்கோர்தடியெடுத்து அனைவோரும்வாருர்கள்
கிண்ணாரக்காரனை தேடியேவாருர்கள்
அப்போதுஅண்டவனு ரன்பாகயேதுசெய்தார்
நாகதாளிபுன்னையிலே நாயகனுர்வீற்றிருந்தார்
உல்லாசமாகவேதான் உத்தமனுர்வீற்றிருந்தார்
அப்போதுதாதிமார்க ளங்கனமேயேதுசெய்தார்
காணுததுபோல கண்டுவிட்டார்வேதியர்கள்
பாருததுபோல பார்த்துவிட்டார்வேதியர்கள்
கற்களைவாரியல்லோ கடுகெனவே அடிக்கலுற்ருர்
அப்போதுகாத்தவனுர் ஆண்டவனுரேதுசெய்தார்
வெண்ணீறுவாடையல்லோ விமலிபிள்ளையுண்டுபண்ணுர்
வேதியர்கள்போடுங்கள் யிந்தமரத்திலேறும்
இலைக்கொருகல்லாக யினிதாகத்தெர்த்திக்கொள்ளும்
அப்போதுவேதியர்க ளங்கனமேயேதுசெய்தார்
ஆளுக்கொருதடியெடுத்து ஆண்டவர்மேல்விட்டெறிந்தார்
அப்போதடிகளெல்லாம் மழகுபுன்னை தன்னிலையில்
பேய்ச்சுரக்காய்போலாக பெருத்தத்தடிகளெல்லாம்
தோற்சுரக்காய்போலாக தொங்குதிலைகளெல்லாம்
கப்பற்சுரக்காய்போலாகத் தொங்குதுதடிகளெல்லாம்
அப்பரைபோலாகக் காணுது தடிகளெல்லாம்
அவ்வளவுவேதியரி லப்பாபட்டரேதுசெய்தார்
இருகாலைதான்பிடித்து இழுத்தாரேஅப்பாபட்டர்
காலைபிழுக்கலுற்ருர் கனமுள்ள அப்பாபட்டர்
வேதியர்களாயிரம்பேரும் சுவாமிகாலை பிடித்துத்தொங்குகிறது.
அப்போதுகாத்தவனு ரங்கனமேயேதுசெய்தார்
தன்மாலுக்கும்வாகைச்ளுக்குங் கடுபந்தமென்றுசொன்னுர்
காலைப்பிடிததுக்கொண்டு காக்கைபோல்தொங்குகின்ருர்
கால்பிடித்துதொங்குவதைக் கண்டுவிட்டார்வெங்குபட்டர்
தானுமரமேறித் தமயனுர்கால்பிடித்து
இருகாலைகைபிடித்து வெங்குபட்டர்தொங்கலுற்ருர்
அவருமேதொங்குகின்ரு ரண்ணனிடகால்பிடித்து
ஏலம்பட்டரோடிவந்து யிருவரும்மதிலேறி
ஏலம்பட்டரேறிவந்து வெங்குபட்டன்கால்பிடித்தான்
ஏலன்கூடத்தொங்குகன்ருன் அன்பானயேலம்பட்டன்
ஏலம்பட்டன்கால்பிடித்து சுப்பபட்டன்தொங்குகிருன்
ஒருவன்காலைப்பிடித்து ஒன்பதுபேர்தொங்கலுற்ருா

பூண்டவனர்கைபிடித்து ஆயிரம்பேர்தொங்கலுற்றார்
ஆலமரத்தின்வெளவால்போ லல்லவருந்தொங்கலுற்றார்
அப்போதுஆண்டவனு ரங்கனமேயேதுசெய்தார்
ன்காலைநழுவவிட்டார் காமாட்சிபெற்றபிள்ளை
அப்போதுவேதியர்க ளாயிரம்பேர்களுக்கும்
இறங்கவழியில்லாமல் யிருந்தார்மரந்தனிலே

காத்தவராயர்பூதத்தை கழுதையாக்கி வேதியர்களை ஒட்டிவிடுதல்.

மனங்காத்தசுவாமியவர் மாரிபிள்ளையேதுசெய்தார்
மனவர்பூதந்தன்னை யின்பமுடன்தானழைத்து
காவேறுகழுதையைப்போல் கொற்றவனுருண்டுசெய்தார்
ஆயிரம்வேதியற்கு முன்பாகநில்லென்று
உபதேசந்தானுரைத்து வுத்தமனூர்போகவிட்டார்
அப்போதுகழுதையது அவ்வசனந்தான்கேட்டு
வேதியற்குமுன்பாக வந்ததுகாண்கழுதை
அப்போதுவேதியற்கு ளனைவருந்தான்பார்த்து
கழுதையைத்தான்பார்த்து யிருக்கின்றவேளையிலே
அந்நேரவேளையிலே ஆண்டவனுரேதுசெய்தார்
ஆயிரம்வேதியரை யங்கேவிழச்செய்தாரும்
மரத்தைவிட்டுவேதியர்கள் மண்ணில்விழுந்தார்கள்
கண்ணிழந்தபாவனைபோல் கதறிவிழுந்தார்கள்
அன்னமரத்தைவிட்டுப் பூமியிலேதான்விழுந்தார்
விழுந்துயெழுந்தவர்கள் கண்டார்கழுதைதன்னை
வருதுபோலக் கண்டுவிட்டாரப்பாபட்டர்
வாராதுபோலப் பார்த்துவிட்டாரப்பாபட்டர்
பெண்ணாரவல்லியவள் வளர்த்தகழுதைபது
இங்கேவரவிட்டாளே யிளங்கொடியாள்வல்லியவள்
என்றுசொல்லி அப்பாபட்டர் யெழுந்திருந்தாரந்நேரம்
வந்தக்கழுதைதனை அடிக்கவென்றுஓடிவந்து
காலைப்பிடித்துக்கொண்டு மன்னவனூர்தான்மடிந்தார்
காத்தவனூர்தாம்பார்த்து கழுதைக்குயேதுசொல்வார்
மந்திரமென்றுசொல்லி பரமன்மகனெச்சரித்தார்
காத்தவனூர்சொன்னசொல்லைக் கண்டுகழுதையது
அப்பாபட்டர்கைகள்ரெண்டும் அழுந்திகொண்டுவாலின்மேலே
வந்தனமென்றுசொல்லி பறந்தோடிவருகுதுபார்
இழுத்துக்கொண்டுவருகுதுபார் யின்பமுடன்கழுதை
அப்பாபட்டர்கழுதைதானும் அலைந்துகெட்டுபோகுது
அப்பாபட்டர்போம்பொழுது கண்டுவிட்டார்வெங்குபட்டர்
என்காணுமப்பாபட்டா யிப்படியேபோறீரென்று
அவர்வந்துகைகொடுத்தா ரவரையுமிழுத்துக்கொண்டு
ஓடுதுபாரக்கழுதை ஒளியுள்ளவீதியிலே

அந்தநல்லவீதியிலே அனந்தபட்டரோடிவந்து
அனந்தபட்டரோடிவந்து அன்பாகக்கைகொடுத்தார்
அவரையுமிழுத்துக்கொண்டு ஓடுதுபாரக்கழுதை
இன்னஞ்சிலவீதியிலே யிழுத்துவரும்போது
எங்கும்பட்டரோடிவந்து யின்பமுடன்கைகொடுத்தார்
அவரையுமிழுத்துக்கொண்டு ஓடுதுபாரக்கழுதை
சுப்புபட்டரோடிவந்து சுறுக்காககைகொடுத்தார்
அவரையுமிழுத்துக்கொண்டு ஓடுதுபாரக்கழுதை
ஓரிலேப்பட்டரவ ருத்தமனூர்கைகொடுத்தார்
அவரையுமிழுத்துக்கொண்டு ஓடுதுபாரக்கழுதை
இரண்டிலேப்பட்டரவ ரினிதாகக்கைகொடுத்தார்
இவரையுமிழுத்துக்கொண்டு ஓடுதுபாரக்கழுதை
ஓரிலேப்பட்டர்முதல் நூறிலேப்பட்டர்களும்
பத்திலேப்பட்டர்முதல் நூறிலேப்பட்டர்களும்
புளியோரைப்பட்டர்களும் தத்தியன்னபட்டர்களும்
மிளகோரைப்பட்டர்களு மிளகுதோசைபட்டர்களும்
அனைவருமோடிவந்து அன்பாகக்கொடுத்தார்
அத்தனைபேர்களையு மக்கழுதையிழுத்துக்கொண்டு
புத்தனூரகந்தேடி வருகுதங்கேயக்கழுதை

வேதியஸ்திரீகளாயிரம்பேரும் கழுதையுட னொட்டிக்கொள்ளல்.

கழுதைவருகிறதைக் கண்டாள் துளசியம்மாள்
அப்பாபட்டன்தேவி யன்னத்துளசிகண்டு
என்றுமவளோடிவந்து யின்பமுடன்கைகொடுத்தாள்
அவளையும்பற்றிகொண்டு வோடுதுபாரக்கழுதை
குப்பாபட்டன்தேவியவள் கொம்பனையாளோடிவந்து
ஏனம்மாவென்றுசொல்லி யேந்திழையாள்கைகொடுத்தாள்
அவளையுமிழுத்துக்கொண் டன்பாகவோடுதுபார்
சுப்பாபட்டன்தேவியவள் சுந்தரியாளோடிவந்து
ஏனம்மாவென்றுசொல்லி யின்பமுடன்கைகொடுக்க
அவளையுமிழுத்துக்கொண் டன்பாகவோடுதுபார்
இப்படியெல்லாரையு மிழுத்துக்கொண்டோடுதுபார்
ஆண்மானம்பெண்மானம் அவமானமானார்கள்

சுவாமி கழுதையைவிட்டுவிடச்சொல்ல கழுதை யிவர்களைவிடுதல்.

இப்படியாக யிவர்களிருக்கையிலே
அப்போதுஆண்டவனு ரங்கனமேயேதுசெய்தார்
கழுதையைத்தானெடுத்து கடுகெனவேபோகவிட்டார்
உபமிதுசங்கேட்டுமது வுடனேயங்கேபோய்நடந்து
வேதியரைவிட்டுமங்கே வெகுதுருசாய்ப்பசியது
வமனூரிடந்தனிலே யிருந்ததுபூதமது
அப்போதுவேதியர்க ளங்ஙனமேயேதுசெய்தார்
ஆண்சாதிபெண்சாதி அடங்கலுந்தானெழுந்து

அலைகுலையத்தலைகுலைய யரண்மனைக்குஓட லுற்றார்
கெட்டேன்பிழைத்தேனென்று பட்டுவந்துவீடுவந்தார்
அந்தப்புரந்தனிலே யவர்களிருக்கையிலே
அப்போதுஆண்டவ ரங்கனமேயேதுசெய்தார்
கொல்லிமலைசுவாமி குமரேசர்பஞ்சவர்னம்
அவர் உற்றுஉற்றுப்பார்த்தாரே யொருகோடிபுத்திகளை
இருந்துநினைந்தாரே யெழுகோடியோசனையை
ஆண்டுநினைத்தாரு மளவற்றபுத்திகளை

காத்தவராயசுவாமி தாயாரைக் காணவருதல்.

மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தைவிட்டகன்று
இனிநிற்கநியாயமில்லை யென்றுமவரெழுந்து
தாயார்தவநிலையைச் சண்முகனார்தேடிவாரார்
மாதாதவநிலையை மாரிபிள்ளைதேடிவாரார்
தோட்டந்திறந்தாரே தொன்னைதைத்துப்பூவெடுத்து
தோட்டந்திறந்து வர்னலட்சம்பூவெடுத்தார்
கையாலேயரும்பெடுத்தால் காம்பழுகிப்போகுதென்று
வாயால்மலரெடுத்தால் வாடிவதங்குமென்று
பொன்னின்துறடுகட்டித் தாழம்பூகானெடுத்து
தங்கத்துறடுகட்டித் தாழம்பூநானெடுத்து
கரும்புகின்றகெங்கையிலே தங்கச்செம்பால்நீர்முகந்து
தாயாருகில்வந்து சாமிதுரையேதுசெய்தார்
பாதந்துலக்கியவர் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபுட்பமெல்லாங் குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
தெண்டனிட்டுசாமியவர் தீவிரமாய்த்தானெழுந்து
கைகட்டிவாய்புதைத்து கட்டழகர்நிற்கையிலே
கட்டழகர்நிற்கையிலே கண்டுவிட்டாள்காமாட்சி
வந்துபணிந்தவனை வாழ்த்தலுற்றாளப்போது
என்னைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைபெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
பக்கத்தில்கைகொடுத்தால் பழுவெலும்புநோகுதென்று
நெற்றியில்கைகொடுத்து நேராகத்தூக்கிவிட்டு
எங்கேயடாபோயிருந்தா யென்மகனேசொல்லுமென்றாள்

காத்தவராயர் தாயாருக்கு மறுமொழிகூறல்.

காத்தவனார்தான்கேட்டு காமாட்சிக்கேதுசொல்வார்
அம்மாநான்போய்வந்தபிடம் நலமாகச்சொல்வேன்யான்
மாலையைச்சிறையெடுக்க வரங்கொடம்மாபெற்றவளே
பெண்ணைச்சிறையெடுக்கப் போகவரந்தாருமம்மா
போய்வாமகனேயென்று போற்றிவிடைகொடுத்தாள்
விடைபெற்றுஆண்டவனார் விமலிபிள்ளைவாராரும்

அப்போதுஆண்டவனு ரன்புடனேயெங்கேவாருர்
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்ருர்

காத்தவராயசுவாமி மறுவேடங்கொள்ளல்.

எங்கள் துரைபஞ்சவர்ன மென்னவேடங்கொள்ளுகிருர்
தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்போல்
நானூறுபத்துஞ்சென்ற நரைத்தகிழவனைப்போல்
தும்பைப்பூபோலாக துவண்டகிழவனுனர்
நாணற்பூபோல நரைத்தகிழவனுனர்
கிண்ணாரக்காரன்போல கிருபனர்வேடங்கொண்டார்
கொட்டாங்கச்சிகின்னரியை கொற்றவனுருண்டுபண்ணுர்
கண்டநல்லவீதிதனில் கட்டழகர்போய்படுத்தார்
இப்படிக்கிவரிருக்க யின்பமுடனுண்டவனுர்
ஆபிரம்வேதியர்க ளட்சணமேயோடிவந்து
கிண்ணாரக்காரன் கிருபனவன்வந்தான்காண்
ஆரியமாலையை யவன்கொண்டுபோய்விட்டான்
என்றுசொல்லிவேதியர்கள் முறையிட்டார்ராஜரண்டை

ஐயர் ராஜருடன்முறையிட ராஜன்கேட்டு சேவகர்க்குரைத்தல்.

ஆரியப்பூராஜ னன்புடனேகேள்விப்பட்டு
முத்திரையில்லைசேவகரை மெத்தெனவேதானழைத்து
நாகதாளிபுன்னைமரம் நலமுடனேநீங்கள்போய்
கிண்ணாரக்காரனைக் கட்டிக்கொண்டுவாருமென்ருர்

சேவகர்கள் கிண்ணாரக்காரனைத் தேடிவருதல்.

அப்படியேவாருர்கள் ஆனதோர்சேவகர்கள்
அங்கவரைக்காணுமல் அப்புறத்தேவாருர்கள்
கடைகள்நல்லவீதியிலே கட்டழகர்தேடிவாருர்
கொட்டாங்கச்சிகின்னரியைக் கிருபையுடன்வைத்து
தள்ளாதகிழவனைப்போல் தனஞ்சயனுந்தானிருக்க
கண்டுவிட்டார்சேவகர்கள் கட்டழகரப்போது
அப்போதுசேவகர்கள் அங்ஙனமேயேதுசெய்தார்
ஆரியப்பூராஜன்முன்னே அவர்கள்வந்தேதுசொல்வார்
அகடுசெய்தகிண்ணாரக் காரன்தனைக்காணுமென்று
கடைநல்லவீதியிலே கிழவனவனொருவன்
தள்ளாதகிழவனவன் கிண்ணாரங்கைபிடித்து
ஈளையிருமலுடன் யிருக்கக்கண்டோங்கிழவன்றன்னை
அவனைக்கண்டோமல்லாமல் மற்றவனைக்கண்டதில்லை
என்றவர்சொல்லையிலே யேதுசொல்வார்ராஜரவர்
அவனைக்கொண்டுவாருமென்று ராரியப்பூராஜாவும்
அப்போதுசேவகர்கள் அங்ஙனமேயேதுசெய்தார்
கடைநல்லவீதியிலே கண்டாரேகிழவன்றன்னை
சீழுஞ்சிலத்தண்ணியும் சிந்துதேதேகமெல்லாம்
நாறுங்கிழவன்றன்னை நாம்தொடத்தகாதென்று

### சேவகர் சுவாமியைக்கட்டி இராசனண்டை கொண்டுவருதல்.

அப்போதுசுவாமிதனை அங்கனமேயேதுசெய்தார்
சாகுங்கிழவன்தனைச் சாக்ரதையாய்க்கட்டலுற்றார்
கத்தாழைநாரெடுத்துத் தனமுடனேகட்டலுற்றார்
பாடைகட்டியேற்றிக்கொண்டு பக்குவமாய்சேர்த்திறுக்கி
தலைமேலேயெடுத்துமவர் தாக்கவேதோள்கொடுத்து
பாடையெடுத்துக்கொண்டு பக்குவமாய்வாறார்கள்

### காத்தவராயர் மறுபடியுங் காசிக்குருக்கள் வேஷங்கொள்ளுதல்.

கொல்லிமலைக்கன்னிகளைக் கொப்பணவேதானினைந்து
அப்போதுஆண்டவனு மென்னவடிவெடுத்தார்
காசிக்குருக்களைப்போல் கடவுளவர்வேஷங்கொண்டு
காதில்ரெண்டுகுண்டலங்கள் கடுக்கன்துலங்குதுபார்
காவிகாஷாயமுமாய்க் கட்டழகர்தானணிந்தார்
சகலாத்துகுல்லாவுந் தரித்தார்தலைமேலே
கையிற்செபமாலை கட்டழகர்தான்பிடித்து
காசிக்குருக்களைப்போல் பாடையின்மேல்வீற்றிருந்தார்
கண்டார்களெல்லோருங் காசிக்குருக்கள்தனை
கைகூப்பிதெண்டனிட்டார் கடுகெனவேவேதியர்கள்
சேவகர்கள்தான்பார்த்துச் சிந்தையிலேதான்பயந்து
பாடைதனையிறக்கிப் பாதையிலேவைத்தார்கள்
சேவகர்களோடிவந்து சோசியங்கள்சொல்லுமென்றார்
அப்போதுவேதியர்கள் அங்கனமேயேதுசெய்தார்
குருக்களருகில்வந்து கும்பிட்டுகேட்கலுற்றார்
ஆரியமாலைகன்னி யவள்பேர்க்குச்சொல்லுமென்றார்

### காத்தவராயசுவாமி வேதியர்களுக்கு ஆரூடஞ்சொல்லல்.

அப்போதுஆண்டவரு ரவர்களுக்கேதுசொல்வார்
ஆரியமாலைதனை யழகுள்ளதேவனவன்
எட்டுதிங்கட்குள்ளாக யெடுத்துக்கொண்டுபோவானென்றான்
அப்போதுவேதியர்கள் ஆண்டவாக்கேதுசொல்வார்
என்னைக்கொண்டுபோகாவிட்டால் என்னவுன்னைசெய்கிறது
ஆக்கினைகள்செய்கிறது அடியேனிடத்திலையை
இன்றெட்டாநாளைக்குள்ளே யிராசனிடயானைதன்னை
பார்ததிருந்துகன்னம்வைத்து யிராத்திரியில்கொண்டுசெல்வான்
எடுத்துக்கொண்டுசென்றா லெனக்கென்னநீர்கொடுப்பீர்
என்றவர்கேட்கையிலே யெடுத்துரைப்பார்வேதியர்கள்
ஐந்நூறுமஞ்சாகாணி ஆறாக்குமேலேதாறேம்
பத்தூருமஞ்சாகாணி பதினாயிரம்பொனகொடுப்பேன்
என்றுசொலலிவேதியர்களேதுசொல்வார்ராசாவும்
சுவாமிமுகம்பார்த்துத் தானங்கெடுத்துரைப்பார்
ஆரியமாலைதன்னை அவனெடுத்துபோகுமட்டும்

என்னுடையமாலை தன்னை யவனெடுத்துப்போகுமட்டும்
உனக்குகால்விலங்குகைவிலங்கு கழட்டவொண்ணாப்பெருவிலங்கு
தோள்விலங்குதாள்விலங்கு சொல்லவொண்ணாப்பெருவிலங்கு
கால்கைக்குவிலங்குமிட்டு கிடங்கிலேபோமென்றார்
அந்தவுறைகேட்டு ஆண்டவனுரேதுசெய்தார்
உங்கள்மனதின்படி வுத்தமமேசெய்யுமென்றார்

இராசன் சுவாமியை ஆக்கினைசெய்து காவலில்வைப்பது.

இராசரவுஞ்சேவகரும் நலமுள்ளவேதியரும்
அனைவோருஞ்சேர்ந்திருந்து அங்கனமேயேதுசொல்வார்
சேவகரைத்தானழைத்து சொல்லலுற்றார்வேதியரும்
ஆயிரம்சேர்விலங்கை யப்பொழுதேமாட்டுமென்றார்
அப்படியேநல்லதென்று யங்கிருந்துசேவகர்கள்
பாடையுடன்தூக்கியல்லோ பாழ்பிள்ளையார்கோவிலண்டை
அங்கேயிறக்கியவர் ஆக்கினைகளேதுசெய்தார்
கால்விலங்குகைவிலங்கு கழட்டவொண்ணாப்பெருவிலங்கு
மார்விலங்குதோள்விலங்கு மாளாப்பெருவிலங்கு
இத்தனைவிலங்குபூட்டி யேதுசெய்தார்சுவாமிதன்னை
பிள்ளையார்கோவிற்குள்ளே புண்ணியரைக்கொண்டுவந்து
மல்லாக்காய்தான்வளர்த்தி மார்மேலேகல்லைவைத்தார்
சாத்திக்கதவடைத்தார் தாள்பூட்டிமண்ணறைந்தார்
இப்படிக்குச்செய்தார்க ளின்பமுடன்சுவாமிதன்னை

காத்தவராயசுவாமி சின்னானைவரவழைத்தல்.

அப்போதுகொல்லிமலை யாரைநினைக்கலுற்றார்
வங்கனத்துசின்னானை வாவென்றழைத்தாரும்
தொட்டியத்துச்சின்னானை சுவாமியழைக்கலுமே
அப்போதுசின்னானு மங்கனமேயேதுசெய்தான்
சுவாமிநினைப்பறிந்து சாகுண்ணிவேஷங்கொண்டு
ஓட்டம்பெருநடையா யோடிவந்துசின்னானும்
ஆருமறியாமலங்கொருவர்காணமல்
ஆண்டவனார்முன்னேவந்து அன்பாகவேதுசொல்வார்
என்னையழைத்தவகை யேதுவகைசொல்லுமென்றார்

சுவாமி தன் விலங்கை கழட்டி சின்னானுக்கு பூட்டுவது.

அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனுரேதுசொல்வார்
கால்விலங்குகைவிலங்கு கழட்டவொண்ணாப்பெருவிலங்கு
இப்படிக்கும்பாட்டார்க ளெனக்குமெத்தநோகுதென்றார்
கால்விலங்குகைவிலங்கை கழட்டுமென்றார்சின்னானை
அப்போதுசின்னானு மங்கனமேயேதுசெய்தான்
கால்விலங்குகைவிலங்கைக் கழட்டிவிட்டார்சின்னானும்
மார்விலங்குதோள்விலங்கை வாங்கிவிட்டான்சின்னானும்

சுவாமி சின்னானுக்கு விலங்கைப்பூட்டி தான் வெளியில் வருதல்.

காத்தவனாரப்பொழுது காவலிட்டதென்றுசொல்லி

தன்விலங்கைத்தானெடுத்து தாக்குடையாரே துசெய்தார்
சின்னானுக்குபூட்டிவிட்டார் சீரானவிலங்கையெல்லாம்
மல்லக்காய்படுக்கவைத்து மார்மேலேகல்லைவைத்தார்
பத்திரமாய்நீயிரென்று பஞ்சவர்னந்தானுரைத்து
சின்னானைத்தனியே சீக்கிரமாய்தானெழுந்து
கோயில்விட்டுவெளியில்வந்து கொற்றவனாரப்போது
தஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்றார்

காத்தவராயசுவாமி மாட்டுக்காரப்பையன் வேஷங்கொள்ளல்.

இருந்துநினைத்தாரு மெழுகோடிபுத்திகளை
உற்றுநினைத்தாரு மெழுகோடியோசனையை
ஆரைநினைக்கலுற்றா ரளவற்றசிந்தையிலே
தாயைமனதிலெண்ணி தகப்பனைநெஞ்சில்வைத்தார்
அண்ணன்கணபதியை அன்பாய்மனதிலெண்ணி
மாயன்பெருமாளை மனதில்நினைத்தவரும்
கொல்லிமலைக்கன்னிகளைக் கொற்றவனார்தானினைந்து
வாவென்றழைத்தாரும் வருகுதுபார்மறுவேஷம்
மாட்டுக்காரபையனைப்போல் மாரிபிள்ளைவேடங்கொண்டு
தாத்துக்கோல்கைபிடித்து சுவாமியங்கேவீற்றிருந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே

இராசன் தன்யானைக்குக் காவலமைத்தல்.

ஆரியப்பூராசாவு மன்னேரமென்னசெய்தார்
யானையைக்கொண்டுவந்து அன்பாகவேதுசொல்வார்
வலையன்சிவப்புடையான மன்னர்களைத்தானழைத்து
இன்றெட்டாநாள்வரைக்கு மிவ்வானையைக்காத்திருங்கள்
ஆனைதனைக்காருமென்று அரசரவர்திட்டஞ்செய்தார்
இப்படிக்குதிட்டஞ்செய்தா ரின்பமுள்ளராசாவும்
அப்போசிவப்புடையா னரசனுரைகேட்டு
என்னென்னகாவல்களை வைப்பான்சிவப்புடையான்
கத்திபிடிக்குமன்னர் கஸ்திரியர்காவல்களாம்
ஈட்டிபிடிமன்ன ரேழுலட்சங்காவல்களாம்
உருவினகத்தியது உரையில்வையாகாவல்களாம்
காச்சுமூச்சறியாத பேய்த்துலுக்கர்காவல்களாம்
ஆயிரம்வேதியர்கள் யானைசுற்றிகாவல்களாம்
முப்பதுபேர்ராசாக்கள் முன்னூறுமந்திரிகள்
ஐம்பதுபேர்ராசாக்கள் ஆயிரம்பேர்தாதியர்கள்
இத்யாதிகாவல்களை வைத்தார்கள்யானைசுற்றி
சிலேட்டுக்குள்குலோப்புகளைச் சீராயலங்கரித்தார்
கடுகெனவேயப்பொழுது காடைவிளக்கேற்றிவைத்தார்
பகல்வத்திதீவட்டிகள் மத்தாப்புமேத்திவைத்தார்
இரவுபகலாக யினிதாய்த்துலங்குதுபார்

ஆனையின்பக்கம்வந்து அங்கேசிவப்புடையான்
இடதுகையில்வாளுருவி யிழுத்துப்பிடித்துக்கொண்டான்
வலதுகையில்பட்டாவை மன்னன்பிடித்துக்கொண்டு
இப்படிக்குத்தானுமங்கே யிருக்கின்றவேளையிலே

காத்தவராயர் மூதேவியையழைக்க மூதேவிவந்துகாணல்.

சிவப்புடையான்காவலிலே சுவாமியவரேதுசெய்தார்
அப்பெரியகாவலதை யாண்டவனார்தானறிந்து
ஆரைநினைக்கலுற்று ராண்டவனார்பஞ்சவர்னம்
மர்மனிடபத்தினியாள் மாமியந்தசீதேவி
சீதேவிக்குமுன்பிறந்த திருவிளையேமூதேவி
அத்தையரேமூதேவி அன்பாகவாருமென்றார்
மாமியரேமூதேவி மயிலணையேவாருமென்றார்
அழைத்தாரேகூச்சலிட்டு அண்டரண்டந்தானதிர
கூவியழைத்தாரே குவலயங்கள்தானதிர
ஆண்டவனார்தானழைக்க அறிந்தாளேமூதேவி
அப்போதுமூதேவி ஆரணங்குவாராளே
கழுதையின்மேலேறி கட்டழகிவாராளே
இருப்பிடத்தைவிட்டுமவ ளேந்திழையாள்வந்துவிட்டாள்
காத்தவனார்முன்னேவந்து கட்டழகியேதுசொல்வாள்
ஏண்டாமருமகனே என்னையழைத்ததென்ன
என்னையழைத்தவகை யேதுவகைசொல்லுமென்றாள்
அந்தவுரைகேட்டு ஆண்டவனாரேதுசொல்வார்
யானையைத்திருடவேண்டு மத்தையரேமூதேவி
யானைக்குகாவலாக யனேவோரும்நித்திரையாய்
மாறுமல்நித்திரைக ளுண்டுபண்ணு மத்தையரே
எல்லோர்க்குநித்திரையை யேந்திழையேநீகொடென்றார்
அந்தவுரைகேட்டு அத்தையந்தமூதேவி
அந்தவிடத்தைவிட்டு வாராளேமூதேவி
யானையிருப்பிடத்தைத் தேடிவந்தாள்மூதேவி
அங்கிருக்குங்காவலரை யடங்கலுந்தான்பார்த்து

மூதேவிகாவலர்களுக்கு மாறுமல் நித்திரைவரச்செய்தல்.

வந்துநிறைந்தாளே வளம்பெரியமூதேவி
எடுத்தாள்பழமுறத்தை யெங்கும்விசிறிவிட்டாள்
எல்லோர்க்கும்நித்திரையை யெங்குமுண்டாக்கிவிட்டாள்
ஆடும்பெண்கள்பாடும்பெண்கள் அனைவருந்தூங்கிவிட்டார்
முப்பதுபேர்ராசாக்கள் முந்நூறுமந்திரிகள்
ஐம்பதுபேர்ராசாக்கள் ஐந்நூறுமந்திரிகள்
ஆயிரம்வேதியர்க ளடங்கலுந்தூங்கிவிட்டார்
மன்னன்தலையாறி மகாநித்திரைசெய்தானே
இத்தாதிபேர்களெல்லா மினிதாகநித்திரைசெய்தார்
காவலுள்ளமன்னரெல்லா மேவல்கொண்டுநித்திரைசெய்தார்

இப்படியாக யிவர்களிங்கே தூங்கையிலே
தன்னை மறந்துமிங்கே தலையாரி தூங்கையிலே
அப்போதுமூதேவி யழைத்தாளே காத்தவரை
வாடா மருகனே யென்றழைத்தாள் மூதேவி

கர்த்தவராயர் காவலரைப்பங்கஞ்செய்து

யானையைத்திருடுதல்.

அத்தையழைக்கையிலே ஆண்டவனார்தான்கேட்டு
எட்டடியுமோரடியா யிட்டுமவர்நடந்து
ஆனையிடபக்கத்திலே ஆண்டவனார்வந்துநின்று
உற்றுநினைத்தாரே ஒருகோடியோசனையை
ஆண்டுநினைத்தாரும் அளவற்றயோசனையை
ஆலோசனை புரிந்து ஆண்டவனாரேதுசெய்தார்
எமனாரின்பூதமதை யிங்கேவாவென்றழைத்தார்
காத்தவனார் தானழைக்க கண்டறிந்தபூதமது
எட்டடியுமோரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியுமோரடியாய் பறந்துமிகவந்து
ஆண்டவனார்முன்னாலே அடைவுடனேவந்துநின்று
என்னையழைத்தவகை யேதுவகைசொல்லுமென்ன
அப்போது ஆண்டவனார் அங்கனமேயேதுசெய்தார்
அழைத்தவகைசொல்லுகிறே னருகாகவாருமென்று
வலையன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
அவனுடைய அண்டையிலே ஆண்டவனார்வந்துநின்று
எமனார்தன்பூதமதை யின்பமுடன்தானழைத்து
சிவப்புடையானைநீ சீராகத்தானெடுத்து
முன்பக்கம்பின்பக்கம் யின்பமாய்த்திருப்பியதே
ஆண்டவனார்பஞ்சவர்னம் அங்கனமேயேதுசெய்தார்
வலதுபக்கமீசைதனை மன்னவனார்கத்தரித்தார்
மூன்றுகுடுமிக்கு மூன்றுமுனையடித்தார்
இரண்டுகரங்களுக்கு யிரண்டுமுனையடித்தார்
மல்லாக்காய்படுக்கவைத்தார் மன்னன்தலையாரியை
செங்கல்மாவுதானிடித்து வாய்நிறையரொப்பிவைத்தார்
* அச்சுமுச்சித்தாளி அன்பாகச்செய்தாரும்
பூதத்தைதானழைத்து வாய்நிறையத்துப்புமென்றார்
அப்படியேதுப்பியது அழகுசிறுபூதம்
சுவாமி யானையைத்திருடி சாராய பூமியிடத்தில் வைப்பது.
அப்போதுகாத்தவனார் ஆண்டவனாரேதுசெய்தார்
ஆனையின்மேலேறிக்கொண்டு அழகுதுரைபஞ்சவர்னம்
பட்டத்துயானையின்மேல் பக்குவமாயுட்கார்ந்து

* அச்சுமுச்சுத்தாளி-எ-து-ஆனை-இதுவழக்கச்சொல்.

எங்கேயவர்வாருரும் யெங்கள் துரைசொல்லிமலே
அந்த-மஞ்சையப்பன்சட்டிவைத்த மண்டபத்தின்பின்னுலே
சாராயபூபியவள் தையலரைத்தேடிவாரார்
சாராயம்விற்கின்ற கடைக்குள்ளேதானுழைந்து
அச்சாடிபூபியரே அரிவையரேயென்றழைத்தார்
அந்தவுரைகேட்டு பூபியவளேதுசொல்வாள்
வனப்பாதம்பியென்று யெதிரில்வந்துநிற்கலுற்ருர்
ஆண்டவனுர்பஞ்சவர்னம் அரிவையருக்கேதுசொல்வார்
ஆனைகுட்டிகேட்டதனுல் கொண்டுவந்தேனுந்தனுக்கு
என்றிவர்சொல்லையிலே யேதுசொல்வாள்பூபியவள்
யானையைக்கொண்டுபோய் அந்தப்புறக்கடையில்
கட்டிவையுந்தம்பியென்று கட்டழகிதானுரைத்தாள்
அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனுரேதுசெய்தார்
புறக்கடையில்வைத்துமல்லோ புண்ணியனுரப்போது
நாலுக்காலுபாக்கட்டி நலமாகத்தொங்கவிட்டார்
எங்கள்துரைபஞ்சவர்னம் யேதுசொல்வாரப்போது
வழுபீப்பாய்சாராயம் பாவையரேகொண்டுவாடி
என்றுமிவர்சொல்லையிலே யேதுசொல்வாள்பூபியவள்
பத்துபீப்பாய்யெட்டுபீப்பாய் பாங்காகசாராயத்தை
கொட்டியொன்ருய்த்தான்கலந்து கொண்டுவந்தாள்பூபியவள்
அந்தநல்லசாராயத்தை ஆண்டவனுர்தான்பார்த்து
எட்டுபீப்பாய்சாராயத்தை யின்பமுடன்தான்குடித்தார்
பத்துபீப்பாய்சாராயத்தை பக்குவமாய்த்தான்குடித்தார்
பாவையழகியரே பஞ்சணைசோடியென்ருர்
அப்படியேசோடித்தாள் அங்கிருந்தபூபியவள்
அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனுர்தாமெழுந்து
பஞ்சணைமெத்தையின்மேற் படுத்தாரேசுவாமிதுரை
காலைப்பிடிவாடி கட்டழகிபூபியரே
அப்படியேகால்பிடித்தாள் ஆரணங்குபூபியவள்
நித்திரைதான்போருரே நிமலிபிள்ளைபஞ்சவர்னம்

இராசனுங் காவலரும் யானையைத்தேடுதல்.

இப்படியாகவே யிவர்களிருக்கையிலே
அன்னேரவேளையிலே யானையின்காவலர்கள்
நித்திரைதெளிந்தெழுந்தார் நேரானமன்னரெல்லாம்
யானையைக்காணுமல் அலைகின்ருர்மன்னரெல்லாம்
சிவப்புடையான்தன்னைச் சிராகக்கண்டுவிட்டார்
வலதுபக்கம்மீசையது மன்னனுக்குத்தோற்றவில்லை
ஆறுமுளையடித்து அவனையங்கேகட்டிருக்க
கையிலேசெங்கல்மாவு வகையாகத்தானிருக்க
கண்டுவிட்டார்ராசாக்கள் கட்டழகரப்பொழுது
சிவப்புடையான்தன்னை சிராகத்தானவிழ்த்தார்

வெட்கித்தலைகுனிந்து விசாரமுற்றான்சிவப்புடையான்
பானைகொண்டுபோனவனை யரைக்ஷணத்தில்கொண்டுவாரேன்
என்றுயெழுந்திருந்தான் யியலானசிவப்புடையன்
வலதுபக்கமீசையிலே மன்னவன்கைபோட்டான்
ஒருபுரத்தில்மீசையது ஒளிவாகத்தோற்றவில்லை
முக்காடுபோட்டுக்கொண்டு மெத்தனவேவாருனே
சிவப்புடையான் யானையையும் சுவாமியையுங்கொண்டுவருதல்
அப்போசிவப்புடையான் எங்கேயவர்போனாரும்
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தின்பின்னாலே
சாராயபூபிகடையில் தனஞ்செயனுமுள்நுழைந்தான்
ஒருபீப்பாசாராயத்தை வுடனேகுடித்துவிட்டு
புறக்கடையால்போகையிலே கண்டுவிட்டான்யானைதன்னை
யானையிங்கேவந்ததென்ன அரிவையரேசொல்லுமென்றான்
அப்போதுபூபியவள் அங்கனமேயேதுசொல்வாள்
யாரோஒருவன்வந்து யானையெனக்குவிற்று
பத்துபீப்பாய்சாராயமும் பக்குவமாய்தான்குடித்து
மயக்கந்தெளியாமல் மயங்கியவன்பஞ்சணையில்
நித்திரைபோறானென்று நேரிழையாள்தானுரைத்து
கதவைத்திறந்துவிட்டாள் கட்டழகிபூபியவள்
அப்போசிவப்புடையான் அங்கனமேயேதுசெய்தான்
உள்ளேநுழைந்தானே ஒருபக்கமீசையில்லான்
யானையைத்தானவிழ்த்து அங்கனமேகொண்டுவந்து
காத்தவனார்முன்னேவந்து கட்டழகனேதுசெய்தான்
கட்டிலுடன்தானெடுத்து கட்டழகனப்போது
யானையின்மேலெடுத்து அழகாகக்கட்டுகிறான்
முன்கட்டும்பின்கட்டும் மூன்றுகட்டுகட்டியவன்
யானையைநடத்திக்கொண்டு வாரான்சிவப்புடையான்
காத்துமழையுங் கனமழையும்பெய்யுதங்கே
காத்தவராயர்யானையின்மேலேறிக்கொண்டு சேனைகளைச்சார்தல்
அப்போதுசுவாமிக்கு நித்திரைதெளிகின்றது
கண்ணைத்திறந்தாரே கட்டழகர்பஞ்சவர்னம்
மோசம்வந்துநேர்ந்ததென்று விமலிபிள்ளைபஞ்சவர்னம்
யானையிடநெற்றியிலே அன்பாகக்கைபோட்டு
கைத்தால்சுரண்டினாரே வீராயதின்முக்கை
காயைமனதிலெண்ணி தகப்பனைநெஞ்சில்வைத்தார்
அண்ணன்கணபதியை அன்பாய்மனதிலெண்ணி
மாயன்பெருமாளை மனதில்நினைத்தாராம்
கொல்லிமலைக்கன்னிகளை கொப்பெனவேதானினைந்து
கட்டிருந்தகட்டுகள்தான் கடுகஅவிழ்த்துமங்கே
முலைக்குமுலையபல்லோ முறியுதுபானையங்கள்
அடிபடமாளாமல் அலைந்துகெட்டோடுகினார்

சின்னான்வந்து அரசனைத் தியாகங்கேட்பது
இப்படியாத யிவர்சாடும்வேளையிலே
அந்தசமயத்தி லழகுசின்னானே துசெய்தான்
பிள்ளையார்கோயில்விட்டுப் புண்ணியனும்வாறானே
வந்துவளைந்துக்கொண்டான் வளம்பெரியசேனைதன்னை
ஐந்நூறுதாரோமென்று அரசரெல்லாஞ்சொன்னீர்களே
ஐந்நூறுமஞ்சாகாணி அன்பாகத்தாரோமென்றீர்
பத்தூறுமஞ்சாகாணி பாங்காகத்தாரோமென்றீர்
யானைகொண்டுபோனக்கால் அத்தனையுந்தாரோமென்றீர்
தாரோமென்றுசொன்னதெல்லாம் தந்திடுங்களென்றுகேட்டான்
ஆரியப்பூராசாவும் அவனுள்சிவப்புடையான்
சின்னானுரைகேட்டு சொல்லாமலோடலுற்றார்
அப்போதுபஞ்சவர்னம் ஆனைவிட்டுத்தானிறங்கி
சின்னானையனுப்பிவிட்டு சீக்கிரமாயேதுசெய்தார்

காத்தவராயசுவாமி தாயாரைக்காணவருதல்.

கொல்லிமலைசுவாமி குமரேசரெங்கேவாறார்
தாய்தாரைத்தேடியவர் சுவாமியர்வாறாரும்
மகாதவநிலைக்கு வடிவழகர்வாறாரே
வீரசுரங்காவேரி வெற்றிபுகழோமாத்தூர்
சர்வதீர்த்தப்பொய்கைதேடி சுவாமியவர்வாறாரே
தாயார்தவனிலையை சண்முகனார்வந்துகண்டு
தோட்டம்திறந்து தொன்னைதைத்துப்பூவெடுத்து
ஓடுகின்றகெங்கையிலே ஒருசொம்புநீர்முகந்து
தாயாரெதிரில்வந்து சுவாமியவரேதுசெய்தார்

காத்தவராயர் தாயாரைவணங்க தாயாரெடுத்துவாழ்த்துதல்.

பாதந்துலக்கியவர் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபுட்பமெல்லாம் குபுகுபென்றுதான்சொரிந்து
வாரிவந்தபுட்பமெல்லாம் மலைபோலேதான்சொரிந்து
முக்காலடிவணங்கி மூவொருகால்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
வந்துபணிந்தவனைக் கண்டந்தகாமாட்சி
வாரியெடுத்துமந்த மகாதேவியேதுசொல்வாள்
என்னைப்பெருவாய்நீ யெதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெருவாய்
என்திருஷ்டிபொல்லாது யெழுந்திருமகனேயென்றாள்
கண்திருஷ்டிபொல்லாது கடுகெயெழுந்திரென்றாள்
அந்தவுரைகேட்டு ஆண்டவனார்தாமெழுந்து
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகர்நிற்கலுற்றார்
கண்டுவிட்டாள்காமாட்சி கடுகெனவேயேதுசொல்வாள்
எங்கேயடாபோயிருந்தா யென்மகனேசொல்லுமென்றாள்
தாயாருரைகேட்டு சுவாமியவரேதுசொல்வார்

மாலைவனம்போயிருந்தேன் மாதாவேயென்றுரைத்தார்
பெண்ணைச்சிறையெடுக்க போகவிடை தாருமென்றார்
போகவிடைகொடம்மா போய்வாரேன்மாலைவனம்
மைந்தனுரைகேட்டு மாதாவுமேதுசொல்வாள்
வேண்டாமடாயென்மகனே வெண்மலரை தீண்டாதே
தொட்டாலும்தோஷம்வரும் தோகையந்தமாலையரை
பாப்பாரபெண்ணலவோ பாவம்வருமென்மகனே
மாலையென்றசொல்வசனம் போட்டுமறந்துவிடும்
என்னிலும்பத்தினிதா னிடையூறுசொல்லாதே
தாயிலும்பத்தினிதான் தாரமென்றுயெண்ணாதே
என்றுமிவள்தானுரைத்தாள் யிளங்கொடியாள்காமாட்சி

காத்தவராயசுவாமி மாலைவனம்போக தாயாரை விடைகேட்பது.

பஞ்சவர்னசுவாமியவர் பக்குவமாயேதுரைப்பார்
என்தாயேகாமாட்சி யீஸ்வரியேசொல்லுறேன்கேள
கண்டுமந்தமாலையரை கொண்டுவரவேணுமம்மா
பார்த்துமந்தமாலையரை சேர்த்துவரவேணுமம்மா
பாயில்படுத்தாலும் பாம்பாய்ப்புரட்டுதம்மா
நான்-தரையில்படுத்தாலும் சரகாயுலறுகிறேன்
உண்டாலுஞ்சாதமது உடலிற்றரிக்கவில்லை
தின்றாலிலையடக்காய் திருவாய்சிவக்கவில்லை
போகவரங்கொடம்மா போய்வாரேன்மாலைவனம்
என்றுமவர்கேட்கையிலே யீஸ்வரியாளேதுசொல்வாள்

காமாட்சியம்மன் காத்தவராயருக்கு புத்திசொல்லுதல்.

போகாதேமகனேயென்று புத்திமிகசொல்லையிலே
தாயாருரைகேட்டு சுவாமியவரேதுசொல்வார்
என்னதான்சொன்னாலும் யேற்கவில்லையென்செவிக்கு
பொன்திருடிகழுவிருப்பார் பூலோகத்திலுள்ளவர்கள்
பெண்ணுக்காய்கழுவிருந்தாற் பூலோகத்தாரேசார்களா
கன்னிக்காய்கழுவிருந்தால் கலியுகத்தாரேசுவார்கள்
மாலையற்காய்கழுவிருந்தால் மண்டலத்தாரேசுவார்கள்
கழுவிலிருக்கணுமா கண்டவர்களேசணுமா
தொழுவிலிருக்கணுமா தொல்லுலகோரேசணுமா
கழுவிலிருக்கணுமா காய்ந்துலர்ந்துசாகணுமா
காமாட்சிபிள்ளையென்று கண்டவர்களேசணுமா
ஈஸ்வரியாள்பிள்ளையென்று யெல்லவருஞ்சொல்லணுமா
மரக்கழுவிலிருக்கணுமா மாண்டுமடியணுமா
மாலையென்றசொல்வசன மறக்கவுநீபோறதில்லை
என்றுசொல்லிகாமாட்சி யெடுத்துரைப்பாள்மைந்தனுக்கு
ஆச்சாளழகுபெண்ணே அய்யன்மகள்மாலைகண்ணாள்
அவளுடையதன்னழகை அதுகண்டெழுதிவந்தாள்
அழகுபடாகூந்தலிலே அவளுடையகூந்தலது

ஏழாயிரம்பொன்பெற்ற இரத்தினவர்னபட்டாடை
அதிலேஒருமுழந்தா னுணழகாகொண்டுவந்தால்
முத்துகெண்டிமாலையதை மெத்தெனவேவாங்கிவந்தால்
கணையாழிமோதிரத்தைக் கழட்டிவந்தாலிப்பொழுது
அவளைச்சிறைபெடுக்க அப்போவிடைதருவேன்
அந்தவுரைகேட்டு ஆண்டவனுரேதுசொல்வார்
அப்படியேநல்லதென்று அனுப்பவிடைதாருமென்றார்

காத்தவராயருக்கு அம்மன்வெண்ணீறு அள்ளித்தருவது.

அப்போதுகாமாட்சி அம்மனவளேதுசெய்வாள்
பஞ்சாட்சரமோதி பாவைகிளிமொழியாள்
ஈஸ்வரரைத்தானினைந்து யீஸ்வரியாளப்போது
ஐந்தெழுத்தைதானோதி அவள்கையில்நீரெடுத்து
மைந்தன்முகம்நோக்கி மாதாவுமேதுசெல்வாள்
வென்றுவாமகனேயென்று வெண்ணீறுஅள்ளியிட்டு
செயித்துவாமகனேயென்று திருநீறுஅள்ளியிட்டாள்
காமாட்சிநீர்தாயே காத்தவனுரேதுசெய்தார்
ஒருகையில்வாங்காதே ஒளிவுள்ளபஞ்சவர்னம்
இருகையால்தான்வாங்க யெங்கள்துரைபஞ்சவர்னம்
பஞ்சாட்சரந்தாணணிந்தார் பாங்கானபஞ்சவர்னம்
திருநீறுஅள்ளியிட்டு தேவிமுகம்பார்த்து
வாழ்த்தியனுப்பவென்று மலரடிக்கீழ்தெண்டனிட்டார்
தெண்டனிட்டதன்மகனை தேவிபெடுத்தணைத்து
வாழ்த்திவிடைகொடுத்து மகனேநீபோய்வாவென்று
போகவிடை கொடுத்துப் பூமிகிள்ளிநெற்றிக்கிட்டாள்
விடைபெற்றெழுந்தாரே விமலிபிள்ளைபஞ்சவர்னம்
தாயார்விடைபெற்று சுவாமியவரெழுந்தார்
மாதாவிடைபெற்று மன்னவனுர்தானெழுந்தார்

முதலாவது-கிண்ணாவனம்-முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவது கிள்ளைவனம்.

விநாயகர் துதி-வெண்செந்துறை.

வாரணமாமுகனே பலராமர்மைத்துனரே
காரணவிமலருக்குக் கருத்துள்ளபுத்திரனே
தோத்திரஞ்செய்புமுன்னே தொப்பைக்கணபதியே
காத்தவராயன்கதை களிப்பாகயான்பாட
பக்கத்துணையிருந்து பகவானேயிக்கதைக்குத்
தக்கவரந்தருவாய் தயாளகுணபதியே

கதையின் வரலாறு.

அப்போதுபஞ்சவர்னம் அங்கனமேயேதுசெய்தார்
ஐந்துவிதமைந்துவர்னப் பஞ்சவர்னக்கிளியானுர்
ஓட்டிப்பறந்தாராம் உயர்கில்கள்தப்பாமல்

செட்டையுதிர்ப்பாராந் தேவிபிள்ளைவரும்வழியில்
இரத்தினமாய்ச்சுவியுது நலமாகவப்போது
மாணிக்கஞ்சொரிகிறது மாரிபிள்ளைவரும்வழியில்
காமாட்சிதோள்மேலே கனகஞ்சொரிவாராம்
இரங்கமிரங்கமென்பாரும் யிரங்ககவிபாடுவாரும்
காவேட்டிரங்கமென்பார் கஸ்தூரிரங்கமென்பார்
காமாட்சிதோள்மேலே கனகஞ்சொரிவாரும்
இவர்—இரங்கமிரங்கமென்கையிலே நாயகியாள்கண்டுவிட்டாள்
ரீயார்வளர்த்தரங்கம் அன்பாகச்சொல்லுமென்றார்
ஆர்வளர்த்தரங்கமல்ல அருமைத்திருமகனுன்
காமாட்சிதான்வளர்த்த காத்தரங்கமென்பாரும்
ஆரியமாலையண்டை அவளிடத்திற்போனுயாகில்
அவள்வைத்துதான்வளர்ப்பாள் ஆனந்தரங்கையனை
என்றுவரங்கொடுத்தா ளீஸ்வரியாள்காமாட்சி
அவ்வார்த்தைபெற்றுக்கொண்டு ஆண்டவரும்வாருரே

காத்தவராயா கிளிப்பிள்ளைவடிவெடுத்து மாலையிடம் வருதல்.

செட்டையொதுக்கியவர் சிவ்வெனத்தான்பறந்தார்
புத்தூரகந்தேடிப் புண்ணியர்வாருராம்
ஆயிரம்வேதியர்மே லன்பாகத்தான்சொரிந்தார்
மாணிக்கந்தான்சொரிந்தார் மாரிபிள்ளைபஞ்சவர்னம்
அன்னத்துளசியின்மே லன்பாகத்தான்சொரிந்தார்
ஐம்பத்தெட்டுகிராமம் அடைவுடனேசுத்திவந்தார்
வாடைபொடிதட்டினூர் மாலையிடகோட்டையிலே
நாகதாளிபுன்னைமரம் நடுவனத்துசோலைகளாம்
வெண்ணாவல்மரத்தின்மேல் விமலிபிள்ளைவந்துநின்றார்
ரங்கரங்கமென்றுசொல்லி யினரிரங்கம்பாடுகிறார்
காவேரிரங்கமென்று கனத்தகவிபாடுகையில்
வெண்பாகலித்துரையும் வேணகவிபாடுகிறார்
காசிக்கலித்துரையும் கருத்தூடிப்பாடுகிறார்
இரங்கமிரங்கமென்றுசொல்லி யிரங்ககவிபாடுகையில்
இந்தநல்லவார்த்தைதனை மாலைகன்னிகேட்டுவிட்டாள்
அப்பெரியரங்கையனை அன்பாகத்தான்பிடித்து
கொண்டுவரவேண்டுமென்று கொம்பனையாள்தானுரைத்தாள்
அப்போதுதாதியர்கள் அன்பாகவாருர்கள்
நாகதாளிபுன்னைமரம் நடுவனத்துச்சோலையிலே
வெண்ணாவல்மரவருகில் மெல்லியர்கள்தேடிவாருர்
அப்போ-அஞ்சனந்தான்போட்டு ஆராய்ந்துபார்த்தாரும்
தனைத்தேடிவருபவரைத் தேவிபிள்ளைதான்கேட்டு
அப்போதுஆண்டவனு ரழகாகதொன்னைதைத்து
ஒருதொன்னைக்குள்ளாக வுத்தமனூர்தானிருந்து
மறுதொன்னைமேல்மூடி மௌனமாய்த்தானிருந்தார்

அருமையாம லாண்டவனார்தானிருந்தார்
அயிரந்தாதியர்கள் அப்பொழுதுதேடிவாருர்
செனங்களெல்லாந்தேடுகிருர் தேன்மொழிமாரப்பொழுது
செடிகளெல்லாந்தேடுகிருர் தேன்மொழிமாரப்பொழுது
எங்கிலுங்கிள்ளைதனை யினிதாகக்காணுமென்று
மாலையுடன்சொல்வோமென்று வாருர்கள்பெண்களெல்லாம்
மாலையர்க்குமுன்புவந்து வகையுடனேயேதுசொல்வார்
கண்ணிலேபார்ப்போமென்ருல் காணுமேகிள்ளிதனை
இப்படிச்சொன்ஞர்க ளிளங்கொடியாள்முன்பாக
அப்போதுமாலைகன்னி யவ்வசனந்தான்கேட்டு
சோழிமிகவிரித்துச் சொக்கட்டாடிருந்தார்
அந்தசமயத்தி லாண்டவனாரேதுசெய்தார்
கொல்லிமலைக்கன்னிகளைக் கொற்றவனார்தானிருந்தார்
வெண்ணீறுதானெடுத்து விமலிபிள்ளைதூவிவிட்டார்
அயிரங்கிள்ளைகட்கும் அகோரபசியாச்சி
மாலையிடம்வந்து வணங்கியதுசொல்லுகுது
எங்களுக்குப்பசியதுதா னிருக்கமுடிகூடவில்லை
மதுவனம்போய்வர மங்கையரேவிடைகொட்ம்மா
பசியாய்வருகிறும் பாங்குடனேவிடைகொடம்மா
என்றுவிடைபெற்று யின்பமாய்த்தானெழுந்து
சிவ்வென்றுதான்பறந்து சீக்கிரமாய்வந்தது
அவ்வனத்திலுள்ளகனி யன்பாகத்தான்பொசித்து
சரக்கொன்றைமேடையிலே தயவாகவிருக்குதங்கே
சலங்களைப்பொசித்து சிறப்பாகயிருந்துதப்போ
சிவ்வென்றுதான்பொசித்து சீக்கிரமாய்மரமீது
ஆளுக்கோர்மரத்தின்மே லன்பாகக்குந்துதங்கே
இராசனல்லகிள்ளை நலமாகத்தானெழுந்து
அந்த-தொன்னையின்மேலேதான் துருசாககுந்துதங்கே
இராசனுடகிள்ளையை நலமாகச்சுமக்குகிருர்
மாலையுடகிள்ளையை மாரிபிள்ளைசுமக்குகிருர்
கண்டுவிட்டுமெய்மறந்து கலகலத்துமேனியெல்லாம்
அப்போதுஆண்டவனு ரன்பாகவேதுசொல்வார்
எந்நேரவரையிலும் நானிருந்துமிகச்சுமப்பேன்
என்றுசொல்லிக்கொண்டு யிருந்தாராம்தொன்ணையிலே
மாலையுடகிள்ளையெல்லாம் வகையாகத்தானிறங்கி
சந்தனப்பொன்மேமடையிலே தயவாகநின்றது
அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனுரென்னசெய்தா
தொன்னையைநீக்கிமெள்ள விமலிபிள்ளைபார்த்தலுற்ருர்
அப்போதுஆண்டவனே அன்பாகக்கண்டுது
ஆண்பிறந்தகிள்ளை யன்பாகவந்துதென்று
பங்குகள்போடுதுபார் பார்ப்பாரகிள்ளையது

கண்ணுகளென்னுதென்று காதுகளென்னுதென்று
மூக்குகளென்னுதென்று முகங்களெல்லாமென்னுதென்று
கால்களென்னுதென்று கைகளுமென்னுதென்று
பங்குகள்போடையிலே பார்த்துவிட்டார்பஞ்சவர்னம்
வெண்ணீரைத்தானெடுத்து விமலிபிள்ளை தூவிவிட்டார்
மாயப்பொடிதானெடுத்து மதிமயங்கி தூவிவிட்டார்
ஆயிரங்கிள்ளைகள் அன்பாகத்தான்பார்த்து
அத்தைமகனுரே ஆசையுள்ளமைத்துனரே
மாமிமகனுரே மருங்குள்ளமைத்துனரே
எங்களைநீசேர்ந்து யெங்களாசைதீருமென்றார்
பெண்களைச்சேர்ந்து பெண்ணாசைதீருமென்றார்
மாலையிடகிள்ளையெல்லாம் வருந்துதேயாண்டவனை
வமனுரின்பூதத்தை யின்பமுடன்தானழைத்து
பஞ்சவர்னக்கிளியாகப் பாங்குடனேயுண்டுபண்ணார்
ஆயிரங்கிள்ளையுட னன்பாகவாருமென்றார்
அந்ததோர்கிள்ளைகளும் அப்போகருவாச்சு
இந்த-ஆண்டவனைவிட்டு அன்பாகவருகுதங்கே
சூரியமாலையண்டை அழகாகவருகுது
ஆயிரங்கூண்டிலே அமர்ந்ததுகிள்ளையெல்லாம்
ஒவ்வொருகிளிகளுக்கு யிரண்டிரண்டுகுஞ்சாச்சு
காச்சுகாச்சென்றுசொல்லி கத்துதுகிள்ளையெல்லாம்
கிளிகளதுசத்தத்தை கிளிமொழியாள்கேட்டுவிட்டாள்
கிளிகளைப்பார்த்துவா வென்றாளே மாலையவள்
அந்தக்கிளிகளை யன்பாகத்தான்பார்த்தாள்
ஒவ்வொருகூண்டுக்கு மும்மூன்றுகிளியாமி
இத்தையெடுத்துக்கொண்டு யேந்திழையாள்முன்னேவைத்தார்
பாராததுபோலப் பார்த்துவிட்டாள்பாவையரும்
சோரம்போய்வந்ததென்று தோகையிளங்கொடியாள்
கண்ணைப்பிடுங்கியவள் காட்டுக்குத்துரத்துமென்றாள்
அப்போதுகிள்ளையெல்லா மழுதுகொண்டுபோகுதங்கே
கிள்ளைகள்போனபின்பு கிளிமொழியாள்மாலைகன்னி
மெத்தவிசனமாய் மெல்லியிவள்தானிருந்தாள்
அப்போதுஆண்டவனு ரன்பாகத்தான்பார்த்து
அஞ்சனத்தைத்தான்போட்டு ஆராய்ந்துபார்க்கலுற்றார்
ஆயிரங்கிள்ளைகளை யன்பாகத்தானழைத்து
கண்ணைப்பிடிங்கியல்லோ காட்டுக்குதுரத்திவிட்டாள்
என்றுசொல்லியஞ்சனத்தி லின்பமுடனேதோற்றுது
அப்போதுசுவாமியவர் ஆண்டவனுமெண்ணிசெய்தார்
இரங்கமிரங்கமென்று இரங்கசுவ்பாடிவாரும்
இப்படியாக ஆண்டவனுர்பாடுகையில்

நாகதாளிபுன்னைமரம் நர்யகருந்தாமிருந்தார்
அந்தநல்லசத்தம் ஆரணங்குதான்கேட்டு
இப்பெரியகிள்ளைதனை யேந்திழையேகொண்டுவாரும்
இது-ஆர்வளர்த்தரங்கமது அருமையாய்ப்பாடுகிறார்
எவர்வளர்த்தரங்கனோ யிப்படிப்பாடுகிறார்
இப்பெரியரங்கம் யென்னிடமிருந்துதானல்
அருமையாய்நான்வளர்த்து ஆசையெல்லாந்தீருவேண்டி.

ஆரியமாலை கிளிப்பிள்ளையைக் கொண்டுவரும்படி கட்டளையிடுதல்.

அப்பெரியரங்கனை யழைத்துக்கொண்டுவாருமடி
நாகதாளிபுன்னையண்டை நலமாகவந்துநின்று
நீயார்வளர்த்தரங்கனோ அருமையாய்வந்துவிட்டீர்
இப்போதுமாலையண்டை யின்பமாய்வாருமென்றார்
அப்போதுசுவாமியவர் அன்பாகவாறாராம்
அன்னமென்றதாதிகையில் அன்பாகவந்துநின்றார்
தாதியவள்தானெடுத்து தையலரும்வாராளே
கிள்ளையைத்தானெடுத்து கிளிமொழியாள்வாராளே
மாலையிடக்கொண்டுவந்து மங்கையவள்வைத்தாளாம்
ரங்கரங்கமென்கையிலே ரத்தினமுதிருமங்கே
ஸ்ரீரங்கமென்பாரும் சொர்னங்கவியுதங்கே
சொர்னநல்லரங்கனடி தேர்விசையரேயென்றுரைத்தாள்
இது-மாணிக்கரங்கனடி மயிலனையேயென்றுரைத்தாள்
நீயார்வளர்த்தரங்கனோ அருமையாய்ச்சொல்லுமென்றாள்
காமாட்சிதான்வளர்த்த காத்தரங்கமென்றுரைத்தார்
இவ்வசனங்கேட்டு யேந்திழையாள்மாலையவள்
சந்தோஷமாகத் தையலரும்வைத்திருந்தாள்
என்னிடத்திருமென்றாள் யேந்திழையாள்மாலையவள்
அப்போதுஆண்டவனார் அன்புடனேதுசொல்வார்
ரங்காவென்றழைத்தாலே நாயகியேநானிருந்தேன்
என்றுசொல்லிகிள்ளையது யியலாயுரைக்கையிலே
அப்போதுமாலை யருங்கிளியாளென்னசொல்வாள்
என்-அத்தைபிள்ளைரங்கையா அன்பாகவாருமென்று
மாமிபிள்ளைரங்கையா மன்னவரேவாருமென்று
இப்படிக்குதனையழைத்தா லிருப்பேண்டியுன்னிடத்தில்
இவ்வசனங்கேட்டா ளேந்திழையாள்மாலையவள்
சந்தோஷமிகவானுள் சரீரங்கள்பூரித்தாள்
இப்பெரியகிள்ளையைநா னெங்கிலுங்கண்டதில்லை
என்னிடத்திலிருமென்று யேந்திழையும்பிடித்துக்கொண்டாள்
மாலையிடத்திலே மாரிபிள்ளைதானிருந்தார்
இப்படிக்குத்தானிருந்தா ரெங்கள்துரைபஞ்சவர்னம்
அந்நேரம்வேளையிலே ஆரணங்குமாலையவள்
கோகிவிரித்துமவள் சொக்கட்டான தான்பரப்பி

ஆடவேணுமென்று அரிவையவள்தானிருந்தாள்,ஆகாயகன்னியாகள்
அரிவையர்கள்வருவார், வழிபார்த்துதானிருந்தாள் மயிலணையாள்
மாலையவள், அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனரேதுசொல்வார்
நான்கூடஆடுகிறேன் நல்லபகடைதனை
உன்னாலேயாகுமோதான் உத்தமனேபகடையாட
ஆடுகிறேன்பாரடிநீ ஆண்தன்மையிப்போது
ஆனால்நீபோடுமென்றாள் அரிவையந்தமாலைகன்னி

கிளிப்பிள்ளையும் ஆரியமாலையும் சொக்கட்டானாடல்.

அப்பொழுதாண்டவனார் அரிவையர்க்கேதுசொல்வார்
ஆட்டங்களாடினால் பந்தியங்கள்வேண்டுமோதான்
என்னென்னபந்தியங்கள் யென்றாளேமாலைகன்னி
நான்-தோற்றேனேயாமாகில் நலமாகவுந்தனுக்கு
அடப்பஞ்சுமக்கின்ற ஆணழகாரங்கையா
என்றுயெனையழைப்பும் யேந்திழையேமாலையரே
நீதோற்றாயாமாகில் நேரிழையேயெந்தனுக்கு
என்னதருவீரென்று ரேந்திழையேயெந்தனுக்கு
நீ-என்னதான்கேட்பாய் நானறியச்சொல்லுமென்றாள்
முத்துகெண்டிமாலை மெல்லியரேநீர்தாரும்
கூந்தலிலேயோரிழைநான் கொம்பனையேநீகொடடி
உன்வஸ்திரத்திலோரிழை மயிலணையேநீகொடடி
கணையாழிமோதிரத்தைக் கன்னியரேதாருமென்றார்
இப்படிக்குத்தருவாயானா லரிவையரேயாடிடலாம்
குலுங்கவேதானழைத்தால் கொடியிடையாள்மாலைகன்னி
இப்பெரியரங்கந்தனை யெங்கிலுநான்கண்டதில்லை
சந்தோஷமானாள் சரீரங்கள்பூரித்தாள்
அப்படியேயாடுமென்றாள் அரிவையந்தமாலைகன்னி
அப்பொழுதுஆண்டவனார் அன்பாகவேதுசெய்தார்
எமனாரின்பூதத்தை யிடதுகையில்தானழைத்தார்
நமனாரின்பூதத்தை வலதுகையில்தானழைத்தார்
பகடைகளாடினார் பாங்காகஆண்டவனார்
இரிக்காலுமெட்டுதுகை பன்னிரண்டுவிழுகுதங்கே
பகடையதுபுரளப் பாங்காய்விழுகுதங்கே
ஆரியமாலையவ ளாடுகின்றவேளையிலே
நாலத்தொண்ணூனத்தொண்ணு நலமாவிழுகுதங்கே
நாலுமூன்றேவிழும் நலமுடையமாலையற்கு
உயில்போகவில்லையே உத்தமியாள்மாலையற்கு
ஆரியமாலையவள் ஆரணங்குதான்தோற்றாள்
பஞ்சவர்னச்சுவாமி பாங்காகத்தான்கெலித்தார்
வெட்கித்தலைகுனிந்தாள் விசாரமிட்டாள்மாலைகன்னி
ஆரியமாலைகன்னி யரிவையரைத்தான்பார்த்து
ழு ங்கவேதானகைத்தார் கொல்லிமலையாண்டவனார்

ஆரியமாலைகன்னி அந்நேரமேதுசெய்தாள்
முத்துகெண்டிமாலை மெல்லியவள்தான்கழற்றி
கிள்ளையின்றன்கழுத்தில் கிளிமொழியாள்போட்டாள்
கூந்தலிலோரிழைதான் கொடியிடையாள்தானெடுத்து
இந்தாருமென்றுசொல்லி யேந்திழையாள்தானெடுத்து
காலிலேசுத்துமென்றார் கட்டழகரப்போது
அப்படியேசுத்துகின்று ளாரணங்குமாலையவள்
வஸ்திரத்தாலோரிழைதான் மயிலனையாள்தானெடுத்து
கணையாழிமோதிரத்தைக் கால்தனிலேமாட்டுமென்று
உத்தரவுதான்கொடுத்து உத்தமியாளப்போது
போசனமண்டபத்திற் போய்புகுந்தாள்மாலையவள்

காத்தவராயர் மாலையிடம்விட்டு மாதாவிடம்வருதல்.

இதுதான்தருணமென்று யெழுந்திருந்தார்பஞ்சவர்னம்
சட்டைதட்டிசிறகொதுக்கி சிவ்வென்றுதான்பறந்தார்
ஓடிபரந்தாராம் உயர்நிலைகள்தப்பாமல், மாதாயிருப்பிடத்தை மா
பிள்ளைதேடிவாரார், அம்மையின்றேண்மேலேயன்பாயமர்ந்திருந்தா
இரங்கமிரங்கமென்பார் யிரங்ககவிபாடுவாரும்
நீர்-ஆர்வளர்த்தரங்கனடா அருமைத்திருமகனே
ஆர்வளர்த்தரங்கமல்ல அரிவையரேசொல்லுகிறேன்
காமாட்சிதான்வளர்த்த காத்தரங்கம்நான்தாண்டி
முக்காலடிவணங்கி முடிவணங்கிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவனைக் கண்டுவிட்டாள்காமாட்சி
என்னைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
கண்ணிரண்டும்பொல்லாது கடுகவெழுந்திரப்பா
பக்கத்திற்கைகொடுத்தால் பழுவெலும்புநோகுதென்று
நெற்றிற்கைகொடுத்து நேராகத்தூக்கிவிட்டாள்
எங்கேயடாபோய்வந்தா யென்மகனேசொல்லுமென்றாள்
போகச்சொன்னவிடத்துக்கு போய்வந்தேனென்றுரைத்தார்
நீமாலையிடஞ்சென்று வாங்கிவரச்சொன்னதெல்லாம்
அன்புடன்வாங்கிவந்தேன் ஆச்சியரேபாருமென்று
முத்துகெண்டிமாலைகளுங் கணையாழிபௌத்திரமும்
வஸ்திரத்திலோரிழையுங் கூந்தலிலோரிழையும்
வாங்கிவந்தேனென்று மயிலனையாள்முன்புவைத்தார்
கண்டுவிட்டாள்காமாட்சி கன்னியடையாளம்
எத்தொழிற்கும்வல்லவண்டா எதுக்குஞ்சமர்த்தனப்பா
உன்னைப்போல்நல்லபிள்ளை யுலகத்திற்கண்டதில்லை
வாளையவன்கைகொடுத்து தவசடிபைக்காத்திரென்றாள்
கண்மூடித்தவமிருந்தாள் கட்டழகிகாமாட்சி
மூன்றுநாளாறுபொழுது நிண்ணயமாய்த்தவமிருந்தாள்

இரண்டாவது கிள்ளைவனம் முற்றுப்பெற்றது.

## 3-வது வண்ணாரவல்லி வனம்.

வல்லபைத்தன்கணவா வாரணமாமுகவா
வில்வமலர்தரித்த விமலனார்புத்திரனே
வனங்காத்தசுவாமின்றன் வண்ணக்கதைபாட
மனம்வைத்துயென்னுவில் வந்துகுடியிருந்து
குற்றங்கள்வாராமல் கோபாலன்மைத்துனனே
முற்றும்படிபாக முக்கணனேமுன்னடவாய்

### கதையின்வரலாறு.

அப்போதுகாத்தலிங்கம் ஆண்டவனுரேதுசெய்தார்
கண்டுவிட்டார்பஞ்சவர்னம் காமாட்சிதவசிலையை
என்னடிஎன்தாயே யிரங்கலையோயுன்மனது
கல்லோடியுன்மனது கரையிலையோயெவ்வளவும்
என்னேரந்தன்னளவி லிருப்பேனுன்றவசடியில்
மாண்டகட்டையுன்னிடத்தில் வல்லுயிரோமாலையிடம்
மாதுவனம்போக வரங்கொடடிகாமாட்சி
என்னேரந்தன்வரைக்கும் யிதம்பாடிநிப்பேனம்மா
செய்யான்சிறையிலிருக்குஞ் செங்கழனியோடையண்டை
கொழுந்தலைவங்கிலேநான் குடியமர்த்திவைக்கவேண்டும்
எட்டுநாளானாலும் விட்டுவரப்போரதில்லை
கண்டுவந்தமாலையைநான் கொண்டுவரவேண்டுமென்றார்
பார்த்துவந்தமாலைகளைப் போர்த்துவரவேண்டுமென்றார்
என்றிவர்கேட்கையிலே யெடுத்துரைப்பார்காமாட்சி
பத்தினியைதீண்டினால் பாவமில்லையுமப்பா
உத்தமியைதீண்டினால் உயிர்க்கழுவுமேருமப்பா
தகப்பன்தந்தசாபமது தனஞ்சயனேபலிக்குமடா
கழுவிலிருக்கணுமா காய்ந்துலர்ந்துபோகணுமா
தூண்டிலிருக்கணுமா துடிதுடித்துசாகணுமா
மரக்கழுவிலிருக்கணுமா மங்கைபாகவேகணுமா
காமாட்சியிள்ளையென்று கண்டபெண்களேசணுமா
பொன்திருடிக்கழுவிருப்பார் பூமியிலுற்றபடி
பெண்ணுக்காய்கழுவிருந்தால் பூவுலகிலேசிடுவார்
தாயிலும்பத்தினி தாரமென்றுகூறாதே
பெண்ணுனக்குவேண்டுமென்றால் போறேனம்மாதெய்வலோகம்
தெய்வலோகம்போறேன் தெய்வகன்னிகொண்டுவாறேன்
மாமன்மகள்கருப்பழகி மயிலண்ணைபக்கொண்டுவந்து
கலியாணஞ்செய்துவைத்துக் கண்குளிரப்பார்க்கிறேன்டா
வாங்கருப்பன்சூங்கருப்பன மதுரைசிறுகருப்பன்

எழுகறுப்பனுக் கிளையவள்கருப்பழகி
நாகப்பழமதிலும் நல்லகருப்பழகி
சாமளவர்னம்போல் தையல்கறுப்பழகி
அப்படிபட்டபெண்ணை யன்பாய்முடித்துவைப்பேன்
மாலையென்றசொல்வசன மறந்துவிடுமென்றுரைத்தாள்
அப்பொழுதுஆண்டவனு ரன்பாகவேதுரைப்பார்
வடக்கத்திபெண்களெல்லா மாற்றாந்தாயெந்தனுக்கு
தெற்கத்திபெண்களெல்லாஞ் சிறியதாயெந்தனுக்கு
மேற்கத்திபெண்களெல்லா பெற்றதாயெந்தனுக்கு
கிழக்குதிசைபெண்களெல்லாம் அக்காளுந்தங்கையடி
மாலையவளொழிய மற்றபெண்களாகாதென்றான்
இப்படிச்சொன்னாராம் யெங்கள் துரைபஞ்சவர்னம்
ஆரியமாலையென்று அவளைநினைக்கிறையே
அவளைநல்லழகி அரிவையரேசொல்லுகிறேன்கேள்
ஆரென்றுகேட்டாராம் ஆண்டவனார்பஞ்சவர்ணம்
மானிசம்பேட்டையடா வண்ணாரவல்லியவள்
வண்ணாரவல்லிமகள் மயிலணையாள்சாந்தழகி
அவளழகுக்கீடாமோ ஆரணங்குமாலையவள்
அவளழகுபெருவாளோ கட்டழகிமாலைகன்னி
கண்டுவந்தால்தெரியுமடா கட்டழகிநாயகியை
அடி-அழுக்கெடுக்கும்வண்ணாத்தி அவளைபெரிதாக
அதிகப்பிரியமதாய் ஆரணங்கேசொல்லுகிறாய்
அவளைநான்பார்த்துவர அரிவையரேவிடைகொடென்றார்
அப்படியேபோமென்று அனுப்பிவிடைகொடுத்தாள்
வெண்ணீறுகைகொடுத்தாள் மெல்லியந்தகாமாட்சி
வட்டமிட்டுக்கொண்டாரும் மாரிபிள்ளைபஞ்சவர்னம்

### காத்தவராயசுவாமி வண்ணாரவல்லிவனம் வருதல்.

மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
வங்கணத்துசின்னானே மக்களிரேயூழியனே
தொட்டியத்துசின்னானை துரைமகனைத்தானழைத்தார்
அப்போதுசின்னானும் ஆணழகனோடிவாறான்
ஆண்டவனார்முன்புவந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
அடிமையையழைத்ததென்ன ஆணழகாசொல்லுமென்றார்
என்னைகொள்ளைகொண்டவேல்முருகர் குமரேசாசொல்லுமென்றார்
அழைத்ததோர்காரியத்தை ஆண்டவனேசொல்லுமென்றார்
ஆரியமாலை யவளைநாம்காணுதற்கு
தாயேவரங்கேட்டேன் தனஞ்சயனேசின்னானே
மானீசம்பேட்டையாம் வண்ணாரவல்லியராம்
வண்ணாரவல்லிபெற்ற மயிலணையாள்சாந்தழகி
அவள்காலழகுக்கீடாமோ மாலைமுகமழகு
அவளைநான்காணுதற்கு ஆரணங்குவிடைகொடுத்தாள்

போய்பார்க்கவேண்டுமடா புறப்பட்டாசின்னனே
சின்னனுஞ்சுவாமியுமாய் சிறப்பாகவாறார்கள்
ஆண்டவனைப்போது சின்னனுக்கெடுத்துரைப்பார்
அவளுக்கு-மக்கள்மனிதருண்டோ வண்ணாரவல்லியற்கு
காஞ்சிப்புரத்திலே யேகாம்பரவண்ணனும்
கூடப்பிறந்தவனுங் கொற்றவன்வண்ணனும்
அவனுடையபிள்ளைகளை ஆணழகாசொல்லுகிறேன்
காத்தவண்ணன்சின்னவண்ணன் கட்டழகரிருவருண்டு
காத்தவண்ணனுக்கென்றுசொல்லி கன்னியரைவளர்க்கின்றார்
அண்ணன்மகனுக்கென்று அரிவையரைவளர்க்கலுற்றார்
அவனுடையஅழகுக்கு ஆருமெதிரில்லை
என்றுசொல்லக்கேட்டிருப்பே னென்றனேசின்னனும்

காத்தவராயரும் சின்னனும் வேஷங்கொண்டுவருதல்.

அவ்வசனங்கேட்டார் ஆணழகர்பஞ்சவர்னம்
காத்தவண்ணன்போலே கடுகெனவேவேஷங்கொண்டார்
சின்னவண்ணன்போலே சின்னனும்வேஷங்கொண்டான்
ஒருகண்ணுயில்லிக்கண்ணு ஒருகண்ணுசில்லிக்கண்ணு
ஒருகைதுரும்புபோல ஒருகைதூலம்போல
ஒருகாலுதூலம்போல ஒருகாலுதுரும்புபோல
சட்டித்தலையழகும் பொட்டிவயிறழகும்
மறுகாலைத்தானெடுக்க யிரண்டரைநாழிசெல்லும்
தக்கென்றிரும்புவார் கோழைவந்துமாரடிக்கும்
வப்புவாய்கொட்டிவர வாய்நீரொழுகிவர
பதங்கோரமையாகப் பஞ்சவர்னம்வடிவெடுத்தார்
மூன்றுமுழமழுக்குகந்தை தலையினிற்சுற்றிக்கொண்டார்
நான்குமுழமழுக்குகந்தை அரையினிற்சுற்றிக்கொண்டார்
தள்ளாடித்தள்ளாடி சுவாமியவர்தான்வாறார்
மானீசன்பேட்டையது வண்ணாரவல்லிவனம்
சலவைபண்ணும்நல்லிடத்தே சுவாமியவர்வந்துநின்றார்
நல்லாக்காய்தான்விழுந்து மாரிபிள்ளைநித்திரைபோறார்
தொட்டியத்துச்சின்னன் துரைமகனேதுசெய்தார்
சட்டியைத்தானெடுத்து தனஞ்சயனுந்தான்வாறான்
மாடுகுடிக்கின்ற தொட்டிகளைத்தானெடுத்து
தலைமேலேவைத்துக்கொண்டு தனஞ்சயனும்வாறனே
மானீசன்துறையிலே வண்ணார்களாயிரம்பேர்
சிப்பிசிப்பியென்றுசொல்லித் தப்புகிறார்வண்ணார்கள்
மாடுகுடிக்கின்ற தொட்டிகளைத்தானெடுத்து
அந்நேரவேளையிலே ஆரணங்குவல்லியவள்
பட்டுவுடுத்திக்கொண்டு பட்டாடைமேல்சாத்தி
மூத்துமெருவடியைத் தொட்டுநடந்துவாறார்
மானீசன்துறைதேடி வாறாளேவல்லியவள்

அப்போ-மண்டபத்தில்வந்துநின்றாள் மயிலணையாள்வல்லியவள்
காணுததுபோலச் கண்டுவிட்டாளாண்டவனை
ஆரடாவென்றுசொல்லி அதட்டியவள்கேட்கையிலே
அப்பொழுதாண்டவனு ரரிவையரைத்தான்பார்த்து
நான்-காஞ்சிபுரந்தனிலிருந்து கட்டழகிவந்தேனம்மா
என்தகப்பன்பேர்யேசாம்பரம் என்தாயார்காமாட்சி
காமாட்சிபெற்றெடுத்த காத்தவன்னுனன்தாண்டி
அண்ணன்பேர்கணபதியாம் மாமன்பேர்மணவாளன்
காற்றுமழையுங் கருப்புவந்துநேர்ந்ததங்கே
பிழைக்கயிடமில்லாமல் யாவரையுங்கூட்டிவந்தேன்
அருநெல்லிமரத்தண்டை யாவருங்குந்திஞேம்
மாமனும்அண்ணனும் மாண்டார்களவ்விடத்தில்
சின்னுனும்நானுமாய்த் தப்பிப்பிழைத்துவந்தோம்
மாநீசம்பேட்டையாம் வண்ணுரவல்லியவள்
அவளையுந்தான்பார்க்க அன்பாகவந்துவிட்டோம்
என்றுசொல்லியாண்டவனு ரின்பமுடன்தானழுதார்
அப்போதுவல்லியவ ளன்பாகவேதுசெய்தாள்
என்-அண்ணனிடபிள்ளை யருமைமருமகனே
இப்படிக்குவந்ததேன் யென்னுடையமருமகனே
கட்டிக்கொண்டாவ ளுடன் கதறியழுக லுற்ருள்
உனக்கென்றுயென்மகளை உவர்ந்துவளர்க்கிறேனே
அத்தைமகன்வேண்டுமென்று அருமையாய்வளர்க்கிறேன்
என்றுமிகச்சொல்லி யேந்திழையாள்தானழுதாள்
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டார்
மருமகனைத்தானெடுத்து மார்போடணைத்துக்கொண்டாள்
குக்கென் றிரும்பினுர் கொப்பெனவேயாண்டவனுர்
குத்துச்சளியுமங்கே கோழையுந்துப்பிவிட்டார்
வல்லிமுகத்திலே நாயகனுர்துப்பினுரும்
ஐயோசிவனேயென்று ஆரணங்குநாயகியாள்
அந்த-துறையருகிற்கொண்டுவந்தாள் தோகையிளங்கொடியும்
ஸ்நானங்கள்செய்துவைத்தாள் தையலிளங்கொடியும்
நல்லநல்லஆடைகளை நாயகியுந்தான்கொடுத்தாள்
அலங்கரித்தானபின்பு அரிவையருங்கொண்டுவாருள்
அந்தச்சமயத்திலே சின்னுனும்வாருனங்கே
கஞ்சிதனைத்தானெடுத்து தலைமேலேவைத்துக்கொண்டு
வருகிறதைக்கண்டாரு மாரிபிள்ளைபஞ்சவர்னம்
அத்தையரேவல்லியடி தம்பியிதோவாருண்டி
எங்கேயடாமருமகனே யென்றெதிரோடிவாருளங்கே
அத்தையடியென்றுசொல்லி அவள்தலைமேல்போட்டுடைத்தான்
பிள்ளைகளாசையினுல் பொற்கொடியும்பார்த்து
ஆற்றிலேகொண்டுவந்து ஸ்நானங்கள்செய்துவைத்து

நல்லநல்லஆடைகள் நலமாகத்தான்கொடுத்து
தானுமேஸ்நானஞ்செய்து தையலிளங்கொடியாள்
நல்லதோர்பட்டாடையை நலமாகத்தானுடுத்தி
மருமகளைத்தானழைத்து வாராளேமாளிகைக்கு
ஒருகாலெடுத்துவைப்பார் ஒருகாலைத்தூக்கிவைப்பார்
மூங்கில்வேர்தட்டுமானால் முப்பத்தெட்டிடம்விழுவார்
தக்கென்றிரும்புவாராங் கோழைவந்துமாரடைக்க
தோள்மேலேகைபோட்டு துரைமகனும்வாரானே
பெண்ணைத்தானழைத்து மாளிகைக்கனுப்புறாளே
முத்துமுத்தாயாலாத்தி முறைமுறையாய்வைப்புமென்றாள்
பவழத்தாலாலாத்தி பாங்காகவைப்புமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆணழகரோடிவாறார்
சாந்தழகிமுன்னேவந்து தனஞ்சயனுமேதுரைப்பான்
உங்கள்-அத்தைமகன்வாறானே ஆரணங்கேமங்கையரே
ஆலாத்திவைக்கச்சொன்னாள் ஆச்சியந்தவல்லியம்மாள்
இவ்வசனங்கேட்டாளே யேந்திழையாள்சாந்தழகி
சந்தோஷமானாள் சரீரங்கள்பூரித்தாள்
அப்படியேஆலங்களை அரிவையவள்கொண்டுவைத்தாள்
அவரழகைப்பார்ப்போமென்று ஆரணங்குசாந்தழகி
உப்பரிகைமேலேறி யுத்தமியாள்சாந்தழகி
சன்னலெல்லாஞ்சாத்தியொரு சன்னல்வழிபார்த்திருந்தாள்
அப்போதுவல்லி யழைத்துமவள்வாராளிங்கே
ஒருகால்துரும்புபோல் ஒருகால்தூலம்போல
ஒருகைதூலம்போல் ஒருகைதுரும்புபோல்
பெட்டித்தலைபோலே பெட்டிவயிறுபோல்
ஒருகாலைவைப்பாராம் ஒருகாலையிழுப்பாராம்
தள்ளாடிதள்ளாடி சாமிவருகையிலே
தலைவாசல்முன்னாகத் தையலருங்கொண்டுவந்தாள்
ஆலாத்திதட்டை அரிவையர்கள்தானெடுத்தார்
அப்போதுசாந்தழகி அருங்கிளியாளோடிவந்தாள்
இவரழகைக்கண்டு காறியுமிழ்ந்தார்கள்
காறியுமிழ்ந்ததைக் கடைக்கண்ணாற்பார்த்துவிட்டார்
என்னைக்காறியுமிழ்ந்ததினா லுன்னைக்காறியுமிழவைப்பேன்
என்றிவர்பஞ்சவானம் எண்ணினார்மனதிலேதான்
அரண்மனைக்குள்வந்துவிட்டார் ஆணழகர்பஞ்சவர்னம்
அப்போதுவல்லியவள் அருங்கிளியாளன்னசொல்வாள்
தேவரவேண்டுமென்று மாதெய்வங்கூறினனான்
பலபலதெய்வங்களைப் பிரார்த்தனைகள்செய்தனன்
அப்போதுசொல்லிமலை யாண்டவனேதுசெய்தார்
ஆயிரம்பூதங்களை யன்பாகத்தானழைக்க
சுற்றுள்ளதெய்வங்கள்போல் சூழ்ந்ததுபூதமெல்லாம்

இவள்கோறினதெய்வமெல்லாம் வந்ததுஅட்சணமே
நீமதிக்கவென்றுசொல்லித் தாண்டவங்களாடுதங்கே
மருமகன்வந்தால்பூசை மகிழ்ச்சியாய்தாரேனென்றாய்
தாடியென்றுசொல்லியல்லோ தாண்டவங்களாடுது
கண்டுவிட்டாள்வல்லியவள் கால்கைநடுங்குது
என்னடாமருமகனே யிப்படிக்குவந்ததடா
அப்பொழுதாண்டவனார் அரிவையரைக்கையமர்த்தி
ஆரடாவந்தவர்கள் அன்பாகச்சொல்லுமென்றார்
பூசைமிகத்தாரோம் புகழானவுங்களுக்கு
நாளையதினத்துக்கு நலமாசவாருமென்றார்
இருப்பிடத்தேபோங்களென்றார் யெங்கள்துரைபஞ்சவர்னம்
போவென்றுசொல்லவே போச்சுதுதெய்வமெல்லாம்
வண்ணாரவல்லியவள் மனமகிழ்ந்தேதுசொல்வாள்
இப்படிக்குவந்ததுண்டோ மருமகனேதெய்வமிங்கே
தகுமானபூசையிட்டால் தங்களிடர்போய்சேரும்
என்னதான்செலவு யெனக்கறியச்சொல்லுமென்றாள்
ஆயிரந்தேங்கா யரிவையரேவேண்டுமடி
ஆயிரம்படியரிசி அன்பாகவேண்டுமடி
ஐந்துபீப்பாய்நெய் அரிவையரேவேண்டுமென்றார்
ஐம்பதுவீசையது அன்பானசர்க்கரைகள்
ஆயிரம்குடம்பால் அரிவையரேவேண்டுமடி
ஆயிரம்குடுவைத்தயிரு ஆரணங்கேவேண்டுமென்றார்
சாம்பிராணிகற்பூரந் தையலரேவேண்டுமென்றார்
தாம்பூலங்கள்வேண்டுமடி தையலரேஅத்தையரே
தளிகைநல்லசாதம் தையலரேசெய்யவேண்டும்
இப்படிக்குசெய்தா ளேந்திழையேஅத்தையரே
அந்தந்ததெய்வமெல்லாம் அப்புறம்போய்விடுமே
என்றிவர்சொல்லையிலே யேந்திழையாள்சம்மதித்தாள்
அப்படியேசெய்வோமென்று ஆரணங்குவல்லியவள்
அந்தப்படியே அரிவையருஞ்செய்யலுற்றாள்

காத்தவராயசுவாமி தெய்வங்களுக்குப் பூசை சமர்ப்பித்தல்.

ஆயிரம்வண்ணாரை ஆண்டவனார்தானழைத்து
எல்லாருமொருபொழுதாய் வையுமென்றாரத்தையரை
ஆத்தாளபகளுடமா யிருங்களொருபொழுது
இப்படியாகவே வைத்தாராம்ஆண்டவனார்
ஐந்துபீப்பாய்சாராயம் அடைவாகவ்வக்கவேண்டும், ஆயிரங்கடாக்
ளரிவையரேவேண்டுமடி, இத்தனையும்வேண்டுமடி அரிவையரே அ
த்தையரே, அப்படியேசெய்தாளே அருங்கிளியாள்வல்லியவள்
குறுக்கச்சுவரையல்லோ கொற்றவனார்தானிடித்து
வெட்டவெளியாக்கி விமலரந்தபஞ்சவர்னம்
வாழையிலேபோட்டு வட்டித்தார்சாதமது

ர்க்கரைதளிகைமிகச் சுவாமிக்குத்தான்போட்டார்
அம்பாரக்கும்பமது ஆண்டவனார்தான்போட்டார்
பலபலதெய்வங்களுக்குப் படையலது போட்டாராம்
வூட்டுக்கடாபூசையது அன்பாகத்தான்போட்டார்
துவுநல்லமாங்கிஷமும் மாஜினமும்கெஞ்சாவும்
தங்காயுடைத்துமவர் செவ்விளநீர்கண்திறந்து
ாழைப்பழங்கள் வகையாயுரித்துவைத்தார்
ாவிளக்குதான்போட்டார் மாரிபிள்ளைபஞ்சவர்னம்
ற்பூரதீபாரத்தி காட்டினாரப்போது
அத்தையரேவல்லியரே உன்மகளைக்கொண்டுவாடி
பூத்தாளுமகளுந் தலைவாசல்காத்திருங்கள்
வூபிரம்வண்ணாரை அங்ஙனமேகுந்தவைத்தார்
வரண்மனைக்குள்ளாகத் தானிருந்தாராண்டவனார்
ள்ளிக்காட்டுபூதங்களைக் கண்ணைகாட்டிதானழைத்து
கொல்லிமலைபூதங்களைக் கூப்பிட்டுத்தானழைத்தார்
ாண்டவங்களாடுகுது சுவாமியு பூதங்கள்
அுடைப்பட்டபூதத்துக்கு கெணபூசைதான்கொடுத்தார்
ாரிமுழங்குதையா மாரிபிள்ளைபூதமது
டுத்துமுழங்குது யேமனிடபூதகணம்
ண்ணைப்பறிக்குதுபார் மாரிபிள்ளைபூதகணம்
வூபிரம்பீப்பாசாராயம் அடங்கலுந்தான்குடித்து
த்திமிகவென்றுசொல்லித் தாண்டவங்களாடுகுது
இப்படிக்கித்தானிருக்க யேந்திழையாள்சாந்தழகி
தவைத்திறந்துமவள் கட்டழகிபார்க்கலுற்றாள்
அதிலொருமொண்டிபூதம் அருங்கிளியைத்தானெடுத்து
ள்ளத்தில்தான்போட்டு பாங்காய்புறட்டுகுது, அம்மாடிவல்லியரே
அந்நீதமாய்ச்சாகுறேனே, மாமன்விளையாடுகுறான் மயிலணையேசூத்
ாடி, மாமனல்லயிழவுமல்ல பூதமென்னைப்பிடிங்குதடி
அப்பொழுதாண்டவனா ரன்பாகபார்த்துவிட்டார்
மொண்டிநல்லபூதத்தை வாவென்றுதானழைத்து
மிளிமேலபோட்டடைத்தார் சீராகப்பூதத்தை
டுவிலையென்னுதென்றாள் பக்கத்திலேமகளுதென்றாள்
ாங்காடியென்றுசொல்லிக் கதவைத்திறந்துவிட்டார்
வந்துமெள்ளபார்த்தாளாம் வண்ணாரவல்லியவள்
ன்றையுகாணோமங்கே வுத்தமனேமருமகனே
வந்தோர்தெய்வமெல்லாம் வாரிவிழுங்குது
ாபருவுள்ளதெய்வங் கட்டழகி அத்தையரே
இலைகூடவில்லாம லெடுத்துமுழுங்கிற்று
மாங்குநின்றாளே யேந்திழையள்வல்லியரும்
வூயிரம்வண்ணார்கள் அடங்கலுமேமாந்தார்
அப்பொழுதாண்டவனா ரையாவரேதுரைப்பார்

ஆயிரம்வண்ணாரை அரிவையரேதள்ளிவிடு
ஆயிரம்பேர்செய்யும்வேலை அரிவையரேசெய்கிறேன்
ஆயிரம்வண்ணாரை யருங்கிளியாள்தள்ளிவிட்டாள்

### காத்தவராயர் வண்ணாரத்தொழில் செய்தல்.

அப்போதுசொல்லிமலை யாண்டவனுரேதுசெய்தார்
எமனாரின்பூதத்தை யிடதுகையில்வாருமென்றார்
ஆயிரம்பொதிகளை யானைமேல்போட்டாராம்
மாநீசன்துறைதேடி வாராரும்பஞ்சவர்ணம்
ஆயிரம்பொதிகளை யன்பாகத்தானிறக்கி
ஆயிரம்பூதங்களை யன்பாகத்தப்புமென்றார்
அப்படியேபூதங்க ளன்பாகத்தப்புதங்கே
தாறுமாறாய்க்கிழிக்குதடா சுவாமியுடபூதமது
கொட்டிகட்டித்தான்மடித்துக் கொற்றவனார்பூதமது
அம்பாரம்போலாக ஆடையைக்குவித்துதங்கே
இப்படியாய்ச்செய்தது சுவாமியுடபூதங்கள்
ஆயிரம்பூதத்தை சுவாமியவர்தானழைத்து
சிமிளிமேல்போட்டடைத்தார் சுவாமிபிள்ளைபஞ்சவர்ணம்
ஒண்டியொருவனுமா யுத்தமனுந்தானிருந்தார்

### வண்ணாவல்லி காத்தவராயருக்கு கஞ்சிகொண்டுவரல்.

அப்போதுவல்லியவ ளருங்கிளியாளேதுசெய்வாள்
பகல்கஞ்சிகாச்சிக்கொண்டு பைங்கிளியாள்வாராளங்கே
மடவைக்கருவாடு மயிலணையாள்கட்டிக்கொண்டு
கஞ்சிபல்லாமேலேவைத்து கட்டழகிவாறாளே
கண்டுவிட்டாராண்டவனார் கஞ்சிகொண்டுவருகிறதை
எமனாரின்பூதத்தை யின்பமுடன்தானழைத்து, காலாலேயிரடிவி
கஞ்சிபல்லா தான்விழவே, என்றுசொல்லியாண்டவனு ரெடுத்துரை
தார்பூதத்துக்கு, அப்படியேயிரடினது ஆண்டவனார்பூதமது
கஞ்சிபல்லாயுடைந்தது கண்டுவிட்டாளல்லியரும்
என்செய்வேனென்றுசொல்லி யேந்திழையாள்கிட்டேவந்தாள்
கொண்டுவந்தகஞ்சிபல்லா யிரடிவிழுந்தது
போனாற்பெரிதல்ல பொற்கொடியேஅத்தையரே
தாம்பூலந்தாருமென்றார் தையலிளங்கொடியை
பையவிழ்த்துப்பாக்கு பண்பாய்மிகக்கொடுத்தாள்
வெற்றிலைபுஞ்சுண்ணாம்பும் வல்லியெடுக்கையிலே
தங்கச்சிமிழதனைத் தையலருந்தானெடுத்தாள்
ஆரியமாலைதுகில் அரிவையரும்வைத்திருந்தாள்
மோசம்வந்துநேர்ந்ததென்று மெல்லியவள்தானொளித்தாள்
என்னடிஅத்தையரே எனக்கொளித்ததென்ன
ஒளித்தவிபரமதை யுத்தமியேசொல்லுமென்றார்
ஒன்றுமில்லைமருமகனே யுத்தமனேயென்றுரைத்தாள்
சொல்லாமற்போனாலே தோகையரேமீளுவண்டி

என்றிவர்சொல்லையிலே கண்டுவிட்டாள்வல்லியரும்
மாலை துகிலாடை மருமகனேயென்றுரைத்தார்
கண்ணாலேகாணவேண்டுங் கட்டழகிதாருமென்றார்
கைகால்குறையுமடா கட்டழகாகண்டாயானால்
குறைந்தால்குறையுதடி கொடியிடையேதாருமென்றார்
இந்தாடாவென்றுசொல்லி யெடுத்தவன்கைகொடுத்தாள்
மாலைத்துகிலாடை மாரிபிள்ளைகண்டுவிட்டார்
ஏழுதுகிலாடை யின்பமுடன்கண்டாரும்
இழையாயிரம்பொன்பெறுமாம் யேந்திழையாள்பூவாடை
சலவைசெய்துதாரேனடி தையலரே அத்தைநான்
கொண்டுவருகிறேன் கொடியிடையே அத்தையரே
வல்லியவள்போனபின்பு மன்னவனுரேதுசெய்தார்
சலவைபண்ணுமண்டபத்தில் சுவாமியவர்வந்துநின்றார்
ஏழுதுகிலாடை யாண்டவனார்தானெடுத்து
இளநீரில்தான்வைத்து யெங்கள்துரைபஞ்சவர்னம்
காற்றுநல்லவாடையிலே கட்டழகருரைக்கலுற்றார
தட்டிகொட்டித்தான்மடித்தார் தையலிட்டபூவாடை
ஐந்துதுகிலாடை யாண்டவனார்தான்மடித்து

ஆரியமாலை துகிலாடையில் உருவெழுதல்.

இரண்டுதுகிலாடை யிதமாகத்தானெடுத்து
மாலையைப்போலுருவு மாரிபிள்ளையெழுதுகிறார்
உச்சிதொடங்கியல்லோ வுள்ளங்கால்தான்வரைக்கும்
கொடையெழுதிவரும்போது மயங்கிவிழுவாரும்
கலைக்கக்கலைக்க கலைக்கமுடியவில்லை
கொட்டித்தட்டித்தான்மடித்தார் கொற்றவனார்பஞ்சவர்னம்
மறுநல்லவஸ்திரத்தை மன்னவனுரேதுசெய்தார்
தன்னைப்போல்வஸ்திரத்தை சுவாமியவரெழுதலுற்றார்
அதையுமேதான்மடித்தார் ஆண்டவனார்பஞ்சவர்னம்
ஏழுபுடவையுஞ் சிமிளிலேபோட்டடைத்தார்
எழுந்துமெள்ளவாறாராம் யெங்கள்துரைபஞ்சவர்னம்
மாளிசம்பேட்டைக்கு வந்துவிட்டாராணழகர்
வண்ணாரவல்லியரை மயிலன்னையைத்தானழைத்து
தங்கச்சிமிழதனைத் தான்கொடுத்தாராண்டவனார்
மாலைதனைத்தேடி வாராளேவல்லியவள்
ஏழுதுகிலாடை வல்லியவள்தான்கொடுத்தாள்

ஆரியமாலைபுருவத்தைபார்த்து வண்ணாத்தியை தண்டித்தல்.

மூன்றும்படியிலே வல்லியவள்தானிருந்தாள்
சேலையைத்தானெடுத்து தேன்மொழியாள்பார்க்கலுற்றார்
அதில்கோட்டையுங்கொத்தளமுங் கொம்பனையாள்பார்க்கலுற்றாள்
ஆண்ரூபங்கண்டுவிட்டாள் ஆரணங்குமாலையவள்
மெத்தப்பயந்தாளே மெல்லியிளங்கொடியாள்

விடவிடென்றுகால்நடுங்கி மாலையவள்தான்விழுந்தாள்
கன்னியென்றதாதியரை நலமுடனேதானழைத்து
ஐந்துகொத்துபிரம்பை யரிவையவளேகொண்டுவாடி
வண்ணாரவல்லியரை வரவழைத்தாள்மாலையவள்
கொத்துப்பிரம்பாலே சொல்லுகிறாள்மாலைகன்னி
இப்படிக்குத்தானழைப்பா ளேந்திழையாள்மெல்லிநல்லாள்
சுரணைத்தெரியாமல் தோகையாள்விழுந்துவிட்டாள்
அப்போ-அழுதுபுலம்புகிறாள் ஆரணங்குவல்லியவள்
எங்கிருந்துவந்தாயடா என்குடிக்குத்தீம்பாக
அப்போதுசொன்னேனே அழும்புவந்துநேருமென்று
என்றிவள்தானழுது ஏந்திழையாள்நிற்கையிலே
ஆரியமாலை தன்ரூபத்தைக்கண்டு வண்ணாத்திக்குவெகுமதிசெய்யால்
அப்போதுமாலைகன்னி யரிவையவளேதுசெய்தாள்
மற்றதோர்துகிலெடுத்து மயிலனையாள்பார்க்கையிலே
தன்னைப்போலுருவதனை தையலவள்பார்த்துவிட்டாள்
வலதுதொடையிலே மச்சமிருக்கிறதை
கண்டுவிட்டாள்மாலை கன்னியிளங்கொடியாள்
தன்துடையைத்தானுந் தையலரும்பார்க்கலுற்றாள்
தனக்குமச்சமிருக்கிறதை தையலருங்கண்டுவிட்டாள்
என்னுடையமச்சமதை யெப்படிகண்டானடி
கண்டெழுதினவன் கட்டழகியார்தமோ
வண்ணாரவல்லிதனை மயிலனையாள்தான்பார்த்து
சொல்லடிவல்லியென்று தோகையவள்கேட்கலுற்றாள்
கைநடுங்கிக்கால்நடுங்கி வல்லியவளேதுசொல்வாள்
அண்ணன்மகன்வந்தா ளறிவானகாத்தவண்ணான்
சிப்பிநல்லசாஸ்திரத்தைக் கற்றவண்டியுன்மருகன்
என்னைக்கண்டெழுதினனே யிளங்கொடிவல்லியரே
எழுதினதைதனக்கு யிதோதாரேன்பௌத்திரங்கள்
தன்னுடையபௌத்திரத்தை தையலவள்தான்கொடுத்தாள்
சிங்கமுகம்யாளிமுகத் தோடாவைத்தான்கொடுத்தாள்
கழுத்திலேதரித்திருந்த கண்டசரந்தான்கொடுத்தாள்
முத்துகெண்டிமாலை மெல்லியவள்தான்கழற்றி
மருமகனுக்கென்றுசொல்லி மாலையவள்தான்கொடுத்தாள்
ஆயிரம்வராகனை யரிவையவள்கைகொடுத்தாள்
இந்தட்சணத்திலே யேந்திழையேவல்லியரே
கலியாணஞ்செய்துவையுங் கன்னியிளமயிலே
என்றுசொல்லித்தான்கொடுத்தா ளேந்திழையாள்மாலைகன்னி
சாந்தழகிக்கேற்ற தனஞ்செயண்டிமோசமில்லை
சந்தோஷமிகவானாள் தையலந்தவல்லியரும்
காத்தவண்ணான்முன்னேவந்தாள் கட்டழகிவல்லியரும்
அப்போ-மாலையவள்கொடுத்ததெல்லாம் மருமகன்கைகொடுத்தாள்

இந்தட்சணத்திலே மருமகனேயுந்தனுக்கு
கலியாணஞ்செய்யச்சொன்னாள் கட்டழகிமாலையரும்
அவ்வசனந்தான்கேட்டா ராணழகர்பஞ்சவர்னம்
கைகால்குறைந்ததே கலியாணமென்னத்திற்கு
மாலைகொடுத்த பௌத்திரத்தைதானெடுத்து
உச்சு கொடங்கியவ ருள்ளங்கைகள்வரைக்கும்
இறங்கினாள்வல்லியவ ளேந்திழையாளாண்டவனை
வாலைப்பருவம் வயதுபதினாறாய்
அழகுதுலங்குவதும் ஆனந்தங்கொஞ்சுவதும்
அழகிருந்தமேனியிலே புனுகிருந்துவீசுகுது
சாந்துமணக்குது சுவாமியுடமேனியிலே
அழகுசொரிகிறது ஆனந்தங்கொஞ்சுகுது
அப்போதுவல்லியவ ளாரணங்குமோடிவந்து
அடி-என்மகளேசாந்தழகி யிளங்கொடியேவாடியென்று
அம்மான்மகனை அரிவையரேபாருமென்றாள்
சன்னலிலேதானிருந்து தையலவள்கண்டுவிட்டாள்
இந்தட்சணத்திலே மாலையிட்டுவையுமென்றாள்
கைநிறைந்தபொன்னிலுங் கண்ணிறைந்தபுருஷனிவன்
இப்பெரியபுருஷனை யெங்கிலும்நான்கண்டதில்லை
அப்போதுவல்லியவ ளாரணங்குமென்னசெய்தாள்
நாள்கேட்கவேணுமப்பா நலமாகமருமகனே
அப்படியேகேளுமென்று ராணழகர்பஞ்சவர்னம்
புரோகிதனைத்தேடிக்கொண்டு வாராளேவல்லியவள்
அந்தச்சமயத்தில் வாராரேபிராமணர்தான்
ஐயரைக்கண்டவுட னடிதொழுதுதெண்டனிட்டாள்
எங்கேயடிவல்லியரே யேந்திழையேபோறுமென்றார்
கலியாணஞ்செய்யவேண்டுங் கன்னியிளங்கொடிக்கு
நாளிடவந்தேனென்று னாயகியாளப்பொழுது
அப்போதுவேதியனு ரன்பாகத்தானுரைத்து
பந்தற்கால்நாட்டிவிடு பாவையிளங்கொடியே
நாளையனன்றைக்கு நலமாகமுகூர்த்தமென்றார்
அவ்வசனங்கேட்டு ஆரணங்குமோடிவந்தாள்
மூன்றுங்கால்நட்டாளே மெல்லியிளங்கொடியும்
அப்போதுகாத்தவனு னன்பாகவேதுரைப்பான்
ஊருக்குதாம்பூல முடனேதான்வையுமென்றார்
ஊரிலுள்ள அழுக்கெல்லாம் வுத்தமியேகொண்டுவாரும்
அப்படியேவாராளா மாரணங்குவல்லியவள்
ஐம்பத்தெட்டுகிராமத்துக்குந் தாம்பூலம்வைத்தார்கள்
அங்கருக்குமழுக்கெல்லா மன்பாகக்கட்டுமென்றார்
அழுக்கெல்லாந்தானெடுத்து ஆரணங்குவாராளே
மாஞ்சம்பேட்டைக்கு வந்துவிட்டாள்வல்லியவள்

அழுக்குகள்தான்போட அன்பாகக்கொண்டுவந்தாள்
சலவைபண்ணிநான்வாறேன் தையலரே அத்தையென்றார்
யானைமேல்பொதிபோட்டார் ஆண்டவனார்பஞ்சவர்னம்
மாநீசன் துரையதுக்கு வாறாரம்பஞ்சவர்னம்

காத்தவராயர் ஆடை யைக்கொளுத்துதல்.

ஆயிரம்பூதங்களை யன்பாகத்தானழைத்து
கொண்டுவந்தபொதிகளெல்லாம் போர்குவிக்கவிடைகொடுத்தார்
நல்லநல்லவஸ்திரத்தை நலமாயெடுக்கச்சொன்னார், அப்படியேயெ
த்து ஆண்டவனார்பூதமது, அரியவள்பூவாடை யன்பாயெடுத்தது
அழகானபுடவையெல்லாம் அன்பாயெடுத்துக்கொண்டு
அதைவேறேகட்டுமென்று ராண்டவனார்பஞ்சவர்னம்
மற்றதெல்லாம்போறாக வகையாகக்குவியுமென்றார்
நகசோடுநஞ்சறுக்கும் நடுச்சாமவெளியிலே
அந்தநல்லவெளியிலே அக்கினியைமூட்டுமென்றார்
அப்படியேமூட்டினது ஆண்டவனார்பூதமது
பற்றியெறிகிறது பாங்கானஆடையெல்லாம்
சாம்பலாய்ப்போமளவும் சாமியாரங்கிருந்தார்

காத்தவராயசுவாமி மற்றதுகிலாடையை விற்கக்கட்டளையிடுதல்.

மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தேவந்திருந்தார்
ஆயிரம்பூதத்தை யன்புடனேதானழைத்து
யாழ்பாணலப்பையைப்போல் அன்புடனேயுண்டுபண்ணார்
காயலார்போலாகக் கடுகெனவேயுண்டுபண்ணார்
கொண்டுவந்துசேனையெல்லாங் கொற்றவனார்முன்னேவைத்தார்
எட்டுநாள்சந்தையிலே எடுத்துப்போய்வில்லுமென்றார்
அப்படியேவிற்கிறது ஆண்டவனார்பூதமது, இப்படிக்குவிற்கிறது
இவருடையபூதங்கள்தான், ஆத்தாளுமகளுமாய் அன்பாகவதுசெய்
வார், ஒருமுழக்கந்தையது உத்தமியாள்கட்டிக்கொண்டு
அந்தபுறத்திலே யரிவைமார்தானிருந்து
கூறப்பட்டதலையாரி கொற்றவனுமப்போது
காத்ததோட்டிப்பறையன் கடுகவேவாறானே
ஊரிலுள்ள துணிகளெல்லா மொருமிக்கவேகுதங்கே
கண்டுவந்துசொன்னானங் கட்டழகன்தலையாரி
ஊரிலுள்ளமன்னரெல்லா முத்தமர்களோடிவந்து
வண்ணாரவல்லியை மயிலனையைத்தானழைத்து
எங்கேசலவையென று யெல்லோருங்கேட்கலுற்றார்
காத்தவண்ணான்போனான்காண் காட்டுகுளத்துரைக்கு
வாடியென்றுசொல்லி மங்கையரையிழுததுவந்தார்
அம்பாரம்வேகிரதைக் கண்டாளேஅரிவையரும்
அப்பிக்கொண்டாளடிவயிற்றி லறைந்துகொண்டாள்பார்கலங்க
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்புகிறாள்
அப்போதுசேவகர்க ளரிவையரைக்கட்டிக்கொண்டு

ிழுத்துக்கொண்டுவாருர்க ளேந்திழையாள்வல்லியரை
டைநல்லபசாருக்கு கன்னிதனைக்கொண்டுவந்தார்
ாழ்ப்பாணத்துலப்பையைப்போ லிருந்தார்களப்போது
டவைதனைவாங்கிக்கொண்டு புண்ணியர்கள்பார்க்கலுற்றுர்
வண்ணாரவல்லி மயிலனையைத்தான்பார்த்து
ிந்தநல்லசேலை யென்னுடைதென்று தானெடுத்தார்
ாயலார்தானுமாய்க் கடுகெனவேவாருர்கள்
ிராஜனிடம்போவோமென்று நலமாய்வருகையிலே

காத்தவராயர் ராஜவடிவுகொண்டு தீர்ப்புச்செய்தல்.

அப்பொழுதாண்டவனு ரன்பாகவேதுசெய்தார்
வூரியப்பூராஜனைப்போ லாண்டவனுர்வேஷங்கொண்டார்
முத்திரையில்லைசேவகரை மெத்தெனவேயுண்டுபண்ணுர்
ண்டபமுமுண்டுபண்ணி மாரிபிள்ளைதானிருந்தார்
அப்போதுசேவகர்கள் வல்லியைக்கொண்டுவந்தார்
ிராஜன்முன்புகொண்டுவாரார் துன்மார்க்கச்சேவகர்கள்
ன்னடாபிராதென்று யெங்கள்துரைகேட்கலுற்றுர்
ாழ்ப்பாணத்துலப்பைதா னென்னவென்றுசொல்வார்
ாங்கள்-சந்தைகடைச்சேலைவிற்க வந்தோமேவண்ணாத்தி
ன்னுடைதென்றுசேலை யிழுத்துவந்தாள்ராஜாண்டை
ன்சேலைச்சுவாமியென்றுள் யேந்திழையாள்வல்லியவள்
சேலைக்கடையாளம் உண்டோடிவல்லியரே
கொண்டுவாபோவென்றுர் கொல்லிமலையாண்டவனுர்
அப்படியேகொண்டுவந்து அரிவையருந்தான்கொடுத்தாள்
ான்போட்டகுறியைத்தான் தையலருங்கேட்கலுற்றுர்
அவள்போட்டகுறிபை ஆண்டவனுர்மறந்துவிட்டார்
-சங்கையடிபோட்டகுறி யென்றுராமாண்டவனுர்
அபாண்டமாய்ச்சொல்லவந்தாள் ஆரணங்குவல்லியவள்
ட்டிவைத்துதைபுமென்றுர் கட்டழகராண்டவனுர்
ட்டிவைத்துமோதுகுது கட்டழகர்பூதமது
ேயாசிவனேயென்று அழுகிறுள்வல்லியவள்
லப்பைகளைத்தானழைத்து நலமாகப்போங்களென்றுர்
வண்ணாரவல்லியவள் மயிலனையாள்சாந்தழகி
அவள்காலில்பிரிகட்டிக் கடிகியேயிழுத்துவாரும்

வண்ணாரச்சாந்தழகியை பூதமெடுத்துவருதல்.

ஆண்டவனுர்பூதமது அப்படியேயோடிவந்து
காலில்பிரியைசுற்றி யிழுத்துகொண்டுவருகுதங்கே
கல்லிலுமுள்ளினுங் கடுகவிழுத்துக்கொண்டு
இப்படியாய்க்கொண்டுவாரு மிவருடையபூதமது

அழகானமேனியெல்லாம் அவதிபட்டுவாராளிவள்
முள்ளுக்கொருசதையும் கல்லுக்கொருசதையாய்
தேய்ப்பட்டுபோகுதே தேன்மொழியாள்தேகமது
ஐந்துபஞ்சதன்னுயிரும் அவலோகம்போகுதங்கே
செத்தகட்டைகொண்டுவந்து சுவாமிமுன்னேவிட்டார்கள்

காத்தவராயசுவாமி வண்ணாத்திகளைத்தகனஞ்செய்து
தன் தாயாரைவந்து காணல்.

மாலையிவள்கண்டுவிட்டாள் மயிலனையாள்வல்லியரும்
வடிவானதன்மகள்தான் மாண்டுமடிந்தாளென்று
தன்னுயிரைவிட்டுவிட்டாள் தையலந்தவல்லியரும்
தாயுமகளையுஞ் சுவாமியவரென்னசெய்தார்
காஷடத்திலடையுமென்றார் கட்டழகர்பஞ்சவர்ணம்
கொள்ளிவைத்துத்தகனஞ்செய்தார் கொடியிடைமாரிருவர்களை
வீடுகளரண்மனையை யிடித்துநிரவுமென்றார்
அவள்-உள்ளபொருளையெல்லாம் உத்தமனார்தானெடுத்து
மாலைக்குச்சீதனமாய் மாரிபிள்ளைதான்கொடுத்தார்
கொழுதனைகன்னிலே கொண்டுபோய்வையுமென்றார்
அப்படியேவைத்தது ஆண்டவனார்பூதமது
தாயார்தவநிலையைச் சுவாமியவர்தேடிவாறார்
சர்வதீர்த்தப்பொய்கையிலே சுவாமியவர்ஸ்நானஞ்செய்து
சிவசிவசிவவென்றுசொல்லி திருநீற்றுக்காப்பணிந்தார்
தோட்டந்திறந்தாரே தொன்னைதைத்துப்பூவெடுத்தார்
ஓடுகிறகெங்கையிலே ஒருசொம்புஜலமெடுத்தார்
பாதந்துலக்கியவர் பட்டாலடிதுடைத்தார்
வாரிவந்தபுட்பமெல்லாம் மலைபோலேதான்குவித்தார்
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
கண்டேனுன்பாதமென்று கைதூக்கிதெண்டனிட்டார்
வந்துபணிந்தவனைக் கண்டுவிட்டாள்காமாட்சி
உன்னைப்பெருவாயடா யென்மகனேபஞ்சவர்ணம்
பிள்ளைபெருவாய் பெருமாள்பதம்பெருவாய்
கற்புதைத்ததூண்போலக் கலங்காதரசாள்வாய்
என்திருஷ்டிபொல்லாது யெதிர்திருஷ்டிபொல்லாது
கண்திருஷ்டிபொல்லாது கடுகவெழுந்திரென்று
பக்கத்தில்கைகொடுத்தால் பக்கெலும்புநோகுதென்று
நெற்றியில்கைகொடுத்து நேராகத்தூக்கிவிட்டாள்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகர்நின்றாராம்
எங்கேயடாபோய்வந்தாய் என்மகனேகொல்லிமலை
போய்வந்தவிபரத்தைப் புண்ணியனேசொல்லுமென்றார்
வண்ணாரவல்லியை வரவழைத்தேனம்மா

மாலையைச்சிறையெடுக்க வரங்கொடடிகாமாட்சி
கண்டுவந்தமாலையைநான் கொண்டுவரவேணுமென்றார்
பார்த்துவந்தமாலையைநான் போர்த்துவரவேணுமென்றார்
கொழுதலைபங்கிலேநான் குடியமர்த்திவைக்கவேண்டும்
எனக்கு-போகவிடைகொடடி பொற்கொடியேகாமாட்சி
ஆர்குடியைநீகெடுக்க ஆண்டிவேஷங்கொண்டாயே
எவர்குடியைநீகெடுக்க யிக்கோலமாகிவந்தாய்
தாயிலும்பத்தினி தாரமென்றெண்ணாதே
திண்டாநெருப்போடே தேன்மொழியாள்மாலையிட
அண்டாநெருப்போடே ஆரணங்குமாலையவள்
மாலையென்றஆசையை மறந்துவிடுமென்றுரைத்தாள்.
என்னதான்சொன்னாலு மேற்காதுஎந்தனுக்கு
செத்தகட்டைபுன்னிடத்தில் சிவனெல்லாமாலையிடம்
ஆரையுருகுதம்மா அரிவையந்தமாலையிடம்
மாலையைச்சிறையெடுத்து வாரேனம்மாகாமாட்சி
நீ-வாக்கிட்டால்தப்பாது வரமளித்தால்பொய்யாது
மாலையிடம்போரேனென்று மன்னவனார்தானெழுந்தார்
சாதகமுந்தப்பாது தலையெழுத்தும்பொய்யாது
தகப்பனார்தந்தசாபம் மெய்யாய்ப்பலிக்குமடா
கழுவிலிருக்கணுமா காய்ந்துலர்ந்துபோகணுமா
தூண்டிலிருக்கணுமா துடிதுடித்துப்போகணுமா
காமாட்சிபிள்ளையென்று கண்டபேரேசணுமா
வேண்டாமடாயென்மகனே விண்மலரைத்திண்டாதே
நாலானமேனியவள் மேலானசாதியடா
பாலானமேனியவள் மேலானசாதியவள்
பிர்மகுலப்பெண்ணடா தர்மவிதிசுத்துமடா
என்னதான்சொன்னாலு மேற்கில்லையோஎனமகனே
ஆனாலுமொருசேதி ஆணழகாசொல்லுகிறேன்,
என்றுமேகாமாட்சி யின்பமாயெடுத்துரைப்பாள்
வண்ணாரவல்லிவனம் முற்றுப்பெற்றது.

---

காத்தவராயசுவாமி கதை.

## 4-வது சம்பங்கிதாசி வணம்.

விநாயகர் துதி வெண்செந்துறை.

தும்பிமுகமுடைய துய்பகணபதியே
நம்பியுனைததுதித்தேன் நாயேனைக்கைவிடாமல்
கானமிகக்காத்த கர்த்தவின்றன்கதையை
ஊனங்கள்வாராமல் உண்மையாயுரைப்பாட

முந்தியேயென்றுவில் முக்கணனார்புத்திரனே
வந்துகதைநடத்தும் மதகரிமாமுகனே
சம்பங்கிதாசியடா தையலிளங்கொடியாள்

சம்பங்கிதாசிவனந் தனஞ்சயனேயவ்விடம்போய்
அவனைச்செயிக்கவென்று லாராலுங்கூடாது
அனேகர்பேர்ராஜர்முன்பு ஆடினாண்பகடசாலே
பகடைகள்தானாடிப் பாவைதெரிந்தாள்காண்
நாக்கிலேதான்குத்தி யிரப்பிலேசொருகிவைத்தாள்
கால்விலங்குகைவிலங்கு கனவிலங்குதான்பூட்டி
அடிமைப்படுத்திக்கொண்டா லனேகம்பேர்ராஜர்களை
துந்துபியெலும்பாலே அனேகரைத்தான்கெலித்தாள்
அவளைக்கெலிக்க ஒருவராலாகாது
அம்மாதைக்கெலித்துவந்தா லாரியமாலைதன்னை
மகிழ்ச்சியாய்சிறைபெடுக்க வரந்தாரேனென்றுசொல்ல
அப்போதுபஞ்சவர்ணம் அன்பாயெடுத்துரைப்பார்
வெண்ணீருந்தான்கொடுத்தால் விருப்பமுடன்போரேனென்றார்
அப்படியேவெண்ணீறு அள்ளியிட்டார்காமாட்சி
வட்டமிட்டுக்கொண்டாரும் மாபிள்ளைபஞ்சவர்னம்

காத்தவ்ராயசுவாமிபும்சின்னானும் சம்பங்கிதாசிவனம் வருதல்.

மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தேவாறாரும்
ஆரைநினைத்தாராம் அரவற்றசிந்தையிலே
தொட்டியத்துச்சின்னானும் துரைமகனேவாருமென்றார்
அப்படியேஓடிவந்தார் ஆணழகன்சின்னானும்
சின்னானுஞ்சுவாமியும் யெங்கிவர்வாராரென்றால்
சம்பங்கிதாசிவனந் தான்தேடிவாரார்கள்
என்னவேஷங்கொள்ளுகிறார் யெங்கள்துரைபஞ்சவர்னம்
இராஜாவைப்போல நலமாகவேஷங்கொண்டு
மார்க்கப்புரவியின்மேல் சுவாமியவரேறிக்கொண்டு
சம்பங்கிகோட்டைதேடிச் சுவாமிதுரைவாறாரும்
ஐந்துகொத்துஆராட்சி அடிக்கிறதைதான்கேட்டு
அடித்தாராம்பஞ்சவர்னம் ஆராட்சிமணியதனை
கலகலென்றுசப்தமிட ககைமணிகளோசையிட
மாமரத்துச்சோலையிலே மாரிபிள்ளைவந்துநின்று
மண்டபங்களுண்டுபண்ணி மாரிபிள்ளைதானிருந்தார்
அப்போதுசம்பங்கி ஆரணங்குதான்பார்த்து
தாதிகளைதானழைத்து தையலருமேதுசொல்வாள்
கல்லால்மணிபடித்தார் கட்டழகியாரடித்தார்
கண்டறிந்துவாடியென்று அறிவையிடதாதியர்கள்
ரெமரச்சோலையிலே மண்டபத்தைத்தேடிவந்தார்

மகால்லிமலேசுவாமியைக் கொம்பனைமார்கண்டுவிட்டார்
ஆரையாயடித்தவர்கள் ஆருட்சிமணிபதனை
நான்தானடித்தேனென்றார் நாதர்பிள்ளைபஞ்சவர்னம்
அவ்வசனங்கேட்டு அரிவையர்களோடிவந்து
சம்பங்கிதாசிமுன்னே தையலர்கள்தெண்டனிட்டார்
மாமரச்சோலையிலே வந்தாராம்ராஜனவர்
அவரழகுபோலே அம்புவியில்கண்டதில்லை
இவரழகுபோல யிப்புவியில்கண்டதில்லை
என்றுசொல்லிதாதியர்க ளெடுத்துரைப்பாளப்போது
அவரையழைத்துவாடி யாரணங்குதாதியரே
அப்படியேயோடிவந்தா ளாரணங்குதாதியவள்
ஆண்டவனைத்தான்பார்த்து அழைக்கலுற்றார்தாதியர்கள்
அப்படியேவாரேனென்று ராணழகர்பஞ்சவர்னர்
முத்துமெருவடிபைத் தொட்டுமிகநடந்தார்
சம்பங்கிகோட்டைதேடிச் சுவாமிதுரைவாராரே
மூன்றும்படித்தளத்தில் மெத்தெனமேவதந்தாரும்
பூனைத்தலைமேலே புதுமைவிளக்கெரியும்
பெருச்சாளிமத்தளத்தைப் பிரியமுடன்கொட்டிநிற்கும்
எலிவந்துதாளமதை யின்பமுடன்போடுதங்கே
கொக்குகள்தான்வந்து கூட்டமாயாடுதங்கே
இவ்வண்ணமாக யிருக்கின்றவதிசயத்தை
கண்ணாலேகண்டுவிட்டார் கட்டழகரப்போது
நான்குவதிசயத்தை நலமாகக்கண்டுவிட்டார்
பூனையைவெட்டிவிட்டார் புகழானபஞ்சவர்னம்
பெருச்சாளியெலிதனையும் புண்ணியனார்கொன்றுவிட்டார்
அரண்மனைக்குள்ளாக ஆணழகர்போய்நுழைந்து
தங்கத்தடுக்கின்மேலே சுவாமியவருட்கார்ந்தார்
வெள்ளித்தடுக்கின்மேலே மெல்லியவளுட்கார்ந்து
துந்துமியெலும்புதன்னை துடையின்மேல்வைக்கச்சொன்னாள்
அப்படியேவைத்தார்க ளாரணங்குதாதியர்கள்
அதன்பேரிலுட்கார்ந்த ளரிவையந்தசம்பங்கி
சோழிசதுரங்கஞ் சொக்கட்டான்தான்விரித்து
அப்போதுசின்னானும் அணழகன்கண்டுவிட்டான்
சுண்டெலிபோலாகச் சீக்கிரமாய்வடிவெடுத்து
சுரங்கத்துக்குள்ளாக வாராமனேசின்னானும்
துந்துமிதன்னெலும்பை தூக்கிக்கொண்டுபோய்விட்டார
அப்போதுசொக்கட்டா னாடினாராண்டவனார்
எட்டுத்தொகையிரிக்கால் பன்னிரண்டுமாய்விழவே
ஆட்டங்கெலித்தாரு மாண்டவனார்பஞ்சவர்னம்

துடைதட்டிதானகைத்தார் சுவாமிதுரை பஞ்சவர்னம்
அப்போதுயென்னசெய்தா ராண்டவனுர்பஞ்சவர்னம்
அவளை-எட்டிச்சிகைபிடித்தா ரெங்கள்துரைபஞ்சவர்னம்
என்னசெய்தாளப்பொழுது யிளங்கொடியாள்சம்பங்கி
பல்லைத்திறந்தாளாம் பைங்கொடியாள்சம்பங்கி
அகப்பட்டராஜரெல்லாம் அன்பாகவிடச்சொன்னுர்
அவரவர்கள்தேசத்துக்கு அனுப்பிவிட்டாராஜரெல்லாம்
ஆத்தாள்மகளையுமே அன்பாகக்கொண்டுவந்து
இப்படிக்குசெய்நாயல்லோ யேந்திழைபேசம்பங்கி
சுழல்கம்பமீதிலே சுறுக்காகவேற்றிவிட்டார்
சுழல்கம்பந்தனிலே சுழலுகிருரிருவருவாய்
அப்போ-அஞ்சுபஞ்சுந்தன்னுயிரும் ஆகாயமெழும்புதங்கே
மாண்டுமடிந்தார்கள் மயிலணைமாரிருவருமாய்
கோட்டைகள்கொத்தளமுங் கொற்றவனுரேதுசெய்தார்
இடித்துதிரவினுர் யெங்கள்துரைபஞ்சவர்னம்
பெட்டிப்பொருள்களும் பொக்கிஷங்களத்தனையும்
மாலைக்குச்சீதனங்க ளென்றுசொல்லிபஞ்சவர்னம்
கோமுதலைவங்கிலே கொண்டுபோய்வையுமென்றர்
அப்படியேவைத்தது ஆண்டவனுர்பூதமது
சம்பங்கியைக்குடிகெடுத்து சுவாமியவரெங்கேவாருர்
தாயார்தவசிலையைச் சண்முகனுர்தேடிவாருர்
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவனைக் கண்டுவிட்டாள்காமாட்சி
என்னைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
என்திருஷ்டிபொல்லாது யெழுந்திருடாவென்மகனே
நெற்றியிலேகைகொடுத்து நேராகத்தூக்கிவிட்டாள்
எங்கேயடாபோய்வந்தா யென்மகனேபஞ்சவர்னம்
போய்வந்தயிடத்தைப் புண்ணியனேசொல்லுமென்றர்
சம்பங்கிகுடிகெடுத்துத் தையலரேவந்தேனென்றர்
மாலையைசசிறையெடுக்க வாங்கொட்டிபந்தனுக்கு
பெண்ணைச்சிறையெடுக்கப் போகவரம்நீகொடென்றர்
என்றுமேலயாகாது யென்மகனேபஞ்சவர்னம்
உன்-அம்மானைநீகேட்டால் யவராலேயாகுமென்றர்

சம்பங்கி தாசிவனம் முற்றிற்று.

---




# 5 - வது பெருமாள் வனம்.

விநாயகர் துதி வெண்செந்துறை.

கயமாமுகனே கண்ணன் மருமகனே
கயம்ஸ்வத்துனைத் துதித்தேன் பரமனார்புத்திரனே
அந்தமிகக்காத்த ஆடல்பெற்றசுவாமிகதை
சுத்தமாயான்பாடச் சுருக்காகவென்னுவில்
மகிழ்ச்சியுடனிருந்து வழுவுகணோராமல்
புகழ்ச்சியுடனடத்தும் புழைக்கைமுகத்தோனே

கதையின் வரலாறு.

அப்படியேபோரேனென்று யெழுந்தாராம்பஞ்சவர்னம்
மாயவரைத்தேடியல்லோ வாராரேயப்போது
மாயவரைத்தேடிக்கொண்டு வாரார்களிருவருமாய்
அப்போதுயெம்பெருமா ளன்பாகவேதுசெய்தார்
ஒருபுரோகிதனைப்போலல்லவோ சாமியங்கேவாறாராம்
மார்பிலே நூலும் கிழிந்தவொருவேட்டியுடன்
ஒட்டைத்தவலை யொடிந்ததெண்டாயுதமாம்
செல்லெரித்தபஞ்சாங்கம் சுவாமியவர்கைபிடித்து
வாரவழிதனிலே வருகிறாரப்போது
கண்டுவிட்டார்பஞ்சவர்னம் கடுகெனவேவேதியரை
மாமனைத்தேடப்போக வருகிறானொற்றைப்பார்ப்பான்
கட்டிவருத்துமென்றார் கட்டழகுசின்னானை
கட்டிவருத்துகின்றார் கட்டழகுசின்னானை
வெம்பாமண்ணியிலே யுருட்டிவிட்டார்வேதியனை
ஆலமரத்தடியி லன்பாகவந்துநின்றார்
கண்டுவிட்டாராண்டவனார் கனமோசம்வந்ததென்று
அவர்-கட்டையவிழ்த்துக்கொண்டு கடுகெனவேவோடலுற்றார்
மாயமாய்ப்போய்விட்டார் மாயன்பெருமாளும்
கண்டார்களிருவருமாய் கட்டழகன்வேதியரை

அஞ்சனந்தான்போட்டு ஆராய்ந்துபார்ச்சனூர்
மாமன்வந்தானென்று அஞ்சனத்தில்தோற்றகுது
தெரியாமல்விட்டுவிட்டோம் சீரானசின்னானே
அவரை-எங்குகண்டுதேடுவோ மின்பமுடன்மாமனேத்தான்
எப்படிக்குகாணுவே னின்பமுள்ளம்மாமனே
என்னசெய்யப்போறேமென்றுயின்பமுடன்வாறூர்கள்
காத்தானுஞ்சின்னானுங் கடுகெனவேவாறூர்கள்
துளசிபரிமளிக்குந் துவாரகைக்குவாரார்கள்
மாட்டுக்காரபசங்களை வகையுடனேதான்பார்த்து
சுவாமியிருக்குமிடஞ் சீக்கிரத்திற்சொல்லுமென்றூர்
அரிசேர்வைதன்னிடத்தில் ஆண்டவனைக்காணலாம்
மற்றவிடந்தனிலே சுவாமியைக்காணுது
என்றுசொல்லியிருவரும் இன்பமுடனேதுசெய்தார்

காத்தவராயசுவாமியுஞ்சின்னானுந் தாதவேஷங்கொள்ளுதல்.

என்னவேஷங்கொள்ளுகிறு ரெங்கள்துரைபஞ்சவர்ணம்
காத்தவீரப்பெண்போல் கடுகெனவேவேஷங்கொண்டார்
செகன்மோகினிபோலச் சீராகவேஷங்கொண்டார்
குள்ளவண்டுநாதனைப்போல் சின்னானும்வேஷங்கொண்டு
தப்புகளுஞ்சேமகலந் தாளமுந்தானெடுத்து
காலிலேகெச்சைசயது கட்டினன்சின்னானும்
சோளிசரக்குடுக்கை கட்டினன்சின்னானும்
தலையிலேகோணகுல்லா தரித்தானேசின்னானும்
எண்ணைக்கச்சைவமுமுழம் யெட்டுகெச்சைபிகுவெடுத்தார்
பங்கபங்கநாமங்களை யிட்டானேசின்னானும்
குல்லாயிலொருபூதம் சோளியிலொருபூதம்
தப்பிலொருபூதம் தாளத்திலொருபூதம்
கெருடகம்பத்திலொருபூதம் கெச்சையிலொருபூதம்
இப்படிக்குவைத்துக்கொண்டு வாரானேசின்னானும்
அருந்தாதன்வீதியிலே கொம்பனேயும்வந்துநின்று
அப்போதுரையவனு ரன்பாகவேதுசெய்தார்
பெருமாள்தான்மாளிகையில் வந்தாராமாயவனூர்
நாமநல்லபெட்டியிலே நாமமாய்நின்றூராம்
நடுமேட்டில்கட்டிவைத்தார் நாமம்வைக்கும்பெட்டிதன்னை
ஆறுமறியாம லந்கொருவர்காணமல்
காத்தன்வருவானென்று சுவாமியவரொளித்திருந்தார்
அந்தச்சமயத்தில் காத்தானுஞ்சின்னானும்
தப்பையடிக்கலுற்றூன் தனஞ்செயன்சின்னானும்
அவன்தலையிலிருந்தகுல்லா தானெகிறியாடுகுது
தோளில்சுரகுடுக்கை துள்ளிதுள்ளியாடுகுது
கையிலிருக்குந்தாளங் கணகணென்றுகொட்டுதுபார்

காலிலிருக்குங்கச்சை கலகலென்றுடாடுதுபார்
தரையில்செருடகம்பந் தானெகிரியாடுகுது
கால்தலையுந்தெரியவில்லை குள்ளதாதனுடுவது
அங்கிருக்குந்தாதர்கள னைவோருங்கண்டார்கள்
ஊந்தலூர்தாதனே விதவிதமாயாடுகிறான்
நீஎந்தலூர்தாதா னெங்கிருந்திங்குவந்தாய்
ஊரேதுபேரேது ஒருமையாய்ச்சொல்லுமென்றார்
நான்-இருப்பதுகாஞ்சிபுர மென்றகப்பனேசாம்பரம்
தாதச்சியென்தாயார் அவர்பேருகாமாட்சி
மாமன்பெருமாள்தான் அண்ணன்கணபதியாம்
என்பேர்குள்ளதாதன் உடற்பிறந்தாள்காத்தவிரி
இவ்வண்ணமாகவே யெடுத்துரைத்தான்சின்னனும்
இந்தசொல்லைக்கேட்டு யெழுந்தாரங்கொண்டிதாதன்
தன்மகளையிட்சணத்தில் தாலிகட்டவேணுமென்றான்
குள்ளநல்லதாதனுக்கு தன்பெண்ணைக்கொடுக்கவென்று
சந்திதிமுன்பாகத் தாவிதரித்தார்கள்
குள்ளவண்டுதாதனுங் கொற்றவனுமேது செய்தான்

சின்னன் மாமனாகியதாதனை யங்கு கேட்குதல்.

மாமனாரைத்தான்பார்த்து மருமகனுமேதுசொல்வான்
எனக்குள்ளபங்கையெல்லா மெந்தனுக்குத்தாருமென்றான்
பெரியபெட்டெந்தனது சின்னபெட்டெந்தனது
வெங்கலச்சட்டியெந்தனது வெறும்பானையெந்தனது
பெரியசொம்பெந்தனது சின்னசொம்பெந்தனது
அரைச்சுவரிடித்துவிடு குறங்கெசுவுவைத்துவிடு
உனக்கு-ஏதாகிலும்வேணுமென்று லென்னைவந்துகேளு
என்றுசொல்லியேசின்னனு மெடுத்துரைத்தாரப்போது
இப்படிக்குச்சம்மதித்தா னின்பமுடனாக

பெருமாள் தாதனுக்குத் தாம்பூலங் கொண்டுவருதல்.

அன்றுபோய்மற்றநாள் கொண்டிதாதனெழுந்திருந்து
தாம்பூலமெடுத்துக்கொண்டு ஓடிவாரான்தனஞ்செயனும்
பெருமாள்நல்லதாத னரண்மனைக்கோடிவந்தான்
தாம்பூலமுன்னேவைத்தான் தனஞ்செயன்தாதனுமே
எதுக்கென்றுதாம்பூலங் கொண்டுவந்தாய்பெருமாள
கல்யாணமென்றுசொல்லித் தாம்பூலங்கொண்டுவந்தேன்
பெண்ணுக்குகல்யாணமென்று புகழுடனேதானுரைத்தார்
பிள்ளையெங்கேயென்றுசொல்லிக் கேட்டான்பெருமாள்தாதன்
காஞ்சிபுரத்திலிருந்து குள்ளவண்டுதாதன்வந்தான்
காத்தவிரிப்பெண்ணென்று கட்டழகியிங்கேவந்தாள்
அவளுடையஆட்டஞ்சொல்ல யாராலுமுடியாது

அவளுடைய ஆட்டங்களை சுவாமியவர்பார்க்கவேண்டும்
அவளாட்டஞ்சுவாமிபார்த்தால் மயங்கிவிழுந்திடுவார்
என்றிவர்சொல்லையிலே கேட்டுவிட்டார்சுவாமியப்போ
நாமப்பெட்டிதானறுந்து நடுவீட்டில்விழுந்துதங்கே
பெருமாள்நல்லதாதனை வாருமென்றுதானழைத்தார்
ஓடிவந்துதாதனும் பெருமாளைத்தெண்டனிட்டார்
காத்தானுஞ்சின்னானும் வருவாரென்றுநானறிவித்தேன்
காத்தவிரிப்பெண்களைக் கடுகக்கொண்டுவாருமென்றார்
அவளைக்கொண்டுவாருமென்று ஆண்டவனரப்போது
அப்படியேகொண்டுவந்து ஆண்டவனார்முன்னேவிட்டார்
அப்போகொண்டிதாதனை யழகாகத்தானழைத்து
காத்தானுஞ்சின்னானும் வரப்போறார்பார்த்திரென்றார்
வாசலிலேகாவல்வைத்தார் மாயன்பெருமாளும்
அப்படியேதானிருந்தா னழகன்கொண்டிதாதன்

காத்தவிரியப்பெண்ணைக் கண்டு பெருமாளிச்சித்தல்.

காத்தவிரியப்பெண்ணைக் கண்டாராம்சுவாமியப்போ
உன்னைப்போல்பெண்ணை உலகில்நான்கண்டதில்லை
ஆசையலையுதே ஆரணங்கேயுன்மீதில்
காதல்விடாய்கொண்டேன் கன்னியரேயுன்மீதில்
உன்னாசையெந்தனுக்கு ஒழியவில்லைபெண்ணரசே
என்னை-மருவியிருந்தாயானால் மங்கையரேயிப்போது
கேட்டதுநான்தாரே னென்றாராமாண்டவனார்
காத்தானுஞ்சின்னானும் வரப்போராரெழுந்திரென்றார்
காதல்விடாய்தீரக் கடுகவெழுந்திருப்பாய்
கட்டித்தழுவவந்தார் காத்தவரிப்பெண்ணையவர்
எனக்கொருநோன்பதுதா னிருக்குதுயென்றாளாம்
என்னபெண்ணேநோன்பு கிளிமொழியாள்நூற்கவேண்டும்
பட்டுப்படிச்சிலவு பாங்காகவேண்டுமென்றாள்
கொண்டிதாதர்சின்னானுங் காத்தானும்வரப்போறார்
என்னதான்வேண்டு மிளங்கொடியேசொல்லுமென்றார்
வாடாதமாலை வடமாலைவேண்டுமென்றாள்
கூறையுந்தாலியுங் கொம்பனைக்குவேண்டுமென்றாள்
அப்போதுசுவாமி யழைத்தாருங்காத்தனைத்தான்
தாலியுங்கூறையது தகுந்தபணிதிகளும்
அரண்மனைக்குச்சென்று யெடுத்தோடிவாருமென்றார்
அந்தவிடஞ்சென்று அன்பாகக்கொண்டுவந்தார்
காத்தவரிப்பெண்ணிடத்தே கடுகெனவேதான்கொடுத்தார்
இனியென்னவேண்டும் யிளங்கொடியேகேளுமென்றார்
சேர்ந்திருக்கவேண்டுமென்று தேன்மொழியாள்தானுரைத்தாள்
பக்கத்திலசேர்ந்திருந்தார் பாங்கயிருவருமாய்

காத்தவராயசுவாமி எம்பெருமானைக்கட்டுதல்.

கண்ணைமிகமூடிக் கையிரண்டுமேந்திருந்தார்
தொட்டியத்துசின்னானை துரைமகனைதானினைத்தார்
மணிக்கயிற்றைதானெடுத்து வகையுடனேசின்னானும்
ஆண்டவன்கைதனிலே யன்பாகப்போட்டுவிட்டார்
சேர்த்திறுக்கிக்கட்டினா ராணழகர்பஞ்சவர்னம்
அம்மானைக்கட்டிவிட்டா ராணழகர்பஞ்சவர்னம்
வாவென்றழைத்தார் வருகுதுபூதமங்கே
பஞ்சவர்னச்சுவாமியைப்போல் பரிமணத்தான்வேஷங்கொண்டார்
அத்தையண்டைவாருமென்று அன்பாயழைக்கலுற்றார்
வெட்கித்தலைகுனிந்து விசாரமிட்டார்மாயவரும்
அடா-உன்மாயமறியாமல் உன்னைமருவவந்தேன்
வெட்கமாயிருக்கிறது விட்டுவிடுமருமகனே
கேட்டவரந்தந்தாயானால் விடுவேன்காண்மாமாவே
என்னவரமீயவேண்டும் கேளடாமருமகனே
மாலையைமாலையிட வரங்கொடுக்கவேண்டுமென்றார்
அவளை-இட்டுநீர்வாருமென்று யெந்தனுக்குகைகொடென்றார்
அப்படியேகைகொடுத்தா ராண்டவனாரப்போது
எப்போநினைப்பேனோ அப்போவரவேண்டுமென்றார்
அப்படியேவாரேனென்று அஸ்தங்கொடுத்தாராம்
என்னைகட்டினேனென்று ஒருவரிடஞ்சொல்லாதே
சொல்லவில்லையென்றாராஞ் சுவாமிதுரைபஞ்சவர்னம்
மாலைக்குவளையலிடவகைசொல்லவேண்டுமென்றார்
கன்னிக்குகடகம்பூணக் கட்டழகர்வேண்டுமென்றார்
அந்தவுரைகேட்டு அரிராமரேதுசொல்வார்
சம்புமாரிஷிவனத்தே தனஞ்சயருந்தேடிவாறார்
தங்கமணலுண்டு தனஞ்சயருந்தேடிவாறார்
வளைபல்செய்புமென்று மாயவருந்தாமுரைத்தார்
அவ்வசனங்கேட்டு வாறார்களிருவருமாய்
சம்புமாரிஷிவனத்தே தனஞ்சயருந்தேடிவாறார்
அந்தச்சுனையிலே ஆண்டவனார்தானிறங்கி
தங்கமண்ணைத்தானெடுத்தார் சுவாமிதுரைபஞ்சவர்னம்
பொன்மண்ணைத்தானெடுத்தார் புத்தியுள்ளபஞ்சவர்னம்
மாலைக்குவளையலது வகையாகச்செய்யலுற்றார்
செம்புவளையல்முத்து வளையிலுமாயிரமாம்
பச்சைவளையலாம் பவளவளையலாம்
நாலுதினுசாகச் செய்தாராமாலையற்கு
வாவென்றழைத்தார் வருகுதுமறுவேஷம்
பண்ணைப்பூப்போல பழுத்தகிழவனானார்
தும்பைப்பூப்போல துவண்டகிழமானார்
கண்ணிரண்டுங்கிரைவிரை காதிரண்டுங்கேளாது

மெத்தப்பெரியவராம் வெகுநாள்பிழைத்தவர்போல்
தள்ளாதகிழவனைப்போல் சுவாமியவர்வாருராம்
வளையல்மூட்டைதோளில்வைத்து வாருராமாண்டவனர்
காமாட்சியைத்தேடி கடுகெனவேவாருர்கள்
ஆலமரமேடைசுற்றி யாண்டவனரேதுசொல்வார்
என்னவென்றுசொல்லிவாரு ரிளம்பிள்ளைபஞ்சவர்னம்
வளையல்விதங்களென்ன வளையலிடநேத்தியென்ன
கெம்புநீரோட்டங்களு முத்துச்சிவட்டங்களும்
பச்சைக்கல்மின்னுவதும் பவளக்கல்துன்னுவதும்
இப்பெரியவிநோதங்களை யார்வேண்டப்போருரென்று
தன்மனதில்தானினைத்து சுவாமிதுரைபஞ்சவர்னம்
வளையல்வளையலென்று மாரிபிள்ளைகூறுவாரும்
கண்திறந்துவிட்டாள் கட்டழகிகாமாட்சி
ஆரையாபெரியவரே யன்பாகயிங்குவந்தீர்
வளையல்வளையலென்று வனமதில்கூறிவந்தாய்
இந்தவேளையிலிங்கே யார்கொள்ளப்போருர்கள்
மாலையண்டைபோவாயானு லவள்கொள்வாள்வளையலைத்தான்
அந்தவுரைகேட்டு ஆணழகனேதுசொல்வான்
அப்படியேநீறுகந்தா லரிவையரேநான்போரேன்
போய்வாரேன்பேத்தியென்று பொட்டெனவேதானெழுந்து
வளையல்மூட்டைதோளிலிட்டு வாருரேயாண்டவனர்

வேதியர் வீதிகளில் காத்தவராயசுவாமி வளையல்விற்றல்.

புத்தூரைத்தேடியல்லோ புண்ணியனூர்வாருராம்
ஆயிரம்வேதியர்க ளன்பாகக்கண்டதில்லை
இந்தவளையலது பொங்கிலும்நாம்கண்டதில்லை
அப்பாபட்டரோடிவந்து அழைத்தாருமப்போது
அன்னத்துளசிமுன்னே யழைத்துவந்தார்வேதியரும்
அன்னத்துளசியம்மா ளன்பாகக்கண்டுவிட்டாள்
இந்தவளையலது பென்னவில்லையென்றுரைத்தாள்
ஐம்பதுபொன்கொடுத்தா லன்பாகக்கொடுப்பாரென்ருர்
அப்படியேகொடுமென்று அன்னத்துளசியம்மாள்
அப்படியேநான்கொடுத்தே னண்டவனர்பஞ்சவர்னம்
ஆயிரம்பெண்களுக்கு அன்பாகத்தான்கொடுத்தார்
வளையலைக்கொடுத்து வந்துவிட்டார்மாரிபிள்ளை
ஆயிரம்பூதங்களை யன்பாகததானழைத்து
ஆளுக்கொருபூத மேவிவிட்டார்பஞ்சவர்னம்
பளபளப்புகொடுத்து பைங்கொடிமார்மங்கையர்க்கு
சிழுஞ்சிலைத்தண்ணியும் சிந்துதேகைதனிலே
வாதனைகள்வேதனைகள் வருத்தங்கண்டாச்சுது
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்புகிருர்
குய்யோமுறையோவென்று கூவியழுகலுற்ருர்

வளையற்காரசெட்டிகளை வரவழைத்தார்பார்ப்பார்கள்

வேதியஸ்திரீகளுக்கு காத்தவராயர் உபசாந்திசெய்தல்.

தள்ளாடித்தள்ளாடி சுவாமியவர்வந்துநின்றார்
வேதனைப்படுகிறதை கண்டுவிட்டார்பஞ்சவர்னம்
தாதைதிலைவிறுத்தவென்று தன்மனதிலெண்ணும்
வீட்டுக்கோர்வளையலது கொண்டுவரச்சொன்னாரும்
மணல்மேடைபோடச்சொன்னார் மாரிபிள்ளைபஞ்சவர்னம்
வேப்பிலைகொத்துவைக்கச் சொன்னாரேயாண்டவனார்
இளநீருபாணக்கம் யின்பமுடன்வைக்கச்சொன்னார்
வடைபருப்புதாம்பூலம் வையுமென்றுதாமுரைத்தார்
அப்படியேவைத்தார்க ளன்பாகவேதியர்கள்
அப்போதுஎல்லோர்க்கு மன்பாகநின்றுதாம்
குத்தல்குடைச்சலது கொப்பெனவேதீர்ந்துவிடும்
வாதனையும்வேதனையும் வகையாகநின்றுதங்கே
அன்பானதெய்வமென்று அனைவருந்தோத்தரித்தார்
இப்படிக்குச்செய்தபின்பு யெங்கள்துரைபஞ்சவர்னம்

காத்தவராயர் ஆரியமாலை வீதிக்கு வளையல்கொண்டு வருதல்.

எங்கேமெள்ளவாறாராம் யெழிலானகாத்தவனார்
மாலையிடகொண்டைதேடி வாறாரேபஞ்சவர்னம்
இருபத்தோர்செவளிதாண்டி யெழிலாகவாறாராம்
முல்லைவனக்கோட்டைக்குள்ளே மெத்தெனவேவாறாராம்
நாகதாளிபுன்னைமரம் நடுவனத்துசோலையிலே
சந்தனப்பொன்மேடையிலே சுவாமியவருட்கார்ந்தார்
அப்போ-ஆரைநினைக்கலுற்றா ரவரவற்றசிந்தையிலே
எவரைநினைக்கலுற்றா ரிலபமுள்ளசிந்தையிலே
தாயைமனதிலெண்ணி தகப்பனைநெஞ்சில்வைத்தார்
அண்ணன்கணபதியை யன்பாய்மனதிலெண்ணி
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்து
எள்ளளவுநீரெடுத்து கொள்ளளவாய்மந்திரித்தார்
கடுகளவுநீரெடுத்து கனமுடனேமந்திரித்தார்
கொல்லிமலைக்கன்னிகளைக் கொற்றவனார்தானினைத்து
வெண்ணீரிறைத்துவிட்டார் விமலிபிள்ளைபஞ்சவர்னம்
வெண்ணீரின்வாடைபட்டு மெல்லியர்கள்வாறார்கள்
சந்தனப்பொன்மேடையிலே தையலர்கள்வாறார்கள்
குங்குமப்பூமேடையிலே கொம்பனைமார்வாறார்கள்
சந்தனப்பொன்மேடையிலே தையலரைக்கண்டுவிட்டார்
காணாததுபோலக் கண்டுவிட்டாராண்டவனார்
பாராததுபோலப் பார்த்துவிட்டார்சுவாமிதன்னை
தள்ளாக்கிழவனென்று தையலர்கள்முன்னேவந்து
ஆரையாவென்றுசொல்லி அரிவையர்கள்கேட்கலுற்றார்
வளையல்கொண்டுவந்தேனென்றார் மாரிபிள்ளைபஞ்சவர்னம்

எவ்விடத்திலணிகிறது எங்களுக்குசொல்லுமென்றார்
கையிலணிகிறது கட்டழகிபெண்ணேயென்றார்
எட்டெட்டுப்பதினாறெடுத்தார்வளையலதை
வளையல்தனையெடுத்து மயிலணைமார்கைகொடுத்தார்
என்னவிலையென்று யேந்திழைமார்கேட்கலுற்றார்
ஐந்துவளையலது ஆயிரம்பொன்னென்றுசொன்னார்
மாலைகன்னிமுன்னே மயிலணைமார்வளையல்வைத்தார்
கண்டுவிட்டாள்மாலைகன்னி கட்டழகியப்போது
காத்திலணியுமென்றாள் கன்னியிளங்கொடியாள்
காத்திலணிந்தார்கள் கட்டழகிதாதியர்கள்
நிலைக்கண்ணாடிமுன்பாக கட்டழகர்பார்க்கலுற்றார்
முன்னழகைத்தான்பார்த்து பின்னழகைப்பார்க்கையிலே
பொடிபொடியாய்ப்போச்சுதுகாண் பொற்கொடியாள்கைவளையல்
பஞ்சவர்னந்தான்கேட்டு பக்குவமாயேதுசொல்வார்
சாங்கியமாய்ச்செய்தோரே தரிக்கும்வளையலது
என்னசாந்திசெய்யவேண்டு மெனக்கறியச்சொல்லுமென்றார்
நாலுவிதக்கால்கள்நட்டு நடுவேயொருபந்தலிட்டு
அம்மிகுழவியது அரிவையரேவைக்கவேண்டும்
சாலுங்கரகமது தையலரேவைக்கவேண்டும்
குத்துவிளக்குநல்ல குடவிளக்கேற்றவேண்டும்
ஏறுகின்றபல்லக்குதா னெந்தனுக்கனுப்பவேண்டும்
மேளங்கள்தாளங்கள் மெல்லியரேவருகவேண்டும்
கோடிதலைப்பாகையும் கோடிதுணியெனக்கு
எந்தனுக்குகொண்டுவந்து யேந்திழையேகொடுத்தாயானால்
பல்லக்குமேலேநான் பவனிகோலம்வருகவேண்டும்
அப்படிக்குசாந்திசெய்து அரிவையற்குநான்கொடுத்தால்
நீடூழிகாலமட்டும் நிலைக்குமடிமங்கையற்கு
அப்படிக்குச்சம்மதித்து அரிவையர்கள்கொண்டுவந்தார்
பல்லக்குமேலேறிப் பவனிகோலம்வாறார்
மாப்பிள்ளைகோலமாய் வாறாரேபஞ்சவர்னம்

காத்தவராயர் பெருமாளுக்குமுன் மாலைக்கு மங்கிலியந்தரித்தல்.

மாலைமுன்னேவந்துநின்று மாரிபிள்ளைதானிறங்கி
மாமனைத்தானினைந்தார் மாரிபிள்ளைபஞ்சவர்னம்
வேதியனைப்போல விதமுடனேவடிவெடுத்து
தள்ளாதகிழவனைப்போல் சுவாமியவர்வேடங்கொண்டு
அறுந்ததொருநூலாங் கிழிந்ததொருவேஷ்டிகளாம்
ஒட்டைத்தவலை யொடிந்ததெண்டாயுதமாம்
செல்லெலரித்தபுத்தகமும் சுவாமியவர்கைபிடித்து
தள்ளாடிதள்ளாடி தடியூணிவந்துநின்றார்
காத்தனுக்குமுன்னேவந்து சுவாமியவர்வாறாரே
எப்போவந்தீர்வேதியரே என்றாரம்பஞ்சவர்னம்

அறுபத்தேகெவுளிக்குள்ளே யிருந்தாளேமாலையவள்
அவளுக்குக்கொடுத்தீரே பண்பானவளையல்தனை
இருபத்தோர்கெவுளிக்குள்ளே இருக்கின்றமாலையற்கு
வளையல்கொடுக்கநல்ல வர்த்தகரேகாத்தான்செட்டி
ஆகையால்வேதியரே யதுகாணவந்தேனென்றார்
வட்டமணைமேலே மாலையவளுட்கார்ந்தாள்
அருகாகவுட்கார்ந்தா ராண்டவனார்பஞ்சவர்ணம்
ஓமம்வளர்த்தினா ருத்தமனார்வேதியரும்
சொர்ணப்பூகாலியது நூலிழையாய்தான்கோர்த்து
காத்தான்செட்டிகையதனில் கடுகெனவேதான்பார்த்து
கண்டுகொள்காமாட்சி கட்டுகிறேன்தாலியைதான்
என்றுதாலிதரித்தாராந் தனஞ்சயனார்பஞ்சவர்ணம்
நெற்றியில்திலர்தப்பொட்டு நேராகத்தானுமிட்டார்
எட்டெட்டும்பதினாறு யிசைந்தவளையலிட்டார்
இட்டுநீர்வார்த்தாரே யெம்பெருமாள்மாயவரும்
இனியிருந்தால்மோசமென்று யெழுந்துநடந்தார்கள்
துவாரகைக்குப்போகலுற்றார் சுவாமியவரப்பொழுது
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்றார்

ஆரியமாலை தன்கழுத்தில் தாலிகாணுதல்.

அப்போதுமாலையற்கு சோபங்தெளிந்தது
சோபங்தெளிந்துமல்லோ தோகையவள்தானெழுந்து
கண்ணாடிமுன்னிலையில் கன்னியவள்பார்க்கலுற்றாள்
கொண்டையிலேபூவுங் குவளைவிழிமையழகும்
கையிலேகங்கணமும் கழுத்தினிற்றாலியதும்
கட்டியிருக்கிறதைக் கண்டுவிட்டாள்மாலையவள்
அப்பிக்கொண்டாளடிவயிற்றி லறைந்துகொண்டாள்மார்கலங்க
இரங்கரைமனதிலெண்ணி யிளங்கொடியாள்புலம்புகிறாள்

ஆரியமாலை சமுத்திரத்தில்விழுந்து கல்லாயிருத்தல்.

இனியிருக்கலாகாதென் றெழுந்துநடக்கலுற்றாள்
கங்கைகொண்டசமுத்திரத்தைக் கிளிமொழியாள்தேடிவாறாள்
அம்மாடிமாலையென்று அரிவைமார்தேடிவாறார்
அவர்களைத்தள்ளிவிட்டு ஆரணங்குவாராளே
கங்கைகொண்டசமுத்திரத்தில் கன்னியவள்போய்நின்றாள்
கழுத்தளவுசலத்திலே கன்னியவள்போய்நின்றாள்
மோசம்வந்துநேர்ந்ததென்று விமலிபிள்ளைபஞ்சவர்ணம்
கல்லாய்ச்சமைத்துவிட்டார் கட்டழகர்பஞ்சவர்ணம்
அப்போதுதாதியவ ளழுதுக்கொண்டோடிவாறாள்
புத்தூரைத்தேடி பெண்களெல்லாம்வந்துநின்று
அப்பாபட்டர்முன்பாக அழுதுபுலம்புகிறாள்
என்னத்தினாலேநீங்க ளேந்திழையேயழுகிறீர்கள்
என்றுமவர்கேட்க யெடுத்துரைப்பார்தாதியர்கள்

கங்கைகொண்டசமுத்திரத்தில் கட்டழகிபோய்விழுந்தாள்
கல்லாகநின்றுவிட்டாள் கட்டழகிமாலையவள்
இவ்வசனங்கேட்டுவிட்டார் யின்பமுள்ளவேதியர்கள்

வேதியர்கள் புலம்பல்.

அப்போதுவேதியர்க ளனைவோருந்தாமெழுந்து
ஐயோசிவனேயென்று அழுதுக்கொண்டுவாரார்கள்
கங்கைகொண்டசமுத்திரத்தில் கடுகெனவேயோடிவந்து
ஆயிரம்வேதியர்க ளழுதுபுலம்புகையில்
ஆரியப்பூராஜனு மழுதுபுலம்புகிறான்
இத்தாதிபேர்களு மிடருற்றழுகையிலே
ஆரியப்பூராஜாவு மன்பாகத்தான்பார்த்து
தொப்பைநல்லஆசனங்கள் சீராகத்தான்போட்டு
இரங்கரைத்தான்றுதித்து நலமாகத்தானிருந்தார்
கல்லாய்ச்சமைத்தவள் பெண்ணுயுருவானாள்
அப்போதுராஜாவு மன்பாகத்தான்பார்த்து
நவரத்தினபல்லக்கில் நலமாகத்தானேற்றி
ஆடலும்பாடலுட னனைவோருந்தான்சூழ
அந்தப்புரத்தி லரிவையரைக்கொண்டுவந்து
விட்டார்களப்போது விருப்பமுடன்வேதியர்கள்
இப்படிக்குசெய்தவனை யேந்திழையேமாலையரே
மூன்றுநாளைக்குள்ளாக மெல்லியரேநான்பிடித்து
உன்-முன்பாகக்கொண்டுவந்து ஆக்கினைகள்செய்துவைப்பேன்
என்றுசொல்லிமகாராஜன் யின்பமுடன்தானுரைத்தான்
அன்றுமுதற்கொண்டு அரிவையிடகோட்டையிலே
வைத்தாரேகாவலரை வரிசைமுறைப்படியே
மூன்றுபேர்ராஜாக்க ளொன்பதுபேர்மந்திரிகள்
வலையன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
இத்தாதிபேர்களெல்லா மேந்திழையாள்கோட்டையிலே
ரஸ்துகள்வாரார்கள் நாயகியாள்கோட்டையிலே
இப்படிக்குத்தானிருக்க யேந்திழையாள்கோட்டையிலே
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
உற்றுநினைத்தா ரொருகோடிபுத்திகளை
இருந்துநினைத்தா ரிரும்கோடிபுத்திகளை
தாயார்தவசிலைக்கு சுவாமிதுரைவாறாராம்
மாதாதவசிலைக்கு மாரிபிள்ளைவாறாராம்
தோட்டமதுதிறந்து தொன்னைதைத்துப்பூவெடுத்து
சாவடியதுதிறந்து சரக்கொன்னைபூவெடுத்து
ஓடுமுதண்ணீரி லொருசொம்புநீரெடுத்து
பாதமதுதுலக்கிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரைக் குபுகுபென்றுதான்சொரிந்து

ழக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
ரன்னைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைபெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
என திருஷ்டிபொல்லாது யெழுந்திராடாயென்மகனே
கண்களதுபொல்லாது கடுகவெழுந்திரடா
எங்கேயடாபோய்வந்தா யென்மகனேசொல்லுமென்றாள்
மாலையைசசிறையெடுக்க வரங்கொடம்மாகாமாட்சி
கண்டுவந்தநாள்முதலாய் கண்ணுறக்கம்வாரதில்லை
பார்த்துவந்தநாள்முதலாய் பசியெடுப்பதில்லையம்மா
கன்னியைச்சிறையெடுக்க கடுகவரங்கொடம்மா
என்றுமவர்கேட்க இளங்கொடியாள்காமாட்சி
ஊர்குடியைகெடுக்க ஆண்டிவேடமானாயடா
மீண்டாநெருப்படா தெய்வப்பசுங்கிளியாள்
என்னிலும்பத்தினியாள் தாரமென்றுசொல்லாதே
தாயிலும்பத்தியானிள் இடையூறுசொல்லாதே
வயிரஞ்செட்டிபாளையத்தில் மயிலனையாளுகந்தழகி
அவளைவிடப்பெண்களவனியிலேகிட்டாது
ஐந்துவயதிலிருந்து ஆரணங்குமாது அவள்
கோட்டைபிள்ளையாரகோவிலுக்கு கொடியிடையாளுகந்தழகி
ஐந்துவயதுண்டு பத்துவயதளவும்
பஞ்சு அவன் நூற்றுக்கொண்டுபாவையருள்வாராளப்போ
அவளழகுபோலே ளவனியிலேகிட்டாது
அவளைச்சிறையெடுத்தா லாணழகாயென்மகனே
மாலையைச்சிறையெடுக்க வரங்கொடுப்பேனென்றுசொன்னாள்
வெண்ணீறுதந்தாயானால் மெல்லியரேபோய்வாறேன்
அவளைச்சிறையெடுப்பே னாரணங்கேகாமாட்சி
என்றுசொல்லைத்தான்கேட்டு ஈஸ்வரியாளப்போது
வெண்ணீறுகைகொடுத்தாள் விமலியந்தகாமாட்சி

பெருமாள்வனத்தில் கல்யாணவனம்-முற்றிற்று.

௬-வது செட்டிப்பெண்ணாகிய

## உகந்தழகிவனம்.

விநாயகர் துதி-வெண்செந்துறை.

அத்திமுகனே ஆரூர்திருமகனே
சத்திகணபதியே சரிந்தவயிற்றோனே
துகிலுந்தனைக்காத்த தீரன்சுவாமிகதை
புலவன்மிகப்பாட புகழ்ச்சியாயென்றனில்
பொருந்தியேநீயிருந்து போற்றும்பலவாகப்
பெருக்கத்தைநடத்தும் பெருமாளின்மைத்துனரே
வெண்ணீறுதானணிந்து [illegible]

## கதையின் வரலாறு.

என்னவேஷங்கொள்ளுகிறா ரெங்கள்துரைபஞ்சவர்ணம்
தள்ளாதகிழவனைப்போல் சுவாமிவடிவெடுத்தார்
தும்பைப்பூப்போல துவண்டகிழவனானார்
நாணற்பூப்போல நரைத்தகிழவனானார்
கண்ணிரண்டுங்கீரைவிரை காதிரண்டுங்கேளாது
ஏமனிடபூதத்தை யெங்கள்துரைதானழைத்தார்
தட்டுத்தராசதுபோல் சுவாமியவருண்டுபண்ணார்
சின்னொருசின்னசெட்டி தானுமொருபெரியசெட்டி
காத்தானுஞ்சின்னானுங் கலந்துமெள்ளவாரார்கள்
வயிரஞ்செட்டிபாளையத்தை வகையுடனேதேடிவாரார்
குக்கென்றிரும்புவாராங் கோழைவந்துமாரடிக்கும்
தள்ளாடி தள்ளாடி தடியூன்றிவாராராம்
வப்புவாய்க்காட்டுவாய் வாய்நீருசொள்ளொழுக
விழியிரண்டுமுன்குருடு செவியிரண்டுங்கேளாது
தள்ளாதகிழவனைப்போல் சுவாமிதுரைவாராராம்
அறுகம்வேர்தட்டினாலே யறுபதிடம்விழுவார்
மூங்கில்வேர்தட்டினாலே முப்பதிடம்விழுவார்
நாணல்வேர்தட்டினாலே நாற்பதிடம்விழுவார்
தள்ளாடிதள்ளாடிச் சுவாமிதுரைவாராரே
பாக்குமரச்சோலைகளும் வன்னிமரச்சோலைகளும்
கமுகுமரச்சோலையெல்லாங் கடுகெனவேதாண்டிவாரார்
வயிரஞ்செட்டிபாளையத்தில் வகையுடனேவந்துநின்றார்
தவித்துவருவதற்கு தண்ணிபந்தல்போட்டுவைப்பார்
பசித்துவருவதற்கு பாலமிர்தஞ்செய்துவைப்பார்
இளைப்பாய்வருவதற்கு யிளநீருகண்திறப்பார்
இப்படிக்குத்தர்மமது நடக்குமாமவ்விடத்தில்
பூங்காவனத்திற்குள்ளே புண்ணியனார்வந்துநின்றார்
அங்கிருக்கும்பெண்களெல்லா மரிவையிளங்கொடியார்
பந்துகளுமசெண்டுகளும் பரிந்துவிளையாடலுற்றார்
சோழிசதுரங்கஞ் சொக்கட்டாடலுற்றார்
அம்மாநீராடலுற்றார் ஆரணங்குமாதரெல்லாம்
இப்படிக்குத்தானிருக்க கண்டுவிட்டாரண்டவரை
தள்ளாதகிழவனென்றே தையலர்களோடிவந்து
ஆரையாவென்றுசொல்லி அரிவையர்கள்கேட்கலுற்றார்
கண்டுவிட்டார்பஞ்சவர்ணம் கன்னியர்கள்கேட்கிறதை
சின்னான்செட்டி என்றான்செட்டி வந்தவர்களாரடா
ஊற்கந்தநாத்தமது வீசுதேசின்னான்செட்டி.
பெண்வாடைவீசுதடா புண்ணியனேயவ்விடத்தில்
என்னை-யப்புறத்தேகொண்டுபோடா யரிவைநாற்றம்பொல்லாது
இந்தவெழுவிரிலென்னடா வெடுத்தனீகொண்டுவந்தாய்

மூக்கைப்பிடித்துக்கொண்டார் விமலிபிள்ளை பஞ்சவர்னம்
கண்டுவிட்டார்பெண்களெல்லாங் கவனமாகவப்பொழுது
இவன்-ஆணைப்பிறந்தவனும் ஆணழகன்மன்னவனும்
பெண்ணாற்றங்கூடாதென்றான் புண்ணியனில்விடத்தில்
ஆணிலேபத்தினியாம் ஆணழகனக்கிழவன்

செட்டிபெண்களுங் காத்தவராயசுவாமியும்

பஞ்சவர்த்தகஞ்செய்தல்.

ஐயாபெரியவரே அரிவைப்படைத்தவரே
எங்கேவந்திரென்று யிளங்கொடிமார்கேட்கலுற்றார்
பஞ்சுகொள்ளவந்தேனடி பாவையரேயென்றுரைத்தார்
எந்தவூரெந்தநாடு யெனக்கறியச்சொல்லுமென்றார்
நானிருக்குந்திருக்காஞ்சி நங்கையரேசொல்லுகிறேன்
செட்டிச்சிஎன்தாயார் ரவள்பேருகாமாட்சி
என்தகப்பனேகாம்பரம் செட்டியென்றெல்லோரும்
காத்தவராயசெட்டி கன்னிகளேயென்பேர்தான்
என்னோடுதான்பிறந்த யென்தம்பிசின்னான்செட்டி
எனக்குநல்லமூத்தவர்தான் விநாயகச்செட்டியென்பார்
மாமன்பெருமாள்செட்டி மங்கையரேசொல்லுகிறேன்
பஞ்சுகொள்ளவந்தனடி பட்டணத்துக்கன்னிகளே
பஞ்சிருந்தால்தாருமென்றார் பஞ்சவர்னமாண்டவனார்
அஞ்சுவயதிருந்து பத்துவயதளவும்
நூற்றுக்கொண்டுவாராளே நுட்பமுள்ளமங்கையரும்
ஏழுமலைபஞ்சுநூற்று வினிதாயுகந்தழகி
ஓட்டப்பிள்ளையார்கோவில் செய்யவேண்டுமென்றுசொல்லி
ஒருநாளபிஷேகஞ் செய்யவேண்டுமென்றுசொல்லி
பஞ்சவர்னசுவாமியவர் பக்குவமாய்கொள்வேனென்று
பதிவிரதைநூற்றபஞ்சு பக்குவமாய்கொள்வேனென்றார்
கொண்டுவாருமென்றுசொன்னார் கொல்லிமலையாண்டவனார்
மலைமலையாய்கொண்டுவந்தார் மயிலணையாள்நூற்றபஞ்சு
கொண்டுவந்தபஞ்சுகளைக் கொற்றவனார்கட்டில்வைத்தார்
எவ்வளவுவைத்தாலு மெழுந்திருக்கப்போறதில்லை
எமனாரின்பூதமது அஞ்சுபலங்குண்டாகி
அப்படியுமிப்படியு மசையவில்லைபூதமது
பத்தினியாளுகந்தழகி யெவ்வளவுநூற்றாலும்
ஐந்துபலங்குண்டுக்கு ஆகவில்லைபஞ்சதுதான்
ஆரடிதாதிகளே அழகுள்ளபாங்கிகளே
இதுதானபஞ்சியது இன்னமுண்டோவென்றுரைத்தார்
இவ்வளவுதான யேந்திழையாள்நூற்றபஞ்சு
ஐந்துபலம்பஞ்சுதான அரிவையாள்நூற்றபஞ்சு

என்றிவர்சொல்லியிலே யேந்திழைமார்தான்பார்த்து
ஐந்துபலம்துண்டுக்கு அரிவையவள்நூற்றாள்காண்
என்றுவிசனப்பட்டார் யேந்திழைமாரப்போது

செட்டிபெண்ணுகந்தழகி தராசிலுட்காருதல்.

கொல்லிமலைசுவாமி குமரேசரேதுசொல்வார்
பஞ்சியைநூற்றதொரு பாவையவள்வாராளே
பூட்டிருக்குமாபரணம் பொற்கொடியும்வரவேண்டும்
அத்துடன்வந்து அரிவையவளுட்கார்ந்தால்
அப்போசரிப்படுமோ ஆரணங்குநூற்றபஞ்சு
அப்படியேயுகந்தழகி ஆரணங்குதானெழுந்து
ஓய்ந்தநடையழகும ஒய்யாரக்கைவீச்சும்
சாய்ந்தநடையழகும் சதிரானகைவீச்சும்
அவளுக்கு-தங்குமிதியடியாம் சரிக்குமிழாமிரத்தினமாம்
முத்துக்குடைநிழலிலே மெல்லியும்வாராளே
இருபுறமுந்தாதியர்க ளேந்திழைமார்சூழ்ந்துவர
அன்னம்போல்வாராளே ஆரணங்குவுகந்தழகி
மாணிக்கம்போல மயிலனையாள்துலங்குகிறாள்
ஆசுமனைராட்டினமும் அத்தனையுங்கொண்டுவந்து
அப்படியேகுந்தினாள் ஆரணங்குதட்டின்மேலே
கட்டைப்பிடித்தாராம் சுவாமியவர்பஞ்சவர்ணம்
உற்றுற்றுப்பார்த்தாள் ஒளிபிறந்தகண்ணாலே

கர்த்தவராயசுவாமி செட்டிபெண்ணை சிறையெடுத்துவருதல்.

தாயைமனதிலெண்ணி தகப்பனைநெஞ்சிலெண்ணி
அண்ணன்கணபதியை அன்பாய்மனதிலெண்ணி
மாயன்பெருமாளை மனதிலெண்ணியப்போது
கண்காட்டிவிட்டாராம் கட்டழகிபூதமதை
ஆகாயமெழும்புதே ஆரணங்கிருந்ததட்டு
செய்யான்சிறையிருக்குஞ் செங்கழனியோடையிலே
முதலைப்பங்குபாறையிலே மெல்லியரைக்கொண்டுவாரும்
கண்டுவிட்டார்தாதியர்கள் கட்டழகிபோகிறதை
உகந்தழகியென்றுசொல்லி ஓலமிட்டழுகிறார்கள்
ஆகாயம்போறாளே ஆரணங்குஉகந்தழகி
என்றுசொல்லிபெண்களெல்லா மேந்திழைமாரழுகலுற்றார்
அப்போதுசுவாமியவ ராண்டவனுரேதுசெய்தார்
சாக்கிலேயிருந்தபணஞ் சுவாமியவர்விட்டெறிந்தார்
பணத்தைமிகக்கண்டவுடன் பாவையர்களெல்லோரும்
பாவையர்மேலாசைவிட்டு பணத்தின்மேலாசைகொண்டார்
ஒருத்திமேலொருத்தி விழுந்துகெட்டுவாரலுற்றார்

காத்தவராயசுவாமி தாயாரிடம்வருதல்.

இப்படிக்கிருக்கையிலே யெங்கள்துரைபஞ்சவர்ணம்
இதுதான்சமயமென்று யெழுந்திருந்தார்பஞ்சவர்ணம்

சுரைக்காயின்பச்சடியாஞ் சொல்லாமற்போய்நடந்தார்
பாவற்காய்பக்சடியாம் பார்த்திருக்கப்போய்நடந்தார்
எங்கேமெள்ளவாருரே யெங்கள் துரைபஞ்சவர்னம்
வீரசுரங்காவேரி வெற்றிபுகழேமாந்தூர்
சர்வதீர்த்தபொய்கைதேடி சுவாமியவர்வாருராம்
முழுகிமயிராற்றி முன்மயிரைப்பின்போட்டு
தோட்டந்திறந்தாரே தொன்னைதைத்துப்பூவெடுத்தார்
வகைக்கொருபுட்பமாக மாரிபிள்ளை தானெடுத்தார்
ஓடுகிறசலத்திலே ஒருசொம்புநீறெடுத்தார்
தாயார்தவரிலேயைச் சண்முகனர்தேடிவாருர்
பாதமதுதுலக்கிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபுட்பமெல்லாங் குபுகுபென்றுதான்சொரிந்தார்
காண்கிறேனுச்சியென்று கமலமுடிவணங்க
கண்ணைத்திறந்துவிட்டாள் கட்டழகிகாமாட்சி
என்னைப்பெறுவாய் பெருமாள்பதம்பெருவாய்
திருஷ்டிரெண்டும்பொல்லாது சிக்கிரமாயெழுந்திரடா
என் திருஷ்டிபொல்லாது யெழுந்திரடாயென்மகனே
பக்கத்தில்கைகொடுத்தால் பக்கெலும்புநோகுமென்று
நெற்றிலேகைகொடுத்து நேராகத்தூக்கிவிட்டாள்
உச்சிமுகந்து வுடம்பெல்லாமுத்தமிட்டாள்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகிமுன்னேநின்ருர்
மைந்தன்முகம்பார்த்து மயிலனையாள்கேட்கலுற்ருள்
எங்கேயடாபோயிருந்தா யென்மகனேசொல்லுமென்ருள்
நீ-போகச்சொன்னவிடத்துக்கு போய்வந்தேனென்தாயே
செய்யான்சிறையிருக்குஞ் செங்கழனிஓடையிலே
முதலைப்பங்குபாறையிலே மெல்லியரைக்கொண்டுவந்தேன்
செட்டிப்பெண்ணுகந்தழகி தேன்மொழியைக்கொண்டுவந்து
முதலைப்பங்குபாறையிலே குடியமர்த்திவைத்தேனம்மா
மாலையைச்சிறையெடுக்க வரங்கொடடிகாமாட்சி
பெண்ணைச்சிறையெடுக்க போகவிடைநீகொடம்மா
என்றிவர்சொல்லையிலே ஏந்திழையாள்கேட்டுவிட்டாள்
திண்டாநெருப்படா தெய்வப்பசுங்கிளியாள்
அண்டாநெருப்படா அருங்கிளியாள்மாலையவள்
என்னிலும்பத்தினியா ளிடக்கூறுசொல்லாதே
தாயிலும்பத்தினியாள் தாரமென்றுசொல்லாதே
அண்ணன்மகள்கறுப்பழகி யாரணங்குநாளையவள்
அவளைக்கொண்டுந்தனுக்கு அழகுமணஞ்செய்வேனென்ருள்
ஏழுகறுப்பனுக்கு யிளையவள்கறுப்பழகி
நாகப்பழத்திலும் நல்லகறுப்புமுண்டு

ஈச்சம்பழத்திலு மிருண்டகறுப்புமுண்டு
சாமளவர்னமடா தையலிளங்கொடியாள்
அம்மான்மகளை யழகுமணஞ்செய்துக்கொள்ளும்
இவளைவிடபெண் ணுனக்கு யெங்கேயுண்டென்மகனே
அப்போது பஞ்சவர்ன மாண்டவனுரென்னசொல்வார்
வெண்ணீரள்ளிகைகொடென்றார் விமலிபிள்ளை பஞ்சவர்னம்
வெண்ணீரள்ளிக்கைகொடுத்தாள் மெல்லியந்தகாமாட்சி
வெண்ணீறுவட்டமிட்டு விமலிபிள்ளைவாறாராம்

செட்டிப்பெண் உகந்தழகிவனம் முற்றுப்பெற்றது.

---

## எ-வது, பெருமாள்மக்கள் கறுப்பழகிவனம்.



விநாயகர்துதி வெண்செந்துறை.

குஞ்சரமாமுகனே கோபாலன்மருமகனே
தஞ்சமென்றுனைப்பணிந்தேன் தமிழறியாநாயேற்கு
காடுகாத்தசுவாமிகதை களிப்புற்றுயான்பாட
பீடும்பெருவரமும் பொட்டெனவே தந்தருள்வாய்
இன்பக்கதைபடித்து துன்பக்கடனீங்க
என்பக்கநல்வரங்க ளியாவுமினிதோங்க

கதையின் வரலாறு.

எங்குமெள்ளவாறாரா மெங்கள்துரைபஞ்சவர்னம்
கருப்பழகிவனந்தேடிக் கட்டழகர்வாறாராம்
நந்தவனம்பூந்தோட்டம் நதிக்கரையில்வந்துநின்று

காத்தவராயசுவாமி இராஜவடிவங் கொள்ளுதல்.

ஆரைநினைக்கவுற்று ளவற்றசிந்தையிலே
கொல்லிமலைக்கன்னிகளைக் கொற்றவனுர்தேடிவாறார்
வாவென்றழைத்தாரே வருகுதுபார்மறுவேஷம்
என்னவேஷங்கொள்ளுகிறு ரெங்கள்துரைபஞ்சவர்னம்
இராசவடிவெடுத்தார் நாணமாய்க்கொல்லிமலை
மாந்தேசிவெண்புரவி மாரிபிள்ளை பஞ்சவர்னம்
கறுப்பழகிவனந்தேடி கடுகவேவாறாரிங்கே
சிங்கமுலாவுகுது தையலிடகோட்டையிலே
ஐந்துகொத்துநவமணிக ளடிபடுதேகோட்டையிலே
கோட்டைக்குமேற்புறத்தே விட்டாராமப்பொழுது
கல்மணிகளைந்தனையும் கடுகெனவே தானடித்தார்
அசையாதமணிகளெல்லா மசையுதுகோட்டையிலே
மணிகளசையுதே மாரிபிள்ளையெங்கேவந்தார்
மாமரத்துச்சோலையிலே மன்னவனுர்வந்துநின்றார்

எமனுடையபூதமதை யிடியாட்டுக்கொடாவாங்கி
நமனுடையபூதமதை காவலாயுண்டுபண்ணுர்
மொண்டிகல்லிபூதமதை சாடையாயுண்டுபண்ணுர்
இப்படிக்குஉண்டுபண்ணி இருந்தாராங்கொல்லிமலை
மணிகளசையபிலே மயிலணைமார்கண்டுவிட்டார்
கறுப்பழகிமுன்னேவந்து கைகூப்பிதெண்டனிட்டு
ஒருநாளசையாத மணிகளசையுதிப்போ
அடித்தவனரடி கண்டறிந்துவாருமென்றுள்
மாமரத்துசோலைதேடி வாரார்கள்தாதியர்கள்
கொல்லிமலைசுவாமி கொற்றவரைக்கண்டார்கள்
ஆரையாமணியடித்தார் அரிவையிடகோட்டையிலே
நான்தானடித்தேனென்றுர் ராசதுரைபஞ்சவர்ணம்
அரிவையிடகோட்டையிலே யன்பாகவாருமென்றுர்
அப்படியேநான்வாறே னரிவையரேபோங்களென்றுர்
கறுப்பழகிமுன்னேவந்து கட்டழகிதாதியர்கள்
அழைத்தோமம்மாராசனை நா மவருமிங்கேவாறேனென்றுர்
அவ்வசனந்தான்கேட்டா ளரிவைகறுப்பழகி
சிம்மாசனம்சோடியென்றுள் தேன்மொழியாள்தாதிகளை
அப்படியேசோடித்தாள் ஆரணங்குதாதிகள்

## காத்தவராயசுவாமி கறுப்பழகி யந்தப்புறம்வருதல்.

அந்தச்சமயத்திலே பஞ்சவர்ணம்வாருராம்
தங்கமெருவடியாம் தனிக்குமிழ்ரத்தினமாம்
முத்துமெருவடியைத் தொட்டுநடந்துவாருர்
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
இரண்டாம்படித்தளமாம் இரத்தினக்கால்மண்டபமாம்
மூன்றும்படித்தளமாம் முத்தாலேமண்டபமாம்
நான்காம்படித்தளமாம் நாகரத்தினமேடைகளாம்
மண்டபத்தில்நுழைந்து மாரிபிள்ளையுட்கார்ந்தார்
அப்போதுதாதியர்க ளன்பாகவோடிவந்து
கறுப்பழகிமுன்னேவந்து கன்னியர்களசொல்லுகிறுர்
வந்தாராம்ராசனென்று மங்கையர்கூறலுற்றுர்

## காத்தவராயரும் கறுப்பழகியும் காடைப்பந்தயம் விடுதல்.

அன்னவுஞ்சல்தனிலே யசைந்தாடிக்கொண்டுமிவள்
வளர்த்தகடாகொண்டுவா வென்றுளேமங்கையரும்
ஏமனென்றகடாவதனை யாண்டவனார்முன்னேவிட்டார்
இக்கடாவுமக்கடாவு மெதிர்த்துசண்டைசெய்யுதுபார்
கறுப்பழகிசண்டைகாடை கண்டுதுபாரக்கடாவை
ஓரிடிபிடிக்க யிரண்டுமிரண்டுதங்கே
மீறியடிபட்டவுடன் விழுந்துதேசாமிகிடா
தோற்றுதுசுவாமிகிடா வென்றுரேதாதியர்கள்

குலுங்கநகைத்தாலே கொம்பனையாள்கறுப்பழகி
சாவலைக்கொண்டுபோய் தையலரேவிடுங்களென்றாள்
அப்படியேகொண்டுவந்து அரிவையர்கள்விட்டார்கள்
சுவாமியுடசாவலது சத்தற்றுத்தோத்துதே
தோற்றுவிட்டாரென்றுசொல்லி தோகையர்கள்சொன்னார்கள்
அப்போதுகறுப்பழகி ஆணழகியென்னசொல்வாள்
காடையைக்கொண்டுவந்து கன்னியரைவிடுங்களென்றாள்
கறுப்பழகிகாடைதன்னைக் கட்டழகிகொண்டுவந்து
ஆண்டவனார்காடைமுன்னே யன்பாகவிட்டார்கள்
காலாலுதைத்தது காத்தவனார்காடையது
மல்லாக்காய்விழுந்தது மயிலனையாள்காடையது
மாண்டுமடிந்தது மாதுமையாள்காடையது
கோபம்பிறக்கிறது கொள்ளிதணலாகிற
சீறியெழுந்திருந்தாள் சிங்கத்தின்குட்டியைப்போல்
ஆக்கரித்துப்பற்கடித்து அதட்டியெழுந்திருந்தாள்

காத்தவராயசுவாமி கறுப்பழகிக்குப் பயந்தெளிவித்தல்.

கோபித்தெழுந்ததை கொற்றவனார்கண்டுவிட்டார்
இனியிருந்தால்மோசமென்று யெழுந்திருந்தாராண்டவனார்
பிடித்தாராகல்லோட்டம் பிடரிலேகாலடிக்க
காத்தவர்முன்னோட கறுப்பழகிபின்துரத்த
ஓடியொளிக்க வொருவிடமுங்காணோமென்று
பிச்சாண்டர்கோயிலண்டை புண்ணியனார்போயொளித்தார்
கறுப்பழகிபின்தொடர்ந்து கட்டழகியவள்நுழைந்தாள்
பட்டாவுருவிக்கொண்டு பாவையவளுள்நுழைந்து
மோசம்வந்துநேர்ந்ததென்று விரலிபிள்ளைபஞ்சவர்ணம்
ஆரைநினைக்கலுற்றா ளவற்றசிந்தையிலே
தாயைமனதிலெண்ணி தகப்பனைநெஞ்சிலெண்ணி
அண்ணன்கணபதியை யன்பாய்மனதிலெண்ணி
மாயன்பெருமாளை மனதிலேதானினைந்தார்
கொல்லிமலைக்கன்னிகளைக் கொற்றவனார்கைதொழுது

காத்தவராயர் முருகர்வேஷங் கொள்ளுதல்.

வாவென்றழைத்தாரும் வருகுதுவேஷமங்கே
ஆறுமுகமும் அழகுபனிரெண்டுகையும்
வேலும்வடிவாக வணங்கினார்பஞ்சவர்ணம்
பச்சைமயிலேறிப் பத்தினியாள்முன்னேநின்றார்
கண்டாள்கறுப்பழகி காத்தவனார்சீர்வடிவை
அத்தைமகன்தன்வடிவை யரிவையர்கண்டவுடன்
அடிவணங்கிதெண்டனிட்டு அருங்கிளியாளேதுசொல்வாள்
நான்-கற்றமேதோர்மந்திரத்தைக் கட்டழகாயுந்தனுக்கு
ஆபிரங்கோடிமந்திரம் அன்பாகத்தாரேனென்றாள்
சக்கரமுந்தான்கொடுத்தாள் தையலினாள்கொடியாள்

காத்தவராயர் கறுப்பழகியை மாலையிடச்சம்மதித்தல்

பஞ்சவிருதுகளை பத்தினியாள் தானெடுத்து
என்னை-மாலையிட்டுக்கொள்ளுமென்று மாதுஅவளுரைக்க
அப்படியேநல்லதென்று ஆண்டவனார்பஞ்சவர்னம்
அஸ்தங்கொடுத்தாரே யந்நேரங்கன்னியற்கு
கழுவடிபூசையிலே கன்னியற்குயுந்தனைநான்
கல்யாணஞ்செய்துகொள்வே னென்றுமவருரைத்து
போகவிடைகொடென்று புண்ணியனார்தான்கேட்டார்
அனுப்பிவிடைகொடுத்தா ளப்போகறுப்பழகி

காத்தவராயசுவாமி தாயாரைக் காணுதல்.

தாயாரிருப்பிடத்தே சுவாமிதுரைவாராரும்
சர்வதீர்த்தபொய்கையிலே சண்முகனார்வந்துநின்று
ஆர்க்கத்தலைமுழுகி வேர்க்கமயிருத்தி
தோட்டமதுதிறந்து தொன்னைதைத்துபூவெடுத்து
ஓடுகிறகெங்கையிலே ஒருசொம்புநீரெடுத்து
கங்கானதிதேடி காமாட்சிமுன்னேவந்து
பாதந்துலக்கிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபுட்பமெல்லாங் குபுகுபென்றுதான்சொரிந்து
காண்கிறேனாச்சியென்று கால்மேல்முடிசாய்த்தார்

தாயார் மகனை வாழ்த்தியெடுத்தல்.

தெண்டனிட்டமைந்தனைத்தான் கண்டுமவளெடுத்து
என்னைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
கண்ணிரண்டும்பொல்லாது கடுகவெழுந்திரென்று
நெற்றியிலேகைகொடுத்து நேராகதூக்கிவிட்டாள்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகர்நிற்கையிலே
எங்கேயடாபோய்வந்தா யென்மகனேசொல்லுமென்றாள்
கறுப்பழகிவனந்தேடிக் காளைநான்போயிருந்து
மாமன்மகள்தன்னுடனே மல்யுத்தம்நான்புரிந்து
அவளைச்செயங்கொண்டு ஆச்சியரேவந்தேனென்றார்
பஞ்சாயுதவிருதைப் பார்வதிக்குமுன்னேவைத்து
மாலையைச்சிறையெடுக்க வரங்கொடடிதாயாரே
கன்னியைச்சிறையெடுக்க கடுகவரங்கொடம்மா
கண்டுவிட்டாள்காமாட்சி கட்டழகியேதுசொல்வாள்
மாலையென்றசொல்வசன மறந்துவிடுயென்மகனே
தாயினும்பத்தினியாள் தாரமென்றுகூறாதே
நாலானசாதியிலே மேலானசாதியவள்
பாப்பாரப்பெண்ணாலே பாவம்வந்துநேருமப்பா

வேதியன்பெண்ணாலே வெகுமோசம்வந்துவிடும்
தூண்டிலிருக்கணுமா துடிதுடித்துசாகணுமா
கழுவிலிருக்கணுமா கண்டவர்களேசணுமா
உன்தகப்பன்தந்தசாப முடனேவந்துநேருமப்பா
என்னதான்சொன்னாலு மென்செவிக்கேறாதென்றார்
கழுவுவந்தாற்பாவமில்லை கன்னிவந்தாற்போதுமம்மா
தூண்டிவந்தாற்பாவமில்லை தோகைவந்தால்போதுமம்மா
அப்போதுகாமாட்சி யரிவையருமேதுசொல்வாள்
அஸ்தத்தால்தொட்டாலே யாணழகாவுந்தனுக்கு
சிரசுவெடித்துவிடுஞ் சீக்கிரமாய்மாண்டிடுவாய்
கையால்தொடாமலல்லோ கன்னியரைக்கொண்டுவாடா
தாயாரைக்கேட்டு சுவாமிதுரைநல்லதென்று
வெண்ணீறுதாருமென்றார் விமலிபிள்ளைபஞ்சவர்னம்
ஆதிசிவன்கப்பலிலே யமர்ந்தெழுந்தவெண்ணீறு
காடுவெட்டிசுட்டெறித்த கர்த்தனுடவெண்ணீறு
தெத்துவெட்டிசுட்டெறித்த சிவனுடையவெண்ணீறு
வெண்ணீறுதானெடுத்து மெல்லியலள்கொடுத்தாள்

எ-வது-பெருமாள்மகள் கறுப்பழகிவனம் முற்றிற்று.

---



உ

காத்தவராயசுவாமிகதை.

எட்டாவது,

## வல்லத்துமாங்காளியம்மன்வனம்.

---

மாதங்கமாமுகனே மாயன்மருமகனே
வேதங்கள்சாஸ்திரங்கள் மேவும்புராணிகனே
ஆரணியங்காத்திருந்த ஆண்டவனார்தன்கதைக்கு
தாரணியுங்கொன்றைநின் சரணமலர்மறவேன்
தொழுதுவணங்கினேன் சொல்லுபொருளெழுத்தும்
பழுதுவராமல்வரம் பாலிப்பாய்நீயெனக்கு

கதையின்வரலாறு.

வெண்ணீறுவட்டமிட்டு வாறாராம்விமலிபிள்ளை
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
கொல்லிமலைகன்னிகளைக் கொற்றவனார்தானிருந்து

காத்தவராயசுவாமி ஈஸ்வரவேஷங்கொள்ளுதல்.

ஞகப்பனுடரூபமது தனக்குவரவேண்டுமென்றார்
அப்படியேவந்ததுகாண் ஆதிசிவன் தன்ரூபம்
ஆதிசிவன்போ லாண்டவனார்வடிவெடுத்தார்
வெண்ணீறுதூளிதங்கள் மேனியெல்லாந்தாமணிந்து
காவிகாஷாயங்கள் கனமாகத்தானணிந்து
கொழுந்தலைவங்கிதேடி கொற்றவனார்வாறாராம்
ஆயிரம்பூதங்கண யாண்டவனார்முன்பாக
அங்கெனவேவந்துதா னண்டவனார்முன்பாக
அழைத்துபணிசொல்லுமென்று ஆண்டவனைத்தெண்டனிட
கொழுந்தலைவங்குதனில் கொடியாள்மாலைஉயிரை
கொண்டுவந்துவைக்கவேணு மென்றாராங்கொற்றவனார்
அப்படியேநல்லதென்று ஆரியமாலைதன்னை
செய்யான்சிறையிருக்கும் செங்கழுநீரோடையிலே
கொழுந்தலைவங்குதனில் குடியமர்த்திவைக்கவேண்டும்
ஆண்டவனைக்கண்டு அடிபணிந்துதெண்டனிட்டு
ஆரியமாலைதனை யமர்த்தியேவைப்போமென்று

காத்தவராயசுவாமி தாயாரைக்காணுதல்.

பூதங்கள்போனபின்பு புண்ணியனார்ஸ்நானஞ்செய்து
தோட்டமதுதிறந்து தொன்னைதைத்துபூவெடுத்து
தாயார்தவநிலைக்கு சுவாமிதுரைவந்துநின்று
பூப்போட்டுதெண்டனிட்டு புண்ணியனார்நிற்கையிலே
கண்டுவிட்டாள்காமாட்சி கடுகெனவேதான்வாழ்த்தி
என்னைப்பணிந்தவகை ஏதுவகைசொல்லுமென்றாள்
வாய்திறந்தேதுசொல்வார் விமலியிள்ளைபஞ்சவர்ணம்
ஆச்சாளழகுபெண்ணு ளையன்மகள்மாலையரை
செய்யான்சிறையிருக்கும் செங்கழுநீரோடையிலே
கொழுந்தவங்குதனில் குடியமர்த்திவைப்பதற்கு
வேணமுயற்சிசெய்து வந்தேனம்மாபெற்றவளே
அவளைசிறையெடுக்க அன்பாய்விடைகொடம்மா
கண்டுவிட்டாள்காமாட்சி கட்டழகியேதுசொல்வாள்
ஆர்குடியைநீகெடுக்க ஆண்டிவேஷங்கொண்டாயடா
எவர்குடியைநீகெடுக்க யிந்தவேஷமானயடா
தாயிலும்பத்தினியாள் தாரமென்றெண்ணுதே
தீண்டாநெருப்பலவோ தெய்வப்பசுங்கிளியாள்
அண்டாநெருப்பலவோ ஆச்சாளழகுபெண்ணாள்
அனுசரிக்கக்கூடாது ஆரியமாலைதனை
நாலானசாதியிலே மேலானசாதியவள்
பிரமகுலப்பெண்ணைத்தொட்டால் பிரமஹத்திவந்துவிடும்
கன்னியந்தமாலைபற்கா கழுவிலிருக்கணுமா
தோகையந்தமாலைபற்கா தூண்டிலிருக்கணுமா

மாலையரைவறவுமென்று மாதாவுரைக்கலுற்ருள்
சொல்லிமலேசுவாமி முகமேரசரேதுசொல்வார்
தூண்டிவந்தால்குற்றமில்லை கன்னிவரவேண்டுமம்மா
கழுவுவந்தால்குற்றமில்லை தோகைவந்தால்போதுமம்மா
மாலைகன்னிமேலாசை மறப்பதில்லையெந்தனுக்கு
போகவரங்கொடம்மா போய்வாறேன்தாயேயென்ருர்
அப்போதுகாமாட்சி ஆரணங்கேதுசெய்தாள்
நெற்றிக்கண்ணைதிறந்து நீருயெரித்துவிட்டாள்
கோமுதலைவங்கெல்லாங் குபுகுபென்றுபற்றுதங்கே
பஞ்சவர்னசுவாமிதுரை பரிமணத்தாரங்குவந்து
கோமுதலையைக்காணுமல் கொற்றவனுர்தான்புலம்பி
தொட்டியத்துச்சின்னனே துரைமகனேவாருமென்ருர்
வங்கணத்துச்சின்னனும் வந்துவிட்டான்சுவாமியண்டை
சின்னனேநீர்கேளும் சிறையையெடுத்துக்கொண்டு
செட்டிபெண்ணைகொண்டுவந்து சீராகயிங்குவைத்தேன்
கோமுதலைவங்குதனில் குடியமர்த்திவைத்தேனப்பா
ஆரிட்டசாபனையோ அடிநாளைத்தீவினையோ
எவளிட்டசாபனையோ யிவளுமெரித்துவிட்டாள்
என்னசெய்யப்போறேனென்று யிவர்புலம்பிவாருரே
தாயாரிடம்வந்து சுவாமியவர்தெண்டனிட்டார்
தாயார்முகம்பார்த்து சண்முகனுரேதுசொல்வார்
கோமுதலைவங்குதனில் குடியமர்த்திநான்வைத்தேன்
ஆரோநெருப்புவைத்தா அனல்பத்தியெரியுதம்மா
அப்போதுகாமாட்சி அருமகனுக்கேதுசொல்வாள்
அவளை-அனுசரிக்கப்போனதினுல் அக்கினியாமூளுகுது
தாயென்றுநீபோனுல் தணிந்துவிடுமக்கினிதான்
அந்தவுரைகேட்டு அப்படியேநல்லதென்று
கோமுதலைவங்குதனில் கொற்றவனுர்வந்துநின்று
வங்கணத்துச்சின்னனை வாவென்றுதானழைத்தார்
அழைத்தகுரல்கேட்டு அருகேவந்தான்சின்னனும்
என்னசெய்யப்போறேனென்று யெடுத்துரைப்பார்சின்னனுக்கு
ஆரிட்டதீநெருப்போ அரிவையாள்வந்துவிட்டாள்
எவரிட்டதீநெருப்போ யெனக்கரியச்சொல்லுமென்ருள்
மலையாளச்சின்னனும் மன்னவருக்கேதுசொல்வான்
மாலையைச்சிறையெடுக்க மாதாவைக்கேட்டதில்லை
காமாட்சியிட்டதனல் கடுகியங்கேவேகுதென்ருர்
அவளிட்டநெருப்பாலே யாணழகர்வேகுதென்ருர்
என்னசெய்யப்போறேனென்று யெண்ணமிட்டுவாருராம்
தாயாரருகேவந்து சண்முகனுர்தெண்டனிட்டு
என்னம்மாயென்தாயே யென்னைவளர்த்தமாதாவே
ஆணழகிசெட்டிபெண்ணுள் அனலாகவெந்தாளென்ருர்

கடிந்தவுரைகேட்டு காமாட்சியேதுசொல்வாள்
என்னமோயென்மகனே யெந்நேரம்போராட்டம்
மாலைமாலையென்றுசொல்லி வதைக்கின்றாயெந்தனை நீ

காத்தவராயசுவாமியை காளியிடமனுப்புதல்.

என்னிலும்பெரியவளா யிருக்கின்றாள்கன்னியவள்
வல்லத்துமாங்காளி மயிலணையாளிருக்கிறாள்காண்
அவளாலேயாகுமடா அரிவைசிறையெடுக்க
ஆச்சாவயிரமுள்ள அறுபதடிவேங்கைமரம்
தச்சனுளிநாடாமல் தானாய்ச்சமைந்ததப்பா
வாச்சுளிகள்நாடாமல் வளர்ந்தகழுமரந்தான்
சித்துளிகள்நாடாமல் சிலைபோலவளருதங்கே
ஐந்துகிண்ணிப்பார்த்து அருங்கிளியாள்வளர்த்துவாறாள்
அவளைநீபோய்கேட்டா ளாரணத்தைச்சிறையெடுக்க
அவளேவிடைதருவாள் என்னாலேயாகாதென்றாள்
அப்படியேநல்லதென்று ஆண்டவனார்தாமெழுந்து
வெண்ணீறுதாருமென்று மெல்லியரைக்கேட்கலுற்றார்
பஞ்சாட்சரமெடுத்து பைங்கிளியுந்தான்கொடுத்தாள்
நெற்றியிலேவட்டமிட்டு நிமலிபிள்ளைபஞ்சவர்னம்
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
உற்றுநினைத்தா ரொருகோடியோசனையை
தொட்டியத்துச்சின்னானை துரைமகனைத்தானழைத்தார்
சின்னானும்வந்தபின்பு சுவாமியவரேதுசொல்வார்
மாலையையனுசரிக்க மாதாவைநான்கேட்டேன்
வல்லத்துக்காரியராம் மயிலணையாள்வன்னிடத்தில்
அங்கேபோடாவென்று ஆச்சியனுப்பிவிட்டாள்
ஆகையாற்சின்னானே அழைத்தேனேயுந்தனை நான்
அப்போதுசின்னானு மாண்டவர்க்கேதுசொல்வான்
காளிவனம்போனால் கடுகிவரப்போறதில்லை
மீண்டுவரப்போறதில்லை ஆண்டவனேயிப்பொழுது
நான்வரமாட்டேனென்று வியந்துரைத்தான்சின்னானும்
கொஞ்சமடாநீபயலே பாரமில்லையெந்தனுக்கு
என்பிறகேவாடா யென்றுரைத்தார்கொல்லிமலை

காத்தவராயசுவாமி கிழவேடங்கொள்ளல்.

வாவென்றழைத்தார் வருகுதுமறுவேஷம்
தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்போல்
பண்டாரகிழவனைப்போல் பாங்குடனேயுருவெடுத்து
ருத்திராட்சத்தாழ்வடமும் பத்திராட்சக்குல்லாவும்
காலில்மெருவடியாங் கையில்திருவடமாம்
மாத்திரைக்கோலதனை வகையாகக்கைபிடித்து
காதுதனில்குண்டலமுங் காஷாயந்தானுடுத்தி
வெண்ணீறுதுளிதமும் மேனியெல்லாந்தாமணிந்து

கொட்டியத்துச்சின்னானுந் துரைமகனுமேதுசெய்தான்
சின்னானுஞ்சிறுபண்டாரம்போல் சிராய்வடிவெடுத்து
வல்லத்துக்காளிகோயில் முன்பாகவந்திருக்க
தூக்கியடிவைப்பார் தொண்ணூரிடம்விழுவார்
எடுத்தடிவைப்பார்களிருநூரிடம்விழுவார்
தள்ளாடித்தள்ளாடி சுவாமியக்கேவாரூரே
வல்லத்துக்காளிகோயில் முன்பாகவந்திருக்க
அப்போதுகாளியற்கு ஆண்காற்றடிக்குதங்கே
ஆண்காற்றடிக்குதென்று ஆக்கரித்துப்பற்கடித்து
தக்கையைத்தான்கழற்றி தையலிவள்விட்டெறிந்தாள்
ஆங்காரக்கோபமுட னரட்டிவருகுதங்கே
தொட்டியத்துச்சின்னான் துரைமகனுந்தான்பார்த்து
இனியிருந்தால்மோசமென்று யெழுந்திருந்தோடலுற்றான்
கொல்லிமலைசுவாமி குமரேசர்தான்பார்த்து
வருகிறசங்கைதனை மாரிபிள்ளைதானெடுத்து
சேர்ளிபிலேபோட்டடைத்தார் தோகை நல்லபஞ்சவர்ணம்
தொட்டியத்துச்சின்னானுந் துரைமகனும்வந்துவிட்டான்
தங்கையைக்காணோமென்று தையலந்தகாளியம்மன்
டமரகத்தைத்தானெடுத்து தாக்குடனேவிட்டெறிந்தாள்
அவனை-கொன்றெரித்துவாருமென்று கொம்பனையாள்விட்டெறிந்
தாள், ஆங்காரக்கோபங்கொண்டு அதட்டிவருகுதங்கே
டமாரம்வருகுதென்று தான்பயந்துசின்னானும்
காதவழிதூரம் கடுங்காலையோடிவிட்டான்
பஞ்சவர்னச்சுவாமி பரிமணத்தான்பார்த்து
டமரகத்தைக்கைபிடித்து தாமடைத்தார்சோளியிலே
ஒளித்திருந்துசின்னானும் ஓடிவந்தான்சுவாமியண்டை
டமரகத்தைக்காணோமென்று தையலந்தகாளியரும்
காதோலைதான்கழற்றிக் கடுசெனவேவிட்டெறிந்தாள்
ஓலைவருகுதென்று ஓடியங்கேபோய்மறைந்தான்
காத்தவனார்தான்பார்த்து காதோலைதனையெடுத்து
சோளியிலேபோட்டடைத்து சூத்திரமாயங்கிருந்தார்
ஓலையைக்காணோமென்று வுத்தமியாள்காளியரும்
சூலமதையெடுத்து சுழட்டிவிட்டாளப்போது
சூலம்வரவுகண்டு துலங்கிவிட்டான்சின்னானும்
இனிபிழைக்கமாட்டோமென் றெழுந்திருந்தோடலுற்றார்
அத்ததையுஞ்சேர்த்து அடைத்தாரேசோளிதனில்
மறுபடியும்சின்னானும் வந்துவிட்டான்சுவாமியண்டை

காத்தவராயசுவாமியைக் காளியம்மன் விழுங்கல்.

அப்போதுகாளியரும் ஆங்காரக்கோபங்கொண்டு
அண்டங்கிடுகிடென்ன ஆகாயந்தத்தளிக்க

நூமிகிடுகிடென்ன பூலோகந்தத்தளிக்க
அதட்டியேபற்கடித்து ஆங்காரங்கொண்டுவாருர்
காளியிதோவாருளென்று கண்டுரைக்கச்சின்னூலும்
காதவழிதூரங் கால்நடுங்கிவோடலுற்றூர்
அஞ்சாமற்றுனிருந்தா ராண்டவனுர்பஞ்சவர்னம்
ஆரையாவெனறுசொல்லி யதட்டியேவாய்திறந்து
இவரை-வாரிவிழுங்கினுளே வல்லத்துமாங்காளி
எடுத்துவிழுங்கிடவே யேதுசொல்வார்பஞ்சவர்னம்
ஓடியுலாவிக்கொண்டு வுத்தமியாள் தன்வயிற்றில்
ஈரற்குலை தனிலே யெட்டியுதைத்தாராம்
இவளுக்கு-தடுக்கமுடியவில்லை தையலந்தகாளியற்கு
உற்றுநினைத்தாளே ஒருகோடிபுத்திகளை
அஞ்சனம்போட்டுமவ ளாராய்ந்துபார்க்கையிலே
கொல்லிமலைசுவாமி குமரேசனென்றறிந்து
காத்தான்பரிமளவே கழுகூலிபெற்றவனே
நேற்றுரைத்தசந்தணமே நிமலிபிள்ளைவாருமென்றாள்
வாடாமகனேயென்று மயிலணையாள் தானழைத்தாள்
அப்போதுபஞ்சவர்ன மாண்டவனுர்வாருரே
குழந்தைவடிவாகக் கொல்லிமலைவந்துவிட்டான்
கேட்டவரந்தந்தாயானால் கிளிமொழியேநான்வருவேன்
என்றவுரைகேட்டு யேதுசொல்வாள்காளியரும்
என்னவரம்வேண்டும் யென்மகனேகேளுமென்றாள்
கேட்டவரந்தாரேனென்றார் கிளிமொழியேகைபோடென்றான்
அப்படியேதாரேனென்று ஆரணங்குகைகொடுத்தார்
அவள்-கைதனிலேவந்துவிட்டார் கட்டழகர்பஞ்சவர்னம்
கண்டுமனமகிழ்ந்தாள் காளிபெருஞ்சூலி
காத்தவரைத்தான்பார்த்துக் காளியருமேதுசொல்வாள்
ஆர்குடியைநீகெடுக்க ஆண்டிவேஷமாகிவந்தாய்
எவர் குடியைநீகெடுக்க யிந்தவேடங்கொண்டுவந்தாய்
அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனுரேதுசெய்தார்
எடுத்தார்சுயரூபம் ஏந்திழையாள்முன்னேவந்து
காண்கிறேன்பாதமென்று கால்மேல்முடிசாய்த்தார்
வாழ்த்தியெடுத்துமவள் மார்போடேதானணைந்து
என்னவேண்டியிங்குவந்தா யெனக்கறியச்சொல்லுமென்றாள்
அப்போதுகொல்லிமலை அருங்காளிக்கேதுசொல்வார்
மாலைதணைசிறையெடுக்க மாதாவைத்தான்கேட்டேன்
தன்னாலேயாகாதென்று உன்னிடத்திற்போடாவென்றாள்
ஆகையாலுன்னிடத்தி லடுத்துவந்தேன்தாயேயென்றார்
அதுகேட்டுகாளியரு மாண்டவருக்கேதுசொல்வார்
உனக்கென்றுவளருதடா உத்தமனேகழுமரங்கள்
கழுவிலிருக்கணுமா காய்ந்துலர்ந்துபோகணுமா

தூண்டிலிருக்கனுமா அடிதடித்துச்சாகனுமா
தகப்பனிடசாபமது சரியாய்பலித்துதிப்போ
என்றுமவள்சொல்லயிலே யேதுசெய்வாராண்டவனூர்
கழுமரஞ்சாகுக்கே காரிழையேவேண்டுமென்றூர்
அப்போதுகாளியம்ம னன்பாயெழுந்திருந்து
தரையில்விழுகாமல் தனஞ்செயனைவெட்டவேண்டும்
முப்பூசைகொடுக்கவேண்டும் மூத்தமகனூரே
அப்போதுஆண்டவனூ ரங்கெனவேயேதுசெய்தார்
காளிசொல்தட்டாமல் கனமானபூசைதந்து
கள்ளிகாட்டின்பூதங்களை கண்காட்டிதானழைத்தார்
அப்படியேவந்துதங்கே ஆயிரம்பூதங்கள்தான்
வாள்கொண்டுவெட்டினூர் வகையுடனேகழுமரத்தை
உதிரங்களோடுகுது உத்தமனூர்வெட்டையிலே
ஆகுதிதான்கொடுத்து அழகானவண்டிதனில்
வண்டியின்மேலேற்றி வாரூராம்பஞ்சவர்னம்
பாசகுருசாலையிலே பாரமணல்மேடையிலே
கொண்டுநிறுத்தினூர் கொல்லிமலைகழுமரத்தை
அப்போதுவல்லத்து அருங்கிளியாளேதுசொல்வாள்
வடப்பாகத்தாச்சாரி மன்னவரேழுபேர்கள்
அவர்களுக்குப்பிள்ளைவர மன்பாகநீகொடுத்து
அவர்களையழைத்துக்கொண்டு அடைவுடனேவந்தாக்கால்
அவர்கள்-சோடித்திடுவார்கள் சொற்பெரியகழுமரத்தை
போய்வாமகனேயென்று பொற்கொடியாள்நீறுமிட்டாள்
வெண்ணீறுவட்டமிட்டு விமலிபிள்ளைவாரூராம்
மஞ்சியப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று

காத்தவராயசுவாமி ருத்திரவேடங்கொள்ளல்.

ஆரைநினைத்தாரா மளவுற்றசிந்தையிலே
தகப்பனைநெஞ்சில்வைத்து தாயைமனதிலெண்ணி
வாவென்றழைத்தாரும் வருகுதுமறுவேடம்
சங்கரவருத்திரர்போல் கடுகெனவேவேடங்கொண்டார்
சிவவேடந்தான்பூண்டு சிரானவடிவெடுத்து
பதினெட்டுமுத்திரையும் பாங்காகத்தான்றரித்து
ஆனந்தகவிபாடி ஆண்டவனூர்வாரூரும்
மணப்பாக்குந்தேடியல்லோ வாரூரேயாண்டவனூர்
திருவாத்திமரத்தடியில் சுவாமியவர்வந்தமர்ந்தார்
அங்கிருந்ததெய்வங்களை ஆண்டவனூர்தான்துதித்து
கற்பூரதீபங் கடுகெனவேதான்துதித்து
சொர்னங்களைவாரிச் சுவாமிக்குத்தானமென்றூர்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
அங்கிருந்தமன்னரெல்லா மடிதண்டமாகவோடிவந்து
இவன்காலில்சரணமென்று கண்டவர்கள்தெண்டனிட்டார்

## காத்தவராயர் கம்மாளப்பெண்களுக்கு புத்திரனளித்தல்.

மடப்பாக்கத்தாச்சாரி மன்னனூர்தேவியர்கள்
செப்புக்குடங்கொண்டு சலமெடுக்கவாறூர்கள்
சுவாமியைக்கண்டவுடன் சரணமென்றுதான்தொழுதார்
வந்துபணிந்தவரை மாரிபிள்ளைகண்டுவிட்டார்
வெண்ணீறுபஞ்சாட்சர மெங்களுக்கள்ளியிட்டார்
வெண்ணீறுவட்டமிட்டு மெல்லியர்கள்வாறூர்கள்
பத்துப்படிதாண்டி பைங்கொடிமாரேழுபேரும்
தண்ணீருமொள்ளையிலே தான்கெர்ப்பமானூர்கள்
பத்துமாதஞ்சென்றவர்போல் பாலகரையின்றெடுத்தார்
மைந்தரையெடுத்துக்கொண்டு தங்கள்மனையில்வந்து
பாலிப்பாய்போட்டு படுக்கவைத்தார்மைந்தர்களை
அந்தச்சமயத்திலே ஆணழகர்தச்சர்வந்தார்
கால்கைகள்சுத்திசெய்து கட்டழகருள்நுழைந்து
குழந்தைகளைப்பார்த்து கொற்றவர்களேதுசொல்வார்
ஏதடிகுழந்தையென்று யின்பமுடன்கேட்கலுற்றூர்
ஈன்றெடுத்துவந்தோமென்று யிளங்கொடிமார்தாமுரைத்து
கையிலைதனிலிருந்து சர்க்தரவரிங்குவந்து
அவரளித்தார்வெண்ணீறு அருங்குழந்தையின்றெடுத்தோம்
அவரெங்கேயிருப்பாரென் றிவர்களைக்கேட்கலுற்றூர்
திருவாத்திமரத்தடியில் சுவாமியிருப்பார்கள்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏழுபேர்தச்சர்களும்
சொர்னங்கள்தாமெடுத்து சுவாமியண்டைவாறூர்கள்
சுவாமிதனைக்கண்டவுடன் சொர்னம்வைத்துதெண்டனிட்டார்
வாழ்த்தியந்தபஞ்சவர்னம் திருநீறுஅள்ளியிட்டு
பிள்ளைவரம்நான்கொடுத்தேன் புண்ணியரேவுங்களுக்கு
எனக்குக்கழுமரங்கள்சோடித்த கட்டழகாவாருமென்றூர்
இதோவந்தோமையாவென்று யேழுதச்சர்வாறூர்கள்
பாச்சூருசாலைமணல் பார்மேடைவருகையிலே
வல்லத்துக்காளியரும் வந்துவிட்டாளங்கனவே
கழுமரங்கள்சோடியென்றூர் கட்டழகிகாளியரும்
அப்போதுதச்சர்களு மழகாகச்சோடிக்கின்றூர்
முதற்படிமாணிக்கமா மிரண்டாம்படிநாகரத்தினம்
மூன்றும்படிமுத்துகளாம் நான்காம்படிநவரத்தினம்

ஐந்தாம்படிபச்சைகளாம் ஆறும்படிகோமேதகம்
ஏழாம்படிநீலவர்ணம் யின்பமுடன்செய்துவைத்து
எட்டாம்படி தளத்தில் என்னென்னவைக்கலுற்றார்
கால்வைக்குமிடங்களிலே கச்சாணிமாட்டியங்கே
கால்வைக்குமிடங்களிலே கடையாணிபோட்டார்கள்
பக்கம்பதினெட்டுக்குப் பதினொருமுள்ளுருவ
நாபியில்பதிந்தவாசி நடுவுச்சியுருகிடவே
இப்படிக்குசெய்யுமென்று ளேந்திழையாள்காளியரும்
காளிமனதின்படி கழுமரங்கள்செய்யலுற்றார்
ஆருமறியாம லங்கொருவர்காணாமல்
சூத்திரமாகவல்லோ செய்தார்கழுமரத்தை
கழுமரத்தின்மேலாகக் கட்டுமென்றாள்கூண்டுகளை
மாலையர்க்கொருகூண்டு மங்கையர்க்கொருகூண்டு
உகந்தழகிக்கொருகூண்டு உத்தமரேகட்டுமென்றார்
மூவருக்குங்கூண்டுகட்டி முடித்துவிட்டார்தச்சரங்கே
இப்படியாய்க்கழுமரங்க ளின்பமுடன்சொப்பனிட்டார்
கழுமரத்தைசொப்பனிட்டு காத்தவனார்வாராரே
தாயார்தவநிலைக்கு சுவாமிதுரைவந்துநின்று
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
தெண்டனிட்டதன்மகனை கண்டுவிட்டாள்காமாட்சி
என்னடாவென்மகனே யென்னேரம்போராட்டம்
மாலைமாலையென்றுசொல்லி வதைக்கிறையேயெந்நேரம்
அந்தமாலையைசிறையெடுக்க மன்னவனேயாகுமடா
ஆனாலொருவார்த்தை யன்பாகசொல்லுகிறேன்
ஆயிரப்வேதியரு மவர்களிடதேவிகளும்
ஆசாரத்தான்குலைந்து யதிசீக்கிரமெடுத்துவந்தால்
மாலையைச்சிறையெடுக்க வரங்கொடுப்பேன்மன்னவனே
என்றுசொல்லகாமாட்சி எழுந்திருந்துபஞ்சவர்ணம்
அப்படியேபோய்வாரே னனுப்பிவிடைதாருமென்றார்
வெண்ணீறுகைகொடுத்தாள் விமலியந்தகாமாட்சி
வாங்கியந்தவெண்ணீற்றை வட்டமிட்டார்நெற்றியிலே

௮-வது-வல்லத்துமாங்காளியம்மன்வனம் முற்றிற்று.



ஒன்பதாவது,

## வேதியர்களை ஆசாரங்குலைத்தவணம்.

---

விநாயகர்துதி-வெண்செந்துறை.

பொங்குமதஜலங்கள் பொழியும்புழைக்கையனே
கங்குமெனக்குவரந் தாருமழக்கையனே
அந்நாளில்மாங்கனிக்கா யானைவலமாக
முன்னுகவந்தவனே மொழியீசன்றந்தவனே
சுரங்காரதார்சுவாமிகதை தொந்தமாயான்பாட
சுரங்கோர்த்துகைகுவித்தே காத்தருள்வாய்கைம்மாவே.

கதையின்வரலாறு.

வெண்ணீறுவட்டமிட்டு விமலிபிள்ளைவாருமோ
உப்பங்கிடாரவழி வுத்தமனார் தாண்டியல்லோ
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
சின்னானை தானழைத்து சேரவந்துசின்னானும்
அடிமையழைத்ததென்ன ஆண்டவரேசொல்லுமென்றார்
புத்தூரகரமது போகவேணுஞ்சின்னானே
என்கூடவாவென்று யிருவருமேதுசெய்தார்

காத்தவராயசுவாமி மாறுவேஷங்கொள்ளுதல்.

என்னவேஷங்கொள்ளுகிறா ரெங்கள்துரைபுஞ்சவர்களும்
கள்ளிக்காட்டுபூதங்களை கண்காட்டித்தாழைத்தார்
அப்போதுபூதங்க ளடங்கதும்மேர்டிவந்து
அடிமைகொண்டவேல்முருகா அழைத்தவகைசொல்லுமென்று
பூதங்கள்கேட்கையிலே [illegible]

மரணக்கச்சேரியிலே மன்னரந்தவேதியற்கு
பண்ணைப்பறைச்சிகளைப் பாங்காககொண்டுவந்து
ஆயிரம்வேதியற்கு ஆயிரம்பேர்களுக்கு
வேதியர்கன்னருகே கொண்டுவந்துவையுமென்றார்
ஆயிரம்வேதியர்களவருடையபெண்டுகளை
அன்னத்தாளசிமுதல் ஆயிரம்பேர்களுக்கும்
பறைச்சேரிபறையர்களைப் பார்ப்பவர்கள்தன்னிடத்தில்
ஒருத்திக்கொருவனை யுறங்கவையுமென்றுரைத்தார்
அந்தவுறைகேட்டு ஆண்மையுள்ளதெய்வமெல்லாம்
சுவாமியுடசொற்படிக்கு சீக்கிரமாய்த்தான்முடித்து
பறைச்சிகளைக்கொண்டுவந்து பாப்பார்கள்தன்னிடத்தில்
தூங்கவைத்துச்செய்துமல்லோ துரைமகனார்பூதமது
அப்போதுபஞ்சவர்ண மாண்டவனுரேதசெய்தார்
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
அன்றையராத்திரியில் ஆயிரம்வேதியர்கள்
பறைச்சிகள்தம்மிடத்தில் படுத்துக்கொண்டுதாமிருந்தார்
பாப்பாத்திதம்மிடத்தில் பறையர்படுத்திருந்தார்
கங்குல்விடிந்ததங்கே கதிரோனும்வந்துதித்தார்
அப்பாபட்டர்தாமெழுந்து அன்னத்தாளசியம்மா
முத்தம்பெருக்கவல்லோ மெல்லியரேயெழுபலுற்றார்
ஸ்நானஞ்செய்யப்போகவேண்டும் தையலெழுந்திரடி
என்றிவர்சொல்லையிலே கண்டுவிட்டாளப்பறைச்சி
என்னடா சலமகனே யிப்பேச்செங்கேகற்றாய்
அப்பாபட்டர்தன்வீட்டில் அடிமைப்பறையாநீ
பார்ப்பாரப்பேச்சுகளை பறையாநீஎங்குகற்றாய்
என்றுயிப்பறைச்சி யெதிர்வார்த்தைசொல்லையிலே
பார்த்துமந்தவப்பாபட்டர் பறைச்சிசொன்னவார்த்தைகளை
அன்னத்தாளசியென்ன அதிசயமாய்ச்சொல்லுகிறாள்
பறைச்சிபோலவார்த்தைகளைப் பைங்கொடியேசொல்லுகிறாய்
என்றிவர்சொல்லையிலே யிளங்கொடியாள்தான்கேட்டு
இதுவென்னஅன்னீதம் யென்னிடத்தில்நீர்படுத்தீர்
வாழ்பறச்சியென்னிடத்தில் வந்துபடுத்தீரோ
எந்தவூர்நீரு மெங்கிலும்நான்கண்டதில்லை
என்றிவர்சொல்லையிலே யிதுகேட்டுஅப்பாபட்டர்
சிவசிவாவென்று திருச்செவியில்கையைவைத்தார்
பறைச்சிமுகம்நோக்கி பட்டரெடுத்துரைத்தார்
எங்கும்நீசொல்லாதே யென்றெழுந்தோடலுற்றார்
மரணக்காணைச்சேரிவிட்டு வாறாரேஅப்பாபட்டர்
புத்தூர்தனிலிருக்கும் பொற்கொடிபிராமணத்தி

அன்னத்துளசியவள் ஆரணங்குதாமெழுந்து
என்னகாணப்பாபட்டா யின்னமுறங்குகின்றீர்
ஸ்தானங்கள்செய்துமல்லோ செபதபங்கள்தான்முடித்து
எழுந்திருங்களென்றுசொல்லி யெழுப்புகின்றவேளையிலே
கண்டுவிட்டான்பறையன் க்கெனவேயேதுசொல்வான்
என்னடியென்பெண்சாதி எங்குகற்றாயிப்பேச்சு
பாப்மாத்திபோலயல்லோ பாஷைகள்பேசுகிறாய்
என்றுமிவர்சொல்லையிலே யிளங்கொடியாள்தான்கேட்டு
என்னடாபண்ணக்காரா என்னிடத்திலேன்படுத்தாய்
வந்துபடுத்திருந்த வகையெனக்குச்சொல்லுமென்றாள்
பாப்பாத்திதானுரைக்க பறையன்மனங்கலங்கி
கெட்டேன்சிவன்செயலோ கேடுவந்துநேர்ந்தது
மாங்காணிச்சேரிதாண்டி வாரானேபண்ணக்காரன்
இப்படியாய்வேதியர்கள் யெல்லோருஞ்சென்றுவிட்டார்
பறைச்சியருகிருந்து பார்ப்பார்களோடிவாறார்
பாப்பாத்திவீடுவிழிந்து பறையரெல்லாம்வாறார்கள்
ஆசாரந்தான்குலைந்த ஆயிரம்வேதியர்கள்
இதுவென்னகாரணமோ யென்றார்கள்வேதியர்கள்
பறைச்சிகள்தன்வீட்டில் நாம்போய்ப்படுத்திருந்தோம்
பாப்பாத்திகங்களிடம் பறையர்படுத்திருந்தார்
இப்படிக்குவந்ததென்ன யீஸ்வரனார்தன்செயலோ
ஆரியப்பூராசன்கண்டால் ஆக்கினைகள்வந்துவிடும்
ரங்கரிடகோயிலுக்கு நாமெப்படிசென்றிடுவோம்
ஆசாரியருடனே யறிக்கையிடுவோமென்று
ஆறாயிரம்வேதியரும் அவர்களிடதேவியரும்
காசிகுதிதேடி கடுகியேவாறார்கள்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுவாறார்கள்
காசிகுருக்களண்டை கர்மந்தொலைக்கவாறார்
புத்தூரகந்தாண்டிப் புண்ணியர்கள்வாறாரென்று
அஞ்சனத்தில்தாமறிந்து ஆண்டவனாரேதுசெய்தார்
மாமன்மாமிவாறாரென்று மாரியிள்ளையேதுசெய்தார்

## காத்தவராயர் மறுவேஷங்கொள்ளல்.

இதுதான்தருணமென்று யெடுத்தார்மறுவேஷம்
தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்போல்
பழுத்தகிழமானார் பஞ்சவர்கள்சுவாமியவர்
காசிகுருக்களைப்போல் கடுகவடிவெடுத்தார்
பூணூல்செபமாலை புண்ணியனார்தான்தரித்து
பஞ்சாங்கங்கைபிடித்துப் பல்லக்குமீதேறி

பூதங்கள்சேவகரைப் புண்ணியனாருண்டுபண்ணார்
முத்திரையில்லைச்சேவகரைப்போல் மூன்றுபூதமுண்டுபண்ணான்
சேஷப்பிள்ளைபோலாகச் சின்னானையுண்டுபண்ணார்
திருவரங்கப்பெட்டிதனைச் சேஷப்பிள்ளைகைகொடுத்து
மாட்டுத்தோல்தன்னாலே வரிசையுள்ளபூநூலும்
ஓலைவாளப்பஞ்சாங்க முத்தமனார்கைபிடித்து
காசிநல்லகுப்பியைப்போல் கருஞ்சேஷர்கொண்டுவந்து
பூதத்தின்மூத்திரத்தைப் புட்டிதனில்தான்பிடித்து
இத்தனைவஸ்துக்களை மெத்தெனவேசேகரித்து
பல்லக்கின்மேலேறிப் பார்வதியாள்புத்திரனார்
பூதங்கள்முன்சூழப் பிசாசுதுடர்ந்துவர
காசிவழிதேடிக் கட்டழகர்வாராரே
பக்கத்தில்சின்னானும் பாங்குடனேவாரானே
வேதியர்கள்வந்தொரு வழிதனிலேயேதுசெய்வார்
மண்டபங்களுண்டுபண்ணி மாரிபிள்ளைவீற்றிருந்தார்
மேளமுழக்கத்துடன் விமலிபிள்ளைவீற்றிருந்தார்

## காத்தவராயசுவாமியை வேதியர்காணல்.

அந்தச்சமயத்தில் ஆறாயிரம்வேதியரும்
குருக்களண்டைநான்போய் கொள்ளுவோம்தீட்சையென்று
வருகின்றவேளையிலே மண்டபத்தைக்கண்டார்கள்
ஆரென்றுசொல்லியவ ரன்பாய்க்கேட்கலுமே
காசிக்குருக்களென்று கண்டவர்கள்தாமுரைக்க
அப்போதுவேதியர்க ளாச்சரியங்கொண்டுமல்லோ
நாம்செய்யவந்தபாக்கியமோ நல்லதவப்பயனோ
காசிக்குருக்களிங்கு கண்ணெதிரேவந்தாரே
குருக்களிடத்திலதைக் கூறுவோமென்றுசொல்லி
எண்ணாதுமெண்ணி யிருக்கின்றவேளையிலே
சர்க்கரைநெய்தனக்குச் சிற்றெறும்புபுற்றதுபோல்
தேன்குடத்திலீக்கள்வந்து சூழ்ந்திருக்கும்பாவனைபோல்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகர்கோவிலரும்
பஞ்சவர்ணசுவாமிதன்னைப் பக்கம்புடைசூழ்ந்துகொண்டார்
வந்திருக்கும்வேதியரை மாரிபிள்ளைதான்பார்த்து
இருங்களிருங்களென்று யிவர்களைக்கையமர்த்தி
தொட்டியத்துச்சின்னானை துரைமகனைத்தானழைத்து
இவர்கள்-எங்குவந்தாரென்றுசொல்லி யிதமாகக்கேளுமென்றார்
சின்னானதைக்கேட்டு சீக்கிரமாயோடிவந்தான்
ஏன்காணும்வேதியரே யெங்குவந்தீர்சொல்லுமென்றான்
தீட்சைபெறவேண்டுமென்று சுவாமியண்டைவந்தோமென்றார்
[illegible]ன தீட்சைவேண்டி யிங்குவந்தார்வேதியர்கள்

அதுகேட்டுசொல்லுமென்று அனுப்பிவிட்டார்சின்னானை
ன்னதீட்சைவேண்டிவந்தீ ரெடுத்துரையுமாண்டவற்கு
தருக்களண்டைசொல்லுதற்கு கூசுதென்றார்வேதியர்கள்
சின்னானதுகேட்டு சீக்கிரமாயேதுசொல்வான்
ஆண்டவனார்முன்புரைக்க அஞ்சுதென்றார்வேதியர்கள்
காத்தவனார்தான்கேட்டு கடுகவெடுத்துரைப்பார்
ஆராயிரவேதியரு மச்சம்பயமொழிந்து
சந்தேகமில்லாமல் தாமுரைக்கவேணுமென்றார்
கூட்டமுடன்வேதியர்கள் கொல்லிமலைக்கேதுசொல்வார்
பறைச்சிகள்தம்மிடத்தே பிராமணர்படுத்திருந்தோம்
பார்ப்பினியிடங்களிலே பறையர்படுத்திருந்தார்
இத்தோஷந்தீருதற்கு யிங்குவந்தோம்தீட்சைகொள்ள
இவ்வசனங்கேட்டுமவ ரேதுசெய்தாராண்டவனார்
பாகம்வளர்த்துமென்று ரருகிருந்தசின்னானை
ஓமம்வளர்த்தினனே யுடனுகசின்னானும்
பஞ்சவர்னசுவாமிதுரை பக்குவமாயேதுசெய்தார்
முன்குடுமிதான்பிடுங்கி யக்கினியில்போடுமென்றார்
சுவாமிகுடுமிதனைத் தான்போடகண்டவனும்
சின்னான்குடுமிதனைச் சிரப்பாகவேபோட்டான்
சுவாமிகுடுமிதனை யக்கினியில்போடக்கண்டு
ஆறாயிரம்வேதியர்க ளடங்கலுமோடிவந்து
தங்கள்குடுமிதனைத் தான்பிடுங்கிப்போட்டார்கள்
சுவாமியவர்பூநூலைத் தான்கழற்றிநெருப்பிலிட்டார்
சின்னானும்பூநூலைச் சிறப்பாகபோட்டுவிட்டு
வேதியர்கள்தான்பார்த்து வேதியர்களோடிவந்து
பூநூல்கழற்றிப் போட்டார்நெருப்பதனில்
பஞ்சாங்கந்தானெடுத்துப் பஞ்சவர்னம்போட்டுவிட்டார்
ஆறாயிரம்வேதியர்க ளன்பாகத்தான்பார்த்து
காலகண்டபஞ்சாங்கம் கடுகவெடுத்துவந்து
அக்கினியிற்போட்டுவிட்டா ரன்பாகவேதியர்கள்
கலையிலிருந்தகுல்லா சுவாமியவர்தான்போட்டார்
அதைப்பார்த்துசின்னானு மப்பொழுதேபோட்டுவிட்டான்
சங்குசக்கரம்வைத்திழைத்த சகலாத்துகுல்லாவை
அப்பாபட்டர்தான்முதலா யனைவர்களும்போட்டுவிட்டார்
இந்தநல்லவேதியர்க ளவர்களுமங்கிருக்க
வெந்துதணியுதுபார் விதமானஅக்கினியில்
சின்னானைக்கண்காட்டி தேவிபிள்ளாயேதுசெய்தார்
வெண்ணீறுதானெடுத்து சின்னானுங்கைகொடுத்தார்
திருவரங்கபெட்டிதனைச் சுவாமியவரெடுத்து
ஆறாயிரம்வேதியர்க்கு அன்பாகக்கைகொடுத்தார்

வேதியர்கள் தாம்வாங்கி வேந்தர்கள்பார்க்கையிலே
என்னடாவெங்குபட்டா யேதடாசோழுபட்டா
சால்கையாயிருக்குதென்று கலக்கமிட்டார்வேதியர்கள்
விபூதியல்லயிது வேந்தனேமச்சமடா
அப்படிச்சொல்லாதே யபசாரம்வந்துவிடும்
என்றிவர்கண்ணிலே யெடுத்துமெள்ளவொத்திக்கொண்டார்
விபூதியையெடுத்து விட்டெறிந்தாரக்கினியில்
சின்னானும்விபூதியைச் சீக்கிரமாய்விட்டெறிந்தான்
வேதியர்களப்பொழுது விட்டெறிந்தார்விபூதியை
நல்லநல்லதீர்த்தமென்று சுவாமியவர்பொசித்தார்
சுவாமிபொசிக்கையிலே சின்னானும்வாரியுண்டான்
அப்போதுவேதியர்க ளடங்கலுங்கைநீட்ட
பூதத்தின்மூத்திரத்தைப் புண்ணியனுர்வார்க்கலுற்றார்
சாப்பிடுங்களென்றுசொல்லித் தனஞ்செயனுர்தாமுரைத்தார்
ஆயிரம்வேதியரு மன்பாய்பொசிக்கலுற்றார்
நல்லதோர்பூநூலை சுவாமிதரித்துக்கொண்டார்
வங்கணத்துச்சின்னானும் மன்னவனும்தரித்துக்கொண்டான்
மாட்டுத்தோல்பூநூலை மறையவர்க்குத்தான்கொடுத்தார்
பூநூல்தரித்துக்கொண்டார் புகழாகவேதியர்கள்
நல்லபஞ்சாங்கமதை நாயகனுர்கைபிடித்தார்
இன்னமொருபஞ்சாங்க மெடுத்துக்கொண்டான்சின்னானும்
காத்தவனுரப்பொழுது கடுகெனவேயேதுசெய்தார்
ஓலைவாளபஞ்சாங்க முத்தமர்க்குகைகொடுத்து
மாட்டுத்தோல்குல்லாவை மறையவர்க்குதான்கொடுத்து
எடுத்துத்தரியுமென்று யேதுசெய்தார்பஞ்சவர்னம்
ஆராயிரம்பொன் அபசாரம்வையுமென்றார்
ஆண்டவனுர்சொற்படியே ரபசாரம்வைத்தபின்பு
வேதியர்க்குப்பஞ்சவர்னம் வேந்தரெடுத்துரைப்பார்
குளத்தங்கரையருகில் கோற்றவனுர்பேர்பிருந்து
விபூதிபஞ்சாங்கம் விளங்குபூநூலுடனே
ஒவ்வொருவேதியற்கு ஆயிரந்தலைமுழுக்காய்
பூநூலிருக்கவேண்டும் குல்லாய்காக்கவேண்டும்
பஞ்சாங்கந்தேய்க்கவேண்டும் பாவங்கள்தீரவேண்டும்
ஆயிரம்வேதியரும் ஸ்நானங்கள்செய்யுமென்றான்
சுவாமியுரைகேட்டு தாள்மகிழ்ந்துவேதியர்கள்
ஆற்றருகில்போயிறங்கி அடங்கலுஸ்நானஞ்செய்தார்
ஆயிரமுழுக்காக ஆண்டவனுர்சொற்படிக்கி
ஸ்நானங்களானபின்பு தாங்கள்தரையில்வர
தலையிலிட்டகுல்லாக்கள் சலங்களேயுட்புகுந்து
மார்பிட்டபூநூலும் வகையாகப்பெருகுதங்கே
கைதனிலேபஞ்சாங்கம் கனநாற்றமாகிடுமாம்

ன்னகாண்மட்டர்களே யிதுநாற்றமாறுவதேன்
நூலிதுவல்லகாண் பெருமாம்சத்தோல்தான்
கமங்கள்தான்குலங்தோம் நிஷ்டைகளும்பாழாச்சி
பூதியல்லவடா திருவரங்கப்பெட்டி
ர்த்தமதுவல்லடா திருநீறுதான்கொடுத்தார்
வர்-காசிக்குருள்ள கனமழிக்கவந்தவர்காண்
பூரியமாலைதனை அவளையெடுத்துப்போக
ந்ததொருகள்ளனிவ னென்றுமனதிலெண்ணி
னியிருந்தால்மோசம்வரும் யெழுந்திருங்கள்போவோமென்று
பூரியப்பூராசன் அனர்த்தம்விளைந்துவிடும்
யோசிவனேயென்று அழுதுமந்தவேதியர்கள்
த்தூரகங்தேடிப் புண்ணியரும்வந்துவிட்டார்
வரவர்களரண்மனையில் அமர்ந்திருந்தார்வேதியர்கள்
ப்படிக்குத்தானிருக்க எங்கள்துரைபஞ்சவர்ணம்
ன்னுனைத்தானழைத்து சீக்கிரமாயேதுசொல்வார்
லையாளம்போடாவென்று மாரிபிள்ளைவாறாராம்
ாயார்தவநிலைக்கு சுவாமிதுரைவாறாராம்
டுகிறகெங்கையிலே ஒருசொம்புநீரெடுத்து
ண்ணலட்சம்புட்பங்களை மாரிபிள்ளைகைப்பிடித்து
லம்வேரோசிறிது ஆலமரமோபெரிது
க்கம்பதினறுகளை பத்துலட்சங்கோடியுண்டு
ந்தமரத்தருகே ஆச்சிதவமிருந்தாள்
ண்ணிரண்டுமூடிக்கொண்டு கைகள்ரெண்டுமேந்திக்கொண்டு
ரனேசிவனேயென்று ஆண்டவனைத்தோத்தரித்து
ந்தச்சமயத்தில் யங்கேவந்துகாத்தவனர்
ாதமதுதுலக்கிப் பட்டாலடிதுவட்டி
ுஷ்பங்கள்தான்சொரிந்து போட்டார்திருமுடியை
ரணமென்றுதெண்டனிட்டு சாய்த்தார்திருமுடியை
ந்துபணிந்தவரைக் கண்டுவிட்டாள்காமாட்சி
ாயாலேவாழ்த்தியவள் மார்போடேதானணைத்து
ங்காவனங்களது புட்பவனங்காத்தவனே
ந்துபணிந்தவகை யெனக்கறியச்சொல்லுமென்றாள்
அப்போதுபஞ்சவர்ணம் ஆச்சியருக்கேதுசொல்வார்
ஆயிரம்வேதியரை யவருடையதேவிகளை
யமாதுகுலைத்துநா நிஷ்டையடைத்துவந்தேன்

என்றுமவருரைக்க ஈஸ்வரியாள்தான்கேட்டு
முத்துவிரல்சுற்றி முகத்தின்மேல்கையைவைத்தாள்
தங்கவிரல்சுற்றி தாடையில்கையைவைத்தாள்
பவழவிரலைசுற்றி பார்வதியாளேதுசெய்தாள்
ஆர்குடியைநீகெடுக்க ஆண்டிவேஷங்கொண்டாயடா
எவர்குடியைநீகெடுக்க யிந்தவேஷங்கொண்டாயடா
நான்கட்டிவரச்சொன்னால் நீவெட்டியேவந்திடுவாய்
எதுக்குஞ்சமர்த்தனடா யேதுக்கும்வல்லவண்டா
பெண்ணென்றஆசைதனைப் போட்டுமறந்துவிடு
கன்னியென்றஆசைதனைக் கடக்கவெறிந்துவிடும்
ஆரியப்பூராசாவினுக்கினைகள்மெத்தவுண்டு
துர்ப்போசிராசாவும் துளசிங்கராசாவும்
மூன்றுபேர்ராசாக்களொன்பதுபேர்மந்திரிகள்
வலியன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
அவனுடையகாவலிலே அதிகாரமெத்தவுண்டு
அடிமேலடியெடுப்பான் அழகுசிவப்புடையான்
முள்மேலடியெடுப்பான் முனைவீரன்சிவப்புடையான்
கல்மேலடியெடுப்பான் கட்டழகன்சிவப்புடையான்
அவனுடையகாவலது அருமகனேசொல்லுகிறேன்கேள்
சிட்டுப்பறவாது சிறுகுருவிநாடாது
காகம்பறவாது கருங்குருவிநாடாது
அள்ளப்பறவாது அணிகள்வந்துசேராது
கிள்ளப்பழுத்தாலும் கிளிகள்வந்துசேராது
அவன் உண்டைதப்பிப்போனாலும் உயிர்தப்பபோறதில்லை
குண்டுதப்பிப்போனாலும் குறிதப்பப்போறதில்லை
அவனுடையகாவலிலே ஆணழகாநீதானும்
எப்படிக்குப்போய்வருவா யென்மகனேகண்மணியே
மாலையென்றசொல்லு மறந்துவிடுயென்மகனே
பெண்ணென்றசொல்லையல்லோ போட்டுமறந்துவிடு
நாலானசாதியிலே மேலானசாதியவள்
ஐயன்மகளைத்தொட்டா லளவற்றபாவம்வரும்
தாயிலும்பத்தினியாள் தாரமென்றெண்ணாதே
என்னிலும்பத்தினியா ளிடையூறுசொல்லாதே
தீண்டாதஅக்கினிதான் தெய்வப்பசுங்கிளியாள்
அண்டாப்பெருநெருப்பு ஆரியமாலையவள்
வேதியன்பெண்ணுமே வீணாய்மடியணுமே

யன்மகளாலே யனீதமாய்மாளணுமா
வளுக்குமுனக்கும் யேணிவைத்துபார்க்கணுமா
-ன் தகப்பனிட்சாபமது தானேபலித்துதடா
வரிட்டசாபமது அன்பாய்பலிக்குமடா
-னக்கென்றுகழுமரந்தான் ஊசிபோல்களருதடா
தூண்டில்துடைப்பெருமன் தூண்டுமுள்ளுகைப்பெருமன்
ழுவோகழுவழகோ கழுவினிடசிங்காரம்
தூண்டில்துடைப்பெருமன் தூண்டிமுள்ளுகைப்பெருமன்
ண்டைக்குகோடாலி மார்புக்கிருப்புலக்கை
அவளாருஅய்யன்மகள் நீயாருஆண்டிமகன்
தொண்டைக்குப்பாயுமுள்ளு தொண்டைகளுக்குருகுமுள்ளு
ாபியிற்பாயுமுள்ளு நடுவுச்சிக்கேருமடா
தூண்டிலிருக்கணுமா துடிதுடித்துசாகணுமா
கழுவிலிருக்கணுமா கண்டபேர்யேசணுமா
ஏசணுமோபேசணுமா யாவரும்நிந்திக்கவோ
மாலையென்றசொல்வசனம் மறந்துவிடுயென்மகனே
பெண்ணுனக்குவேண்டுமானல் போறேனடாதெய்வபுரம்
தெய்வபுரம்நான்போயி தெய்வப்பெண்கள்கொண்டுவாரேன்
சத்தலோகம்போயிருந்து சத்தகன்னிகொண்டுவாறேன்
என் அண்ணன்மகளாரை யரிவைபரைகொண்டுவாறேன்
அண்ணன்மகளென்று ளவள்பேரைச்சொல்லுமென்றுன்
அப்போதுகாமாட்சி யறிவையெடுத்துரைப்பாள்
ஏழுகறுப்பனென்று லவர்பேரைச்சொல்லுமென்றுன்
மைந்தனுரைகேட்டு மாதாவெடுத்துரைப்பாள்
வாங்கறுப்பன்பூங்கறுப்பன் மதுரைச்சிறுகறுப்பன்
சங்கிலிகறுப்பனுடன் தனிக்கறுப்பனேழுபேர்கள்
அம்மான்மகள்கறுப்பழகி அவளழகைச்சொல்லுகிறேன்கேள்
சந்திற்குஞ்சூரியற்குஞ் சற்றேகறுப்புமுண்டு
அந்திரற்கும்வானவற்கு மென்னளவுமச்சவுண்டு
ஓடுகிறகெங்கையற்கு உள்ளேசுழலுமுண்டு
துண்டுமணிக்காணலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
கோவைப்பழத்துக்கு குவளேசிவப்புமுண்டு
ஆடிவருநாகத்திற்கு நடுத்தலையில்மச்சமுண்டு
அம்மான்மகளாற்கு அணுவளவுந்தோஷமில்லை
மயிரேகறுப்பொழிய மற்றதெல்லாந்தங்கநிறம்
விழியேகறுப்பொழிய மேனியெல்லாந்தங்கநிறம்

பொட்டேகறுப்பொழிய பொற்கொடியாள் தங்கநிறம்
சாமளவர்னமடா தையலிளங்கொடியாள்
கெருடக்கண்பார்வையடா கிளிமொழியாள்கறுப்பழகி
அவளுடையகோட்டையிலே அஞ்சுசுற்றுகல்மணிகள்
கல்மணிகட்டிருக்கும் கட்டழகிகோட்டையிலே
சக்கரமுலாவிவரும் தையலிடகோட்டையிலே
அவளைகெலிப்பார்க ளாருமில்லைகோட்டையிலே
அவ்வளவுபெருமையுள்ள அம்மான்மகளிருக்க
மாலைமாலையென்றுசொல்லி வதைக்கிறுயெந்தனை நீ
மாலைதனையொழிய மற்றொருபெண்ணேதுக்கடா
சொந்தப்பெண்தானிருக்க யிரவல்பெண்ணேதுக்கடா
வேண்டாமடாயென்மகனே மெல்லியந்தமாலையவள்
மாலையென்றசொல்வசன மறந்துவிடுயென்மகனே
மாலையரேவேண்டுமானுல் மன்னவனேசொல்லுகிறேன்
சத்தகன்னிதன்வனத்தே தனஞ்சயனேநீபோயி
அவள்-பன்னிரண்டொருவருஷம் பாரதவஞ்செய்கிருள்
ஈஸ்வரனைத்தானேக்கி யிருந்துதவஞ்செய்கிருள்
அவள்-தவநெறியைதான்குலைத்து தனஞ்சயனேவந்தாயானுல்
உச்சிமலையைவிட்டு உத்தமிகள்தாமிரங்கி
மைந்தனேயுன்கூட வரவேண்டுங்கன்னியர்கள்
சத்தகன்னியானவற்குந் தகுந்தபுருஷன்வேண்டி
தவமிருக்குங்கன்னிகளை யிவ்விடத்திற்கொண்டுவந்தால்
அப்போதுநீசமர்த்தன் ஆணழகாபஞ்சவர்னம்
கேட்டவரம்நான்தாரேன் கீர்த்தியுள்ளமன்னவரே
அப்படியேநான்போறேன் ஆச்சிவிடைதாருமென்ருன்
ஆதிசிவன்கப்பலிலே அமர்ந்தெழுந்தவெண்ணீறு
பரமசிவன்கப்பலிலே பதிந்தெழுந்தவெண்ணீறு
காடுவெட்டிசுட்டெரித்த கர்த்தரிடவெண்ணீறு
தெத்துவெட்டிச்சுட்டெரித்த சிவனுர்தண்வெண்ணீறு
வெண்ணீருதானெடுத்து விமலியவள்கைகொடுத்தாள்
வெண்ணீறுவட்டமிட்டு விமலிபிள்ளையேதுசெய்தார்

கூ-வது வேதியர்களை ஆசாரங்குலைந்தவனம்

முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.



காத்தவராயசுவாமிகண்ட.

## சந்தகன்னிவனம்.

---

விநாயகர் துதி-வெண்செந்துறை.

சாரும்பணியுமையாள் தந்தக்கணபதியே
ஆம்பல்முகத்தோனே ஐந்துகரத்தோனே
நாற்றவமிருந்தாரும் நாயேற்குமுன்வாருய்
புறவந்தனைக்காத்த பூபாலன்றன்கதைக்கு
மாசொன்றும்வாராமல் வன்பொருளுஞ்சொற்சுவையும்
ஆசுடனேதந்தெனக்கு அளிப்பாய்மதகளிறே.

கதையின் வரலாறு.

எங்குமெள்ளவாருரா மெங்கள்துரைபஞ்சவர்னம்
உப்பங்கிடாரவழி நினைத்தாராங்கோடிபுத்தி
வங்கணத்துச்சின்னனே மதகளிரேவாருமென்ருன்
சின்னனுமங்கேவந்து சிறப்பாகவேதுசொல்வான்
என்னையழைத்தபணி யெனக்கரியச்சொல்லுமென்ருன்
வகைபிரித்துச்சொல்லுமென்ருன் வங்கணத்துச்சின்னனும்
மாலையைச்சிறையெடுக்க மாதாவைநான்கேட்டேன்
மாதாயெனக்குறைத்த வகைதனைச்சொல்லுகிறேன்
சத்தகன்னியேழுபேராம் தையலிலங்கொடிமார்
உச்சிமலைமேலே உத்தமிகளேழுபேரும்
தவஞ்செய்திருக்கிருர்கள் தையலந்தயேழுபேரும்

அவள்-தவத்தைக்குலைத்துமல்லோதையலரைக்கொண்டுவந்தாள்
மாலையைச்சிறையெடுக்க வரந்தாரேனென்றுரைத்தாள்
அப்படியேபோறேனென்று அன்பாகவந்தேனடா
என்றுமிவர்சொல்லையிலே யேதுசொல்வான்சின்னானும்
கெட்டேன்சிவனேயென்றான் கேடுவந்துசேர்ந்ததென்றான்
ஐயோசிவனேயென்றான் அனர்த்தம்வந்துநேர்ந்ததென்றான்
பாரவனங்களெல்லாம் பன்னிரண்டுதன்வருஷம்
ஊசிமுனைமேலே யொருகாலையூணவைத்து
அரனேபரனேயென்று ஆண்டவனைத்தானினைத்து
அடித்துவருங்காற்றுகளை ஆகாரந்தான்புசித்து
கண்களைமூடிக்கொண்டு கன்னிதவஞ்செய்கின்றார்
அவர்களைக்கொண்டுவர வாகுமோயுன்னாலே
அப்பாணைசுவாமியாணை அரிவையரைகொண்டுவர
உன்னாலுமாகாது யமனாலுமாகாது
ஆண்டவன்மேலாணைகண்டா யடியேனும்வாரதில்லை
சின்னானுரைகேட்டுச் சுவாமியெடுத்துரைப்பார்
பஞ்சையடாநீபயலே பாரமில்லையெந்தனுக்கு
கொஞ்சமடாநீபயலே கூளமடாநீயெனக்கு
நானேறிப்போவதற்கு நல்லகுதிரையொன்று
கொண்டுவாருமென்றார் குமரேசர்பஞ்சவர்னம்
அட்சணத்திலோடிவந்தான் ஆணழகர்பஞ்சவர்னம்
மான்தேசிவெண்புரவி வகையாகவுண்டுபண்ணான்
ஆண்டவனுந்தான்பார்த்து அங்ஙனமேயேதுசொல்வார்
என்னடாசின்னானே யிப்புரவிகொண்டுவந்தாய்
என்றுமிவருரைக்க யேதுசொல்வான்சின்னானும்
அதின்பேரிலேறினாலோ அப்போதெரியுமையா
நாகங்கடிவாளம் நலமான அங்குபிடி
கடிவாளங்கைபிடித்துக் கட்டழகரேறினாரே
ஏறினமாத்திரத்தில் யிரடிவிழுந்துதங்கே
என்னடாசின்னானே யேளினமோசெய்யவந்தாய்
என்றிவர்சொல்லையிலே யேதுசொல்வான்சின்னானும்
லகானையிழுத்து நலமாகபிடித்தீரானால்
அப்போபறக்குமையா ஆண்டவனேவெண்புரவி
அப்படியேதானிழுத்தார் ஆண்டவனார்கோல்விமலே
அந்தரத்திற்பறக்குதுபார் அழகானவெண்புரவி

ஆலிலைசரசலென்ன அலைகடலுந்தானடுங்க
செந்தூள்பறக்குதங்கே சூரியனைக்கண்மறைக்க
கருந்தூளெழும்புதங்கே கதிரோனைக்கப்புகுது
ஆகாயம்பறக்கையிலே ஆண்டவனூர்வெண்புரவி
மெத்தப்பயந்தாராம் மேனியெல்லாந்தானடுங்கி
அடித்தொடையுங்காலிரண்டும் அதிரநடுங்கிடவே
தம்பிதம்பிசின்னானே தனஞ்செயனேயென்னசெய்வேன்
ஆபத்துவேளையிலே ஆதரிக்கவேண்டுமடா
அபயமபயமென்று அலறலுற்றாராண்டவனூர்
நீஎங்கேயிருந்தாலு மிங்குவரவேண்டுமடா
வாராமல்நீயிருந்தால் மாண்டுமடிந்திடுவேன்
என்றிவர்சொல்லையிலே யிதுகேட்டுசின்னானும்
கோடையிடிபோல கொப்பெனவேஷங்கொண்டு
ஆண்டவரைத்தானினைந்து ஆகாயமேபறந்து
கொல்லிமலைகாணமல் குதிரையடிவயிற்றில்
இருந்துகொண்டுசின்னானு மேதுசொல்வானப்போது
சுவாமியழும்வேளையிலே தான்கேட்டுச்சின்னானும்
ஏனையாவென்று யெதிர்வந்துநிற்கையிலே
எங்கேயடாநீயிருந்து யின்பமுடன்வந்தாயென்றார்
எங்கேயிருந்தேனையா வென்றுசொன்னான்சின்னானும்
குதிரையிறங்கும்வகை கொற்றவனேசொல்லுமென்றார்
லகானைத்தளரவிட்டு நலமாயிறங்குமென்றார்
மாஞ்சோலைக்குள்ளாக வந்துயிறங்கினார்கள்
மண்டபத்துக்குள்ளாக வந்தாரிருவர்கள்
பஞ்சணைமெத்தைமுதல் பலவிதமுண்டுபண்ணார்
ஒருகின்னரிகைசோடியென்றார் கிளிமொழியாள்புத்திரனும்
அதுகேட்டுசின்னானும் அவசரமாயோடிவந்து
ஈழத்துமூங்கிலதை யிழுத்தெடுத்துகைபிடித்து
நாணயத்துமூங்கிலதை நடுத்தரமாய்கொண்டுவந்து
தரையிற்படர்ந்ததொரு தங்கநல்லபேச்சுரக்காய்
நிலத்தில்படர்ந்ததொரு நீலவர்னபேச்சுரக்காய்
முதற்குடுக்கைமுத்துவர்னம் நடுகுடுக்கைநாகரத்தினம்
கோனைகுடுக்கைபவளநிறம் கொற்றவனுருண்டுபண்ணார்
முன்னான்குபனிரெண்டு மெட்டுவைத்தாரப்போது
நால்நான்குபதினாறு நலமாகமெட்டுவைத்தார்
மயிலொடுகுயிலிறகை வைத்திழைத்தகின்னாரம்
ஆனைநரம்பெடுத்தா ராட்டிவைத்தார்கின்னாரம்
அப்படியும்பேசவில்லை அழகுடையகின்னாரம்
மூன்கைநரம்பெடுத்து மூன்றுதந்திபிருதுவெடுத்தார்

மார்பில்வைத்தார்கின்னரியை மடியில்வைத்தார்சித்துடுக்கை
தோலில்வைத்தார்கின்னரியை துடையில்வைத்தார்சிற்றுடுக்கை
ஆள்காட்டும்விரல்சுழற்றி யடித்தாராம்கின்னரியை
தட்சணவிரல்சுழற்றி தானடித்தார்கின்னரியை
என்னசொல்லிபாடுதுபார் யின்பமுடன்கிண்ணாரம்
அடி-கொல்லிமலைகன்னிகளே கொடியிடையேயப்போது
என்னைக்குறித்துதவ மிருக்கின்றீர்கன்னிகளே
பன்னிரண்டுநால்வருடம் பாரதவஞ்செய்துவாரீர்
ஊசிமுனையில்நின்று வுகந்துதவஞ்செய்கிறீர்
எண்ணமில்லாமிப்பொழுதே மீடேறவந்துதடி
கைலைதனில்நானிருந்து கன்னியரேயிங்குவந்தேன்
உங்கள்பலநீடேற வொளிவுடனேயிங்குவந்தேன்
சல்தியாய்வந்தாலே தையலரேவுங்களுக்கு
கோரும்வரங்களெல்லாம் கொடுத்திடுவேனிப்போது
சல்தியாய்நீவராவிட்டால் தாண்டிநடந்திடுவேன்
சீக்கிரத்தில்வாருமென்று தெரித்துவிட்டார்கின்னரியை
உங்கள்மார்புக்கிசைந்தவண்டி மன்மதண்டியுங்களுக்கு
தோளுக்கிசைந்தவண்டி துரைமகண்டியுங்களுக்கு
கைநிறைந்தரத்தினத்திலும் கண்ணிறைந்தபுருஷனடி
தேடித்திரிந்தாலும் திருவழகைக்காணீர்கள்
ஓடித்திரிந்தாலும் ஒளிவழகைக்காணீர்கள்
சீக்கிரத்தில்வந்தாலே திருமுகத்தைக்கண்டிடலாம்
என்றிவர்சொல்லையிலே யடித்தாரேகின்னரியை
அடித்தநல்லசத்தமதை அரிவையர்கள்தான்கேட்டு
நேமமறந்தார்கள் நிஷ்டைகளைத்தான்மறந்தார்
செபதபங்களைமறந்து திகைத்துமதிகுலைந்து
இளையகன்னியானவரு மற்றவரைத்தாமழைத்து
வாங்களடிகன்னிகளே மாதர்களேசொல்லுகிறேன்
நாம்செய்தநற்றவங்கள் நலமாய்ப்பலித்துதடி
எண்ணினவெண்ணமெல்லா மீடேறிவந்துதிப்போ
கைலையிற்றானிருந்து கடவுளவர்வந்தாரே
இனிமேற்குறைகளென்ன எழுந்திருங்கள்போய்பார்ப்போம்
என்றுஇளையகன்னி யெடுத்துரைக்கும்வேளையிலே
மற்றபேர்கன்னியர்கள் மாதருரைகேட்டு
ஏதடியிளையகன்னி யெங்கேயழைக்கிறாய்
ஆண்டவனார்வந்தார்காண் அன்பாயெழுந்திருங்கள்
நமக்கேற்றநாயகனார் நலமாகவந்தாரே
ஆகையாலுங்களைத்தா னன்பாயெழுப்பினேனென்
இளையகன்னிதானுரைக்க யாவர்களுங்கேட்டு
உச்சிமலையைவிட்டு வுடனேயிறங்கலுற்றார்
இளையகன்னிதன்னுடனே யேழுகன்னிவாறார்கள்

மலையைவிட்டுகீழிரங்கி மயிலணைமார்வாரூர்கள்
ஆண்டவனைத்தேடியல்லோ அரிவையர்கள்வாரூர்கள்
கண்டுவிட்டார்காத்தவனூர் காரிழைமார்வரவுதன்னை
இனியிருந்தால்மோசமென்று யெங்கள்துரையேதுசெய்தார்

## காத்தவராயசுவாமி மாலைவேடங்கொள்ளல்.

வாவென்றழைத்தாராம் வருகுதுமருவேஷம்
கொல்லிமலைக்கன்னிகளை கொற்றவனூர் தானினைந்து
நாணற்பூப்போலே நரைத்தகிழவனூர்
குக்கென்றிரும்புவாராம் கோழைவந்துமாரடைக்கும்
வப்புவாய்கொட்டிவர வாய்நீரொழுகிவர
கண்ணிரண்டுங்கீரைவிரை காதிரண்டுங்கேளாது
கொட்டாங்கச்சிகின்னரியை கொற்றவனூர்கைபிடித்து
மண்டபத்தின்பின்னூலே படுகுழிதானுண்டுபண்ணூர்
நவரத்தினசல்லாவை நலமாகமேற்பார்த்து
இரத்தினகின்னரியை நலமாகசாத்திவைத்து
படுகுழியிற்போயுமல்லோ பாங்காகவுட்கார்ந்து
மேலேபலகைகொண்டு மணல்கொண்டுமூடிவிட்டார்
இப்படிக்குத்தானிருந்தா ரெங்கள்துரைபஞ்சவர்னம்
அந்தசமயத்திலே அருங்கிளிமார்கன்னியர்கள்
ஈஸ்வரனைத்தேடியல்லோ ஏழுபேரும்வாரூர்கள்
மண்டபத்தருகாக வந்துமவர்பார்த்து
ஆருபேர்கன்னிகளும் யிளைவளைக்கேட்கலுற்றூர்
என்னடியிளையகன்னி யெங்களையிழுத்துவந்தாய்
அத்தைமகன்வந்தானென்று அழைத்துக்கொண்டுவந்தாயே
எங்கேயவர்போனூரடி யெனக்கரியச்சொல்லுமென்றூள்
மண்டபத்துக்குளக்கரையில் வாங்களடியென்றுரைத்தாள்
அப்படியேவந்தார்க ளாறுபேர்கன்னியர்கள்
மண்டபத்துக்குள்ளேவந்து மயிலணைமார்பார்க்கலுற்றூர்
உல்லாசமாகவல்லோ வுத்தமனூர்நித்திரைபோனூர்
நம்மினும்வல்லவன்றூன் நலமுடனேயத்தைமகன்
ஏதுக்கும்சமர்த்தனடி யேதுக்கும்வல்லவண்டி
வல்லாண்மையுள்ளவண்டி மகாபயம்கற்றவண்டி
நித்திரைபோறூரென்று நேராகவந்துநின்று
தட்டியெழுப்பினூலே சல்தியிலேயெழுந்துநிற்பார்
கால்மாட்டிலேயொருத்தி கன்னியரேவுட்காரும்
பக்கத்தினிரண்டுபேர் பாங்காகவுட்காரும்
அப்படியேவுட்கார்ந்தாள் தையலிளையகன்னி
சுவாமியுடகாலிரண்டுந் தையலர்பிடிக்கலுற்றூர்

காலொருத்திதான்பிடிக்க கையொருத்திதான்பிடிததார்
கைகால்பிடிக்கையிலே கட்டழகர்தேகமது
சொற்சொரென்றுதானிருக்கும் தோகையர்கள்கைகளுக்கு
என்னடியிளையகன்னி யிப்படிக்குத்தோற்றுகுது
மூக்காட்டைநீக்கியல்லோ மெல்லியர்கள்பார்க்கலுற்றார்
வைக்கோலைக்கண்டார்கள் மயிலணைமாலேழுபேரும்
அத்தைமகளென்றுசொல்லி வைக்கோலைக்காட்டிவிட்டாய்
என்னடியிளையகன்னி யென்றிவர்சொல்லையிலே
அடி-நம்மிலும்வல்லவண்டி நம்முடைய அத்தைமகன்
அஞ்சனத்தைதான்போட்டு அருய்ந்துபார்க்கலுற்றார்
அஞ்சனத்திற்றோற்றுகுது ஆண்டவனிருப்பிடங்கள்
மண்டபத்தின்பின்னாலே மன்னவனார்தானிருப்பார்
ஒளித்தேயிருக்கின்ற வுத்தமரைக்காட்டுகிறேன்
வாங்களென்றுசொல்லியல்லோ மயிலணையாள் கூட்டிவந்து
படுகுழியைத்தான்திறந்து பார்த்துவிட்டாளிளையகன்னி
தள்ளாதகிழவன்தான் சுவாமிதனைக்கண்டார்கள்
என்னடியிளையகன்னி யெங்களைக்கொண்டுவந்து
சாகுங்கிழவன்றனைத் தையலரேகாட்டிவிட்டாய்
இவன்தானோ அத்தைமகன் யிவனுக்காகநாங்கள்வந்தோம்
பண்ணதவங்களெல்லாம் பாழாகிப்போச்சுதோ
பனிரண்டுதன்வருஷம் பண்ணினதவங்களெல்லாம்
இக்கிழவனுக்காக யிருந்தோம்பெருந்தபசு
என்றுயிவர்கள்சொல்ல யிளையகன்னியேதுசொல்வாள்
இவனைவிடாதீர்கள் யெழுந்திருங்களேழுபேரும்
ஆளுக்கொருகைகொடுத்து அழகுள்ளகன்னியர்கள்
வீரமலைசுரிகை வெள்ளிமலைதன்னருகே
கொண்டுபோகவேணுமென்று கொம்பனைமார்வாறார்கள்

காத்தவராயசுவாமியும் கன்னிகளும் பலவேஷங்கொள்ளுதல்.

காத்தலிங்கசுவாமிதுரை கண்டுவிட்டார்பஞ்சவர்னம்
கெட்டுதுகுடிகளென்றார் கேடுவந்துநேர்ந்ததென்றார்
ஐயோசிவனேயென்று அனர்த்தம்வந்துநேர்ந்ததென்றார்
என்னடிஎன்தாயே யெனைவளர்த்தமாதாவே
மோசம்வந்துநேர்ந்துதிப்போ விமலியரேயென்னசெய்வேன்
என்னசெய்யப்போறேனென்று யெண்ணமிட்டாராண்டவனார்
கன்னியர்களேழுபேரும் காலைவரும்போது
உடலைவிட்டுயிப்போது உத்தமனாரெங்குவாறார்
ஆயிரங்கொக்குதனில் தோசிகொக்காய்தானிருந்தார்

பார்த்துவிட்டார்கன்னியர்கள் பங்கயஞ்சேர்கண்ணுளே
என்னடியிளையகன்னி யெங்களைக்கொண்டுவந்து
சாகும்கிழவன்றனைத் தையலரே தூக்குமென்ருய்
எடுத்துவரும்பொழுது யிறந்துமடிந்துவிட்டான்
அப்போதிளையகன்னி யவர்களிடசொற்கேட்டு
அஞ்சனத்தைபோட்டுமல்லோ ஆராய்ந்துபார்க்கலுற்ருர்
நமக்கெல்லாம்வல்லவண்டி நலமுள்ள அத்தைமகன்
அத்தைமகனிருப்பிடத்தை ஆராய்ந்துசொல்லுகிறேன்கேள்
ஆயிரங்கொக்குதனில் அருந்தோஷிகொக்காளுர்
அந்த-கொக்குக்கெதிரியல்லோ ராஜாளிவேஷங்கொண்டாள்
வேட்டைக்காரப்பெண்களைப்போல் மற்றபெண்கள்வேடங்கொண்டார்
உண்டிவில்லுதுப்பாக்கி யுடனேயவர்கைபிடித்து
சுத்திவளைத்தார்கள் தோகையிளங்கொடிமார்
இளையகன்னிதானுமப்போ ராஜாளிபோலேவந்து
காத்தவளுர்கொக்குதனை கவ்விக்கொண்டாள்வாய்தனிலே
விலலென்றுதைத்துக்கொண்டார் விமலிபிள்ளைபஞ்சவர்னம்
வாங்களடிபெண்களே மைத்துனளுர்சிக்கிக்கொண்டார்
ஓட்டம்பெருநடையா யோடிவந்தாசாறுபேரும்
சேர்த்துபிடித்தார்கள் தேன்மொழிமாராண்டவரை
அப்போதுபஞ்சவர்னம் மோசம்வந்துநேர்ந்ததென்று

காத்தவராயசுவாமி மாறுவேஷங்கொள்ளல்.

என்னவேஷங்கொள்ளுகிறு ரிளமையுள்ள காத்தவளுர்
தாயைமனதிலெண்ணி தகப்பனைநெஞ்சிலெண்ணி
உடல்விட்டுயிர்பேர்ந்து ஓடியேயெங்குவாருர்
வாளைகொண்டமடுவை வையையாறுதேடிவாருர்
ஆயிரமாமையிலே தானுமொருமாமையாளுர்
வெள்ளாமைபோலேயல்லோ விமலிபிள்ளையுருவாகி
தாழம்புதருக்குள்ளே சுவாமியவர்போய்நுழைந்து
கண்டார்கள்கன்னியர்கள் கட்டழகர்தான்ரூபம்
என்னடியிளையகன்னி யெங்களைக்கொண்டுவந்து
அத்தைமகன்வந்தாரென்று அரிவையரேநீயழைத்தாய்
எங்கடிஅத்தைமக னென்ருர்களாறுபேரும்
நம்மைவிடகெட்டிக்கார னன்மையுள்ளமாமிமகன்
அஞ்சனத்தைபோட்டுமவ ளாராய்ந்துபார்க்கலுற்ருள்
என்னடிபெண்டுகளே யிளங்கொடிமார்கன்னிகளே
ஆயிரமாமையிலே பாலாமைபோலாகி
தாழம்புதருக்குள்ளே சுவாமிபதுங்கிறுமே

ஆமைக்குவைரியாக யெடுங்களடிவேஷமென்றாள்
வல்லியப்பெண்களைப்போல் மெல்லியர்கள்வேஷங்கொண்டு
சில்லாக்கோல்கைபிடித்து தேன்மொழிமாரேதுசெய்தார்
குளத்திலுள்ளஆமைகளைக் குத்திவெட்டித்தானறிந்து
வெள்ளாமைபோலிருந்த விமலரண்டையோடிவந்து
இளையகன்னிதான்பார்த்து யிருக்கிப்பிடித்துக்கொண்டு
வாங்களடிபெண்டுகளே மைத்துனனூர்சிக்கிக்கொண்டார்
ஓடிநீங்கள்வாங்களடி யுத்தமனூர்சிக்கிக்கொண்டார்
இளையகன்னிசொற்கேட்டு யாவர்களுமோடிவந்து
காத்தவரைத்தாமெடுத்து கன்னியர்கள்வாறூர்கள்
பார்த்தாராம்பஞ்சவர்ணம் பாவைமார்வித்தைகளை
என்னசெய்யப்போறூரென்று யெண்ணுதுமெண்ணியவர்
உடலைவிட்டுபிரிந்து உத்தமனூரோடிவந்து
ஆயிரம்ஆடுகளில் அதிலொருஆடானூர்
கண்டாரேகன்னியர்கள் காளையிடகோலங்களை
அத்தைமகனென்றுசொல்லி ஆமைதனைக்காட்டிவிட்டாய்
ஆமையதுஎங்கேயடி அருங்கிளியேசொல்லுமென்றூர்
வல்லாண்மையுள்ளவண்டி மாமிமகன்தான்சமர்த்தன்
மங்கையிலிருக்கின்றூர் மைத்துனரும்வாருமென்றூர்
ஆட்டுக்குவைரியது கோனுய்போலவேஷங்கொண்டு
ஆயிரம்ஆடுகளை யதஞ்செய்தார்கன்னியர்கள்
இளையகன்னியோடிவந்து யிவரைமெள்ளகவ்விக்கொண்டு
வாங்களடிமாதர்களே மைத்துனனூர்சிக்கிக்கொண்டார்
ஈசன்மகன்தானும் ஈசல்வடிவானூர்
ஆயிரம்ஈசலிலே அழகீசல்போலானூர்
என்னடிஇளையகன்னி யெங்கேயடிமைத்துனனூர்
ஈஸ்வரனூர்மைத்துனனூர் யென்பிறகேவாருமென்றூர்
ஈசலுக்குவைரியப்போ லெடுத்தார்கள்வேஷமெங்கே
சாவல்கோழிகாடையைப்போல் தையலர்கள்வேஷங்கொண்டார்
ஈசல்களைதான்பிடித்து செல்லரயுதரிவிட்டார்
இளையகன்னியோடிவந்து யிவரைபிடித்துக்கொண்டு
அனைவரும்வாங்களடி அகப்பட்டாரத்தைமகன்
ஓடிவந்துகன்னியர்கள் வுத்தமரைகவ்விக்கொண்டார்
கண்டாரேபஞ்சவர்ணம் கனமோசம்வந்ததென்று
உடலைவிட்டுயிரெழும்பி உத்தமருமேதுசெய்தார்
வலையன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
அவனுடையகாதுதனி லணிந்தகடுக்கனிலே
ஆணிமுத்துபோலாக ஆண்டவனூர்போயொளித்தார்

என்னடியிளையகன்னி யேக்கிறுயெங்களை நீ
எங்கேயடியத்தமகன் யென்றார்கள்கன்னியர்கள்
அப்போதிளையகன்னி அஞ்சனத்தில்பார்க்கலுற்றாள்
சிவப்புடையான்காதுகளில் தரித்தகடுக்கனிலே
அத்தைமகன்மைத்துனரும் ஆணிமுத்தாகிநின்றார்
எடுங்கடிவேஷமென்று ளிளையகன்னியப்பொழுது
வித்வானைப்போலேயல்லோ மெல்லியர்கள்வேஷங்கொண்டு
சிவப்புடையானிருப்பிடத்தே தேடிமெள்ளவாறூர்கள்
கவிசொல்லும்புலவரைப்போல் கன்னியர்கள்வேஷங்கொண்டு
சிவப்புடையான்றன்னைக்கண்டு தெரிவையர்களேதுசொல்வார்
மன்றுதலையாரி மன்னவனேநீகேளு
வெகுதூரந்தனிலிருந்து வித்வான்கள்தேடிவந்தோம்
உன்னைப்போல்தருமவான்க ளுலகத்திற்கண்டதில்லை
நாங்கள்பாடுங்கவிகளுக்கு தியாகங்கொடுக்கவேணும்
என்றுசொல்லிக்கன்னியர்க ளெடுத்தார்சிலகவிகள்
கட்டழகன்மீதிலல்லோ கவிகட்டிபாடினார்கள்
வலையன்சிவப்புடையான் மன்னன்மனமகிழ்ந்து
என்னவேண்டுமுங்களுக்கு எனக்கரியச்சொல்லுமென்றான்
அப்போதுகன்னியர்க ளன்பாகயெடுத்துரைப்பார்
கடுக்கனில்தரித்திருக்கும் கட்டாணிமுத்துவேண்டும்
அப்படியேதான்கொடுத்தா னழகானஆணிமுத்தை
இளையகன்னிவாங்கிக்கொண்டு யேழுபேரும்வாறூர்கள்
கொல்லிமலைதேடிக் கொம்பனைமார்வாறூர்கள்
முத்தையழுத்தையிலே விமலிபிள்ளைகண்டுவிட்டார்
இதுவென்னமோசமென்று யேதுசெய்தார்பஞ்சவர்னம்
பிள்ளைபூச்சிப்போலாக புண்ணியனார்வேஷங்கொண்டு
கையைத்துளைக்கையிலே கனனியர்கள்தான்பார்த்து
திடுக்கிட்டுகன்னியர்கள் சீக்கிரமாய்க்கீழேபோட்டார்
சுண்டெலியைப்போலேயல்லோ சுவாமிவடிவானார்
ஓட்டம்பெருநடையாய் ஓடிவந்தாராண்டவனார்
கழனிவரப்புகளில் கட்டழகரோடிவந்து
அங்கேயொருவளையி லாண்டவனார்போயொளித்தார்
என்னடியிளையகன்னி எங்குகற்றாய்சூதுகளை
அத்தைலகனென்றுசொல்லி யாசைகாட்டிகொண்டுவந்தாய்
எங்கேயடியத்தைமக னென்றார்கள்கன்னியர்கள்
வல்லாண்மைக்காரனடி மாமிமகன்மோசமில்லை
சுண்டெலிபோலேயல்லோ சுரூபங்கொண்டார்மைத்துனரும்
வாங்களடியென்றுசொல்லி மயிலனைமாரோடிவந்து
எலிவளையைத்தான்மூடி யிளையகன்னியங்கிருந்தாள்

குசவன்வீடுபோய்நீங்கள் குடுவைகொண்டுவாருமென்றாள்
ஒருத்தியையவளழைத்து நெருப்பெடுத்துவாருமென்றாள்
செவ்விளநீர்தோட்டத்திலே தேன்மொழிமார்சென்றமல்லோ
பன்னாடைகொண்டு வாருமென்றாளிளையகன்னி
வளையதனைக்காத்திருந்தாள் மயில்போலிளையகன்னி
பன்னாடைகொண்டுவரப் போனதொருபைங்கொடியாள்
செவ்விளநீர்கண்திறந்து தேடிப்பொசிக்கலுற்றாள்
மற்றுமொருகன்னியவள் மங்கையரைத்தேடிவந்து
அவளுமரமேறி யன்பாய்ப்பொசிக்கலுற்றாள்
இன்னமொருகன்னியவ ளிருவர்களைத்தேடிவந்து
தென்னமரமேறித் தேங்காய்பொசிக்கலுற்றாள்
இப்படியாகயிவர் தேங்காய்பொசிக்கையிலே
இளையகன்னியானவளும் இவர்களைக்காணோமென்று
ஆறுபேரைக்காணோமென்று அவளுமெழுந்திருந்து
பாறைகொண்டுவந்து பருத்தவளைமூடி
அஞ்சனச்சுவடி ரசக்குளிகைமைச்சிமிளு
பாறையின்கீழாகப் பக்குவமாய்வைத்துவிட்டு
ஆறுபேரைத்தேடிக்கொண்டு அரிவையருமிங்குவந்தாள்
கன்னிகளைக்கண்டவுடன் கடுகெனவேயேதுசெய்தாள்
தென்னமரமேறித் தேங்காய்பொசிக்கலுற்றாள்
இப்படியாகவிங்கே யேழுகன்னிதாமிருக்க
கண்டுவிட்டார்பஞ்சவர்ணங் கடுகெனவேயேதுசெய்தார்
இதுதான்சமயமென்று யெழுந்திருந்துகாத்தவனார்
வளையைவிட்டுவெளியில்வந்து மாரிபிள்ளையேதுசெய்தார்
ரசக்குளிகைமைச்சிமிளு அஞ்சனச்சுவடியதை
எடுத்துக்கொண்டுவந்து யெங்குமெல்லவாருமாம்
வாரவழிதனிலே வாவென்றார்சின்னானை
ஓட்டம்பெருநடையா யோடிவந்துதெண்டனிட்டு
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றான்
அப்போதுஆண்டவனு ரருங்கிளிமார்வார்த்தைசொல்வார்
ஏழுபேர்கன்னிகளு மெனைத்துரந்தார்கள்வத்தி
அவர்கள்கையில்சிக்காம லவனியெல்லாஞ்சுற்றிவந்தேன்
அவர்கள்-தென்னமரமேறித் தேங்காய்புசிக்கிறார்கள்
நீ-தோட்டக்காரபையனைப்போல் துரிதமாகவேஷங்கொண்டு
ஏழுபேர்கன்னிகளை யிழுத்துவரிந்துகட்டி
அங்கேகொண்டுவாருமென்று ரெங்கள்துரைபஞ்சவர்ணம்
அந்தவுரைகேட்டு அழகுசின்னான்நல்லதென்று
தோட்டக்காரமுத்தனைப்போல் சுறுக்காகவேஷங்கொண்டு

செவ்விளநீர்தோட்டத்திலே சின்னானும்வந்துநின்று
சுற்றியெங்கும்பார்த்தானே தோகைதின்னுந்தேங்காயை
போராய்குவிந்திருக்கும் பொற்கொடிமார்தின்னகனி
ஆரடிநீங்களென்று அதட்டியவன்கேட்கையிலே
மிரளவிழிக்கின்றார்கள் மெல்லியிளங்கொடிமார்
மரத்தைவிட்டிறங்குமென்றான் வகையுடனேசின்னானும்
அப்படியேயிறங்கினர் அந்தயிளங்கன்னியர்கள்
தோட்டத்தைக்கொள்ளையிட தோகையரேவந்தீர்கள்
நீங்கள்யாரென்றுசொல்லி நிஷ்டூரமாகக்கேட்க
சத்தகன்னியேழுபேர் தையல்மார்தவமிருந்தோம்
கிண்ணரக்காரனவன் கிளிமொழிமார்முன்னேவந்தார்
அவனையேதேடிக்கொண்டு அருங்கிளிகளுக்குவந்தோம்
எங்கெங்குந்தேடி யினியவிடமாராய்ந்து
பனியின்கொடுமையினால் பொறுக்கமுடிகூடவில்லை
தென்னமரமேறித் தேங்காய்புசித்திருந்தோம்
என்றிவர்கள்சொல்லையிலே யேதுசெய்தான்சின்னானும்
அண்ணனண்டைவாங்களென்று யரிவையரைக்கொண்டுவாரான்
அந்தச்சமயத்திலே ஆண்டவனாரேதுசெய்தார்
சிவப்புடையான்போலாகச் சீராய்வடிவெடுத்து
முத்திரைபில்லைச்சேவகன்போல் மூன்றுபூதமுண்டுபண்ணார்
அங்கேயொருமண்டபத்தி லனைவர்களும்வீற்றிருந்தார்
அந்தச்சமயத்திலே யழகுசின்னானேதுசெய்தான்
கன்னிகளைக்கூட்டிக்கொண்டு கட்டழகன்முன்வந்தான்
சுவாமியைப்பார்த்து சடுதியிலேதுசொல்வார்
என்னடாபிராதென யின்பமுடன்கேட்கலுற்றார்
செவ்விளநீர்மரங்களெல்லாம் சீராககொள்ளையிட்டார்
நாள்தோறுமிப்படியே நங்கையர்கள்தின்றுவாரார்
ஆரோயிவரோவென் றறியாமல்நானிருந்தேன்
இவர்களாலென்தோட்ட மெல்லாம்பாழாச்சுதையா
இன்றையதினமதிலே யென்கையிலகப்பட்டார்
கொண்டுவந்தேனையாவென்று கொற்றவனுந்தெண்டனிட்டான்
அப்போது ஆண்டவரும் சேவகருக்கேதுசொல்வார்
கட்டிவைத்துமொத்துமென்றார் கட்டழகர்பஞ்சவர்னம்
ஏழுபேர்கன்னிகளை யிழுத்துவந்துஅக்கணமே
மரத்துடன்வரிந்துகட்டி மாறுகுறுபூதமெல்லாம்
கட்டியடிக்கையிலே கன்னியர்களேதுசெய்தார்
அடிபொறுக்கமாட்டாம லழுதுபுலம்புகிறார்
ஐயோசிவனேயென் றழுதுமவரேதுசொல்வார்

கிண்ணரக்காரனாலே கேடுவந்துநேர்ந்ததென்று
தம்பூருக்காரனாலே தாழ்வுவந்ததெங்களுக்கு
உனக்குபுண்ணியமாய்ப்போகுதப்பா பிழைக்கின்றோம்விட்டுவிடு
பதினாயிரம்சரணம் பாவையரைவிட்டுவிடு
சரணமென்றுசொல்லையிலே தான்கேட்டுபஞ்சவர்னம்
கட்டையவிழ்த்துவிட்டார் கன்னியர்வெளியானார்
அழுதுபுலம்பிக்கொண்டு அரிவையர்கள்வாறார்கள்
அப்போதுபஞ்சவர்ன மாண்டவனாரேதுசெய்தார்
ஐந்துநிறமைந்துவர்னம் பஞ்சவர்னக்கிளியானார்
ஆலமரத்தின்மே லாண்டவனார்வீற்றிருந்தார்
ஏழுபேர்கன்னிகளு மெரிந்துவருகையிலே
நேமங்குலைந்துவிட்டோம் நிஷ்டையதுகுலைந்தோம்
பண்ணினதவங்களெல்லாம் பாழாச்சுதுன்னாலே
எண்ணினவெண்ணமெல்லா மிழிவாச்சுதுன்னாலே
உன்னாலேகெட்டோமடி ஊதாரியானவளே
என்றிவர்கள்சொல்லியல்லோ ஏழுபேரும்வாறார்கள்
பட்டுக்கிடப்பானவன் பாவிமகனெங்கிருந்தான்
உன்னாலேகெட்டதெல்லா மொருவனால்கெட்டதில்லை
என்றிவர்கள்சொல்லியல்லோ தேடுகிறாராயுதங்கள்
ரசக்குளிகைமைச்சிமிளும் அஞ்சனச்சுவடிகளை
நம்மை-இம்மோசம்செய்யவென்று எத்தனைநாள்காத்திருந்தான்
அவனுக்குஆகாதநோய்வந்து ஆளாய்சமையானோ
பொல்லாதநோய்வந்து போகானோபடுபாவி
என்றிவர்கள்திட்டிக்கொண்டு யேழுபேரும்போம்போது
ஆலமேலிருந்து ஆண்டவனார்தான்கேட்டு
என்சொல்லிப்பாடுகிறா ரெங்கள்துரைபஞ்சவர்னம்
ரங்காரங்காவென்றுசொல்லி ரங்கர்கவிபாடுகிறார்
இவர்-ரங்காவென்றசத்தம் நாயகிமார்தான்கேட்டு
நீ-ஆர்வளர்த்தரங்கனடா அன்பாகச்சொல்லுமென்றார்
பார்வதிவளர்த்ததுவோ பரமசிவன்வளர்த்ததுவோ
இலட்சுமிவளர்த்ததுவோ நாராயணர்வளர்த்ததுவோ
சரஸ்வதிவளர்த்ததுவோ சதுர்முகனார்வளர்த்ததுவோ
வள்ளிவளர்த்ததுவோ வடிவேலர்வளர்த்ததுவோ
தெற்கேயிருந்தவரோ திகைதப்பிவந்தவரோ
வடக்கேயிருந்தவரோ வகைதப்பிவந்தவரோ
அப்போதுரங்கைய னரிவையருக்கேதுசொல்வான்
நான்-தெற்கேயிருந்ததில்லை திகைதப்பிவந்ததில்லை

வடக்கேயிருந்ததில்லை வகைதப்பிவந்ததில்லை
காமாட்சிவளர்த்தெடுத்த காத்தவரங்கநான்தாண்டி
என்றிவர்சொல்லையிலே யேந்திழைமாரேதுசொல்வார்
எங்களிடத்துக்கு வாருமென்றுதாமழைத்தார்
இப்படியென்னையழைத்தா லெப்போதுவாரதில்லை
அத்தைமகனென்று அழைத்தால்வருவேனென்றார்
மாமிமகனென்று மரியாதைசொல்லுமென்றார்
அதுகேட்டுகன்னியர்க ளதிசயமாயேதுசொல்வார்
இப்படிக்குபேசுங்கிளி இவ்வுலகத்திற்கண்டதில்லை
நம்மாசைதீரவந்த நல்லதோரங்கனடி
அத்தைமகன்ரங்கையனே அப்படியேவாருமென்று
மாமிமகன்ரங்கையனே மைத்துனனேவாருமென்றார்
வாருமென்றுதானழைக்க மாரிபிள்ளையேதுசெய்தார்
செட்டைதட்டிசிறகொதுக்கி சிவ்வென்றுதான்பறந்து
இளையகன்னிகையிலே யின்பமுடன்வந்துநின்றார்
தழுவியவள்முத்தமிட்டு தையனல்லாளேழுபேரும்
எங்குகொண்டுவாறார்கள் யின்பமுள்ளஆண்டவரை
திருப்பாற்கடல்தேடி தேவியர்கள்வாறார்கள்
சமுத்திரக்கரையோரம்வந்து தையலர்களேதுசொல்வார்
என் அருமைத்திருமேனியனே ஆணழகாரங்கையனே
வசந்தநீராடிநீங்கள் வருமளவுமிவ்விடத்தில்
இங்கேயிருமென்று இளையகன்னிதாமுரைத்தாள்
அப்போதுஆண்டவனு ரருங்கிளியாட்கேதுசொல்வார்
சமுத்திரக்கரையிலே தையலரைமுளையடித்து
கட்டிவைத்துப்போங்களடி கன்னிகளேநானிருப்பேன்
உங்கள்ஆடைதனையிங்குவைத்து அரிவையரேபோங்களென்
அதுகேட்டுகன்னியர்க ளருங்கிளிமாரேதுசொல்வார்
என்னவதிசயமோ யிப்பெரியரங்கையன்
என்றிவர்கள்சொல்லி ஏழுபேருந்தாமெழுந்து
முளையடித்துரங்கையனை மெதுவாகயிழுத்துகட்டி
ஆடையவர்களைந்து ஆபரணந்தான்களைந்து
மந்திரஆடைகளை மயிலணைமார்தான்களைந்து
முன்களைந்தஆடைகளை ரங்கையனருகில்வைத்து
பார்த்திரும்ரங்காவென்று பாவையர்கள்போய்நடந்து
சமுத்திரத்திற்றணிரங்கி தையலர்கள்நீஞ்சலுற்றார்
கழுத்தளவுகங்கையிலே கன்னியர்கள்ஸ்நானஞ்செய்து
மாரளவுகங்கையிலே வசந்தநீராடலுற்றார்
தோளளவுகங்கையிலே தும்பிபாக்கலுற்றார்

இதுதான்சமயமென்று எங்கள்துரைபஞ்சவர்னம்
நிசரூபந்தானெடுத்து நிமலிபிள்ளைபஞ்சவர்னம்
ஆடையெடுத்துக்கொண்டு ஆண்டவனுரேதுசொல்வார
போறேனடியென்பிறகே பொற்கொடியேவாங்களென்று
ஓடுகின்றாரப்போது வுத்தமனுர்வேல்முருகன்
காளையவரோடுவதைக் கன்னியர்கள்கண்டார்கள்
கெட்டுதடிநம்குடிகள் கேடுவந்துநேர்ந்துதடி
கிள்ளையென்றுநாமிருந்தோம் கொள்ளைகொள்ளவந்தவண்டி
கிண்ணாரக்காரனிவன் கிளிமொழியேமோசமில்லை
தம்பூரக்காரனிவன் தானுரைக்ககுற்றமில்லை
இனிஇவனைவிடலாகாது யெழுந்திருங்களென்றுசொல்லி
ஆண்டவனுர்முன்னே அரிவையர்கள்பின்றொடர
அவர்முன்னோடப்பின்தொடர்ந்தார் மெல்லியர்களேழுபேரும்
இப்படியாய்வெகுதூரம் எட்டுபேருமோடலுற்றார்
விடுவிடென்றுதாமோடி மெல்லியர்கள்பின்றொடர்ந்தார்
காலுமைவந்துதங்கே கையிரண்டுமோய்ந்துதங்கே
இனியோடசத்தியில்லை யெங்கள்துரையானவற்கு
என்னவேஷங்கொள்ளுகிறு ரியலானமாரிபிள்ளை
கருங்குருமான்போலாகக் கடவுள்பிள்ளைவேஷங்கொண்டு
பட்டுபோனஆலமரக் கிளைமேலேவந்திருந்து
கன்னியர்களோடுவதைக் கண்டவருமேதுசொல்வார்
அவர்முன்னாலேபோகட்டென்று பின்னாலேயேதுசெய்வார்
சுழல்காற்றையுண்டுபண்ணர் தோகைபிள்ளைபஞ்சவர்னம்
காற்றுஅடிக்கையிலே கன்னியர்கள்சேலையெல்லாம்
அடித்துக்கொண்டுபோகுதங்கே அழகுதுகிலாடை
அவர்நேமங்குலைந்துவிட்டார் நிர்வாணமாகிவிட்டார்
கொஞ்சித்தழையொடித்து கொம்பனைமார்தாமுடுத்தி
வேப்பந்துகிலாடை மெல்லியர்களுடுத்திக்கொண்டார்
ஓட்டம்பெருநடையாய் ஓடிவாறார்கன்னியர்கள்
அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனுரேதுசெய்தார்
கள்ளிகாட்டுபூதங்களை கண்காட்டித்தானழைத்து
கன்னியர்கள்தாமுடுத்துங் கனத்ததழைகளதை
பள்ளாடுபோலேநீ பாரில்வடிவெடுத்து
கன்னிகட்குப்பின்னாலே கடுகப்போய்மேயுமென்றார்
அந்தவுரைகேட்டு மந்தபூதமேதுசெய்யும்
கன்னியர்களுடுத்ததழை கடுகெனவேமேயுதங்கே
வெட்கங்குலைந்தார்கள் மெல்லியர்களேழுபேரும்
ஆடைகளுமில்லாமல் அம்மணமாயோடலுற்றார்
அவர்ஓடுகின்றவேளையிலே வுத்தமனுர்முன்புகுந்து
போறேனடிவாங்களென்று புண்ணியனுரோடலுற்றார்

கண்டுவிட்டாரேழுபேருங் கலக்கமிடுங்காலே தனே
ஓடுறாண்டிபாவியவன் விடப்போகாதென்றுசொல்லி
கையாலுங்கூந்தலாலுங் கன்னியர்கள்மேல்மறைத்து
ஓட்டம்பெருநடையா யோடிவாறாரேழுபேரும்
முன்னகவோடையிலே விமலிபிள்ளைபஞ்சவர்
அங்கேயொருவோடை யெதிராகவுண்டுபண்ணி
படகின்மேல்தானேறிப் பாங்குடனேவீற்றிருந்தார்
அப்போதுகன்னியர்க ளங்கனமேயோடிவந்து
ஓடமதுகண்டு வுத்தமிமாரேதுசொல்வார்
ஓடக்காரமன்னவனே ஓடம்விடவேண்டுமென்றார்
அப்போது ஆண்டவனா ரரிவையருக்கேதுசொல்வார்
ஒவ்வொருபெண்களுக்கு யெவ்வேழுபொன்கொடுத்தால்
அப்போதுவிடுவேண்டி அழகுபொன்னாலேடமென்றார்
அப்படியேதான்கொடுத்தா ராரணங்குகன்னியர்கள்
படகின்மேலேறியல்லோ பாவையரைத்தள்ளிவாறார்
அக்கரையில்வந்தவுட னரிவையர்களோடலுற்றார்
வாங்களடியென்றுசொல்லி மாரிபிள்ளையோடுகிறார்
முன்னவவரோட பின்னாற்றுடருகின்றார்
மானீசன்துரைதேடி மாரிபிள்ளைவாராரே
வண்ணானைப்போலேயல்லோ வகையுடனேவேஷங்கொண்டு
ஏழுபேர் துகிலாடை யெடுத்துவந்தேதுசெய்தார்
தப்பியவர்சுவாமி தாழவேயுலரவைத்தார்
தாம்பூலந்தாமருந்தி துகிலாடைமேலுமிழ்ந்தார்
ஏழுபேர்கன்னியர்க ளவரிடத்திலோடிவந்து
வண்ணாரமன்னவனே வகையுடனேசொல்லுகிறோம்
ஆடைகளுமில்லாம லம்மணமாய்வந்துவிட்டோம்
ஆளுக்கோர்முழங்கந்தை யாணழகா நீகொடுத்தால்
மார்பின்மேல்போர்த்துகொண்டு மன்னவனேபோறோமென்றார்
அப்போதுபஞ்சவர்னம் ஆண்டவனாரேதுசெய்தார்
ஏழுமுழங்கிழித்து யேழுதுண்டாக்கியவர்
பந்துபோல்தான்சுருட்டி பாவையர்முன்விட்டெறிந்தார்
அம்மணமாய்நின்றவர்க ளனைவரும்போர்த்துகொண்டு
முன்னாலேபோறேனடி பின்னாலேவாங்களென்று
ஆண்டவனாரோடுவந்தை யரிவையர்கள்கண்டவுடன்
கன்னியர்கள்பின்றொடர்ந்து காந்தாளகோபங்கொண்டு
கல்லாகமண்ணாகக் கரியாய்ச்சபிப்போமென்று
பொறுக்கவொண்ணாக்கோபமுடன் பூவையர்கள்வருகிறதை
கண்டுவிட்டாராண்டவனார் கன்னியர்கள்கோபமதை
திரும்பிநாம்பார்த்தோமானல் சிறுகல்லாய்சபிப்பாரென்று

கம்பாநதிமேதடிக் கடவுள்பிள்ளைவாராரே
அபயமபயமென்று அலறிவந்துநிற்கையிலே
அப்போதுகாமாட்சி யரனேபரனேயென்று
கண்ணிரண்டுந்தான்மூடி கன்னித்தவமிருந்தாள்
அந்தச்சமயத்தி லாண்டவனூர்பஞ்சவர்னம்
அபயமென்றுபோய்விழுந்து ஆச்சிசரணமென்றார்
நெற்றிக்கண்ணைத்திறந்து நிமலியவள்பார்த்தவுடன்
மோசங்கள்வந்ததென்று மெல்லியருந்தானறிந்து
கன்னியர்கள்வாராரென்று கடுகெனவேநீரெடுத்து
வெண்ணீறுதூவிவிட்டாள் மெல்லியவள்புத்திரன்மேல்
அன்றுபிறந்ததொரு அருங்குழந்தைபோலாக
பாலனைப்போலுண்டுபண்ணி பார்வதியாளேதுசெய்தாள்
ஆல்மரத்தை யன்னவுஞ்சலுண்டுபண்ணி
மான்தோல்கலைத்தோலால் மரத்தொட்டிலுண்டாக்கி
அதன்மேல்குழந்தைதனை யருமையாய்தான்வளர்த்தி
நான்சாகிறநாளையிலே மகாதேவர்தான்கொடுத்தார்
எப்படிவளர்ப்பேனென்று யீஸ்வரியாளேதுசெய்தாள்
ஆராரோஆராரோ அப்பனுக்குஆராரோ
ஆரடிகிழவியரே ஆளொருவன்வந்தானே
அவன்எங்கேயடியென்று யிளங்கொடிமார்கேட்கையிலே
நானறியேனென்றாளே நலமுடனேகாமாட்சி
அப்போதுகன்னியர்க ளருங்கிளிமாரேதுசொல்வார்
வந்தவனையெங்கொளித்தாய் மாயக்கள்ளிகூன்கிழவி
காட்டடியென்றுசொல்லி கன்னியர்கள்கோபங்கொண்டார்
பார்த்தாளேகாமாட்சி பைங்கிளிமார்கோபங்களை
இவர்சபித்வார்சபித்திடுவார் தையலர்களென்றுசொல்லி
நெற்றிக்கண்ணைத்திறந்து நிம்மியவள்பார்க்கையிலே
கல்லாய்ச்சபித்துவிட்டாள் கன்னியர்களேழுபேரை
ஏழுபேருங்கல்லாகி யீஸ்வரிக்குமுன்னேநின்றார்
அவர்களிடநல்லுயிரை யரிவையருந்தாமழைத்து
ஏழுசெப்புகாகம்போல் சோடித்தாளீஸ்வரியும்
பொற்பிரம்பங்கோல்துபோல் பொற்கொடியாளுண்டுபண்ணி
விபூதிப்பையதுபோல மெல்லியவளுண்டுபண்ணி
அம்மையப்பன்காவலாளன் அவனையவள்தானழைத்து
இத்தனையுங்கொண்டுவந்து தவசடியைக்காருமப்பா
அப்படியேநல்லதென்று ஆணழகன்காத்திருந்தான்
அப்போதுகாமாட்சி யன்னியவள்நீரெடுத்து

குழந்தையின்மேல்தான்போட்டுக் காத்தானெழுந்திரென்றாள்
ஈஸ்பரியாள்நீறுபட யெழுந்திருந்துகாத்தவனார்
கைகட்டிவாய்பதைக்கு காமாட்சிமுன்னேநின்றார்
கண்டாயோவென்மகனே கன்னியர்களேழுபேரை
கல்லாய்க்சபித்துவிட்டேன் காத்தவனேபாருமென்றார்
மாதாவுரைக்கையிலே மன்னவனாரேதுசொல்வார்
உன்னுடையமகிமைதனை யுத்தமியேநானறியேன்
என்னமோவேதோவென்று யிருந்தேனிதுநெடுநாள்
இன்றுதெரிந்ததம்மா யீஸ்வரியேயுன்மகிமை
என்றிவர்சொல்லி யேதுரைப்பாரீஸ்வரிக்கு
என்தாயேயீஸ்வரியே யென்னைவளர்த்தமாதாவே
பட்டேனொருகோடி பாடுபட்டேன்முக்கோடி
நான்பட்டகஷ்டமெத்தவுண்டு பாவையைக்கண்டதில்லை
எத்தனையோபாடுபட்டு யிடிக்குத்தலைகொடுத்தேன்
ஆரியமாலைதனை யழைக்கவிடைகொடுத்தால்
போறேனடியென்தாயே பொற்கொடியேமாலைவனம்
போய்வாமகனேயென்று வெண்ணீறுகைகொடம்மா
வாக்கிட்டால்தப்பாது வரங்கொடுத்தால்பொய்யாது
பொய்யாதுபொய்யாது புனற்கிளியேயுன்னாலே
பூவிரண்டுபூத்தாலும் நாவிரண்டுபொய்யாது
என்றிவர்சொல்லையிலே யீஸ்வரியாளேதுசொல்வாள்
ஏதடாவென்மகனே யெந்நேரம்போராட்டம்
மாலைமாலையென்றுசொல்லி வதைக்கிறாய்எந்தனைநீ
கிள்ளிவருங்கீரையல்ல அள்ளிவந்துநான்கொடுக்க
மாங்காயோதேங்காயோ வரவழைத்துகைகொடுக்க
ஆண்டிபரதேசியல்ல அழைத்துவந்துஒப்படைக்க
மாலையிடவதிகார மன்னவனேகண்டிருந்து
எந்நேரமாலையென்று யேனோவருந்துகின்றாய்
மாலையென்றசொல்வசன மறந்துவிடுயென்மகனே
அப்பெண்ணைமறந்து யெப்பெண்ணைக்கேட்டாலும்
கொண்டுவந்துநான்தருவேன் கொற்றவனேயென்றுரைத்தார்
தாயாரைகேட்டு சுவாமியவரேதுசொல்வார்
மண்டலத்துமாதர்களைக் கொண்டுவந்துவிட்டாலும்
மாலைகன்னியாவர்களோ மண்டலத்துபெண்களெல்லாம்
எத்தனைநாள்கேட்கிறது யென்தாயேபெற்றவளே
என்றிவர்சொல்லி யிளங்கொடியாள்முன்னிலையில்

கO-வது சத்தகன்னிவனம்

முற்றுப்பெற்றது.

---



உ

சிவமயம்.



௧௧௨-வது காத்தவராயசுவாமியும் ஆரியப்பூராசாவும்

# கட்டுண்டவனம்.

விநாயகர்துதி வெண்செந்துறை.

தந்தாவளமேயுன்றன் செந்தாமரைபோற்றி
நந்தாதிருக்கவனை வந்தாதரிப்பவனே
கந்தராங்காத்தசுவாமி கதைபாடத்தீதோட
சந்தமுன்வரங்கள் தந்தளிப்பாயாண்டவனே
உன்னைப்பணிந்தவற்கு பின்னைப்பிணிதீரும்
என்னைப்போல்வடியவ ரிவ்வுலகிலேவனுமுண்டோ

கதையின் வரலாறு.

தவரிலையைவிட்டெறிந்து தனஞ்செயனார்வாராரே
ஆலமரம்சுமைதாங்கி ஆண்டவனார்வந்துநின்று
எண்ணாதுமெண்ணுகிறா ரெண்ணமற்றசிந்தையதாய்
எத்தனைவிதத்தினாலே யென்தாயேகேட்டாலும்
எள்ளளவுமனமிரங்கி யெனக்குவிடைதாரேனென்றாய்
ஆரைக்கொண்டிவள்மதத்தை யடக்கிடலாமென்றுசொல்லி
வேதியரைக்கொண்டு மிவள்மதத்தையடக்கவேண்டி
என்றுமனதிலெண்ணி யேதுசெய்தார்பஞ்சவர்ணம்
வாவென்றழைத்தாராம் வருகுதுமறுவேஷம்
அஞ்சனக்காரனைப்போ லாண்டவனார்வேஷங்கொண்டு
காவிதிலர்தமிட்டு கஸ்தூரிபொட்டணிந்து

சேலைத்திருமாலை செகதாடுபொன்சரிகை
ஒற்றைக்கம்பிசோமனதை யுத்தமனார்தாமுடுத்தி
அஞ்சனசுவடிதனை யாண்டவனார்கைபிடித்து
சுமைதாங்கித்தன்னருகில் சீராகவுட்கார்ந்தார்
ஆஆஆவென்றுசொல்லி ஆகாயம்பார்த்திருந்தார்
இப்படிக்கிவரிருக்க யெழிலானவேதியர்கள்
ஆலோசனைசெய்கிறார் ஆயிரம்வேதியரும்
ஆரியமாலைதனை யரிவையைக்காணாமல்
ஆரெடுத்துப்போனானோ ஆரியப்புமாலைதனை
கொண்டுபோனமன்னவனைக் கொற்றவனைத்தாமறிய
அஞ்சனக்காரன்தனை அழைத்தவனைக்கேட்டாக்கால்
அப்போதெரியவரும் ஆரியப்பூமாலைசெய்தி
வங்குபட்டனருகில்வந்து வேதியர்களேதுசொல்வார்
அஞ்சனக்காரன்தன்னை யழைத்துவாடாவெங்குபட்டா
அப்போதுவெங்குபட்ட னரியவெடுத்துரைப்பான்
தயவுடையமாலைதனை யெனக்குத்தரமாட்டேனென்றீர்
போனாலும்போய்ப்போறாள் பொல்லாதமாலைகன்னி
என்றிவன்சொல்கேட்டு யேதுசொல்வார்வேதியர்கள்
உனக்கேதருகிறண்டா வுத்தமியாள்மாலையரை
அஞ்சனக்காரன்தன்னை யழைத்துவாவென்றுரைத்தார்
அந்தவுரைகேட்டு வாராரும்வெங்குபட்டர்
ஆலமரத்தருகே ஆண்டவனைக்கண்டுவிட்டான்
ஆரையாவென்றுசொல்லி யருகினிலேயுட்கார்ந்தார்
அஞ்சனக்காரனென்று ஆண்டவருந்தாமுரைத்தார்
மாமன்மார்தம்பியுடன் வாருமென்றார்வெங்குபட்டர்
அப்படியேவாறேனென்று ஆண்டவருந்தானெழுந்து
வேதியர்க்குமுன்பாக வந்தாரிருவருமே
அஞ்சனக்காரன்றன்னை ஐயமார்கண்டவுடன்
அஞ்சனத்தைப்பாருமென்று ஆண்டவர்க்குத்தாமுரைத்தார்
அப்போதுசுவாமிதுரை அஞ்சனத்தைப்பார்த்துரைப்பார்
மங்கையரைக்கொண்டுபோன மன்னனொருவனுண்டு
கிளைபெருத்தஆலமரம் விழுதுபதினாயிரமாம்
ஆலமரத்தடியில் கிழவிதவமிருப்பாள்
அவளிடத்தில்தானிருப்பா ளரிவையரைக்கொண்டுசென்றான்
அவர்களாலேவந்தவினை ஆரணங்குசென்றதுக்கம்

கிழவியைக்கொண்டுவந்தால் கிளிமொழியாள்வந்திடுவாள்
அவளாலேநடந்தமோச மளவற்றகோடியுண்டு
என்றிவர்சொல்லையிலே யிதுகேட்டுவேதியர்கள்
ஆமாங்காணப்பாபட்டா அனைவோருமெழுந்திருங்கள்
கிழவிதனைப்பிடித்து கிளிமொழியைக்கொண்டாவென்போம்
என்றுமிவருரைத்து யாவர்களும்போகலுற்றார்
கயிறுந்தடியெடுத்துக் கட்டழகர்வந்துநின்று
இவர்கள்வந்துநிற்பதுவை யீஸ்வரியுந்தாமறியாள்
ஆர்குடியையிவள்கெடுக்க ஆண்டிச்சியாகிவந்தாள்
ஆளுக்கொருசடையை யப்பால்பிடித்திழுத்து
ஆளுக்கோர்தடியாலே யடிக்கலுற்றாரீஸ்வரியை
எங்கேயொளித்துவைத்தா யெங்கள்மகள்மாலையரை
காட்டடியென்றுசொல்லி கடுகவிழுக்கையிலே
என்றிவர்கள்சொல்லி யிழுத்துபறிக்கையிலே
என்னடாகூச்சலென்று யீஸ்வரியுந்தானெழுந்தாள்
சடைகுலுங்கமுடியசைய்த் தையலிளங்கொடியாள்
கலைத்தோலும்புலித்தோலும் காட்டுமான்தோலசைய
காமாட்சிதானெழுந்தாள் கம்பாநதியைவிட்டு
இங்குயிவர்களெல்லா மிந்தவிதமாயிருக்க
கண்டுமனங்கொதித்து காளைமனம்பதைத்து
என்னதான்செய்கின்றீரோ இயலானவேதியர்கள்
சடைபிடித்தாரோ தையலிளங்கொடியை
இப்பாவமெந்தனுக்கு யப்பொழுதேசுற்றுமல்லோ
இதற்கென்னசெய்வோமென்று யெங்கள்துரையிங்குவந்து
ஆரடாபிராமணரே யடிக்கின்றீர்கிழவிதன்னை
ஆரியமாலைதனை யவனையெடுத்துக்கொண்டு
போனவன்நான்தாண்டா புத்தியில்லாவேதியரே
இதுகேட்டுவேதியர்கள் யேதுசெய்தாரப்போது
மாதளம்பூசவுக்கதனை மன்னவருங்கைகொடுத்து
மல்லிகைப்பூதன்கயிறை மன்னவருங்கைகொடுத்து
என்னைக்-கட்டிக்கொண்டுபோங்களென்றார் காளையந்தபஞ்சவர்னம்
அதுகேட்டுவேதியர்க ளப்பொழுதேதுசெய்தார்
மல்லிகைக்கயிற்றினாலே மன்னவர்கள்வரிந்துகட்டி
மாதளம்புசவுக்காலே மாரியடித்தார்கள்
அடித்திழுத்துக்கொண்டு ஆரியப்பூராசன்முன்னே
வேதியர்கள்வாய்திறந்து விவரமாயேதுசொல்வார்

கன்னியரைக்கொண்டுபோன கள்ளனிவன்வந்தானே
மாலைதனைக்கொண்டுபோன மன்னவனைக்கொண்டுவந்தோம்
என்றிவர்சொல்லையிலே யிதுகேட்டுராசன்சொல்வான்
நீதானேகொண்டுபோனாய் நேரிழையாள்மாலைதனை
எங்குகொண்டுவைத்தாயடா யெனக்கறியச்சொலுமென்றான்
சுவாமிவாயைத்திறவாமல் மௌனமாய்த்தானிருந்தார்
ஆரியப்பூராசாவு மதிகமாய்க்கோபங்கொண்டு
வலையன்சிவப்புடையான் மன்னனையழையுமென்றார்
அப்போசிவப்புடையா னரசன்முன்வந்துநின்று
அரசதுரைரத்தினமே அழைத்தவகைசொல்லுமென்றான்
வலையன்சிவப்பனுக்கு மன்னவருமேதுசொல்வார்
கன்னியைக்கொண்டுபோன கள்ளனகப்பட்டாண்டா
மாலையைத்திருடிப்போன மாயனகப்பட்டாண்டா
காலையிவனைக் கழுமரத்திற்போடவேண்டாம்
கள்ளன்திருடனவன் கனமானகாவல்வையும்
இவனுக்கு-கால்விலங்குகைவிலங்கு கனத்ததொருபெருவிலங்கு
மார்விலங்குதோள்விலங்கு மணிவிலங்குபூட்டினார்கள்
உழக்கோலும்பாய்ச்சினர் உத்தமனுராண்டவற்கு
ஒன்றரைச்சாணீளம் ஒருசாணகலமது
இரண்டுமுழங்கள் இரும்புபெட்டிகொண்டுவந்து
இவரைக்கவிழ்ந்தபடியாக பெட்டியிலேதானடைத்து
மேற்பெட்டிதான்மூடி முத்திரையும்போட்டார்கள்
எட்டுகட்டுகட்டினார்க ளிரும்புநல்லபெட்டிதனை
ஆராரைக்காவல்தேடி அங்கனமேவைக்கலுற்றான்
பெட்டியருகாக குறிப்பாகஉட்கார்ந்தான்
இன்னமற்றசேனைகளை பெட்டிசுற்றிசூழவைத்தான்
இரவுபகலாக யேமாறுமலேயிருந்தார்
இப்படியாக யிவர்களிருக்கையிலே
அந்நேரவேளையிலே யெந்தநேரமாச்சுதென்றால்
கல்லோடுகல்லையுங் காளியுடசேனைவரும்
புல்லோடுபுல்லையும் பிடாரியம்மன்சேனைவரும்
சுவாமி-அந்தநல்லவேளையிலே ஆரைநினைக்கலுற்றார்
வாய்குறும்பினாலேயல்லோ வந்துஅகப்பட்டேனே
அத்தையரேமூதேவி யரிவையிங்குவாருமம்மா
நீவாருமற்றானிருந்தால் மார்பைப்பிளந்திடுவேன்
மண்டையுடைத்திடுவேன் கொண்டையறுத்தெடுப்பேன்

இந்தக்ஷணந்தனிலே யிங்குவரவேண்டுமென்றார்
அப்போதுமூதேவி யங்ஙனமேதுசெய்தாள்
ஆலமரத்தருகே கழுதைதனைக்கட்டிவைத்து
படுத்திருக்கும்வேளையிலே பஞ்சவர்னந்தானழைக்க
கேட்டுவிட்டாள்மூதேவி கிளிமொழியாளந்நேரம்
பொல்லாக்குணமுடைய போக்கிரியழைத்தானே
போகாமல்நாமிருந்தால் பிழைமோசம்வந்துவிடும்
என்றுகழுதையின்மே லேறியந்தமூதேவி
கவரிபழமுறமாம் வெண்சாமரைத்துடப்பம்
காத்தனருகில்வந்து கண்டுவிட்டாள்சேனைகளை
எடுத்தாள்பழமுறத்தை யேந்தினாள்துடப்பக்கட்டை
விசிரியவிக்கலுற்றாள் வீசினார்மன்னர்கள்மேல்
நின்றிருந்தமன்னரெல்லாம் நீலவிழிசோர்ந்திருந்தார்
கண்டுபிடித்தவர்கள் கனத்ததூக்கமாகிவிட்டார்
எல்லோருங்கண்ணுறங்கும் வேளையதுதனிலே
அந்தபெட்டியின்மேல்வந்துநின்றாள் பொற்கொடியாள்மூதேவி
ஏண்டாமருமகனே யெனையழைத்தாய்சொல்லுமென்றாள்
அந்தவுரைகேட்டு ஆண்டவனுரேதுசொல்வார்
பெட்டியையவிழுமென்றார் பொல்லாதவித்தைதனை
அந்தவுரைகேட் டவிழ்த்துவிட்டார்பெட்டிதனை
பெட்டிவிட்டுதானெழுந்து புண்ணியரும்வெளியில்வந்து
கால்விலங்குகைவிலங்கு கழட்டியவரேதுசெய்வார்
தன்னருகிலிருந்த ஆரியப்பூராசனுக்கு
கால்விலங்குகைவிலங்கு கனவிலங்குதரன்பூட்டி
உழக்கோலம்பூட்டியங்கே உத்தமனுரேதுசெய்தார்
பெட்டியிற்போட்டடைத்து பூட்டியேசாவியிட்டு
வலையன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
அவன்வலதுபக்கம்மீசைதனை வகையுடனேகத்தரித்து
இடதுபக்கமீசைதனை யிருகையால்கத்தரித்து
மீசைதனைகத்தரித்து விமலிபிள்ளையெங்குவந்தார்
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
அத்தையரேமூதேவி யிருப்பிடத்தேபோடியென்றார்
போரானடிமருமகளே யென்றுமவள்போய்நடந்தாள்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
வலையன்சிவப்புடையான் மன்னனெழுந்திருந்து
அங்கிருக்குமன்னரெல்லா மனைவோருங்கண்விழித்தார்

அந்தச்சமயத்திலே சிவப்புடையானேதுசெய்தான்
பெட்டிதனைத்திறந்து பொருமைகொண்டுதானவனும்
மாலைதனைக்கொண்டுபோன மாபாவியென்றுசொல்லி
அப்போதுவேதியர்க ளனைவருந்தாமுரைத்தார்
உதைத்தவுதையாலே வுதிரங்கள்கக்குகின்ருன்
இனியடித்தோமாகி லிறந்துமடிவானென்று
பெட்டிதனைமூடிவைத்து போதவேதாள்பூட்டி
எட்டுகட்டும்கட்டியவ னெங்கெங்குஞ்சுற்றிவந்து
ஆரியப்பூராசாவை அவரையிங்குகாணேமென்று
எங்கேயவர்போனாரோ யேதுமறியோமென்று
இவனிருக்கும்வேளையிலே யாவருந்தான்சூழ
பொழுதுவிடிந்தது பொற்கோழிகூவுகுது
நிலமுந்தெளிந்தது நிலக்கோழிகூவுகுது
அதுவரையில்மன்னவரை யிவ்விடத்தில்காணவில்லை
என்னமோயேதோவென்று இனியசிவப்புடையான்
பெட்டிதனைத்திறந்து புண்ணியனும்பார்த்துவிட்டான்
ஐயோசிவனேயென்று அழுதுகொண்டேதுசெய்வான்
திருடனிவன்கள்ளனென்று யாவர்களுந்தாமுரைத்தோம்
என்றிவன்சொல்லையிலே யங்கிருந்தார்தாம்கேட்டு
என்னசெய்யப்போருமென்று ஏங்கிமனம்நடுங்கி
அடிதண்டம்பிடிதண்டம் அரசனுக்கேதுசொல்வார்
அறியாமற்செய்தபிழை ஆண்டவரேநீர்பொருப்பீர்
என்றிவர்கள்சொல்லி யிரக்கமுடனிற்கையிலே
அப்போதரசனவ னவர்களுக்கேதுசொல்வார்
என்விதியையான்துலைத்தே னெந்தனுக்கமைந்தபடி
திருடனைநான்கட்டிவைத்தேன் திருடனென்னைகட்டிவைத்தான்
அந்தத்திருடனவ னதிகசமர்த்துடையான்
அவனைப்பிடிப்பதற்கு ஆருமுடியாது
அவனைப்பிடிப்போமானால் நம்மைபிடித்திடுவான்
அவன்மாலைதனையழைத்து வருவானேயாமாகில்
ஏனென்றுகேட்கவேகாம் கூடாதொருநாளும்
என்றிவரெல்லோரு மிப்படியாப்பேசிக்கொண்டார்
இப்படியாய்ப்பேசி யிருக்கின்றவேளையிலே
எங்குமெள்ளவாருரா மெங்கள்துரைபஞ்சவர்ணம்
வீரசுரங்காவேரி வெற்றிபுகழோமாந்தூர்
ஓமாந்தூரெல்லைதேடி யுத்தமனார்வந்துமிங்கே

அமளியிட்டகங்கையிலே குமளியிடஸ்நானஞ்செய்து
சாத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
சிவசிவாவென்றுசொல்லி திருநீற்றுக்காப்பணிந்து
மாடியதுதிறந்து வர்னலட்சம்பொன்னெடுத்து
ஆற்றலரிகொன்றைதும்பை அடுக்கலரிமந்தாரை
சேற்றலரிமல்லிகைச் செவ்வலரிப்பூவெடுத்து
ஓடுகிறகங்கையிலே ஒருசொம்புசலமெடுத்து
தாயார்தவநிலைக்கு சண்முகனார்வந்துநின்று
அப்பொழுதுகாமாட்சி அரிவைதவமிருந்தாள்
கண்ணிரண்டுந்தான்மூடிக் கையிரண்டுந்தானேந்தி
அரனேபரனேயென்று அம்மன்தவமிருந்தாள்
வந்ததொருசண்முகனார் மலரெடுத்துக்கைப்பிடித்து
கர்த்தாவின்பாத மலர்தூவிதெண்டனிட்டு
காண்கிறேனுச்சியென்று கால்மேல்முடிசாய்ந்தார்
வந்துபணிந்தவனைக் கண்டந்தகாமாட்சி
என்னைப்பெறுவாய் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
பக்கத்தில்கைகொடுத்தால் பக்கெலும்புநோகுதென்று
நெற்றியிற்கைகொடுத்து நிமலியவள்தூக்கிவிட்டாள்
கைகட்டிவாய்புதைத்து கட்டழகர்நிற்கையிலே
எங்குவந்தாயெந்தன்மகனே யெனக்கறியச்சொல்லுமென்றார்
மாலைவனம்போவதற்கு வரங்கேட்கவந்தேனம்மா
அதுகேட்டுகாமாட்சி ஆரணங்கேதுசொல்வாள்
வேண்டாமடாயென்மகனே விண்ணவரைத்தீண்டாதே
அவள்துடையில்துடைநாகம் தொட்டவனைக்கொல்லுமடா
தாலிதரித்தோனை தப்பாமற்கொல்லுமடா
அவளுக்கு-ஐந்துவிரல்கோணலடா அடியிடுப்புசாய்ப்புமுண்டு
முகத்திலேமுன்சுழிதான் மூத்தாரைக்கொன்றிடுவாள்
மேலுமவள்பிர்மகுலம் மேலானசாதியல்லோ
பார்ப்பான்மகளாலே பாவம்வந்துநேர்ந்துவிடும்
ஐயன்மகளாலே யவகேடுவந்துவிடும்
பறையாபறையாவென்று சாமியிட்டசாபத்தினால்
கன்னியவளாலே கழுமரங்கள்நேர்ந்துவிடும்
தூண்டிலிருக்கணுமா துடி-துடித்துச்சாகணுமா
என்றுமவளுரைக்க யேதுசொல்வார்காத்தவனார்
தூண்டிவந்தால்குற்றமில்லை தோகைவந்தாற்போதுமம்மா

மாண்டுமடிந்தாலும் மாலைதனையான்மறவேன்
செத்துமடிந்தாலுந் தேன்மொழியைநான்மறவேன்
ஆசையவளிடத்தே செத்தகட்டையுன்னிடத்தே
சீவனவளிடத்தே செத்தகட்டையுன்னிடத்தே
எனக்குபோகவிடைகொடம்மா போய்வாரேனென்றுரைத்தார்
அந்தவுரைகேட் டரிவையருமேதுசொல்வாள்
ஆசைக்குரோஷமில்லை யங்கம்போனாற்பங்கமில்லை
பெண்ணாசைபொல்லாது போரேனென்றுதுள்ளாதே
நானெத்தனை தான்சொன்னாலு மேற்காதேயுன்செவிக்கு
சொந்தத்திற்பெண்ணிருக்க தூரப்பெண்களேதுக்கடா
அம்மான்மகளிருக்க அயற்பெண்களேதுக்கடா
பெண்ணென்றஆசைதனை போட்டுமறந்துவிடு
உன்னாலுஞ்சாதமது உடலிற்றரிக்கவில்லை
தின்னாவிலையடைக்காய் திருவாய்சிவக்கிலையே
பாயிற்படுத்தாலும் பாம்பாய்புரட்டுதம்மா
தரையிற்படுத்தாலுஞ் சரடாயுருகிடுதே
பொன்னோபொருளோநான் போட்டுமறந்திருக்க
காசுபணமோதான் கைவிட்டுமறந்திருக்க
அவள்மாணிக்கமாளிகையில் மணிப்பலகைசேர்ந்ததின்மேல்
சிங்காரமேடையின்மேல் சேர்ந்திருப்பதெக்காலம்
சப்பரகூடமஞ்சத்தில் சார்ந்திருப்பதெக்காலம்
நீவாக்கிட்டால்தப்பாது வரமளித்தாற்பொய்யாது
பூவிரண்டுபூத்தாலும் நாவிரண்டுபூவாது
போய்வாமகனேயென்று வெண்ணீறுநீகொடம்மா
நீவெண்ணீறுதந்தாலே மெல்லியரைக்கொண்டுவாரேன்
என்றிவர்சொல்லையிலே யீஸ்வரியுமேதுசொல்வாள்
வரும்விதியைச்சொன்னேனப்பா படும்விதியைபட்டுவிடு
பொன்திருடிக்கழுவிருப்பார் பூதலத்திலுள்ளவர்கள்
மண்திருடிக்கழுவிருந்தால் மண்டலத்திலுள்ளவர்கள்
பெண்ணுக்காய்கழுவிருந்தால் பூலோகத்தாரேதுசொல்வார்
கன்னிக்காய்கழுவிருந்தால் கலியுகத்தாரேதுசொல்வார்
மாலையென்றுசொல்வசனம் மறந்துவிடுயென்மகனே
என்றிவளுரைக்க யேதுசெய்தார்பஞ்சவர்னம்
இனியிருந்தாலாபமில்லை என்றுமவரெழுந்து

௧௧-வது கட்டுண்டவனம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

கஉ-வது காத்தவராயசுவாமி ஆரியமாலையின்

## வரலாறும் கூறும் வனம்.

---

### விநாயகர் துதி வெண்செந்துறை.

ஆகுவாகனமுடைய அரனாரின்புத்திரனே
பாகுபயறுடனே பட்சமாயான்படைப்பேன்
ஆரணியந்தான்காத்த ஆண்டவனார்தன்கதையை
பூரணமேயான்பாட புத்திமிகசிறந்து
குறைகள்மிகவாராமல் கூடத்துணையிருக்க
விரைவினில்வந்திருந்து விமலனார்தன்புதல்வா
கவிவாணர்தான்புகழ்க் காரியர்தான்விகழப்
புவியினிற்கீர்த்திபெற்றப் புண்ணியரேகதைநடத்தும்

### கதையின் வரலாறு.

தாயைவிட்டுத்தானடந்தார் சுவாமிதுரைபஞ்சவர்னம்
மனஞ்சலித்துமாரிபிள்ளை வாறாரேவீதியிலே
உப்பங்கிடாரவழி யுடனேயவர்தாண்டி
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
உற்றுநினைத்தார் ஒருகோடியோசனையை
தானாய்விசாரமிட்டு தலையிறங்கிக்கொண்டவரும்
வங்கணத்துச்சின்னானை வாருமென்றுதானழைத்தார்
இந்தநல்லவேளையிலே யெனக்குத்துணைவாருமென்றார்
அந்தவுரைகேட் டாணழகன்சின்னானும்
ஆடலும்பாடலு மமருமென்றுகையமர்த்தி
தான்தாலிகட்டும்பெண்களைத் தன்னருகிலேயழைத்து
போய்வாறேனென்றுசொல்லிப் புத்திமதியுரைத்து
தூக்கிவைக்கும்கால்களுக்கு துத்திப்பூச்சுங்குவிட்டு
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஆண்டவரைத்தேடியல்லோ ஆணழகன்வாறானே
என்றிவள்சொல்லையிலே யேதுசொல்வார்பஞ்சவர்னம்
ஆசையலையுதம்மா ஆரணங்குமாலைதன்மேல்
உப்பங்கிடாரவழி யுத்தமனுந்தேடிவந்து

சரணஞ்சரணமென்று சாய்த்தான் திருமுடியை
என்னையழைத்தவகை யெனக்கரியச்சொல்லுமென்றான்
சின்னானுரைகேட்டு சுவாமியவரேதுசொல்வார்
அல்லவடாசின்னானே விதிதனையென்னசொல்வேன்
என்தாயார்செய்தசதி யெண்ணிமுடியாது
மாலைதனைச்சிறையெடுக்க மாதாவுங்கூடாதென்றாள்
எத்தனைதான்கேட்டாலும் எள்ளளவுங்கூடாதென்றாள்
மாலையென்றவாசையது மறந்திருக்கமாளாது
பாயிற்படுத்தாலும் பாம்பாய்புறட்டுதடா
தரையிற்படுத்தாலும் சரடாயுருகுதடா
எப்படிமறந்திருப்பேன் எனக்கிசைந்தகன்னியரை
மறந்திருப்போமென்றாலும் மறக்கமுடிகூடவில்லை
மாலையைச்சிறையெடுக்க வகையுண்டோசின்னானே
உன்னாலேயானதொரு உதவிகளைச்சொல்லுமென்றான்
சுவாமி-உன்னாலுமென்னாலுஞ் சிறையெடுக்கமாளுமோதான்
அற்பசொற்பமானவளோ ஆரியப்பூமாலைகன்னி
வரத்தில்மிகுந்தவள்தான் வல்லமைகளுள்ளவள்தான்
இரங்கர்வலுமையுண்டு நாச்சியார்தயவுமுண்டு
பெண்ணாய்ப்பிறந்தாலும் பூமுடிக்கபெண்பிறந்தாள்
ஸ்திரீயாய்ப்பிறந்தாலும் சிறப்புடனேதான்பிறந்தாள்
அவள்-கட்டென்னகாவலென்ன காவலதிகாரமென்ன
சுற்றிலும்மதிலென்ன துரைமன்னர்காவலென்ன
பக்கமதில்களென்ன படைமன்னர்காவலென்ன
மூன்றுபேர்ராசாக்க ளொன்பதுபேர்மந்திரிகள்
நாட்டுக்கணக்கெழுதும் நாயகத்தார்பிள்ளையென்றும்
ஊருக்கணக்கெழுது முகந்தாச்சிபிள்ளையென்றும்
சுண்டுவில்லுரங்கப்பையா துரைமகனார்மந்திரியாம்
வலையன்சிவப்புடையான் மன்னன்தலையாரி
அண்ணன்தம்பியேழுபேர்க ளரண்மனைக்குகாவலுண்டு
அடிமேலடியெடுப்பா ராண்மையுள்ளவேழுபேழும்
முள்ளுமேலடியெடுப்பார் மூர்க்கர்சிவப்புடையார்
கல்மேலடியெடுப்பார் காளைசிவப்புடையார்
தண்ணீர்மேலடியெடுப்பார் தயவுள்ளசிவப்புடையார்
அவனுடையகாவலிலே அதிகாரமெத்தவுண்டு
சிவப்புடையான்காவலிலே சிட்டுபறவாது
சிட்டுபறவாது சிருகுறுவிநாடாது
வக்காபறவாது வனக்குறுவிநாடாது
காகம்பறவாது கருங்குருவிநாடாது
அள்ளிபழுத்தாலும் அணிகள்வந்துமோதாது
கிள்ளிப்பழுத்தாலுங் கிளிகள்வந்துமோதாது
கறந்துவைத்தபாலதனைக் காகம்வந்துதீண்டாது

மொண்டுவைத்ததனை முகம்வைத்துவேண்டாது
ஆண்பட்சிவாராது அவனுடையகாவலிலே
உண்டைதப்பிப்போனாலும் குறிதப்பிப்போறதில்லை
குண்டுதப்பிப்போனாலும் குறிதப்பிப்போறதில்லை
இவைகளுமில்லாமல் இனிப்புதுமைமெத்தவுண்டு
மாலையிடகோட்டைசுற்றி வளைந்தயகழிதன்னில்
வயிரிவயிரியென்று வண்ணலட்சமுதலையுண்டு
அந்தமுதலைகட்கு வாலையவளே துசொல்வாள்
மூக்குத்திகாதுகுத்தி முகத்திலவள்பொட்டுமிட்டாள்
அந்தயழகாரு ளளவற்றகெண்டையுண்டு
சொர்னகெண்டையென்றுசொல்லி சுந்தரியாள்பேர்கொடுத்தாள்
இன்னம்புதுமையுண்டு இளங்கொடியாள்மாலையற்கு
சின்னரங்கம்பெரியரங்கம் ஸ்ரீரங்கக்கிளியென்று
அப்படிக்குபத்துலட்சம் அழகுள்ளகிள்ளையுண்டு
சின்னிசின்னியென்றுதாதி சேனலட்சங்கோடியுண்டு
இப்படியாய்க்காவலது எத்தனையோகோடியுண்டு
அவள்குளிக்குமஞ்சளது ஆண்டவனேசொல்கிறேன்கேள்
கொச்சிமஞ்சள்குடகுமஞ்சள் கொல்லத்தரக்குமஞ்சள்
திருவல்லிக்கிழங்குமஞ்சள் ஸ்ரீரங்கசிவப்புமஞ்சள்
ஒன்பதுமஞ்சள்வகை யுத்தமியாள்தான்குளிப்பாள்
அவள்குளிக்குமஞ்சளோடை ஆறாய்ப்பெருகுதுபார்
தாளிப்பனஞ்சோலை கூந்தற்பனஞ்சோலை
அகழிதான்கரைபுரண்டு ஆறாய்ப்பெருகுதுபார்
அந்தச்சலமதனை யாரொருவர்கண்டாலும்
எடுத்துதெளித்துக்கொள்வா ரின்பமுடன்தன்சிரசில்
அல்லார்தலைக்கூந்த லறுபத்துமூன்றுமுழம்
அவள்கூந்தல்தான்சுமக்க ஆயிரம்பேர்தாதியுண்டு
அதை-வாரிமுடிப்பதற்கு வர்னலட்சங்கோடியுண்டு
சந்திரகண்டிசூரியகண்டி தையல்தரித்திருப்பாள்
தங்கப்பதுமைரெண்டு தலைமேல்விளக்கெடுக்கும்
அன்னவுஞ்சல்மேலாக அவளும்படுத்திருப்பாள்
பொன்னுக்களஞ்சியங்கள் போதவேகட்டிவைத்தார்
அவள்-கைக்கொண்டுசிலவழிப்பாள் கன்னியிளங்கொடியாள்
இரங்கரிடசந்நிதியில் நாணயமாகவேதான்
பொங்கல்தளிகையும் பொற்கொடிக்குவந்துவிடும்
ஆயிரம்பிள்ளைகட்கு மள்ளியவள்படைத்திடுவாள்
தாம்பூலம்புசித்திருப்பாள் தையிளங்கொடியும்

இவ்வளவும்போகத்துட னிருக்கின்றமாலைதனை
அவளை-எப்படிக்குநீபோ யெடுத்துவந்துசேர்த்திடுவாய
உன்னாலுமாகாது யென்னாலுமாகாது
நம்மைப்பிறப்பித்த ஈஸ்வரனாலாகாது
வீணாசைகொள்ளாதே வேந்தரேயென்சாமி
இந்தவகையறிந்து ஈஸ்வரியுங்கூடாதென்றாள்
அறிந்தமட்டுசொன்னேனையா ஆண்டவரேயுந்தனுக்கு
மாலையென்றசொல்வசன மறந்துவிடுகொல்லிமலை
கன்னியென்றசொல்வசனங் கனவிலுமெண்ணாதே
என்றுசொல்லிசின்னானும் இதுகேட்டுஆண்டவனார்
கொஞ்சமடாநீபயலே கூளமடாயெந்தனுக்கு
பஞ்சையடாநீபயலே கூளமடாயெந்தனுக்கு
எடுத்தாலுமாலையைத்தா னிருந்தாலுங்கழுமரந்தான்
மாலையைமரப்பதற்கு மனம்வருமோசின்னானே
நீகெட்டாய்பயலேயென்று யெடுத்துரைத்தார்பஞ்சவர்னாம்
அவள்காவலிலிருந்தாலென்ன கன்னியவளைக்கொண்டுவாரேன்
என்னுடையசாமர்த்திய மிருப்பதுநீபாருமென்றார்
அதுகேட்டுச்சின்னானு மப்படியேசெய்யுமென்றார்
கட்டாணிபெற்றபிள்ளை கழுக்காணியென்பார்கள்
அனைவோருஞ்சொல்வசன மப்படியேமாச்சுதிது
கேடுவரும்போதுமதி கெட்டுவருமென்றார்கள்
பெட்டியிலிருந்தவனீ புற்றில்நுழையாதே
என்றுசொல்லிசின்னானு மெடுத்துரைக்கும்வேளையிலே
அதுகேட்டுஆண்டவரு மப்பொழுதேதுசொல்வார்
ஆசையலையுதடா அருங்கிளியாள்மாலையின்மேல்
நீஎன்னதான்சொன்னாலு மேறாதுயென்செவியில்
அப்போதுசின்னானு மாலோசனைகள்செய்து
சுவாமிதனைப்பார்த்து சடுதியிலேதுசொல்வான்
நான்சமுசாரக்காரனையா நான்போகவேண்டுமிப்போ
பெண்டுபிள்ளைகாரனையா போகவிடைதாருமிப்போ
நீஎப்படியிருந்தாலு மேனென்றுகேட்பாரில்லை
சாகுங்கிழவியவள் தாயாரந்தகாமாட்சி
அவளைநீயேமாற்றி யெங்குந்திரிந்திடுவாய்
உன்னைப்போல்நானிருந்தா லொவ்வாதுமன்னவரே
எனக்கு-குலந்தனிலேழுபெண்கள் கோத்திரத்திலேறன்றுபெண்கள்
திருப்பாற்கடல்தனிலே நான்பரியம்போட்டுவந்தேன்
எனக்குபோகவிடைதாருமையா புண்ணியனேயென்சாமி
அந்தவுரைகேட்டு ஆண்டவனேதுசொல்வார்
இவ்வளவுதானடாநீ யென்னைவிட்டுப்போறேனென்றாய்
செத்தாலுஞ்செத்திடுவேன் சிறையெடுத்துவந்திடுவேன்

மாண்டாலுமாண்டிடுவேன் மாலைதனைநீகொணர்ந்திடுவேன்
என்று-போகவிடைகொடுத்தார் போய்சேர்ந்தான்சின்னானும்
மலையாளம்போய்ச்சேர்ந்து மாதர்களுடன்கூடி
சுகமாகவாழ்ந்திருந்தான் சொற்பெரியசின்னானும்
இப்படியாக யிவனிருக்கும்வேளையிலே
இந்தச்சமயத்திலே யாண்டவனாரேதுசெய்தார்
உப்பங்கிடாரவழி யுயர்ந்தகுன்றுமலையருகில்
இங்கிருந்துநினைத்தாரா மெண்ணமற்றசிந்தையிலே
ஆண்டுநினைத்தாரா மனவற்றயோசனையை
வாவென்றழைத்தாராம் வருகுதுமாறுவேஷம்
வெட்டியானைப்போலாக வேந்தர்வடிவெடுத்து
கம்பளிமேல்போர்த்துக் கனத்ததடிகைபிடித்து
எங்குமெள்ளவாரூரா மெங்கள்துரைபஞ்சவர்னம்
கோமுகளைவங்குதனில் கொல்லிமலைவந்துநின்று
ஆரியமாலைதனை யழைக்கலுற்றார்சீக்கிரமாய்
அப்பாபட்டரீன்றெடுத்த அருங்கிளியேவாடியென்றார்
அன்னத்துளசிபெற்ற அழகுகன்னிவாடியென்றார்
நான்-அப்பாபட்டரானவற்கு அடிமைபறையனல்லோ
பாராமல்வாடுகிறார் பால்மோர்குடியாமல்
நான்-மாங்கனிச்சேரிதேடி வந்தேனிதுவழியாய்
மரத்தின்மேலேறி யிருக்கும்பறவையது
உன்பேரைச்சொல்லியல்லோ உலந்தழைக்கும்வேளையிலே
அதுகேட்டுவந்தேனிங்கே யரிவையரேவாருமென்றான்
அப்பாபட்டர்தம்மிடத்தி லழைத்துப்போறேன்வாருமென்றான்
அந்தவுரைகேட்டு அருங்கிளியும்வந்துவிட்டாள்
இருவரும்போகையிலே ஏலங்கருங்குழலாள்
காலேயய்ந்துகையமர்ந்து களைகள்மிகவாகி
மெள்ளநடக்கலுற்றாள் மெல்லியிளங்கொடியாள்
அதுகண்டுஅப்பைய னனுவமாயேதுசொல்வான்
நடக்கமுடியலையோ நங்கையிளங்கொடியே
நெய்யுஞ்சோறிட்டவற்கு நிலத்திற்கால்பாவலையோ
என்று-அதட்டிவழிநடந்தா னனுவத்தினலேயவன்
அப்போதுமாலைகன்னி யஞ்சிப்பயந்தவளும்
வேதனைகளுள்ளடக்கி வீசிநடந்துவாருள்
அந்தநல்லவேளையிலே அசலூர்சமுசாரி
கழனியுழுகையிலே கன்னியரைக்கண்டுவிட்டார்
இவள்-அழகும்வடிவுகளு மவர்கண்டேதுரைப்பார்
ஆரம்மாதாயாரே அருந்ததிபோலாக
கொண்டுபறையனுட னெண்டியாய்ப்போவதென்ன
போகும்வகைதனைப் பொருமையாய்ச்சொல்லுமென்றார்
அப்போதுமாலைகன்னி யருங்கிளியாளேதுசொல்வாள்

முந்நாளிலெந்தனுக்கு முக்கணனார் தீவினைதான்
எந்தன் தலைவிதிதா னென்றுவழிநடந்தான்
அப்போபறையன் அருங்கிளியையழைத்துவந்து
தாயார்தவமிருக்குந் தவசடியிலோரத்தில்
மாதாவறியாமல் மங்கையரைக்குந்தவைத்து
இங்கேயிருங்காணு மிளங்கொடியாள்கன்னியரே
ஒண்ணுக்குப்போய்வந்து ஊருக்குக்கொண்டுபோறேன்
என்றுசொல்லிப்பறைய னேகவழிநடந்தான்
அந்தவுருமாற்றிச் சொந்தவுருவெடுத்து
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்திருந்து
தாயைமனதிலெண்ணி தகப்பனை நெஞ்சிலெண்ணி
வாவென்றழைத்தாராம் வருகுதுமாறுவேஷம்
ஆறுமுகந்துலங்கப் பன்னிருகைவேல்துலங்க
பச்சைமயில்துலங்கப் பஞ்சாக்ஷரம்விளங்க
எங்குமெள்ளவாரூரா மெங்கள் துரைபஞ்சவர்ணம்
ஐந்நூற்றெட்டுகிராமமது ஆண்டவனார்தாண்டியல்லோ
புத்தூரகாந்தேடிப் புண்ணியரும்வாரூரே
ஆண்டவனார்வருகிறதை யனைவோருங்கண்டார்கள்
அரசன்முதலாக அங்கிருக்கும்வேதியர்கள்
காட்சிதருவதற்கு கர்த்தரிங்குவந்தாரென்று
சாம்பிராணிவாடை தனிவாடைதான்கொடுத்து
தூபதீபந்தான்கொடுத்து தொழுதிறங்கித்தெண்டனிட்டு
காட்சிதரவேண்டுமென்று கைதொழுதாரெல்லோரும்
அப்பொழுதுகொல்லிமலை ஆண்டவனாரேதுசெய்தார்
பஞ்சாக்ஷரமெடுத்துப் பணிந்தவர்க்குத்தான்கொடுத்து
எழுந்திருங்களென்றுசொல்லி யினியமொழியுரைத்து
இராசன்முகம்பார்த்து நலமாகவேதுரைப்பார்
மாலைதன்னைக்கொண்டுபோன மன்னவனும்நான்தான்காண்
கன்னிதனைக்கொண்டுபோன கட்டழகன்நான்தான்காண்
கோமுதலைவங்குதனில் குடியமர்த்திவைத்தேனென்றார்
அங்கேயிருக்கிறாள்காண் ஆரணங்குமாலைகன்னி
மகளாரைக்காணேமென்று மனஞ்சலிக்கவேண்டாங்காண்
ஒன்றுக்குமஞ்சாதீர் ஊரிலுள்ளவேதியரே
நாளைகழுவடியில்வந்தீரானால் கன்னியரைக்கண்டிடலாம்
நீங்கள்கழுவடிபூசைசெய்யக் கடுகவேவாருமென்றார்
அதுகேட்டவேதியரு மரசருமேதுசொல்வார்
ஆரோயெவரோவென்று ஆலோசனையாயிருந்தோம்
சுவாமிநீரெங்கள்பெண்ணைத் தானெடுத்துபோனதினால்
சந்தோஷமாச்சுதுகாண் சண்முகனேயெங்களுக்கு
வாடியென்றுநீரழைத்தால் வாருளோமாலைகன்னி
நீ அழைத்துக்கொண்டுபோவதற்கு அதிஷ்டங்கள்செய்திருந்தோம்

இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
ஆரியப்பூராசனவ ரக்ஷணமேயோடிவந்து
கைகுவித்துவாய்புதைத்துக் கட்டழகனேதுசொல்வான்
அடிமைக்குயென்னதொழி லாண்டவனேசொல்லுமென்றான்
அப்போதுகொல்லிமலை யரசனுக்கேதுசொல்வார்
நாளைகழுவடிபூசையிலே காணவேவந்தாலே
காக்ஷியதுதந்திடுவேன் கடவுள்பலங்கண்டிடவே
அதுகேட்டராசனவ னப்படியேநல்லதென்றான்
மாலைகன்னிசேதிதனை மன்னவர்க்குத்தாமுரைத்து
அந்தயிடத்தைவிட்டு அப்பால்வருகலுற்றான்
ஏழுபேர்மன்னவர்களா மச்சான்மாரேழுபேராம்
வாங்கறுப்பன்பூங்கறுப்பன் மதுரைபெருங்கறுப்பன்
அண்ணன்தம்பியேழுபேரு மவர்களுக்கேதுரைப்பார்
நாளைகழுவடிபூசைக்கு கடுகவேவாங்களென்று
அந்தவிடத்தைவிட்டு அப்புறத்தேதவாறாம்
சுவாமிபரிமணத்தார் சத்தக்கன்னிபுத்திரரும்
மாதர்தவநிலையில் மாரிபிள்ளைவாராறும்
ஆர்க்கத்தலைமுழுகி வேர்க்கமயிர்கோதி
தோட்டமதுதிறந்து தொன்னைதைத்துப்பூவெடுத்து
பொங்நீருஞ்சொம்புதனில் பங்நீருந்தானெடுத்து
பாதமதுவலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபுட்பமெல்லாங் குபுகுபுவென்றுதான்சொரிந்து
காண்கிறேனாச்சியென்று கால்மேல்முடிசாய்ந்தார்
வந்துபணிந்தவனை வாரியெடுத்தணைத்து
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகன்நிற்கையிலே
அப்போதுகாமாட்சி ஆரணங்கேதுசொல்வாள்
என்னைப்பணிந்தவகை யெனக்குரையுமென்றுரைத்தாள்
அதுகேட்டுபஞ்சவர்ண மேதுரைப்பாரீஸ்வரிக்கு
மாலையைச்சிறையெடுக்க வரந்தாரும்பெற்றவளே
கன்னியரைச்சிறையெடுக்க கடுகவரந்தாரும்
அதுகேட்டுயீஸ்வரியு மப்பொழுதேதுசொல்வாள்
தீண்டாநெருப்படா தெய்வப்பசுங்கிளியாள்
அண்டாநெருப்படா ஆரணங்குமாலைகன்னி
இப்படிக்கானவளை யெப்படிநீதொட்டணைவாய்
அம்மான்மகளாரை ஆசைகொண்டுநீர்தானும்
அவளையனுசரித்தா லாருமுன்னைக்கேளார்கள்
கறும்பழகிதன்னிடத்தே கடுகவேபோடாவென்றாள்
என்னடிஎன்தாயே இழிவானவார்த்தைசொன்னாய்
நான்மாலைவனம்போறேனென்றால் மற்றவனம்போடாவென்றாய்

வன்னிவனம்போறேனென்றால் வேறுவனம்போடாவென்றாய்
மாலையைநான்சிறையெடுக்க வரங்கொடெம்மாபெற்றவளே
நீவரங்கொடுத்தாலாச்சுதம்மா யில்லாமற்போனாலே
நான்சிரோகநாட்டிடுவேன் சிவவதைசெய்திடுவேன்
கத்தியைநாட்டிவைத்துக் கடுகவுயிர்வாங்கிக்கொள்வேன்
எட்டியலரிதின்று எந்தனுயிர்வாங்கிக்கொள்வேன்
நீவிடைதந்தனுப்பிவிட்டால் விருதாவில்மாளுகிறேன்
என்றிவர்சொல்லையிலே யீஸ்வரியுந்தான்கேட்டு
ஆறாற்கேளென்மகனே அறியவொருவார்த்தை
பாச்சூருசாலையிலே பாரமணல்மேடையிலே
தச்சனுளிநாடாமல் தானாய்வளருதடா
சிற்றுளிநாடாமல் சீராய்வளருதடா
ஆச்சாவயிரமுள்ள அறுபதடிவேங்கைமரம்
ஐங்கலப்பால்வார்த்துமல்லோ அழகாய்வளர்த்துவாருள்
கதிர்கம்பிபோலாகக் காளிவளர்த்துவாருள்
உனக்கென்றுகழுமரந்தா னுடனேவளருதடா
மாலையென்றுசொன்னவற்கு வளருதேகழுமரங்கள்
கன்னியென்றுசொன்னவற்கு கழுமரம்வளருதடா
பக்கம்பதினாரெலும்பு பாய்ந்திடுமேமேற்குறடு
நாபிக்குகுத்தினமுள் நாசிக்குருகிடுமே
கைவைக்குமிடங்களெல்லாங் கட்டாணிதைத்திடுமே
இரண்டுகால்வைப்பிடத்தி லிருப்பாணிதைத்திடுமே
கழுவில்நீமாளனுமா கண்டவர்களேசனுமா
பெண்ணுக்காய்கழுவிருக்க யென்மகனேயுன்விதியோ
உன்தலையின்விதியதனை தடுக்கமுடிகூடலையோ
சாதகமுந்தப்பாது தலைவிதியும்பொய்யாது
தகப்பனிடசாபமது தப்பாதொருக்காலும்
உன்விதியையென்னால் விதிக்கமுடிந்திடுமோ
வரவிட்டயேமனைத் தரவிட்டழைத்தானே
என்றிவள்சொல்லையிலே யேதுரைப்பார்பஞ்சவர்னம்
எந்தன்தலைவிதியைத்தப்பிவைக்க தாங்குமோதானுன்னாலே
வந்தவினைகளெல்லாம் வழிதங்கப்போறதில்லை
எந்தனுக்குவந்தவிதி யானேயனுபவிப்பேன்
இப்போமலைதனையணைய வரங்கொடம்மாதாயாரே
வெண்ணீறுஅள்ளியிடு விமலியரேயென்றுரைத்தார்
என்றிவர்கேட்கையிலே யீஸ்வரியுமேதுசொல்வாள்
வெண்ணீறுதான்கொடுத்தாள் விமலியந்தகாமாட்சி
வெண்ணீறுவட்டமிட்டு விமலிபிள்ளைதானெழுந்தார்

கஉ-வது காத்தவராயசுவாமி ஆரியமாலையின்
வாலாறு கூறும்வனம் முற்றிற்று.

உ

சிவமயம்.

# காத்தவராயசுவாமி

## முடிவில் கழுவேறி மீளுதல்.

---

விநாயகர் துதி வெண்செந்துறை.

தூங்கண்முகமுடைய துய்யக்கணபதியே
மாங்கனிக்காகபூமி வலமாகவந்தவரே
தேங்காய்கொழுக்கட்டை தெவிட்டாதமுக்கனியும்
பாங்காயான்படைப்பேன் பையலுனக்கடிமை
அந்தரமெல்லாம்புகழும் ஆண்டவனார்பஞ்சவர்னம்
சுந்தரத்தவசடியிற் சிறப்போடிருந்தகதை
மங்கையர்கள்நங்கையர்கள் மனக்களிப்புமேலோங்க
சங்கைமிகவல்லாமல் தயவாகத்தான்வாழ்க
கற்றவர்கள்மற்றவர்கள் கருத்திமிகப்பார்க்க
நற்றவத்தோர்கள்கண்டு நல்லதென்றுதானேற்க
அடியேன்பொருட்டாக அகதொன்றும்வாராமல்
துடியாகவென்னுவில் துகளொன்றும்நேராமல்
வந்துகுடியிருந்து வரங்கள்மிகத்தந்து
எந்தையேயான்பாட விசைந்தருளுங்கயமுகனே

கதையின் வரலாறு.

என்-சொல்லிமலைசுவாமி குமரேசர்பஞ்சவர்னம்
வையாபுரித்தலைவன் மாலைமணிமார்பழகன்
தாயார்தவத்தைவிட்டு சண்முகனுரெங்குவாருர்
மஞ்சையப்பன்கட்டிவைத்த மண்டபத்தில்வந்துநின்று
தொட்டியத்துச்சின்னான் துரைமகனேவாருமென்றூர்
சுவாமியழைத்தகுரல் சின்னானவனறிந்து
கட்டுரைக்கப்பெட்டிகட்டிக் கட்டழகன்கொண்டுவந்து
இவர்முன்னிலையிற்கொண்டுவந்து வைத்துமவன்தெண்டனிட்டு
காத்தலிங்கமானவற்கு கடுகவலங்கரிப்பான்
ஒண்டிக்கடுக்க னொருகாதில்மேல்முருகு
சவுளிக்கடுக்கன்களாம் சன்னல்பின்னல்தாழ்வடமாம்

முன்விரல்மோதிரமாம் பின்விரலாழிகளாம்
ஆணிமுத்துத்தோடாவு மலங்கரித்தான்சுவாமியற்கு
நெற்றியினில்சுட்டிகட்டி நீலத்துருய்சொருகி
இட்டாரொருதிலர்தம் ஏழுலக்ஷம்பொன்பெறுமே
வைத்தாரொருதிலர்தம் வர்ணலக்ஷம்பொன்பெறுமே
ஆண்டியப்பன்கெந்தபொடி யைங்காதம்வாசனையாம்
அள்ளித்தெளித்துக்கொண்டா ரத்தர்பன்னீருடனே
காந்தியுருமாலை கள்ளர்கட்டுமுண்டாச்சு
சேலத்துருமாலை செக்காடுபொன்சரிகை
முடியின்மேல்தானணிந்தார் மூன்றுலகந்தான்மதிக்க
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்கள்தான்தரித்து கட்டிவரிந்துகட்டி
கச்சைவரிந்துகட்டி காவிகச்சைசுங்குவிட்டு
எண்ணைகச்சையேழுமுழம் எட்டுசுற்றுய்பிகுவெடுத்தார்
அவர்-முன்புரத்தொங்கலிலே மோககன்னியக்ஷரமாம்
பின்புறத்தொங்கலிலே பிரமனிடயக்ஷரமாம்
இடதுபுரத்தொங்கலிலே ஏமனிடயக்ஷரமாம்
வலதுபுறத்தொங்கலிலே மகாதேவரக்ஷரமாம்
மங்கமானசெட்டிவீடு மதுரைசெட்டிவீடெழுதி
தெப்பகுலமெழுதி தென்னமரங்கண்டெழுதி
காலில்மெருவ்வடியுங் கட்டழகர்தானணிந்து
சாய்ந்தநடையழகும் சன்னல்பின்னல்தாழ்வடமும்
ஓய்ந்தநடையுடனே யுன்னிதமாய்வாருரே
அப்போதுசின்னானும் மாண்டவர்க்கேதுசெய்தார்
என்னைமுன்னேநீரழைத்தீ ரேதுவகைசொல்லுமென்றார்
உன்னையழைத்தவகை யுத்தமனேசொல்லுகிறேன்கேள்
கழுமரங்கள்வலங்கரிக்கக் கட்டழகானைழைத்தேன்
வண்ணாரவள்ளியவள் வனத்திலுள்ளயாடைகளை
இந்தக்ஷணந்தனிலே யிங்குகொண்டுவாருமென்றார்
அப்படியேநல்லதென்று அழகுடையசின்னானும்
கோமுதலைவங்குதேடி கொற்றவனுமங்குவந்து
அங்கே-வைத்திருந்தஆடைகளை வானலக்ஷந்தானெடுத்து
கழுமரத்தின்தன்னருகில் கட்டழகனோடிவந்து
ஆரியமாலையது வாணழகன்தானெடுத்து
கழுமரத்தைசுற்றியவன் கனக்கவலங்கரித்தான்
மூன்றுநல்லகூண்டதனை விதமாகவுண்டுபண்ணார்
ஆரியப்பூமாலையற்கு அழகானகூண்டுமொன்று
அன்னமுத்துமங்கையற்கு மரிவையற்குங்கூண்டுமொன்று
செட்டிப்பெண்ணுகந்தழகி தேன்மொழிக்குகூண்டுமொன்று
மூவருக்குமூன்றுகொண்டு விதமாககட்டிவைத்தான்

கழுமரத்தின் தன்னருகில் காலைவைத்தேறுதற்கு
முதற்படிமுத்துரத்னம் இரண்டாம்படிநாகரத்னம்
பச்சைமரகதத்தால் பத்துபடிசொப்பனிட்டாள்
இவ்விதமாக சோடித்தான்சின்னானும்
சோடித்தாயிற்றென்று சொன்னானேசின்னானும்
வந்துநீபாருமையா வர்னக்கழுமரத்தை
அந்தவுரைகேட்டு ஆண்டவருந்தாமெழுந்து
வந்துகழுமரத்தை பார்த்துமவரேதுசொல்வார்
சபாஷடாசின்னானே சந்தோஷமானேண்டா
உன்னைப்போலூழியனை யுலகத்தில்நானறியேன்
எதுக்கும்வல்லவண்டா யெதுக்குஞ்சமர்த்தனடா
என்றிவர்புகழ்ந்தா ரெங்கள்துரைபஞ்சவர்னம்
அப்போதுபஞ்சவர்ன மாரைநினைக்கலுற்றார்
தாயார்க்குமுன்பிறந்த தையலந்தகாளியரை
வல்லத்துமாங்காளியை மனதிலவர்நினைத்து
என்னடிஎன்தாயே எனைவளர்த்தயீஸ்வரியே
இக்ஷணத்திலிங்குவர வேண்டுமம்மாயீஸ்வரியே
ஆண்டவனார்தானினைக்க அறந்தாளேமாங்காளி
வல்லத்துமாங்காளி மாதேவிதானறிந்து
டக்கைடமரகமுந் தன்னுடையஆயுதமும்
சூலமொருகையிலும் சுக்குமாந்தடியதுவும்
கன்னங்கறுத்தசூரி கைதனிலேதான்பிடித்து
ரணசட்டிபெலிசட்டி நேரிழையாள்கைபிடித்து
மாடறுக்குஞ்சூரியது மடிதனிலேதான்சொருகி
கலைத்தோல்புலித்தோலுங் காட்டுமான்தோலுடனே
சடைகுளங்கமுடியசையத் தான்வாறாள்காளியரும்
தடிக்காரர்தர்க்கமிடப் பெலிக்காரரொப்படைக்க
அண்ணம்மார்கொக்கரிக்க அனேகம்பூதந்துள்ளிவர
இத்தனைபேர்கூட்டத்துடன் வாறாளேமாங்காளி
கழுமரத்தைதேடியல்லோ காளியம்மன்வாராளே
காளிவருகிறதைக் கண்டாராம்பஞ்சவர்னம்
எதிர்நோக்கித்தெண்டனிட்டு யேந்திழையாள்முன்னேவந்து
பாதமதுவலம்பி பட்டாலடிதுடைத்து
வர்னவர்னப்புட்பங்களை மலரடியில்தான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிசாய்ந்துதெண்டனிட்டார்
அஞ்சலடிமேலேவந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவரைக் கண்டந்தகாளியம்மன்
நமஸ்கரித்துபாலகனை வாரியெடுத்தணைத்து
என்னைப்பெருவா யெதிர்த்தார்முடிபெறுவாய்

பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
வாயினுள்வாழ்த்தியர்த்தமைமக்களைத்தழுவிக்கொண்டாள்
இவர்-ஜைகட்டிவாய்புதைத்துக் காளிமுன்னேநிற்கையிலே
வல்லத்துமாங்காளி மயிலணையாளேதுசொல்வாள்
மடப்பாக்கத்தாச்சாரி மன்னவரையழையுமென்றாள்
அப்படியேயாகல்லமென்று ஆண்டவருந்தானடந்து
ஓட்டம்பெருமையுடையா யோடிவந்துபஞ்சவர்ணம்
அண்ணன்தம்பியேழுபேரு மவர்களங்கேதுசெய்தார்
யானைகொண்டுபல்விளக்க யோலைகொண்டுநாவழித்து
பொய்கைதனிலிறங்கி புனல்கங்கைநீராடி
கனைந்துதுகில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்பணிந்து
பட்டமுள்ளநெற்றியிலே சந்தனப்பொட்டுமிட்டு
ஆற்றலரிகொன்றைதும்பை யடுக்கரிப்பூவெடுத்து
செவ்வலரிப்பூவெடுத்து செற்றலரிமந்தாரை
ஆற்றுமணலெடுத்து ஆவுடையாருண்டுபண்ணி
சேற்றுமணலெடுத்து சிவலிங்கமுண்டுபண்ணி
அபிஷேகஞ்செய்துவைத்து அடைதுகிலணிந்து
கொண்டுவந்தபுட்பத்தைத் தொப்பெனவேபூசைசெய்து
அரனேபரனேயென்று அவர்கள்துதித்துநின்றார்
ஈஸ்வரனைக்கைதொழுது இவர்களெழுந்திருந்து
மாளிகைதேடியல்லோ மன்னவர்கள்வந்தவுடன்
மங்கையர்களேழுபேரும் மனதுசந்தோஷமுடன்
வாழையிலைபோட்டு மணிசசெம்புநீர்தெளித்து
சற்றிப்பதார்த்தம்வைத்து தோகையர்களன்னமிட்டு
குத்தபருப்புமிட்டு கூசாமல்நெய்சொரிந்தார்
எழுபேர்மன்னர்களு மின்பமுடன்போசித்து
போசனங்களுண்டுமவர் பொடியிட்டுகைதியிறி
அரிபிளவும்வெற்றிலையு பள்ளியவர்தரித்து
உடுப்புகள்தான்தரித்து வுத்தமனுரேதுசெய்தார்
வாசியுளிகைபிடித்து வந்துநின்றார்வீதியிலே
அந்தச்சமயத்தி லாண்டவரங்குவந்து
சுவாமிவருகிறதைத் தச்சர்களுந்தாமறிந்து
தோட்டமதுதிறந்து தொன்னைதைத்துப்பூவெடுத்து
பொன்னீருஞ்செம்புதனில் பன்னீருங்கொண்டுவந்து
பாதமதுதலக்கிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபுட்பமதை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவரைக் கண்டந்தபஞ்சவர்ணம்
வாழ்த்திசெபுத்துமவர் மதுவார்த்தையேதுசொல்வார்

சொல்லிமலைப்பூதங்களைக் குமரேசர்தானழைக்க
வைரவி-யாவெனுமழைக்கிறபோலே வந்ததேபூதமெல்லாம்
மூக்கிலைச்சேவகர்போ லுலவெண்ணூர்பூதங்களை
சுத்திலேசல்பூதங்கள ஆண்டவனார்தானழைத்து
கட்டுமுட்டுக்குடமும நலமாகக்கேளிக்கையும
டமாரமுமேளங்களும் பேரிகையுந்தான்முழங்க
தூரிகைநாணாத பெரியடமாரமடிக்க
கட்டியங்கள்கூவியாக் கவிவாணர்பாடிவர
புள்ளாங்குழலூதப் பேரிகைகள்தான்முழங்க
ஆடுவோராடிவர ஆலவட்டம்வீசிவர
பாடுவோர்பாடிவரப் பலசனங்கள்சூழ்ந்துவர
இக்கவிதவேடிக்கையாய்ச் செய்துகொண்டுநீங்களுந்தான
சின்னமுடனாக திரும்பிவந்துசேருமென்றார்
கோமுதலிவங்கத்தடிக் கொப்பெனவேயாடிவந்து
செய்யான்சிறையிருக்குஞ் செங்கழுநீரோடையிலே
கோமுதலிவந்துதனில வந்துமங்கசின்னனும
ஆச்சாளழகுபெண்ணே ஆயன்மகளாங்கிருந்தாள்
செங்கல்முதலிபின்மேல தேனமொழியாளங்கிருந்தாள்
இம்மூனுமாதர்களு மிருக்கிறதோவையிலே
அந்தவிடந்தனிலே சின்னனுமங்குவந்து
வாருங்களம்மாவென்று வருந்தியழைக்கிறான்
இம்முதலைப்பாறைவிட்டு யாவருமவாருங்களென்ன
உங்களைக்-கொண்டுவந்துசேர்ப்பனென்று கூப்பிட்டழைக்கிறான்
வாருங்களென்றுசொல்லி வருந்திருமென்னசின்னையனும
அப்போதுமெல்லியர்க ளிணையாளதுசெய்தார
முதலைபக்குபாறைவிட்டு மெதுவாயெழுந்திருந்து
பத்துபடிதாண்டி பாவையர்களவாரும்ப
ஆடலும்பாடலுட னருகினிலேவாரார்கள்
ஒய்யாரநடைநடந்து ஒளிவுள்ளசோதியைப்போல்
சாய்ந்தநடையுடனே வைகயலருமவாறாகள்
கழுமரத்தைத்தேடியங்கே கன்னியர்கள்வாரார்கள்
அவர்கள்வருகையிலே ஐயமாராயிரம்பேர
ஆறுபேர்வேதியரு மாரியப்பராசாவும
அறபோசிமகாராசர் துளசிமகாராசாவும்
ஒன்பதுபேர்மந்திரிகளு மொருகோடிச்சனங்களும்
மலையன்சிவப்புடையான மன்னர்களேழுபேரும
ஆரியப்பூமாலையவரியவர்கள் அண்டநாழிகைக்கு
அம்மணிவாருமென்று அன்னவருங்கைத்தொழுதார்
மாணிக்கச்செட்டிமகள் மயிலம்மையாளைத்தொழுது
அன்னமுத்துவாறானென் நல்லவாருங்கைதொழுதார்

வயிரசெட்டியாரீன்ற மங்கையாளுகந்தழகி
உகந்தழகிவாறதனை வுத்தமர்கள் தான்பார்த்து
வருகின்றமூவர்களை மனதாரப்பார்த்தவர்கள்
கண்டுமனமகிழ்ந்தார் காரிகைமார்மூவர்களை
இதுவரையிற்காணாத பாலகன்னிநாயகியை
இன்றையதினமதிலே பேரழகியைக்கண்டோமென்று
ஆனந்தமாகவல்லோ அவளை வருந்தாயிருந்தார்
இப்படியாகவே இருக்கின்றவேளையிலே
அந்தசமயத்திலே யரிவையர்கள்மூன்றுபேரும்
கழுமரத்தின் தன்னருகில் கன்னியர்கள்வந்துபின்பு
அங்கிருந்தசேனைகளை யவைவரையுந்தான்பார்த்து
கலக்கமுற்றுகன்னியர்கள் கடுகெனவேதான் திரும்பி
அருங்கிளியாள்மூவர்களு மாண்டவர்க்குத்தண்டனிட
அப்போதுஆண்டவனு மரிவையர்க்கேதுசொல்வார்
கழுமரத்திலேறுமென்று கன்னிகட்குத்தாமுரைத்தார்
ஆண்டவனார்சொற்படியே அரிவையர்களேறலுற்றார்
ஒன்பதுபடிதாண்டி யுத்தமரேறினபின்
பத்தாம்படிதனிலே பரமசிவன்தன்னருளால்
ஆரியப்பூமாலையம்மா ளெண்பாயிடதுபுறம்
வாழ்வரசிஎன்னமுத்து வலதுபுறமவந்துநின்றாள்
செட்டிப்பெண்ணுகந்தழகி தேன்மொழியாள்பின்புறத்தில்
அவரவர்கண்டுதனி லரிவையர்கள்போய்புகுந்தார்
அப்போதுஆண்டவனு மரனையழைக்கலுற்றார்
கொல்லிமலைக்கன்னிகளைக் குமரேசர்தானினைந்து
அவர்-வாவென் றழைக்கையில் மலைப்புறத்துகன்னிகள்
சுவாமியழைத்ததால் சத்தகன்னிதாமறிந்தார்
நமது-அருமையுள்ளபாலனிவ னழைக்கிறானென்றுசொல்லி
கொல்லிமலைவிட்டுக் கொம்பனைமார்வழிநடந்து
கழுமரத்தின்பேடையண்டை கன்னியர்கள்வந்தவுடன்
கண்டுமகிழ்ந்தபஞ்சவர்ணம் கடுகவேதானெழுந்து
தும்பைமலர்போட்டுத் தொழுதாரவர்பாதம்
பண்ணைமலர்போட்டுப் பாதம்தொழுதுநின்றார்
வந்துபணிந்தவனை வாழ்த்தினார்கன்னியர்கள்
ஏவலைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
கண்ணுறுதபொல்லாது கடுகவெழுந்திரென்று
எங்களையழைத்ததென்ன எங்கள்மைந்தர்கூறுமென்றார்
அப்போதுஆண்டவனு மழுதழுகமாயுரைப்பார்
நான்-கழுவுக்குஆளானேன் கன்னிகளேயென்தாயே
என்னைநீங்களிப்பொழுது இனிக்காத்தருளவேண்டும்
எனக்கொருதுன்பமது வாராமற்காருமென்றார்

மைந்தனையேற்றிக்கொண்டு மங்கையர்களேறினார்கள்
கடுவிருந்த கூண்டுகளி லிவரிருந்தார்மூவரும்
மடப்பாகைதாச்சாரி மன்னவரைத்தாமழைத்து
கழுமரத்திலேறுமென்றார் காத்தலிங்கசுவாமியவர்
சுவாமியுடனேறித் தாமிருந்தார்மன்னவர்கள்
இப்படியாக யிவரிருந்தார கழுமரத்தில்
அப்போது ஆண்டவரு மையரவரோது சொல்வார்
வாவென்றழைக்காரும அருகுதபசமுதவேஷம்
கூப்பிட்டழைக்தாரும் குறிக்கதுமரதவேஷம்
இராஜவடிவாக கலபாகவேஷங்கொண்டு
கழுமரத்தின் தன்னடியில் காத்தவனார்வீற்றிருந்தார்
சின்னானுந்தன்னருகே சீமானும்வீற்றிருந்தார்
ஏழுகல்லகன்னிகளி லிரண்டுபேர்கன்னியர்கள்
மந்திரவாள்கைபிடித்து மன்னவரைக்காத்திருந்தார்
இத்தண்டபேர்களெல்லா மிங்கேயிருக்கையில்
ஆரியப்பூராசாவு மக்கேரமேதுசெய்தார்
தண்டோராபோடவைத்தா தனதுசெயனார்சீமையெல்லாம்
என்னவென்றுதண்டோரா போடலுற்றார்பூமியெங்கும
கழுமரப்பூசைசெய்யக் கட்டழகரெல்லோரும
வீட்டுக்கொருவுலை பொங்கல்வைக்கவேண்டுமென்றார்
அதற்குள்ளசாங்கியங்க ளனைவோருஞ்செய்யவேண்டும்
இவ்வகையாய்த்தண்டோரா அவ்வூரில்போடலுற்றார்
தேசத்தார்தான்கேட்டு சீக்கிரமாயவரெழுந்து
அவரவர்கள்பொங்கலிட ஆனதெல்லாஞ்சேகரித்து
ஆடுகோழிபன்றிகளாம் அபினிகெஞ்சாமாஜினமும்
சோவில்சாறுயம் தினைமாவும்ரொட்டியுடன்
கழுவடிக்கிப்பூசைசெய்ய கடுகவேவந்துவிட்டார்
கழுமரத்தைச்சுற்றியவர் கடுகவேபொங்கலிட்டார்
தேங்காயுடைத்துவைத்தார் செவ்விளநீர்திறந்தார்
பாணக்கநீர்மோரும் பச்சரிசிவைப்பாகள்
தண்ணீர்தெளிப்பார்கள் தாகவிடாய்தீர்ப்பார்கள்
கற்பூரதூபம் கடுகெனயவதான்கொடுப்பார்
இப்படியாகயிவர்கள் யிருக்கையிலே
அப்பொழுதுயேதுசெய்தா னங்கிருக்குஞ்சின்னானும்
சங்கிடிசெய்திருங்கள் என்றுமவன்கைகொடுத்தான்
ஆரியப்பூராசனவனந்தநல்லவேளையிலே
தன்னுடையமந்திரிகளைத் தானழைத்தேதுசொல்வான்
சந்தடிசெய்யாதிருக்கத் தாமுறையுமென்றுசொன்னான்
அரசனதுசொற்படியே அடக்கினார்சந்தடியை
வந்தசெனங்களெல்லா மாலையற்குதெண்டனிட்டார்
மச்சான்மாரேழுபேரும் வந்தார்கழுவடிக்கு

நாக்கதனைத்தொங்கவிட்டார் நயனவிழிபிதுங்க
அவனுடையபஞ்சவுயி ரந்தரத்திற்போகுதுபார்
அப்போதுதன்னுடைய அறிவுவந்தேதுரைப்பான்
என்சாமிஎன்குருவே யெனக்கென்னபுத்தியென்றான்
கொல்லிமலைசுவாமி குமரேசனேதுசொல்வார்
அவனை-கழுவைவிட்டெக்கீழிறங்கி கட்டழகரேதுசெய்தார்
கழுவடிமேடையின்கீழ் சமாதியங்கேயுண்டுபண்ணார்
இன்றுமுதலுனக்கு முன்பூசைதாரேனென்று
அவனைசசமாதிகளி லடக்கிவிட்டார்பஞ்சவர்ணம்
அவனுடையதா ரிவையருந்தான்கேட்டு
மகனேமகனேயென்று மயிர்விரித்துக்கொண்டுமவள்
ஐயோமகனேயென்று அலைந்துக்கொண்டோடிவாறார்
உன்னைப்-பெற்றவருமையென்ன வளர்த்துவந்தநேர்த்தியென்ன
தடவிவளர்த்தேனே தவமடையெல்லாம்பொய்யாக
ஒருபிள்ளையென்றுசொல்லி ஊட்டிவளர்த்தேனே
என்றழுதுகொண்டு இங்குவருளவ்விடைச்சி
உந்தனுடனேநான் உயிர்விடுவேனென்றழுது
அலவியழும்வேளையிலே அவளுமிறந்துவிட்டாள்
அவளுடையபஞ்சவுயி ரலையுமேயந்நேரம்
அதுகண்டுபஞ்சவர்ண மங்கோமேதுசொல்வார்
கன்னிடையனுகழுத்து சல்வண்ணர்தானேடி
கழுமாத்தினோத்திலே கட்டகன்வருகையிலே
இதென்னசத்தமென்று எமிரித்துபார்க்கலுற்றார்
மரத்தின்மேல்மூன்றுபெண்கள் மங்கையரிருப்பதென்ன
எவ்வளவோகோடிசென மிங்கேயிருப்பதென்ன
என்றியன்கலங்கி பெண்ணையிட்டோகழுத்து
அங்கிருமன்னர்களை அவனுமேகேட்கலுற்றான்
மரத்தின்மேலேறியேநான் மகிழ்ச்சியாய்வந்தாலே
மூன்றுபேர்கன்னிகளை யெந்தனுக்குதருவீர்களோ
அதுகேட்டுமன்னவர்கள் ஆகாதென்றுரைத்தான்
நானேறியிங்குவந்தா லென்னபிணிதுரைத்தேன்
வந்தாலுங்குற்றமில்லை மன்னர்களேயென்றுரைத்தான்
சின்னவனதுகேட்டு சீக்கிரமாயேதுசொல்வார்
நீ-அப்படியேவந்தாயானா லரிவையரைத்தாரேன்
அந்தவுரைகேட்டு அழகுள்ளகன்னிடியர்
வண்டிவிட்டுத்தானிறங்கி மன்னவனும்என்னென்றான்
கடுகவேவோடிவந்து கழுமரத்தின்மேடைமேல்
ஆசமணமீதில் ஆணழகன்காலைவைத்து
கால்வைத்தயிடங்களெல்லாம் இருப்பாணிதைக்குதங்கே
காயிற்றைத்தழுள்ளு காசிக்குருகுதுபார்

அனைவோருங்கைதொழுது ஆண்டவரைத்தோத்தரித்தார்
இப்படியாக யிவர்கள்தொழும்வேளையிலே
உச்சிதனிலேறி உட்கார்ந்தசுவர்மிக்கிப்போ
இவர்-கால்வைத்தயிடங்களெல்லாம் கட்டாணிதைக்குதங்கே
இருகைகள்வைத்திடத்தி லெழுத்தாணிதைக்குதங்கே
நாபியிற்பாயக்தமுள்ளு நாசிக்குருக்குதுபார்
நல்லவுயிர்சோறுதுபார் கண்கள்பிதுங்குதங்கே
தாயார்கொடுத்தவரம் சுவாமிதுரையாண்டவர்க்கு
வேகர்ச்சுடலையிலே சாகாவரங்கொடுத்தாள்
அதினாலேதானவர்க்கு அனர்த்தம்வந்துநேர்ந்ததப்பா
வாதனையும்வேதனையும் வருத்தம்வந்துநேர்ந்ததப்பா
அந்தநல்லவேளையிலே ஆதிசிவன்தாமறிந்து
முக்கண்ணனுடையசிவன் மிகவுமவறரிந்து
மட்டுக்கடங்காத மதமடக்கவேண்டுமென்று
குண்டோதரனவனை யழைத்துமவரேதுசொல்வார்
நீ-வண்டாகப்போயிருந்து மரத்தைத்துளைத்துவிடு
மரத்தைத்துளைத்துவிடு மண்மேல்விழுந்துருள
என்றுயிவருரைக்க யெழுந்திருந்தான்குண்டோதரன்
வண்டாய்வடிவெடுத்து குண்டோதரன்வாரானே
கழுமரத்தினோரத்திலே கடுகவனோடிவந்து
மரத்தைத்துளைப்பதற்கு வழிபார்க்கும்வேளையிலே
மலையாளச்சின்னனு மன்னனிதுவரிந்து
அஞ்சனத்தைபோட்டுமவர் பார்க்கலுற்றானேரம்
வெற்றிலையில்மைதடவி விபரமாய்ப்பார்க்கலுற்றார்
மையுருகமையுருக கையழகுதோற்றுதங்கே
அனுமாருமங்கத்து மவர்கள்முன்னோடிவந்து
குண்டோதரனுக்குவந்தான் கழுமரத்தைதான்துளைக்க
என்றுமிவனுக்கு யெடுத்துரைத்தாரிக்ஷணத்தில்
அப்போதுசின்னனு மவசரமாய்தானெழுந்து
கெட்டுதுகுடிகளென்று கேடுவந்துநேர்ந்ததென்று
குண்டோதரனவனைக் கானுமென்றீஸ்வரனார்
நந்தியைத்தானழைத்து நல்லகுண்டோதரனை
அழைத்துவந்துசேருமென்று ஆதிசிவன்தாமுரைத்தார்
அந்தவுரைகேட்டுநந்தி யப்பொழுதுவாரூரிங்கே
கழுமரத்தின்மேடையண்டை கடுகெனவேயோடிவந்து
கட்டுபட்டகுண்டோதரன் காலையிருப்பதுவை
கண்ணாலேகண்டவரும் கடுகெனவேயோடிவந்து
கட்டையவிழ்த்துக்கொண்டு கைலங்கிரிவந்தார்கள்
ஐயனிடசாபத்தினா லருமையுள்ளபாலனுக்கு
வாதனையும்வேதனையும் வருத்தங்களுண்டாயிற்று

என்றுமிவரெண்ணமிட்டு யிங்கிருந்தார்நந்திசுரர்
உமையவள்தன்னிடத்தி லோடிவந்தார்தூதுவர்கள்
ஈஸ்வரியைக்கண்டார்க ளின்பமுள்ளதூதுவர்கள்
கண்ணிரண்டுமூடிக்கொண்டு கையிரண்டுமேந்திக்கொண்டு
அரனேபரனேயென்று ஆண்டவரைத்தான்துதித்து
கயிலைதனில்வாழுங் கடவுளேயீஸ்வரரே
என்றைக்கென்சாப மெப்போதுலேக்கிடுமோ
என்றிவள்சொல்லி யிருந்தாள்தவநிலையில்
அந்தநல்லவேளையிலே வந்தபெருந்தூதுவர்கள்
யோகத்தில்தானிருந்து சித்தடிக்கேதுசொல்வார்
உன்-மைந்தன்கழுமரத்தில் வாதனைகள்பட்டானென்று
தூதுவர்கள்தாமுரைத்து தூரவழிபோய்நடந்தார்
அதுகேட்டுகாமாட்சி ஆரணங்கேதுசெய்தாள்
மைந்தன்படுந்துயரம் மாதாயவளறிந்து
நடைகுலுங்கமுடியசைய சன்னியாசிவேஷத்துடன்
மலைத்தோல்புலித்தோலும் காட்டுமான்தோலுடனே
கையில்செபமாலைகளும் கனத்தநல்லகப்பரையும்
வெண்ணீறுதூளிதமுமேனியெல்லாந்தான்குலுங்க
பாதக்குறடணிந்து பார்வதியாள்தானெழுந்து
கம்பாநதியைவிட்டுக் கட்டழகிவாருளே
ஆலமரத்தைவிட்டு அழகுசர்வப்பொய்கைவிட்டு
அடா-அம்மையப்பகாருளா அழகுடையவேளாளா
கம்பாநதியதனைக் காத்திரடாவென்றுசொன்னான்
ஆதிசிவசத்தியற்கு அடிவணங்கிதெண்டனிட்டான்
மண்ணுடுக்கைவாள்பிரம்பு மந்திரவாள்விபூதிப்பை
இந்தாடாயம்மையப்பா யென்றுமிவள்கைகொடுக்க
செப்புகுடம்வேப்பங்கொத்து எடுமிவள்கைகொடுத்தாள்
என்-தவசடியைக்காத்திரென்றாள் தையலந்தகாமாட்சி
அப்படியேநல்லதென்று னம்மையப்பன்காருளன்
என்னவரம்வேண்டு மெந்தனைகேளுமென்றாள்
இந்த-முத்திரைபிடித்தவர்க்கு நீதானேதெய்வமென்றாள்
இன்றுமுதலெல்லோர்க்கு நீதானேதெய்வமென்றாள்
முத்திரைக்கால்செப்பூசி மெல்லியவள்தான்கொடுத்து
இங்கேயிருமென்று ஈஸ்வரியும்கையமர்த்தி
காமாட்சியென்றுசொல்லிக் கலியுகத்தில்விளங்கும்படி
என்பேரைச்சொல்லியல்லோ யிங்கிருவென்றுரைத்தாள்
அப்படியேநல்லதென்று ஆச்சியற்குதெண்டனிட்டான்
என்னவென்றுசொல்லியல்லோ வாழ்த்துகிறாளீஸ்வரியும்
உன்னைப்போலூழியனை ஒருவரைநான்கண்டதில்லை
உன்னாலேயெந்தன்பெய ருலகமெல்லாம்விளங்கவைத்து
இந்த-கம்பாநதியதனைக் காத்திருநீயென்றுரைத்தாள்

அப்படியேநல்லதென்று னம்மையப்பன்கூறுளன்
அவனுக்குவிடைகொடுத்து அங்கேநிறுத்திவிட்டு
ஆலமரந்தாண்டி அப்பால்வருகையிலே
ஏழுபேர்கன்னியர்க ளிங்கேயிருக்கிறூர்கள்
அவர்களைப்பூசித்து அன்பாயிருடாவென்று
மகனேமகனேயென்று வாராளேயீஸ்வரியும்
முன்னாள்விதிப்பயனே முக்கணனூர்சாபனேயோ
அடிநாள்விதிப்பயனே அரனுரின்சாபனேயோ
அன்றெழுதும்பிரம னழித்தெழுதமாட்டானே
என்னதான்சொன்னூலு மென்வார்த்தைகேளேனென்றுன்
ஆச்சாவயிரமுள்ள அருபதடிவேங்கைமரம்
உனக்கென்றுவளர்ந்ததடா உன்னுயிரைவாங்குதற்கு
அழகுமுடிசேர்வதற்கு அரனுமுனேயுண்டுபண்ணூர்
மாலைதனைநீயெடுக்க கழுமரங்களுண்டாச்சே
நீ-கழுவிலிருக்கணுமா காய்ந்துலர்ந்துசாகணுமா
தூண்டிலிருக்கணுமா துடிதுடித்துச்சாகணுமா
மரக்கழுவில்நீயிருக்க மண்டலத்தாரேசணுமா
காமாட்சிப்பிள்ளையென்று கண்டவர்களேசணுமா
கழுவுக்குபால்வார்த்து உண்டுபண்ணுளுத்தமியும்
உரியில்தயிர்வார்த்து உண்டுபண்ணுளுத்தமியும்
மகனேமகனேயென்று அலேந்துகெட்டுவாராளே
உன்ஆவிபதைபதைக்க அவஸ்தைப்பட்டுசாகிறையோ
சீவன்பதைபதைக்க சீர்குலேந்துமாள்கிறையோ /
கன்னியைநீதொடவும் கழுமரத்திற்றெங்கிடவும்
மாலையைநீதொடவும் மரக்கழுவிற்றெங்கிடவும்
கண்ணாலேபார்ப்பேனேடா கட்டழகாவென்மகனே
குடியிருந்தயென்வயிறு குலேவயிருபற்றுதடா
அண்டியிருந்தவிட மடிவயிருபற்றுதடா
இப்படியாய்தான்புலம்ப யீஸ்வரியுமங்குவந்து
பார்த்துவயிரெறிந்து பைங்கொடியாள்தானெழுந்தாள்
கண்டுவயிரெறிந்து காமாட்சியழுகலுற்றுள்
உனக்குவந்ததீவினைக்கு யுத்தமிநானேதுசெய்வேன்
இப்படியாய்சொல்லியல்லோ யீஸ்வரிதானழுகையிலே
ஆடவர்களெல்லோரும் கலங்கியழுகலுற்றூர்
கண்துயரம்பார்த்தவர்கள் பக்கமழுகலுற்றூர்
படுசனங்களெல்லாம் வாய்விட்டழுகலுற்றூர்
வந்தஆயிரம்வேதியரு மழுதுபுலம்பினூர்கள்
அன்னதுளசியம்மா னவளுமழுகலுற்றுள்
இராசாக்கள்மந்திரிக ளனைவரும்புலம்பலுற்றூர்
வலேயன்சிவப்புடையான் மன்னனழுகலுற்றுன்
மேனூரில்வாழுகின்ற மாணிக்கச்செட்டியவன்

பஞ்சவர்ணசுவாமிகளைப் பார்த்துப்புலம்பலுற்றான்
வயிரஞ்செட்டிபாளையத்தார் வரத்தகர்கள்தாமறிந்தார்
கழுமரத்துமேலிருக்குங் கொல்லிமலைக்கன்னியர்கள்
ஆண்டவரைத்தான்பார்த்து அழுதுபுலம்புகிறார்
ஆச்சாளழகுபெண்ணு ளையன்மகள்மாலையரும்
காத்தவனார்தன்துயரங் கன்னியவள்தான்பாத்து
அரிகரிரங்கநாதா அரிவையர்களேதுசெய்வேன்
என்னைவிட்டுத்தானிவர்க்கு இவ்வளவுவேதனையா
சொற்கிளையாளென்னாலே வருத்தப்படவாச்சிதிவர்
எத்தனைதவஞ்செய்து இளங்கொடியாள்பெண்பிறந்தேன்
என்னிமித்தமாகவல்லோ யிழுக்கழுவில்தொங்குகிறார்
கன்னிகையினாலேயிவர் கழுமரத்திற்றொங்குகின்றார்
இப்பெரியபாவமதை யெங்கேதுலைத்திடுவேன்
என்மனதுதாளலையே யேதுசெய்வேன்ரங்கநாதா
தன்னிமனந்தாளலையே காளைபடுந்துயரம்
ஆதரிக்கவேண்டுமையா ஆண்டவனாரிவ்வேளை
என்றுசொல்லிமாலைகன்னி யேங்கியழுகலுற்றாள்
அம்மாடியென்றுசொல்லி யழுதுபுலம்பியவள்
கூவியழுதாளே கோகிலன்னங்கள்போல்
வாய்விட்டழுதாளே மேனாட்டுக்கிள்ளைகள்போல்
அடிவயிருமார்பின்மேலே யறைந்துகொண்டுதானழுதாள்
வாயிலறைந்துகொண்டாள் வயிற்றைப்பிசைந்துகொண்டாள்
இந்தவிதமாக யிவளதுதான்களைத்து
கழுமரத்துக்கூண்டுக்குள்ளே களையாயவள்விழுந்தாள்
இவளழுதசத்தமதைக் கேட்டுவுகந்தழகி
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்பலுற்றாள்
பஞ்சிகொள்ளுஞ்செட்டியைப்போல் வந்தீரேமன்னவனே
பஞ்சிகொண்டெடுத்தனையும் பாங்காயெடுத்துவந்து
கோமுதலைவாங்கிலென்னை குடிமரத்திவைத்தீரே
ஆரோயெவரோவென் றறியாமல்நானிருந்தேன்
வேல்முருகாவென்குருவே நீவேதனைபடலாச்சே
எங்களாலுங்களுக்கு இவ்வளவுதுன்பமுண்டா
என்றுவுகந்தழகி யேங்கிபுலம்பலுற்றாள்
அறைந்துகொண்டழுத்தினா லவளுங்களையாகிவிட்டாள்
அன்னமுத்துபெண்மயிலா லவளுமழுகலுற்றாள்
ஐயோசிவனேயென்று அழுதுமவளோதுசொல்வாள்
அப்போதுமாயவனு ராண்டவனார்தாமறிந்து
தங்கையழுகிறதை சுவாமியவாறிந்து
காமாட்சிகண்ணீறு கழன்றுவிழலாகாது
நிலத்தில்விழுமாகில் நீறுயெறிந்திடுமே

இதற்கென்னசெய்வேனென்று யெம்பெருமானுஞ்சேவாருர்
கைலைபதிதேடி கரிமேகவண்ணர்வாருர்
ஆதிசிவன்தன்னிடத்தே ஆதிமூலம்வந்துநின்ருர்
மாயவரைத்தான்பார்த்து மகாதேவரேதுசெய்வார்
எங்குவந்தீர்மைத்துனரே யென்றுமிவர்கேட்கையிலே
பரமசிவனுர்க்கு பாரளந்தார்தாமுரைப்பார்
பிள்ளைபடுந்துயரம் புண்ணியரேகேட்கிலையோ
மைந்தன்படுந்துயரம் மகாதேவர்கேட்கிலையோ
வாதனையும்வேதனையும் மகாதேவர்க்குண்டுபண்ணுர்
தங்கையழுகிறது தரணியிடங்கொள்ளலையே
கண்ணீர்நிலத்தில்பட்டால் கனமோசம்வந்திடுமே
பாராமுகமாயிருந்தால் பாலனிறந்திடுவான்
வாதனையும்வேதனையால் பாலனிறந்திடுவான்
வருத்தமதைதீர்த்த மகாதேவர்வாருமென்ருர்
சீக்கிறமாம்வாருமென்று திருமாலுரைக்கயிலே
ஆண்டவனுரீஸ்வரர்க்கு அதிககோபமுண்டாகி
அண்டாதகோபமது அனலாய்ப்பற்றுதங்கே
தீருதகோபமது போருய்முடிக்கையிலே
அடங்காதபிள்ளையவனுவத்தாற்கெட்டவன்தான்
அவனுக்கிரங்கமாட்டே னப்பால்நடவுமென்ருர்
என்னதான்சொன்னுலு மிரங்கவில்லையீஸ்வரர்க்கு
குண்டோதரனந்தீசர் நாரதருமோடிவந்து
சுவாமிக்குமுன்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
ஈஸ்வரிபடுந்துயரம் எண்ணமுடிகூடலையே
பார்வதிபடுந்துயரம் பார்க்கமுடிபோகலையே
எங்களுக்குறியசுவாமி யெழுந்தருளவேண்டுமென்று
வரவேண்டுமென்றுசொல்லி மறுத்தொருகால்சொன்னுர்
அப்போதுபரமசிவ னவர்மனதுதானிறங்கி
கைலைவிட்டுமந்த கரத்தரெழுந்தாரே
ஈஸ்வரரெழுந்தவுட னெல்லோருந்தாமெழுந்தார்
நந்தீசர்குண்டோதரர் நாரதரும்தாமெழுந்தார்
ஆதிநெடுமாலு மையரவர்தாமெழுந்தார்
முப்பத்துமுக்கோடி தேவர்களும்வாருர்கள்
விக்கினவிநாயகரும் வேலவரும்வாருர்கள்
கழுமரத்தைதேடியல்லோ கடுகெனவேவாருர்கள்
திருச்சினப்பள்ளியது ஸ்ரீரங்கந்தேடியேவாருர்கள்
ஆரியப்பூராசனவ னுண்டிருக்குஞ்சீமைவிட்டு
உப்பங்கிடாரவழி யுயர்ந்திருக்குன்றருகில்
பூச்சூருசாலையிலே பலத்தமணல்மேட்டின்மேல்

ஆச்சாவயிரமுள்ள அறுபதடிவேங்கைமரம்
தச்சனுளிநாடாமல் தானுய்வளர்ந்தம்மா
வாசுளிநாடாமல் வளர்ந்தகழுமரந்தான்
கழுமரத்தின்மேலைபண்டை கடுகவேவந்தார்கள்
அப்போ-பார்வதிபடுந்துயரம் பார்க்கமுடியாமல்
அப்போதுயீஸ்வரனுர் அரனுருமேதுசெய்தார்
காணுதுபோலே கண்டுவிட்டாரீஸ்வரியை
அளவறறதுக்கமுட னுண்டவனுரப்பொழுது
மர்மமாய்விட்டுவிட்டார் மகாதேவரீஸ்வரரும்
அப்போதுபஞ்சவர்ன மாண்டவனுர்கழுமரத்தில்
வாதனையும்வேதனையாம் வருத்தமுடன்தானிருந்தார்
ஆரியமாலைபரு மன்னமுத்துவுகந்தழகி
இம்மூன்றுகன்னிகளு மேங்கிபுலம்பலுற்றூர்
அங்கிருந்தாரெல்லோரு மழுதுபுலம்பலுற்றூர்
கழுவடிக்குபூசைசெய்து காவுகொடுத்தார்கள்
இந்தவிதங்களெல்லா மீஸ்வரனுர்தாமறிந்து
மைந்தன்படுந்துயரம் மகாதேவர்தாமறிந்து
தனக்குமனந்தாளாமல் சுவாமியங்கேதுரைப்பார்
பறையாபறையாஆடா வலையமுவாவென்று
இரங்கடாஅடாபயலே யென்றிவர்தானழைக்க
கைலைதனிலிருக்கும் கர்த்தரழைக்கயிலே
அப்போதயாண்டவனு ரவிறங்கும்வேளையிலே
காலிற்கடையாணி கடுகென்வேவைக்குதங்கே
இருகைக்கிரும்பாணி யெழுந்தபேர்கொடுத்ததங்கே
பக்கம்பதிஞராணி பழுவெலும்புகுந்ததங்கே
நாபியிடநாட்டின்முன் நாகிக்குருகுதங்கே
அப்போதுபஞ்சவர்ன மாண்டவனுரேதுசெய்தார்
சோபக்களையாகி சோர்ந்தார்போல் தானிருந்தார்
வெந்நீரும்நீர்மோரும் வேணமட்டும்பாணக்கமும்
ஆண்டவர்க்குத்தான்கொடுத்தா ரந்நேரவேளையிலே
களைதெளிந்துதானெழுந்தார் கட்டழகர்பஞ்சவர்னம்
கழுமரத்தைவிட்டிறங்கி கடுகவேவாருர்கள்
ஆரியமாலையாரும் அன்னமுத்துவுகந்தழகி
கழுமரத்தைவிட்டுமல்லோ கன்னியர்கள்தாமிரங்கி
மூவருந்தாமிரங்கி சுவாமியவர்முன்னேவந்து
பாதமதுவலம்பிப் பட்டாலடிதுவட்டி
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
வந்துபணிந்தவரை கண்டந்தபஞ்சவர்னம்
வாழ்த்தியெடுத்து மலர்கையால்தூக்கிவிட்டார்
அப்போதுபஞ்சவர்னம் மங்கனவேயேதுசெய்தார்
ஈஸ்வரர்க்குமாயவர்க்கு மினிதுடனேதெண்டனிட்டு

அண்ணன்கணபதிக்கு அடிவணங்கிதெண்டனிட்டு
தாயரின்பாதமது சாஷ்டாங்கதெண்டனிட்டு
கண்டுவிட்டாள்காமாட்சி கண்ணீரடுந்தான்குளிர
அப்பாமகனே யென்னுண்மையுள்ளகண்மணியே
அரனுர்கடாட்சம்பெற்று புகழாகவாழ்ந்திடுவார்
கண்ணிரண்டும்பொல்லாது கடுகவெழுந்திரென்றாள்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகர்நிற்கையிலே
மூவரந்தகன்னிகளும் முக்கண்ணரைதெண்டனிட்டு
வந்துபணிந்தவரை வாழ்த்தினரீஸ்வரரும்
காமாட்சிபாதமதில் கன்னியர்கள்தெண்டனிட்டார்
அவளையுந்தான்வாழ்த்தி யம்மனெடுத்தாவிட்டாள்
கைகட்டிவாய்புதைத்து கன்னியர்கள்நின்றார்கள்
இப்படியாக யிவர்களிருக்கையிலே
மாயவரீன்றெடுத்த மகளாருங்கருப்பழகி
மைத்துனரைத்தேடியல்லோ மயிலணையாள்வாறளே
ஏழுகம்பர்களும் இளங்கொடியும்வந்தார்கள்
கழுமரத்தின்மேடையண்டை கடுகவேயோடிவந்து
ஈஸ்வரனுர்பாதமதில் யாவர்களுந்தெண்டனிட்டார்
வாழ்த்தியெழுந்திரென்றார் மகாதேவரானவரும்
அத்தையர்பாதமது அடிவணங்கிதெண்டனிட்டார்
கண்டுமந்தகாமாட்சி கடுகெனவேயேதுசொல்வார்
அண்ணன்பெற்றசெல்வங்களே அருமையுள்ளபாலர்களே
ஊழியூழிகாலமெல்லாம் வாழியெழுந்திரென்றார்
கர்த்தவனுர்பாதமதில் கடுகெனவேதெண்டனிட்டார்
வந்துபணிந்தவரைக் கண்டுவிட்டார்பஞ்சவர்னம்
ஏழுபேர்மைத்துனரை யின்பமுடன்வாழ்த்தலுற்றார்
கறுப்பழகிநாயகியைக் காத்தவனுர்வாழ்த்தலுற்றார்
மாமன்மகளாரே மல்லிமருக்கொழுந்தே
ஏலக்கருங்குழலே யெழுந்திரடியென்றுரைத்தார்
அண்ணன்தம்பியேழுபேரு மாமன்மகளாரும்
மாயவனுர்பாதம் வணங்கிநமஸ்கரித்தார்
வந்துபணிந்தவரை கண்டந்தமாயவரும்
என்னைப்பெறுவீர்க ளெதிர்த்தார்முடியறிவீர்
பிள்ளைபெருவீர்கள் பேருலகில்வாழ்ந்திருப்பீர்
வாயாரவாழ்த்தியவர் மைந்தர்களைத்தூக்கிவிட்டார்
கைகட்டிவாய்புதைத்துக் கரியவண்ணர்பக்கம்நின்றார்
இப்படியாகவிங்கே யாவர்களுந்தாமிருக்க
பரமசிவன்தான்பார்த்து பாங்காகவேதுசொல்வார்
பந்தலலங்கரித்து பரமசிவன்சோடியென்றார்

வாழைமரம்தென்னமரம் வகையுடனேகட்டுமென்றார்
கலியாணச்சடங்குகளை கருத்தாய்முடியுமென்றார்
ஈஸ்வரர்சொற்படிக்கே யாவர்களுந்தாமெழுந்து
பச்சோலைப்பந்தலது பாங்காயலங்கரித்து
சாலுங்கரசங்களும் சந்திரருக்குமுன்புவைத்தார்
அரசாணிநட்டார்கள் அம்மியொன்றங்குவைத்தார்
வட்டமணையுமிட்டார் வகையுடனேயிவ்விடத்தில்
பக்ஷமுடன்பாய்போட்டு அக்ஷணமேயேதுசெய்தார்
செட்டிப்பெண்ணழகி தேன்மொழியைக்கொண்டுவந்து
ஆர்க்கத்தலைமுழுகி வேர்க்கமயிர்கோரி
சிவிமயிராற்றி கிளிமொழிமார்கொண்டையிட்டு
உச்சியதுதொடங்கி யுள்ளங்கால்பட்டாக
இச்சையுள்ளோர்மெச்சும்படி யிட்டார்பணிதிகளை
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டுமிட்டார்
ஆடையாபரணங்கள் மலங்கிர்தமான்பின்பு
ஆண்டியப்பன்கெந்தபொடியை யள்ளித்தெளித்தார்கள்
அலங்கரித்துக்கொண்டுவந்தா ரந்தநேரத்தாதியர்கள்
மாமன்மகளாரே மற்றவர்கள்சோடித்து
கருப்பழகிநாயகியைக் கடுகெனவேகொண்டுவந்தார்
சோடித்துவந்ததொரு தோகையவரிருக்கும்
அழகுதுலங்குது ஆனந்தங்கொள்ளுகுது
அழகுடையமேனியெல்லாம் புனுகுமணக்குதங்கே
முத்துமெருவடியைத் தொட்டுநடந்துவந்து
கவுரிபரிமாறக் கன்னியர்கள்வந்துநின்றார்
கன்னியர்கள்வருகிறதைக் கண்டுவிட்டார்பஞ்சவர்ணம்
ஆனந்தமாகவல்லோ அவரெழுந்தோடிவந்து
கழுமரத்துமேடையண்டை கட்டழகரேதுசெய்தார்
கலியாணபந்தலிலே கட்டழகாப்போது
அத்தர்பன்னீரதனை யள்ளித்தெளித்துவிட்டார்
அங்கிருக்கும்மங்கையர்க ளப்பொழுதேதுசொல்வார்
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமச்சாந்தினால் குளிரவேவீசலுற்றார்
ஈஸ்வரரும்பார்வதியையு மினிதாகவீற்றிருந்தார்
வந்ததோர்தேவரெல்லாம் வரிசையாய்வீற்றிருந்தார்
மாயவர்லட்சுமியும் வகையாகவீற்றிருந்தார்
நான்முகனும்சரஸ்வதியும் நலமாகவீற்றிருந்தார்
ஆரியப்பூராசவு மவனுடையமந்திரிகளும்
ஆறாயிரம்வேதியரு மவருடையதேவிகளும்
வலையன்சிவப்புடையான் மன்னர்களேழுபேரும்

